அனைத்திந்திய நூல் வரிசை

# மஹாஸ்வேதா தேவியின் சிறுகதைகள்

(ஆசிரியையால் தேர்வு செய்யப்பட்டவை)

தமிழாக்கம்
என்.எஸ். ஜெகந்நாதன்



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

# உள்ளடக்கம்

# முன்னுரை

1984ஆம் ஆண்டில் வெளிவந்த அவருடைய 'சிரேஷ்டகல்ப' (சிறந்த கதைகள்) என்ற தொகுப்பின் முன்னுரையில் மஹாஸ்வேதா தேவி எழுதியிருந்தார்: "இலக்கியத்தை, மொழி, நடை, உருவகம் என்ற அளவீடுகளால் மட்டும் கணிப்பது தவறு; அதன் வரலாற்றுப் பின்னணியில் அதை வைத்துப் பார்க்கவேண்டும். ஒரு எழுத்தாளனின் கால கட்டத்தையும், வரலாற்றுப் பின்புலத்தையும் மனதில் வைத்துக்கொள்ளாமல் அவனுடைய எழுத்தை எடை போடமுடியாது. மக்களின் ஆதிப்பிரக்ஞை புனைவுகளையும் (மித்ஸ்) பௌதிக பாத்திரங்களையும், நிகழ்வுகளையும் இன்றைய பின்புலத்தில் ஊடுருவ விட்டு, இன்றும் அன்றும் தடங்கலற்ற ஒரே அலைவரிசையில் அவை இணைந்திருப்பதைக் காட்ட முயற்சித்திருக்கிறேன். இந்த தடங்கலற்ற ஓட்டம் ஏதோ புலப்படாத ஒன்றல்ல. மாறாக, தலைமுறை தலைமுறையாக, கீழ்சாதி வர்க்கத்தினரின் நீலம்-நீச்சு, காடு-வன உரிமைகள் அனாயசமாக பறிக்கப்படும் அவலம், அதிகார வர்க்கத்தினரின் அளவிலா ஆணவம், தங்கள் ஆளுமையை உறுதிப் படுத்திக் கொள்ள, அதன் வீச்சை பரப்பிக்கொள்ள அவ்வர்க்கத்தினர் பயன்படுத்தும் உத்திகள், இவற்றின் மூலம் கீழ் வர்க்கத்தினரை எழவிடாது அடக்கியாளும் கொடுமை இவற்றின் தொடர்கதை இவ்வரலாறு."

இப்புதுத் தொகுப்பில் கதாசிரியையே தேர்ந்தெடுத்த ஒன்பது கதைகள் உள்ளன. இவற்றில் எட்டு கதைகள் சமூக பொது வோட்டத்திலிருந்து ஒதுக்கப்பட்ட மக்களை மையமாகக் கொண்டவை. இவர்கள் பொதுப் பண்பாடு, வரலாறு இவ்விரண்டின் விளிம்புகளில் உழலும், நசுக்கப்பட்ட மக்கள்.

இக்கதைகளில் நடமாடும் பாத்திரங்களில் ஒரு சிலர் கீழ்சாதியினர் என்று குறிப்பிடப்படுபவர்கள்; மற்றும் சிலர் பழங்குடியினர். தொன்று தொட்டே நம் நாட்டில் மதம், தர்மம், நியமம், சடங்கு என்ற இவற்றின் மாயத்திரைக்குப் பின்னால்

பொருளாதார சுரண்டல் நடந்து கொண்டே வந்திருக்கிறது. மக்கள் உள்ளங்களில் ஒன்றிவிட்ட புராணக்கதைகளின் உதவியுடனேயே, சுரண்டப்படுபவர்களின் மேல் ஒரு மாய இருளை உருவாக்கு வதில் அதிகார வர்க்கத்தினர் வெற்றி பெற்றிருக்கின்றனர்.

ஆதிவாசிகளின் உள்ளங்களில் ஆழமாகப் புதைந்து விட்டிருக்கும், பின்னிழுத்துச் செல்லும் நம்பிக்கைகள் மஹா ஸ்வேதா தேவியை மிகவாகவே வாட்டி இருக்கின்றன. தன் கதைகளில் தான் சித்திரிக்க முற்பட்ட சமூகத்தின் நம்பிக்கை களைப் பற்றி மேலும் மேலும் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆவேசம் அவரைப் பற்றிக்கொண்டது. அவர்களுடைய வாழ்க்கை பற்றிய உண்மைகள், அவர்களுடைய வரலாறு இவ்விரண்டைப் பற்றிய அயராத தேடலின் விளைவாக, அவர்களுடைய உரிமைப் போராட்டங்கள், இயக்கங்கள், அன்றாட வாழ்வுப் பிரச்சினைகள் போன்றவற்றில் தன்னைப் பிணைத்துக் கொண்டிருக்கிறார். அச்சமூக பண்பாட்டுடன் தன் பரிச்சயத்தை வளர்த்துக் கொண் டதன் மூலமே அவர்களின் நம்பிக்கை உலகத்தைப் பார்த்தும், அறிந்தும் இருக்கிறார்.

இந்நம்பிக்கைகளில் அவர்கள் கொண்டுள்ள கர்வமே அவர்களை அடிமைத்தனத்தில் பிணைக்கும் சங்கிலிகளாகி விட்டுள்ளது. அதுவே அவர்கள் தங்கள் இழப்புகளையும் பழிப்புகளையும் மாபெரும் பேறுகளாக ஏற்றுக்கொள்ளச் செய் கின்றது. புராணப் பொய்களையும் புனைவுகளையும், மிகை களையும் இயல்பென மாற்றும் போக்கு நம் நாட்டில் வளர்ந்து விட்டுள்ள காரணத்தால் ஒரு அதிசயமான 'வரலாற்றுத் திரிபு' உருவாகியுள்ளது. சில சமயங்களில் இத்திரிபு நீர்த்த மார்க்சிய உருவம் பெறுகிறது: காலனி ஆதிக்கத்திற்கு எதிர்சக்தி என்ற மேகமூட்டத்தில் கரைந்துள்ள படிமத்தில் இவற்றைப் பொருத்தி விளக்கம் கொடுக்கிறார்கள். இம்முயற்சி ஒரு அரசியல் இந்துத்துவ மாயையை வேரூன்ற வைத்திருக்கிறது. ஆழமாகப் பதிந்துள்ள இந்த வேரை அடியோடு வெட்டித் தள்ளும் பணியில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டிருக்கிறார் மஹாஸ்வேதா தேவி.

இக்கதைகளில் இடம் பெறும், விளிம்புகளில் இயங்கும் சமூகங்களின் பெயர்களாவன: பாக்தி (பான்—வெள்ளம்); டோம் (பாயன்); பாக்மாரா (ஸான் ஸகாலேர் மா — மாலையும் காலையும் நீ அம்மா); ஓராவ்ன் (ஷிகார் — வேட்டை); கஞ்சு (பிச்சன் — விதை); துஸாத் (மௌஸ் அதிகார் ஓ பிகாரி துஸாத் — அடிப்படை உரிமைகளும் பிச்சைக்காரன் துஸாதும்); மால் அல்லது ஓஜா

(பேஹூலா); தோப்தி மேஜேன் (த்ரௌபதி — திரௌபதி). இவர்களில் கஞ்சுக்களின் தொழில் இறந்த மிருகங்களின் தோல் உரிப்பது; பிகாரி துஸாதின் தொழில் ஆடு மேய்ப்பது; பாயனாக மாறுவதற்கு முன் சண்டியின் 'பரம்பரை சொத்து - பொறுப்பு' "பிணக்கிடங்குகளின் பராமரிப்பு." இப்பிழைப்புகளும் பரம் பரையாக வந்த அதிகாரங்களும்தான் இவர்களைத் தலைமுறை தலைமுறையாக சமூகத்தின் விளிம்புகளில் வைத்திருக்கின்றன. இவர்களை இச்சூழ்நிலையில் எக்காலத்திலும் வைத்திருப்பதற் காகவே பழங்கதைகளும் புராணங்களும் புனையப்பட்டு வந்திருக்கின்றன. பாக்மாராக்கள் கிருஷ்ண பரமாத்மாவைக் கொன்ற வேடனின் சந்ததிகள்; டோம் சாதியினர் கங்கையின் முதல் புதல்வனின் வாரிசுகள்; மேலும் இவர்கள் அரிச்சந்திர மஹாராஜாவிடமிருந்தே இப்பூலோகம் முழுவதிலும் உள்ள சுடுகாடுகள் அத்தனையையும் தங்கள் தனிச்சொத்தாக வரம் பெற்று ஆடிப்பாடி மகிழ்ந்தவர்கள்; களிவெறியில் "ஆம்! நாம் எல்லா சுடுகாடுகளையும் வரமாகப் பெற்றுவிட்டோம். உலகில் உள்ள எல்லா மயானங்களும் நமதே!" என்று ஆனந்தக் கூத்தாடியவர்களாம் இவர்கள். 'மித்ஸை' மஹாஸ்வேதாதேவி வெறும் 'நினைவு'களாகவோ, சிறுகதைகள் அளவிலோ வரைப் படுத்தாமல் அவற்றிற்கு விசாலமான நாடக எல்லைகளை அளிக்கிறார். அவருடைய புராண விரிவாக்கங்கள் நமது 'தர்ம பாரம்பரியங்களின்' மூலவேர்களில் உள்ளடங்கியுள்ள ஜால வித்தைகள், மோசடிகள் எல்லாவற்றையும் வெளிக் கொண்டு வருவதற்கான உத்திகள்.

அதே சமயத்தில் இக்கதைகளில் உள்ள விரிவான புராணப் புனைவுகள் சமூக விளிம்புகளில் இயங்கும் கீழ் சாதியினரை மேல் மட்டத்தினர் ஏமாளி வெகுளிகளாக்கி தங்கள் சுயநலத்திற்கு பலிகடாக்களாக்கி விட்டுள்ள வரலாற்றையும் முன்வைக்கின்றன. இலக்கிய நுண்மை கொண்டு, தனித்துவம் பளிச்சிடும் நடையின் மூலம், சம்பிரதாய வரலாற்றிற்கும் அதன் கீழ் மறைந்திருக்கும் அதன் உண்மை சொரூபத்திற்கும் உள்ள வேற்றுமைகளின் மேல் வெளிச்சமிடுகிறார்.

ஆனால் சமூக பொருளாதார மட்டத்தில் அநேக மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. கங்காபுத்திரன் மலிந்தர் இன்று சுடுகாட்டு 'டோம்' அல்ல; அவனுக்கு இன்று 'மக்ருமார் சவக் கிடங்கில் உத்தியோகம்.' அக்கிடங்கில் வேலை செய்யும் ஸ்டோர் கீப்பருடன் கூட்டு சேர்ந்து கொண்டு வாரிசுகளில்லாத பிணங்களின் எலும்புக்கூடுகளையும்

மண்டையோடுகளையும் சட்டவிரோதமாக விற்று பணம் பண்ணும் வியாபாரத்தில் ஈடுபட்டிருக்கிறான். இதில் கிடைக்கும் தன் பங்கை வட்டிக்கு விட்டு கிடைத்த லாபத்திலிருந்து சில பன்றிகளை வாங்கியிருக்கிறான். ஆனால் அவன் ரத்தத்தில் ஊறிப்போன பரம்பரை நம்பிக்கைகள் அவனை விட்டு அகலவில்லை. தன் மனைவியை ஒரு 'பாயனாக' இனம் கண்டு கொண்டு தீண்டத்தகாதவளாக்கி, வீட்டை விட்டுத் துரத்த அவன் தயங்கவில்லை. மஹாஸ்வேதா தேவியின் 'பாயன்' என்ற கதையில் வேதனையின் சிகரமான இடம் இதுதான்: சமூகத்திலிருந்து துரத்தப்பட்டவர்களே தங்களில் ஒருவரை தங்கள் சமூகத்திலிருந்து துரத்தத் தயங்குவதில்லை. மனித சமூக விளிம்புகளில் இருப்பவர் களே தங்களில் ஒருவரை அதிலிருந்து துரத்திவிடும் போது அவர் மனிதத் தன்மையிழந்து மிருகங்களில் ஒன்றாகி விடுகிறார். அந்நிலையை ஏற்றுக்கொண்டும் விடுகின்றார். ஆகவே சண்டி இப்பொழுது ஒரு மனிதப்பிறவியே அல்ல. மலிந்தர் தன் மகனிடம் சொல்கிறான்: "முன்பு ஒரு காலத்தில் அவள் ஒரு மனுஷியாக இருந்தாள். உன்னுடைய அம்மாவாக இருந்தாள்." வாழையடி வாழையாக வந்து கொண்டிருக்கும் சம்பிரதாய நம்பிக்கைகளுக்கும் மானுடத்திற்கும் இடையேயான போராட்டம். கண்ணுக்குப் புலப்படாவிட்டாலும் அயராது நடந்து கொண்டிருக்கிறது. அதனால்தான் பாயனாகிவிட்ட சண்டி கூட சாதாரண மனிதனின் மனைவியைப் போல திடீரென்று 'புத்தி கெட்ட மலிந்தர்' மீது சீற்றமடைகிறாள். பகீரத், நவீன மானுடத்தின் பிரதிநிதியாக மறுபடியும் மறுபடியும் தன் தாயை நெருங்கிப்பழக விழையும் போது, அவளை மனிதப்பிறவியில்லாத வேறு எந்த ரூபத்திலும் இனம்கண்டு கொள்ள மறுக்கும்போது, கதை ஒரு திடீர் திருப்பத்தைப் பெறுகிறது. சண்டியுடன் பேசும் மகன் பகீரத் சமூகத்திலிருந்து தூக்கி எறியப்பட்ட ஒரு பெண்பிறவியை மறுபடியும் உரிமைகள்-பொறுப்புகள் உள்ள அங்கத்தினராக அதே சமூகத்தில் பிணைக்கப் பார்க்கிறான். தொடக்கத்தில் இறந்த குழந்தைகளின் உடல்களைப் பராமரிக்கும் குறுகிய உலகத்தில் வாழ்ந்து வந்த சண்டி, அதிலிருந்து விடுபட்டு, மிகச் சுலபமாக மிக இயற்கையாக, அதைவிடப் மிகப்பரந்த மானிடசமூகத்தின் பிரதிநிதிகளான ரயில் பயணிகளை ரட்சிக்கும் பொறுப்பு உணர்வைப் பெற்று உயர்ந்துவிடுகிறாள்.

மனிதர்களின் உள்ளார்ந்து ஊறிய திகிலின் காரணமாக ஒரு கால கட்டத்தில் அவள் 'பாயன்' ஆக கோஷிக்கப்பட்டாள். இந்த

புதிய ரட்சக பாத்திர வடிவத்தில் அவள் சமூக கொள்ளைக் காரர்கள் மனதில் ஒரு திகிலை எழுப்புகிறாள். இத்தகைய செயல்-எதிர்மறைச் செயல் என்ற சரடுதான் மஹாஸ்வேதா தேவியின் கதைகளின் உயிர்நாடி. “தனது சமூக மனிதர்கள் இவ்வளவு பீதியடைவதை இதற்கு முன் பாயன் பார்த்ததில்லை.” தன் சமூகத்திற்கு வெளியில் இடம் பெயர்க்கப்பட்ட வாழ்வில் உறைந்துபோன வேதனை, புதிதாக மூட்டப்பட்ட மானுடம் என்ற அக்னி ஜ்வாலையில் சாம்பலாகிப் போகிறது. அச்சமூகத்திற்கு எதிராகப் போராடும் மானுடமாக உருவமெடுக்கிறது. நவீன ஐரோப்பிய புனைவிலக்கியத்தில் நன்கு பரிச்சயமான ‘அந்நியன்’, அதாவது சமூகத்திற்கு வெளியில் இயங்கும் மனிதன், இக்கதை களில் புதிய பரிமாணத்தைப் பெறுகிறான். சமூகத்தின் அநீதியே சண்டிக்கு இந்த அநீதியின் மற்றொரு முகத்தை எதிர்க்கும் சக்தியைக் கொடுக்கிறது. இந்த வலுவான ஆத்ம-நீதி கோஷமே அவளைத் தன் சமூகத்திற்கு திருப்பி அழைத்துச் செல்கிறது. பகீரத் தேசத்திற்கு, ஆட்சியாளர்களுக்கு, தனது வம்ச வரலாற்றை – தான் சண்டி பாயனின் மகன் என்று ஊரறிய பிரகடனம் செய்கின்ற கணம் இக்கதையின் உச்சக்கட்டமாக அமைகிறது. பழங்கதை புனைவு மறுபிறப்பு எடுக்கிறது.

சாதி நெறிகள் எனும் பாறாங்கல் சுமையைத் தூக்கியெறிந்து விட்டு நவீன மனப்பான்மையை நிறுவப் போராடும் போக்கின் மற்றொரு ஓவியம் பேஹுலா என்ற கதை. இதில் வெளியுலகத்தி லிருந்து சீர்திருத்தம் கொண்டு வரும் பொறுப்பை ஏற்றுக் கொள்ளும் பாத்திரம் பஸந்த் குமார். ப்ராசீன பரம்பரையின் பிரதிநிதி ஸ்ரீபத் மால் – இப்பிராந்தியத்தின் கிராம வைத்தியன். ஓஜா (பாம்புப்பிடாரன்) – ‘விட்ச் டாக்டர்’. இங்கு சாவு என்பது லாப நஷ்ட கணக்குகளின் செல்லப்பிள்ளை. ஒரு பக்கத்தில் ஹெதோ நஸ்கர் தனது செங்கல் சூளையை சரியான விலைக்குக் குறைவாக விற்க மாட்டான்; அதன் காரணமாக இச்சூளைகளில் பாம்புகளின் வம்சவிருத்தி ஓயாமல் நடந்து கொண்டிருக்கிறது. மறுபக்கத்தில், மருந்து கம்பெனிகள் பாம்புக்கடிக்கு மருந்து கண்டு பிடிப்பதில் ஆர்வம் காட்டுவதில்லை, ‘நாலு லட்சம் பாம்புக்கடிக் கேஸ்களில் இருபதாயிரம் பேர்தான் செத்துப் போகிறார்கள்.’ இச்சூழ்நிலையில்தான் பஸந்திற்கும் ஸ்ரீபத்திற்கும் இடையே ஒரு ஆழமான நட்பு மலர்கிறது. தங்கள் தங்கள் கல்விப் பொக்கிஷங் களை நெருடல்கள் இல்லாமல், இவ்விருவரும் பரிமாறிக் கொள்கிறார்கள். விஞ்ஞானம், விஷ வைத்தியம் இரண்டையும்

பயிலும் சாதனை என்ற முறையில் கைகோர்த்துக் கொள்கிறார்கள். இக்கதைக்கு மற்றொரு பரிமாணம் கொடுப்பதற்காக மஹாஸ்வேதா தேவி பலவித மொழி உத்திகளைப் பயன்படுத்துகிறார். ஒரு பக்கத்தில் விஞ்ஞான சர்ச்சை என்கிற முறையில் ஆங்கிலச் சொற்கள் அபரிமிதமாக பயன்படுத்தப் படும்போது, தொலைவில் இருக்கும் அதிகார மையங்களின் கண்ணில் படாத சின்னமாக அது துலங்குகிறது. மற்றொரு பக்கத்தில் கிராமப்புறத்திற்கும் நகர்ப்புறத்திற்கும் இடையே உள்ள பண்பாட்டு மடுவை அது பிரதிபலிக்கிறது. கிராமத்தில் பஸந்த் காணும் யதார்த்தத்திற்கும், அவனுடைய படிப்பிலிருந்து எழுந்த நோக்குகளுக்கும் உள்ள இடைவெளி, வங்கமொழி வாக்கியங்களுக்கு இடையில் காணப்படும் ஆங்கிலச் சொற்களின் அடர்த்தியில் வெளியாகிறது. ஹியர், வேஸ்ட், அன்ரெஸிஸ்டிங் ஹ்யூமன் பாடி, காலாஜ் (கட்டுவிரியன்) அபௌன்டிங், ஒப்ளைஜ், ரேஜீம், அகடமிக் அட்ராக்ஷன் போன்ற சொற்களெல்லாம் அவனுடைய அறிவுஜீவி அக்கறைகளிலிருந்து பிறந்தவை. இவை அவன் கீழ்சாதி கிராம மக்களுடன் உறவுகொள்ளும் முயற்சிகளின் எல்லைகளை நிறுவுகின்றன. அறிவியலும் அறிவியல் பரிபாஷையும் அவர்களுக்கு இடையே ஒரு சுவரையே எழுப்பிவிடுகிறது. இச்சுவர், தனிமனிதர்களிடையே நேய நெருக்கத்துடன் கூடிய உரையாடல்கள் மூலம் தகர்க்கப்பட்டு, புது உறவுகளை ஏற்படுத்தக் கூடும். இது பாயனிலும் பேஹுலாவிலும் நிகழ்கிறது. இவ்விரு கதைகளிலும் மூடநம்பிக்கைகளுக்கு இடையே, ஒரு புது உணர்ச்சி பொங்கியெழுந்து, ஓர் புதிய சமூக உணர்விற்கு வழி வகுக்கிறது. இப்புது உணர்விற்கும், பழைய கற்பிக்கப்பட்ட நம்பிக்கைகளிலிருந்து விடுபட விழையும் சுதந்திர வேட்கைக்கும், தன்மானமும் தூய்மையும் நிறைந்த வாழ்க்கை நிறுவுவதற்காகவே கதையை சாவில் முடிக்கிறார் மஹாஸ்வேதா தேவி. சாவிலிருந்து புனித மீட்சி பெற்று புது வாழ்வு பெறுகிறார்கள்.

மூடநம்பிக்கைகளிலிருந்து விடுபட்ட அச்சமற்ற, சர்ப்ப யக்ஞத்தில் பேஹுலா நிறைவடைகிறது. கிராம மக்களின் சோகம், கட்டுவிரியன் பற்றிய பயம், ஹெதோ நஸ்கர் மேல் எழுந்த கோபம் இவையெல்லாம் கணநேரத்தில் வெஞ்சினமாக மாறிவிடுகின்றன. இதன் காரணமாகவே அந்தத் தீ கொழுந்துவிட்டு எரிகிறது. அவன் சாவு நேரத்தில் ஸ்ரீபத் சுதந்திரனாகிறான். கணநேர மின்னொளியில் எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டு, தெரிந்து கொண்டு, புரிந்துகொண்டு சாவைத் தழுவுகிறான். அந்த சாவில்

அவனுடைய சுதந்திரம் உள்ளடங்கியிருக்கிறது.

ஸான்—ஸகாலேர் மா (மாலையும் காலையும் நீ அம்மா) இதே மாதிரி ஒரு சாவைச் சுற்றி எழுதப்பட்டிருக்கிறது. சாவின் மூலமே ஜடேஸ்வரி தனது தெய்வீக (டாகூர்ணி) பிரக்ஞையிலிருந்து விடுதலை பெற்று, மனிதத்துவம் அடைகிறாள். ஒரு சமயம் அவள் தன் மகன் ஸாதனிடம், "மகனே, அம்மா என்று என்னைக் கூப்பிடாதே" என்று சொன்னாள். இதன் காரணமாகவே, அவள் ஸாதனுக்குத் பொழுது சாய்ந்ததும் அன்னையாகவும் பகல் நேரத்தில் 'டாகூர்ணி' (தேவி)யாகவும் இருந்தாள். இறக்கும் நேரத்தில் அதே ஸாதனுக்குத் தன்னை 'அம்மா' என்றழைக்க அனுமதி தருகிறாள். சொல்லப் போனால் இந்த அனுமதி தந்த கணத்தி லிருந்துதான் தெய்வீகத்திலிருந்து அவளுடைய விடுதலையின் வரலாறு தொடங்குகிறது. அந்தக் கணத்தில்தான் டாக்டர் அநாதி, ஜடி டாகூர்ணியின் கண்களில் அதிசயமான புது ஒளியைக் காண்கிறார். "சாவின் வாயில் இருப்பவர்களின் கண் களில்தான் இத்தகைய அமானுஷ்ய சௌந்தர்யம் தென்படும்."

அநாதி டாக்டரின் சிகிச்சை டேபிளில் நடுநடுவே சகிக்க முடியாத வேதனையுடன் படுத்துகிடக்கும் யுவதிகளுடன் ஜடியை ஒப்பிடுவதன் மூலம் அவள் மானுடத்திற்குத் திரும்புவது கோடிட்டுக் காட்டப்படுகிறது. சண்டி பாயன், ஸ்ரீபத் மால் போல, ஜடி டாகூர்ணியும் சாவில் ஒரு கம்பீரம் பெறுகிறாள், "செத்துப் போனது ஒரு நாதியற்ற, ஏழை கீழ் சாதி பெண் அல்லாது, யாரோ பெரும் மதிப்பிற்குரிய பெண்மணி போல இருந்தது. அதனாலேயே இவ்வளவு பெரிய கூட்டம்."

பாயனுக்கும் ஸான்-ஸகாலேர் மாவிற்கும் பல ஒற்றுமைகள் இருக்கின்றன. சபிக்கப்பட்ட நீச சாதி டோம்களுக்குப் பின்னால் ஒரு அரிச்சந்திரனின் வரம் இருந்தது போல், பாக்மாரா சாதி யினரும் சபிக்கப்பட்ட ஜன்மங்கள். ஏனெனில், அவர்கள் 'கடவுளையே கொன்ற' ஜரா வேட்டையாளனின் சந்ததிகள். வெறிபிடித்த காதலில் தன்வயமிழந்த மலிந்தர்-சண்டி, ஜடி—உத்ஸவ், இரு ஜோடிகளின் காதல்களும் ரொமான்டிக் கதைகள். மலிந்தரைப் போலவே, ஜடி-உத்ஸவ் இருவரும் தங்கள் பரம்பரைத் தொழில்களை விட்டுவிடுகின்றனர். "நீ இப்பொழுது சாதி ஏணியில் உயர்ந்து விட்டாய். உனது வர்க்கத்தை மாற்றிக் கொண்டு விட்டாய்." ஆனால் தங்கள் ரத்தத்தில் ஊறிப்போன நம்பிக்கைகளை அவ்வளவு சுலபமாக உதறிவிட அவர்களால் முடிவதில்லை. சாதி ஏணியில் முன்னேறுவதில் அவர்களுக்கு

இருந்த தாகம் தணிக்க முடியாத ஒன்று. தங்களுடைய பழைய இனக் குறிப்பீடுகளை அழித்துக் கொள்ளும் வேட்கை தீவிரமானது. அதே சமயத்தில் அது குறித்து, இனம் தெரியாத ஒரு அச்சமும் கூடவே இருந்தது. இவ்வாறாக அவர்களுடைய நாட்கள் கழிகின்றன—அதாவது உத்ஸவ் உயிருடன் இருக்கும் வரை. அதற்குப்பிறகு ஐடி தன் பாக்மாரா சமூகத்திற்குத் திரும்பிப்போய் இணைந்து கொள்ள முயற்சிக்கிறாள்; முடியவில்லை. கடைசியில் தன்னைச் சுற்றி ஒரு தெய்வீகக் கவசத்தை நிறுவிக்கொண்டு தன்னைக் காப்பாற்றிக் கொள்கிறாள். பொழுது சாய்ந்தவுடன் ஸாதனின் தாயாரராகி விடுகிறாள் டாகூர்ணி. அதற்கு பிறகு தான் டாகூர்ணி ரூபத்தில் காணிக்கையாகப் பெற்ற அரிசியை சோறாக்கி அசட்டு மகனுக்குப் படைக்கிறாள். தன்னையும் தன் மகனையும் காப்பாற்றிக் கொள்வதற்காக ஐடி பயன்படுத்திய தெய்வீகத் தன்மைக்குள் பொருளற்ற சடங்குகள் மேல் ஒரு அருவருப்பு ஸாதனுக்கு எழுகிறது. இந்த அருவருப்பு புரோகிதர் கையிலிருந்து, தான் சாப்பிடக்கூடாத சிரார்த்த அரிசியை அவன் வெறியுடன் பிடுங்கிக்கொள்ளும் போது கதை ஒரு டிரமாடிக் கிளைமாக்ஸை அடைகிறது. அவருடைய விசேஷ மொழி உத்திகளின் பிர யோகத்தால் மஹாஸ்வேதா தேவி இந்த அடாத நடத்தைக்கு ஒரு மானுடம் தோய்ந்த மேன்மையைக் கொடுக்கிறார். என்றுமே அரைப்பட்டினியாகக் காலம் கழிக்கும் ஒருவன் தன் தீராத பசியை தீர்த்துக் கொள்வதன் குறியீடாக இச்சம்பவத்தைப் பொருத்தி, ஒரு மனிதன் தன் பசியை ஆற்றிக்கொள்வதை ஒரு மாபெரும் தர்மச் செயலாக சித்திரிக்கிறார். அதே சமயத்தில் அவர் பயன் படுத்தும் குடும்ப வாடை தூக்கி நிற்கும் மொழி குரூரமான யதார்த்தத்தின் சொரூபத்தை பளிச்சிட்டுக் காட்டுகிறது. ஸாதன் ஒரு சிறு அரிசி முடிச்சுடன் வீடு திரும்புகிறான். "ஸாதன் வீடு திரும்புவான். அடுப்பை மூட்டுவான், அரிசியை சோறாக்குவான். வடித்த சோற்றின் வாசனை மிகவும் நன்றாயிருக்கும். அந்த வாசனையில் ஸாதன் தன் தாயைப் பார்க்கிறான். எத்தனை நாட்களுக்கு சோறு பொங்குகிறானோ, சூடான சோற்றைத் தின்கிறானோ, அத்தனை நாட்கள் அன்னை அவனுடன் பிணைந் திருப்பாள். தாயைப்பற்றி நினைத்தவுடனே, புரோகிதருடன் தான் அடாத முறையில் நடந்து கொண்டதைப்பற்றி அவன் உள்ளத்தில் பச்சாத்தாபம் எழுந்து, கண்களில் நீர் வழிகிறது. அம்மா! நீ எப்படியாவது சுவர்க்கத்திற்குப் போய்விடு. இப்போ நான் சோறாக்கித் திங்கிறேன். என்மேல தப்பு சொல்லாதே."

மனவளர்ச்சி குன்றிய ஸாதன் கந்தூரி தன் வெகுளித் தனத்தில், பசி என்னும் கோர யதார்த்தத்தை எல்லாவற்றிற்கும் மேலாக வைக்கும் ஒரு நிர்வாணமான சத்திய திருஷ்டி தென் படுகிறது. இதே ஊடுருவும் உண்மைப் பார்வை வெள்ளம் (பான்) என்ற கதையில் வரும் சிறுவன் சீனிவாஸின் நோக்கிலும் தென்படுகிறது. சகவருடம் 1485ஆம் ஆண்டில் சைதன்யரின் சமகாலத்து நிகழ்வாக இக்கைதை சித்திரிக்கப்பட்டிருக்கிறது. இருவருக்கும் பசியை ஆற்றிக்கொள்வது தர்மத்திற்கு இணையாகத் தோன்றுகிறது. அதிர வைக்கும் முரண்நகைச்சுவையுடன் மஹாஸ்வேதா தேவி இக்கேள்வியை முன் வைக்கிறார்: 'பசியில் வாடும் ஒரு மனிதனுக்கு ஆகாரம் கொடுத்து உயிருடன் வைப்பதை விட வேறு எந்த தர்மம் இருக்க முடியும்?' சீனிவாஸின் கிராமத்தினர் ஆவலுடன் எதிர்பார்த்த சைதன்ய பிரபுவின் விஜயம் கடைசியில் நிகழாது போனபோது தகர்ந்தது அவருடைய தரிசனம் மட்டுமல்ல — சீனிவாஸின் பல ஆர்வ நம்பிக்கை களும், சமத்துவம், விடிவுகாலம், ஆறுதல் போன்றவையும் தகர்ந்தன. வயிற்றைக் கிள்ளும் பசியின் அதிரடிக்கோரிக்கை எல்லாக் கோரிக்கைகளையும் விடப் பெரிது. முன்னொரு காலத்தில் கங்கையின் பிரளயம் போன்ற வெள்ளம், ஒரே அடியில் சாதி பேதங்களை ஒரு கண நேரத்திற்கு தகர்த்து விட்டிருந்தபோது, மேல் சாதியினர் தங்களுக்குச் சொந்தமான உபரி உணவை கீழ் சாதி மக்களுடன் பகிர்ந்து கொண்டார்கள். அந்த ஒரு சந்தர்ப்பத்தில் அவர்களின் வயிற்றின் பசியும் இதயத்தின் பசியும் நிறைவு பெற்றன. ஆகவே, இந்த வெள்ளத்தின் போதும் சைதன்ய மகாபிரபுவின் அன்பு வெள்ளத்திலிருந்து சீனிவாஸ் அதே முடிவை கற்பனை செய்துகொண்டு ஏங்கியதில் வியப்பொன்றுமில்லை. இரண்டு வெள்ளங்களையும் ஒன்றாகப் பிணைத்து இக்கதையைப் பின்னும் போது, 'அசமத்துவத்தின் நடுவில் சமத்துவம்' என்ற கருத்துக்கு ஒரு புதிய பொருளைக் கொடுக்கிறார். கருணையால், உதாரத்தால், மனமாற்றத்தால் சமத்துவத்தை நிறுவ முடியாது. அதற்கு ஒரு பிரளயம் போன்ற மாபெரும் விபத்து நிகழவேண்டும்.

நினைவுப்பிரக்ஞை, புராதன நம்பிக்கைகள், சக்தியற்ற உணர்வு, பயம் இவையெல்லாம் விளிம்புவாசிகளை அமுக்கப் பட்ட மக்களாக வைத்து விட்டிருக்கின்றன. அது மட்டுமல்ல, இவை எல்லாம் அவர்களுடைய மனதின் குணப்பாங்குகளின், ஆழமான மூலைகளில் இயங்குகின்றன. தொடக்கத்தில், எஞ்சிப் பிழைப்பதற்கு வழிகளையும் தந்திரங்களையும தேடிக்கொண்டே

இருக்கிறார்கள். சில சமயங்களில் தங்கள் அவல நிலையிலிருந்து தப்பிக்கும் வழிகளை (ஜடி டாகூர்ணியாக மாறுவதைப் போல்) தேடிக் கொண்டிருக்கிறார்கள். மற்றும் சில சமயங்களில் அமானுஷ்ய பவித்திரத் தன்மை பெற்று விடுதலை பெறுகின்றனர். (பாயன் கதையில் போல).

எழுபதுகளின் தொடக்கம் வரை இந்தத் திசையில்தான் மஹாஸ்வேதா தேவியின் சிந்தனைகள் சுழன்று கொண்டிருந்தன. ஆனால் அவருடைய அக்கறை, ஆதிவாசிகளின் உலகின் எல்லைகளோடு நின்றுவிடவில்லை. நகர்ப்புற நடுத்தர வர்க்கத்தினரின் சூழ்நிலையில் எழக்கூடிய பயங்கள் பற்றியும் அவருடைய சிந்தனைகள் விரிந்தன. 1972இல் எழுதப்பட்ட 'ராங் நம்பர்' என்ற கதையை அவருடைய சிறுகதை இலக்கிய வளர்ச்சியில் ஒரு பிரிவுக்கோடாகக் கொள்ளமுடியும். ஏதோ இயந்திர ரீதியில் வரையப்பட்ட பிரிவுக்கோடல்ல என்றாலும் இது ஒரு பிரிவுக் கோடு. 'திரௌபதி' (1976), 'விதை' (1977) 'வேட்டை' (1978) போன்ற கதைகளில் ஒரு தீவிரமான, எதிர்த்துப் போராடும் முயற்சியைப் பார்க்க முடிகிறது. விளிம்புவாசிகள் இப்பொழுது போராட்ட வழியில் இறங்கி விட்டிருக்கிறார்கள். திரௌபதியில் இது செயல்திறம் பெற்ற போராட்ட அமைப்பாக உருப்பெறுகிறது. ஆனால் மற்ற இரண்டு கதைகளில் எழுச்சியும் எதிர் எழுச்சியும் புறத்தூண்டுதலற்ற, இயல்பாக உயிர்ப்புப்பெற்ற எதிர்ப்பாக எழுகின்றன. அஸ்திவாரமில்லாத, அன்றாடங்காய்ச்சியான பிழைப்பை இழந்து விடாதிருப்பதற்காக எழும் ஆவேசத்தில் எழுந்த எதிர்ப்பு. எவ்வித அரசியலையும் சார்ந்து எழுந்ததல்ல.

ஆனால் எழுபதுகளின் பிற்பகுதியில் எழுதப்பட்ட இந்த மூன்று கதைகளும், இத்தொகுப்பில் இடம் பெறாத மற்ற கதைகளும் விதி விலக்குகளல்ல. 'விதை'யில் வரும் தந்தை துலன் கஞ்சு எப்படியோ தானும் தன் குடும்பமும் வயிற்றைக் கழுவுவதற்கான முயற்சியில் சதா சர்வகாலமும் ஈடுபட்டிருப்பதால், தன் மகனிடமோ பேரப்பிள்ளைகளிடமோ இரண்டு வார்த்தை பேசுவதற்குக்கூட அவகாசமில்லாதவனாக இருக்கிறான். இந்த வாழ்க்கைப் போராட்டத்தில் அவன் பல மோசடிகளில் ஈடுபட வேண்டியவனாகிறான். ஆனால் நிகழ்வுகள், அதாவது வரலாறு, துலனை அவனுடைய எதிர்ப்புணர்ச்சியில்லாத அவல நிலையிலேயே உழன்று கொண்டிருக்க விடுவதில்லை. இந்த வரலாற்றுப் பிரக்ஞை, தான் கண்ட உண்மைக்கு சாட்சியாக இருக்கும் உணர்வு மஹாஸ்வேதா தேவியினுடையது மட்டுமல்ல.

அப்பிரக்ஞை அவருடைய கதா பாத்திரங்களிடமும் இருக்கிறது. வரலாறு இவர்களுடைய பிரக்ஞைகளில் கருவாக வளர்ந்து, அவர்களுடன் ஒன்றிவிடுகிறது. மஹாஸ்வேதா தேவி தன் கதைகளில் வரலாற்றைப் புகுத்தி அவற்றிற்கு ஒரு புராணக் கதையின் பரிமாணம் கொடுக்கிறார். இதை பல இடங்களில் பார்க்கலாம்: ஒரு புதுப்பாடலின் பிறப்பில் ததுவாவின், "ஏன் அவர்கள் பற்றிய தகவல் இல்லை? அவர்கள் போலீஸ் ஃைபல்களில் மறைந்து விட்டார்கள்." (விதை); அல்லது இறந்த மனிதர்களின் தசைப் பிண்டங்களும் எலும்புகளும் இயற்கைக்கு ஊட்டம் கொடுத்து தானியங்களுக்கு அவையே விதையர்கிப் போய்விடும் போது. அச்சமயங்களில், புராணக்கதையும் இயற்கையும் பிணைக்கப் படுகின்றன. மனித இனத்தின் தொடக்க கால உணர்ச்சிகளிலிருந்துதான் துலனின் பழிவாங்கும் வெறி எழுகிறது. சிருஷ்டி - அழிப்பு என்ற, ஒன்றிலிருந்து மற்றொன்றைப் பிரிக்கமுடியாத இயங்கியல் பிணைப்பு, ஒரு புதிய புராணக்கதை இயலின் உருவத்தைப்பெறுகிறது. இப்படித்தான் பழைய நம்பிக்கை களின் அடிமைத்தனம் தகர்க்கப்பட்டு புது யுகத்தைப் பிறப்பிக்க முடியும்.

ஒரு ஆஸ்திரேலிய துரைக்கும் ஓராவ்ன் பழங்குடிப் பெண்ணுக்கும் இடையே நிகழ்ந்த முறைகேடான உறவில் பிறந்த மேரி, சாதிப் பிரிவினை கணிப்பில் இரண்டும் கெட்டான். அதிசயமான நிலையில் இருப்பவள். ஆதிவாசி இளவட்டங் களுக்கு அவளுடைய நிறம் ஒரு தடுப்புச் சுவராக நிற்கிறது. ஒரு வெள்ளை நிற ஆஸ்திரேலியனுக்குப் பிறந்த 'சோரப்பெண்' என்ற காரணத்தினால் ஓராவ்ன்கள் அவளை தங்கள் தூய ரத்தத்தில் பிறந்தவளாக ஏற்றுக் கொள்ளவில்லை; இதன் காரணமாகவே தங்கள் சமூகத்தின் கடும் நெறிகளை அவள் மேல் சுமத்துவ தில்லை. அதே சமயத்தில், ஓராவ்ன் சமூகத்தின் பல கட்டுப்பாட்டு விதிகளிலிருந்து அவளுக்கு விடுதலை கொடுக்கப்பட்டுள்ளதால், அவளுக்கு விசேஷமான சலுகைகளையும் சக்தியையும் கொடுத்திருக்கிறது. அவர்களே ஒப்புக்கொள்கிறார்கள்: "மேரியிடம் சத்தியம் இருக்கிறது. ஆஸ்திரேலிய ரத்தத்தின் வீரமும் ஒளியும் இருக்கிறது." அந்த சமூகத்தின் வெளியிலிருந்து, மேரி — பாயனைப் போலவே — தன் பழி வாங்கும் செயல்களால் அச்சமூகத்தின் பவித்திர வேட்டை சடங்கிற்குப் புதிய பரிமாணத்தைக் கொடுத்திருக்கிறாள்.

தனது சமூகத்தின் புராதன சடங்கின் பவித்திரத்தை, சாதிப்

பிரிவினைகளின் பவித்திரத்தை எதிர்த்துப்போராடும் கருவியாக மேரி பயன்படுத்துகிறாள் என்று தோன்றுகிறது. இச்சாதிப் பிரிவினைகளை மேல் சாதியினர் கீழ் சாதியினரை சிறுமைப் படுத்தவும் அடக்கி ஒடுக்கவும் பயன்படுத்தி வந்திருக்கிறார்கள். இக்கொடுமையைத் தகர்க்க தங்கள் சாதிச்சடங்கையே பயன் படுத்துவதன் மூலம் மேரி தங்கள் சமூகத்தின் தர்மத்தை மறு கண்டுபிடிப்புச் செய்து மீண்டும் நிறுவுகிறாள். இப்படிச் செய்யும் போது அவள் வெறும் தோக்ரி சந்தையில் கடை வைத்திருப் பவள் மட்டுமல்ல: பிராசாத்ஜியின் லாபத்தை ரட்சிக்கும் விசுவாசமான வேலைக்காரி மட்டுமல்ல. அந்த மாபெரும் வேட்டைக்குப் பிறகு மறுஜென்மம் எடுத்துவிட்டவளாகக் காட்சி அளிக்கிறாள். அவளுடைய பழி வாங்கும் வெஞ்சம் ஒரு ஆதிகதையின் ஒளியைப் பெறுகிறது. நிர்வாணமாக கால்வாயில் குளிக்கும் போது ஒரு ஆண் தன்னைப் புணர்ந்தவுடன் எழும் ஆழமான திருப்தியின் ஒளியுடன் அவள் முகம் பிரகாசித்தது. புத்துயிர் பெற்ற மேரி பாட்டு-மது, பாட்டு-மது என்ற கேளிக்கையில் திளைத்து, தன் ஓராவ்ன் சமூகத்தின் வாழ்க்கை லயத்தை 'ருசிக்கிறாள்.' ஒரு மாபெரும் வேட்டையில் அவள் புதிதாக சம்பாதித்த உரிமையில் மூழ்குகிறாள். மேலும், வரலாற்றின் இயங்கியல் தன்மையின் காரணமாக, எந்தக்கணத்தில் மேரி ஓராவ்ன் நசுக்கப்பட்ட, நொறுக்கப்பட்ட, மிதிக்கப்பட்ட ஒரு சமூகத்தின் பழைய சக்தியைக் கண்டுபிடித்து அதற்கு திருப்பிக் கொடுக்கிறாளோ, அந்தக் கணத்திலேயே அந்த சமூகத்தில் தன் நிலையை உறுதிப்படுத்திக் கொள்கிறாள். அதற்கும் மேலே கூடச் செல்கிறாள். அவள் வசப்படுத்திய இறந்தகாலம், அச்சாதனை யினாலேயே அவளுடைய பிரக்ஞையை விரிவாக்கி விடுகிறது. அதன் விளைவாக அச்சமூகத்தின் பழைய இறந்தகாலம் மாறாது தொடர்ந்து இருப்பதில்லை. ஜாலிமுடன் அவள் உருவாக்க முயலும் வருங்காலத்தின் வழிகாட்டியாக இது அமைகிறது.

மஹாஸ்வேதா தேவி ஒரு புதிய புராண மொழியில் எழுதுவது போல் தோன்றுகிறது "அயராது ஆடிக்கொண்டே மேரி பின் வாங்குகிறாள். அவர்கள் திரும்பிப்போய் வெறிபிடித்தவர் களைப் போல் இருட்டில் ஆடிக்கொண்டிருக்கிறார்கள்." திரும்பிப் போவதும் முன்செல்வதும் வரலாற்று இயங்கியலில் ஒன்றாகி விடும்போது, இறந்தகாலத்திற்குச் செல்லும் வழி வருங் காலத்திற்குச் செல்லும் வழியாகவே அமைந்துவிடுகிறது. ஆதிவாசி வேட்டைச் சடங்கின் சக்தியை தனதாக்கிக்கொண்ட மேரி,

பஸ்ஸிலோ அல்லது கட்டைகளைத் தூக்கிச் செல்லும் லாரியிலோ, ராஞ்சி—ஹஸாரிபாக்—கோமோ—பாட்னாவுக்கோ பயணம் செய்யவிருக்கிறாள். மீண்டும் காட்டின் ஆதிகால மாயாவி இருட்டுக் குகைக்குள் அல்ல. "இருட்டில் ரயில்வே லைன்களுக்குப் பக்கத்தில் செல்லும் சாலைகளில் நட்சத்திர ஒளியின் உதவியுடன் செல்லும் போது மேரியின் மனதில் எவ்வித பயமும் எழவில்லை. இன்று அவள் எல்லாவற்றையும் விட கொடிய விலங்கு ஒன்றை கொன்றுவிட்டிருந்தாள். எனவே அவள் ரத்தத்தில் ஊறிவிட்டிருந்த விலங்குகளைப் பற்றிய பயம் கூட அவளை இன்று வாட்ட வில்லை." காட்டிலிருந்து ரயில்வே லைனுக்குச் செல்லும் பாதை வரலாற்றின் தவிர்க்கமுடியாத பாதை.

மேரி காட்டிலிருந்து ரயில்வே லைனுக்கு தன்னிச்சையாகவே செல்கிறாள். திரௌபதியில் போலீஸ் நிர்வாகம், தம் கொள்கை களைத் துறந்த துரோகிகளுடன் கூட்டு சேர்ந்து தோப்தி மேஜேனை ராணுவ அதிகாரியின் கூடாரத்திற்கு கடத்திச் செல்கிறது. இதுவும் வரலாற்றின் மற்றொரு வழி. அதே கடுமையான தாக்கநெறியில் ஒரே இலக்கு நோக்கிச் செல்லும் வழி. ஷிகார், திரௌபதி இரண்டும் ஒரே கதையின் இரு வடிவங்கள். மேரியின் ரத்தம் 'பாபுமாரின்' ரத்தம். திரௌபதியின் ரத்தம் சம்பாதீரத்தின் கலப்படமில்லாத, பரிசுத்தமான கறுப்பு ரத்தம். சம்பாவிலிருந்து பகூலி வரை செல்லும் சாலை கோடிக்கணக்கான சந்திரோதயங் களையும் அஸ்தமனங்களையும் கண்டிருக்கிறது. ரத்தக் கலப்படம் நடத்திருக்கக்கூடும். தோப்திக்கு தன் மூதாதையர் பற்றி கர்வம் கலந்த பெருமை. தங்கள் பெண்ணினத்தின் ரத்தத்தை விஷம் தோய்ந்த முனைகள் கொண்ட அம்புகளை ஏந்திக்கொண்டு உஷாராக காத்தனர். ஸோமாயியும், புத்னாவும் முறையில்லாத வகையில் பிறந்தவர்கள், யுத்தகால அறுவடைகள். ஸியால் டங்காவில் தங்கியிருந்த அமெரிக்கப் படைவீரர்கள் ராட்பூமிக்கு அளித்த பரிசுகள். மேரி தனது சமூகத்தை துறந்து செல்ல வேண்டியிருந்தது. திரௌபதியோ 'இயக்கம்' என்ற வலுவான கயிறுகளால் தன் சமூகத்துடன் பிணைக்கப்பட்டிருந்தாள். இவ்வியக்கம் இப்பொழுது நகர்ப்புறத்து இளைஞர்களின் ஊடுருவலாய் தனது பரப்பை விரிவாக்கிக் கொண்டிருக்கிறது. இவர்கள் இவ்வியக்கத்திற்கு தயை தாட்சண்யம் இல்லாத கடும் ரணநீதி வகுத்துக் கொடுத்திருந்தனர். அஜீத்தின் குரல்: "யாராவது பிடிபட்டால், மற்றவர்கள் தங்கள் ஹைடவுட்டை மாற்றிக் கொள்ள வேண்டும், எந்தக் காம்ரேடும் தன்னைக் காப்பாற்றிக்

கொள்வதற்காக மற்ற காம்ரேட்கள் டெஸ்ட்ராயாக விட மாட்டான்.' இதே ரீதியில் தோப்தி தனது சுயஜாதி பிரக்ஞையின் உதவியுடனேயே அயராது போராடிக் கொண்டே தனது சமூகத்தின் உள் மையத்தில் உள்ள சக்தியை நிரூபிக்கிறாள். இந்த எல்லாம் வல்ல சக்தியின் மூலம் அவள் உள்ளத்தில் குடிகொண்டிருக்கும் சக்தி பௌராணிக பரிமாணம் பெற்று அவளுடைய "ஒரு முறை, இருமுறை, மூன்றாம் முறை" என்ற அபாய அறிவிப்பை, வெளியிடுகிறாள். நாடக உயிர்த்துடிப்புக் கொண்ட இந்த ஹுங்காரத்துடன் கதையின் இரண்டாவது பாகம் முடிகிறது. காட்டில் காற்றில் கலந்த அதே ஹுங்கார ஒலி எதிரிகளின் கூடாரத்தில் அதே வீறாப்புடன் "வாங்கடா, கௌன்ட்டர் பண்ணுங்கடா" என்று உருப்பெறுகிறது.

ஷிகார் கதையின் முடிவில் மேரி எந்த பயத்திலிருந்து விடுதலை பெறுகிறாளோ, அதே பயத்தை, வரலாறு எனும் சதுரங்கப் பலகையை புரட்டிப் போட்டு, தோப்தி சேனைத் தலைவரின் உள்ளத்தில் வித்திடுகிறாள். துவைத்து, சிதைத்து, சின்னாபின்னமாக்கி ரணப்படுத்தப்பட்ட இரு முலைகளையும் அவன் மேல் உரசுகிறாள். "அவரது அனுபவத்தில் முதல் தடவையாக, அதிகாரி ஒரு நிராயுதபாணியான இலக்குக்கு முன் பீதியடைகிறார்—பயங்கர பீதி."

ஷிகார் கதையின் ஆதாரமும் சூழலும் காட்டில் அடங்கி விடுகிறது. திரௌபதியின் மையம் காட்டுக்கும் நிர்வாகத்திற்கும் இடையே நிகழும் போராட்டம். இதன் மொழி, இந்த மோதலை பல மட்டங்களில் பிரதிபலிக்கிறது. சர்க்காரின் ரகசிய டோசியரின் ஆங்கிலம்—ஆளுமையின், அதிகாரத்தின், நிர்வாகத்தின் மாட்சிமையின் மொழி. இவ்வாளுமை கீழ்மட்டத்தில் செயல்படும் போது, அம்மட்டத்து அதிகாரிகளின் மொழி கீழ்நிலை வர்க்கத்தினரின் தொனியைப் பெறுகிறது. ராணுவ அதிகாரியின் மொழியில் ஆளுமையின் சிக்கலான பரிமாணங்கள் தனி உருவம் பெறுகிறது. அவரை சுற்றியிருக்கும் சூழலில் இயங்கும் பலமட்ட மொழி வெளிப்பாடுகளின் மூலம் எங்கெல்லாம் ஆளுமை செயல்படுத்தப்படுகிறதோ—அதிகாரியை மையமாகக் கொண்டு பல ஊழிய மட்டங்கள்—அங்கெல்லாம் பலதரப்பட்ட மொழி உபயோகம் மூலமாக ஆளுமையைப் பற்றி மற்றுமொரு கடுமையான விமர்சனத்தை மஹாஸ்வேதா தேவி முன்வைக்கிறார்.

இந்த பலதரப்பட்ட மொழிப்புனைவுகளின் — உச்சரிப்பு, பயன்படுத்தும் சொற்கள் — மூலம் அதிகாரவர்க்கம் பின்னி

யிருக்கும் ஆதிக்க வலையை தோப்தியின் மொழியில் — 'வா! கௌன்ட்டர் பண்ணு" என்ற சொற்றொடர் — கிழித்தெறிகிறது. அதே மாதிரி அவள் உடல் மீது இழைக்கப்பட்ட அக்கிரமங்களின் காரணமாக அவள் உள்ளத்தில் பொங்கி எழும் ஆக்ரோஷம் நமக்கு ஒரு புதிய பொருள் உணர்வைக் கொடுக்கிறது.

தன் கதைகள், நாவல்களில் மஹாஸ்வேதா தேவி பயன் படுத்தும் கதைப்பாங்கில் யதார்த்தம் இடம்பெறும்போதே, வரலாற்றில் தொடர்ந்து மாறி மாறி, புது வடிவம் பெறும் யதார்த்தத்தைக் காட்டுவதற்காக வித விதமான, மொழி, நிகழ்ச்சி விரிவுரை உத்திகள் கையாளப்படுகின்றன. இங்கு, வரலாறு என்பதன் பொருள் வெறும் இறந்த காலத்தின் மூல ஊற்று மட்டுமல்ல;, நமது பண்பாட்டுப் பாரம்பரியம் பற்றிய விரிவுரை மட்டுமல்ல; கடந்த காலம் வருங்காலத்திற்கு செல்லும் திசை பற்றிய சூசகமும் இதில் இருக்கிறது. ஆனால், வருங்காலத்தைப் பற்றி இத்தரிசனத்தில் சுலபமான நம்பிக்கைகளுக்கு இடமில்லை, ஆனால் நடப்புக் காலத்தின் மத்தியில் வருங்காலத்தின் விதை இருக்கிறது என்ற ஆதிகதை இயல்புள்ள சூசகம் இருக்கிறது. யதார்த்தத்தில் இப்படி ஒரு வேளை நடக்காதிருக்கலாம். நடந்திருந்தாலும், சில இடங்களில் திடீர்வெடிப்பாக நிகழ்ந் திருக்கக்கூடும். அத்தகைய நிகழ்விற்கு, நிகழ்வு பற்றிய சாத்தியக் கூறுக்கு, மஹாஸ்வேதாதேவி ஒரு உருவகம் போன்ற கற்பனை உருவத்தைக் கொடுக்கிறார். இக்கற்பனை உருவம் யதார்த்தத்தில் பிறந்தாலும் அதைத் தாண்டி நிற்கிறது. அவர் செய்வது இதுதான்: தனது மொழி ஆளுமையின் வீச்சை விஸ்தரித்து, பல மட்டங்களில் இயங்கும் சமூக-பொருளாதார-அரசியல் யதார்த்த பிரவாகத் திடையே நிகழும் சூழல்களை நம் முன் வைக்கிறார்

இப்படிச்செய்யும்போது, அவர் கையாளும் மொழித்தடத் திலிருந்து எழும் நாடகத்துடிப்புள்ள கணங்கள் ஒரு போதும் யதார்த்தத்திற்கு புறம்பான ஜாலக்கட்டுக்கதை வடிவை பெறுவ தில்லை. அவை யதார்த்தத்தின் தவிர்க்க முடியாத முடிவாக அமைகின்றன. தோப்தி மேஜேன், துலன் கஞ்சு, சண்டி பாயன், ஸ்ரீபத் மால், ஜடி டாகூர்ணி இவர்களெல்லாம் யதார்த்தத்தை விஞ்சும் யதார்த்த மனிதர்கள்.

*சமீக் பந்தோபாத்யாய்*

# வெள்ளம்

பாத்ர (புரட்டாசி) மாதத்தின் ரான்னா பூஜை (சமையல் பூஜை) நாள் வந்து விட்டது. அச்சமயத்தில் எல்லா குடும்பத்தினரும் மனஸா செடியைத் தேடிப் போவார்கள், ரூபஸீ பாக்தினியின் மகன் சீனிவாஸு-ம் மனஸா செடியைத் தேடக் கிளம்பினான். பூர்வஸ்தலி கிராமத்தவர் மனஸா செடியை எடுத்து வந்து தங்கள் முற்றத்தில் நடுவார்கள். அதை வணங்கி "வீடு கொடு, தாயே! நிலத்தில் விளைச்சலைப் பெருக்கு! பசுவின் மடியில் பாலைப் பொழி! ஓடைகளில் மீனை நிரப்பு! மருமகள்களுக்கு பிள்ளைக் குழந்தைகளையே கொடு தாயே!" என்று துதிப்பார்கள். எல்லா வீடுகளிலும் மனஸா செடி இருப்பதில்லை. ரான்னா பூஜைக்கு மறுநாள் வீட்டில் சமையல் நடக்காது.

"அம்மா, சமையல் பூஜை செய்ய நீ போகலியா?" சீனிவாஸ் கேட்டான்.

"இல்ல கண்ணு- இந்தத் தடவை நாம சமையல் செய்யப் போறதில்லே."

"ஏன்?"

"இதே நாள்லதான் காடு கிராமத்து பெரியண்ணன் செத்துட்டான்."

"ஒனக்கு யார் சொன்னது?"

"எனக்கு தெரியும்டா."

சீனிவாஸு-க்கு ஒரே ஆச்சரியம். அவன் யோசிக்க ஆரம்பித்தான்; 'இது என்ன ரோதனை? போன வருசம் சமையல் பூஜையன்னிக்கு, சீக்கிரமே எழுந்து அடுப்புமூட்டி, அம்மா என்னவெல்லாம் சமைச்சுது- சேப்ப இலைக்கூட்டு, வறுத்தமீன், சிறுமீன் காரக்குழம்பு, அரிசிமாக்கூட்டிய கீரை, சணல்கீரையில் வேகவைத்த அரிசிவடை, பனஞ்சாறு சேர்த்த அப்பம் அது இதுன்னு என்னெல்லாமோ-' மறுநாள் இரண்டு வேளையும் அதையே அவன் சாப்பிட்டான்.

இந்த வருஷம் ரொம்பக் கஷ்டம். ஒரு பக்கம் கங்கை நதியின்

வெள்ளம், மற்றொரு பக்கத்தில் கோடே ஆற்றின் உறுமல். சீனிவாஸ் கேள்விப்பட்டிருந்தான் - அஞ்ஜனா நதியில் மூங்கில் மேல் மூங்கிலாக மூணு மூங்கில் வெச்சாக்கூட முழுகிப் போயிடும்னு. எல்லா சனமும் சொல்லிக்கிட்டு திரியறாங்க, வெள்ளம் வரப்போகுது, வெள்ளம் வரப்போகுதுன்னு. வெள்ள மென்றால் எப்படியிருக்கும் என்று சீனிவாஸ் பார்த்ததேயில்லை, அவனுடைய அம்மா சின்னவளாக இருந்த போது, கடுவா கிராமத்தில் கங்கையில் வெள்ளம் வந்திருந்தது என்று கேள்விப் பட்டிருக்கிறான்.

சீனிவாஸின் அம்மா தென்னை ஓலையிலிருந்து ஈர்க்குச்சி சீவிக்கொண்டிருந்தாள். ஏழெட்டுத் துடப்பம் கட்டணும்; இல்லேன்னா ஆச்சார்யார் வீட்டு வேலை முடியாது.

“அம்மா, வெள்ளம்னா எப்படியிருக்கும்?”

சீனிவாஸின் கேள்வியைக்கேட்டு ரூபஸீ எரிச்சல் அடைந் தாள். “அதான் வரப்போகுதே- நீயே பாத்துக்க”

ரூபஸீயின் அம்மா காப் மரத்தின் பிசினால் மீன் பிடிக்கும் கட்டையின் முனையை பாலிஷ் செய்து கொண்டிருந்தாள். “பாரு, பாரு, பாத்துகிட்டே இருக்கப்போறே, வெள்ளம் வரும், ஓநாய், நாயி, மனுசங்க எல்லாத்தையும் அடிச்சிகிட்டு போவப்போவுது.”

“ஏய்- நீ என்னவெல்லாம் பெனாத்தறே, ஆயா?” என்று தன் தாயை ரூபஸீ லேசாகக் கடிந்து கொண்டாள்.

“புது சேதிடா, இது புது சேதி. எறும்பு, புழுவெல்லாம் வெள்ளத்திலே அம்போன்னு முழுகிப்போயிரும். யானை, குதிரை தான் பொழைக்கும். சாத்திரத்திலெ எளுதியிருக்கு-”

“அப்படீன்னா வெள்ளத்துல மனுசங்க யாரும் சாக மாட்டாங்கன்னு சொல்லு-” என்றான் சீனிவாஸ்.

“ஓ! நீ கௌரங்கரோட அன்பு வெள்ளத்தப்பத்திக் கேக்கிறியா? அதைப் பத்தி எனக்குத் தெரியாது, கண்ணு. ஆனா கேள்விப்பட்டேன். சாந்திபூரில இருந்து கடுவாவுக்கு வர்ற சனங்க வேற எதப்பத்தியும் பேசலே. இதைக்கேட்டு எனக்கு சிரிப்புத்தான் வருது. பஜாரிலிருந்து நான் வந்துகிட்டிருந்தப்போ ஒரே விசயத்தைப்பத்தி பேசிக்கிட்டு இருந்தாங்க, நான் யாரோட பேசினாலும் இதேதான் சொல்றாங்க. அடியே! பாக்தி மருமகளே! இதெல்லாம் என்ன விசயம்னு எங்களுக்கும் புரியல, கௌரங்க சன்யாசி மேலேயிருக்கிறத கீளேயும், கீளேயிருக்கிறத மேலேயும் கொண்டு வந்துருவாருன்னு சொல்லிகிட்டு ஆட்டமா ஆடுறாங்க- நான் கேட்டேன்: இனிமே நாமெல்லாம் பெரிய சாதி

சனங்களோட கெணத்துலேந்து தண்ணி எடுத்து தவலைங்கள ரொப்பிக்கப் போறோமா? அவங்கமாதிரி கட்டில்ல படுத்துத் தூங்கப் போறோமா? இல்லே, இஷ்டப்படி அரிசிப்பொரி சாப்பிடப் போறோமா? அப்படியில்லாட்டி, ஏன் கௌரங்கரோட வெள்ளத்திலே முழுகிச்சாகணும்? அதுக்கப்புறம் எல்லாரும் பொரி புடைக்கத் தொடங்கிட்டாங்க. நானும் என்னோட கன்னுக் குட்டியைத் தேடிக்கிட்டு கிளம்பிட்டேன். இது என்ன பெரிய வெள்ளம்...?"

"அம்மா...!" ரூபஸீ உரக்கக் கத்தினாள்.

"அடச்சீ..! நீ சும்மா கிட... என் மனசு ரொம்பிப்போச்சு."

"அம்மா! நீ எப்போவாவது கௌரங்ஜியப் பாத்திருக்கியா?"

"நான் ஏன் அவரப் பாக்கப் போகணும்? கௌரங் என் வயத்தை ரொப்புவாரா?"

"அப்படீன்னா போயி மீன் பிடிக்கிறதுதானே?"

"ஏய்! நீ சிங்காரின்னு ரொம்ப அலட்டிக்காதே! மீன் பிடிக்கிறது கேவலமா போயிடுச்சா... இப்படி மீன் பிடிச்சு மீன் பிடிச்சுத் தாண்டி ஒன்ன வளத்து இவ்ளோ பெரியவளாக்கினேன்."

விவகாரம் முற்றுவதை சீனிவாஸ் கவனித்தான். அவன் ஆச்சார்யார் வீட்டுக்குச் சென்று அவர்களுக்கு மனஸா செடி தேவையா என்று கேட்டுத் தெரிந்து கொள்ள புயல் வருவதற்கு முன் கிளம்பினான்.

பூர்வஸ்தலி கிராமத்தின் ஆச்சார்யார் குடும்பம் மிகவும் தர்ம சிரத்தையுள்ள வளமான குடும்பம். இந்த சக வருஷம் 1425-ல் எத்தனை குடும்பங்களில் பிச்சைக்காரர்களுக்கு தினமும் சாப்பாடு போடுகிறார்கள்? இன்றும் கூட பெரிய ஆச்சார்யார் பூஜை முடிந்து எழுந்த பிறகு, மதியத்தில் அவர் வீட்டுத் தாழ் வாரத்தில் நூறு இலைகள் போடப்படும். நவத்வீப் கௌரங்க சன்யாசி பற்றிய செய்தி பரவலாகி விட்டது. இப்பொழுது கௌட பிரதேசத்திலிருந்து புறப்பட்டு சாந்திபூர் போய்விட்டு மாதாவை தரிசித்த பிறகு, நீலாஞ்சலை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறார். இந்த வழியிலேயே இம்மகான் வந்திருக்கும் போது இரண்டு நாட்கள் தனது இல்லத்தில் தங்கி செல்ல வேண்டும் என்பது ஆச்சார்யாரின் விருப்பம். எதற்காக? அவர் மனைவி, பெரிய ஆச்சார்யிணியின் மனதில் இக்கேள்வி எழுந்தது. ஜமீன்தார். தாலூக்தார், பெரிய பணக்காரர்கள் மற்றும் செல்வாக்குள்ள பெரிய மனிதர்கள்—இத்தகையவர்களைத்தான் ஆச்சார்யார் விருந்தோம்புவது வழக்கம். அப்படியிருக்கும்போது ஏன் ஒரு

இளைய சன்யாசிக்கு இப்படி மரியாதை செய்கிறார்?

"ஏன் செய்கிறேனா-? இது என்ன அசட்டுக் கேள்வி-! நான் பத்துப்பேருக்கு ஏன் சாப்பாடு போடுறேன்?"

"புண்ணியம் சம்பாதிக்க."

"புண்ணியம் சம்பாதிக்க! இதைத்தான் பெண்புத்தின்னு சொல்றது- பத்துப் பேருக்கு சாப்பாடு போட்டா, துணிமணி கொடுத்தா, ஜனங்க உன்னை தலையிலே தூக்கி வெச்சுக்குவாங்க."

"கௌரங்கருக்கு எதுக்கு இப்ப மரியாதை பண்றீங்க?"

"அடியே! கௌரங்கருக்கு இப்போ ரொம்ப புது மவுசு. கௌரங்கரோட பேர் சொன்னவுடனேயே ஜனங்க கூடறாங்க. யார் கௌரங்கரைப் புகழறாங்களோ அவங்கள சமூகத்தில எல்லோரும் மரியாதை செய்றாங்க. கௌரங்கர் சாந்திபூர் வந்தப்போ அந்த ஊர்ப் பசங்க பிச்சைக்காரங்களுக்கு துணிமணி கொடுத்து நல்லபேர் வாங்கிட்டாங்க. நானும் அப்படி பண்ணா, எனக்கும் நல்ல பேர் வரும்-"

"ஆனா நீங்கதான் காசு செலவு செய்ய அழுவீங்களே-! கௌரங்க சன்யாசி வந்தாருன்னா அவர் கூட ஏகப்பட்ட சிஷ்யங்க, வேலைக்காரங்க எல்லாரும் வருவாங்க, நான்தான் செலவு அதிகமாகும்னு மாய்ஞ்சு போறேன்."

"உனக்கு எப்போதும் ஸ்திரீபுத்திதான். கௌரங்கர் இப்போ கிருஷ்ண பகவானோட பஜனையிலே மூழ்கி அலைஞ்சு கிட்டிருக்காரு. அந்த மாதிரி ஒரு மனுசன் வந்தா கொஞ்சம் செலவானாலும் பரவாயில்ல. ஒனக்கு ஒரு எழவும் புரியாது. இதனால் நம்ம கீர்த்தி நாலா பக்கமும் பரவிடாது-!"

"இவருதானே கீழ்சாதிக்காரங்களைக்கூவி அழைச்சு கட்டித் தழுவி மடியில உக்கார வெச்சுக்கிற மனுஷன்? இதையெல்லாம் கேக்கறப்போ எனக்கு பத்திக்கிட்டு வருது."

"கட்டித் தழுவிட்டா என்ன? அவருடைய உடல் அவரோடயே போயிடும். அவர் போனப்புறம் அவனுங்க முன்ன எப்படி கிடந்தானுகளோ அப்படியே கிடப்பானுக. இதெல்லாம் பத்தி உனக்கு என்ன கவலை? போ போ- ஒன்னோட சமையல் பண்டிகை வேலயப்பாரு"

பெரிய ஆச்சார்யிணி நீண்ட பெருமூச்சுடன் அறையிலிருந்து வெளியே சென்று விட்டாள். 'அவருக்கு என்ன- சொல்றத சொல்லிட்டு போயிட்டார்- நூறு பேருக்கு சமையல் செய்யிற வயசா இது-? வர்றவங்க எல்லாருக்கும் சாப்பாடு போட்டுட்டு ராத்திரி சாப்பாட்டுக்கு அடுப்பில் உலை வைச்ச பிறகுதான் நான்

*சாப்பாட்டுக்கு உட்காரமுடியும்–'*

*"யார் அது?"*

*வாசலில் ஒரு ஓரத்தில் சீனிவாஸ் நின்று கொண்டிருந் தான். "நான்தாம்மா– சீனிவாஸ்."*

*"எந்த சீனிவாஸ்?"*

*"உப்ஸி (ரூப்ஸீ) பாக்தினியோட பிள்ள. ஒங்களுக்கு மனஸா செடி பிடுங்கிக் கொண்டு வரட்டுமான்னு கேட்டுட்டுப் போலாம்னு வந்திருக்கேன்–"*

*பெரிய ஆச்சார்யிணியின் உடம்பெல்லாம் பற்றி எரியத் தொடங்கியது. 'நான் சாமிக்குப் பிரசாதம் படைக்கப் போய்க் கிட்டிருக்கிறேன். அந்த சமயத்தில் அபசகுனமா, இந்த நாசமாப் போற பய என் கண்முன்னாலே வந்து நிற்கிறான்–!'*

*"இ....வ்ளோ பெரிய செடி!" சீனிவாஸ் தன் இரண்டு கைகளையும் உயர்த்திக் கொண்டு செடியின் உயரத்தைக் காண்பித்தான். சமையல் கட்டிலிருந்து சூடான சோற்றின் மணம் வந்து கொண்டிருந்தது. 'ஐயருமாருங்கதான் சோத்துப்பானையில எவ்ளோ நெய் ஊத்தறாங்க! பாலைவிட்டு சுரக்காய் கறி பண்றாங்க! முள்ளங்கி திங்கறப்போ, நெய் எண்ணெயெல்லாம் வெவ்வேறு வாசத்தோடு மூக்குக்கு வருது! அரிசிச் சோறு தின்னு எவ்வளவு நாளாச்சு! ஐயரு வூட்டுல சாப்பிட்டு ரொம்ப நாளாச்சு–'*

*"பிறகு சொல்றேன். நீ இப்பொ வீட்டுக்குப்போ."*

*"பிராமணர்களுக்கு சமையல் பூஜை எப்போங்க அம்மா?"*

*"திங்கட்கிழமை."*

*"அன்னைக்கி கச்சு கீரை கொண்டுவரட்டுமா அம்மா?"*

*"வேண்டாம் தம்பி, நீ இப்போ போ."*

*இந்தப் பையன் மறுபடியும் மறுபடியும் "அம்மா" என்று அவளை அழைத்துக் கொண்டிருந்தது பெரிய ஆச்சார்யிணிக்கு எரிச்சலூட்டிக் கொண்டிருந்தது. ரூபஸீ போன்ற ஏழை இந்த பூர்வஸ்தலியில் வேறு யாருமே இல்லை. அவள் வயிறு ஒரு போதும் நிரம்புவதில்லை. தலை மயிர் ஒரே சடைபிடித்துக் கிடந்தது. ஆனாலும் அவளுடைய அழகு குறையவில்லை. பையனும் ஒரு நிலாத்துண்டு போல எவ்வளவு அழகாயிருக்கிறன்! பெரிய ஆச்சார்யிணி புத்திர பாக்கியத்திற்காக எத்தனை விரதம், நோன்பு எல்லாம் இருந்தாள். இருந்தாலும் கறுப்பு எள் நிறத்தில் பெண்கள் தான் பிறந்தார்களே தவிர பிள்ளை பிறக்கவில்லை. இதன் காரணமாகவே அவளுடைய வீட்டுக்காரர் சின்ன ஆச்சார் யிணியை வீட்டிற்கு அழைத்துக் கொண்டு வந்தார்.*

"கண்ணாலேயே முழுங்கிடுறதைப் போல பார்க்கிறதப் பாரு!" பெரிய ஆச்சார்யிணி பொரிந்து தள்ளிக் கொண்டிருந்தாள். கண் ஓரத்தால் சீனிவாஸ் எங்கு நிற்கிறான் என்று துழாவினாள். அந்தத் தாழ்வாரத்தின் ஓரத்தில் இருக்கும் சீதாப்பழ மரம்தான் லட்சுமண ரேகை. குடும்பம் நடத்துவது என்று வந்து விட்டால் எல்லாம்தான் வேண்டியிருக்கிறது. பாக்தி, மீன் விற்பவன், எல்லாரும்தான் தேவைப்படுகிறார்கள். ஆனால் அந்த சீதாப்பழ மரத்துக்கு அந்தப் பக்கத்திலேயே நின்று கொண்டு பேசிவிட்டுப் போய் விடுவார்கள். சீனிவாஸ் கால்விரல்களில் நின்று எம்பிக் கொண்டு எதையோ பார்த்துக் கொண்டிருந்தான். அதேசமயம் சின்ன ஆச்சார்யிணி இடுப்பில் தன் பிள்ளையை வைத்துக் கொண்டு கதவருகில் வந்து நின்றாள். சீனிவாஸைப் பார்த்தவுடன் சட்டென்று உள்ளே திரும்பிப் போய்விட்டாள். அவளுடைய குழந்தைக்கு எப்போது பார்த்தாலும் ஜுரம். சீனிவாஸின் கண் பட்டுவிட்டால் ஜுரம் மேலும் அதிகமாய் விடும். "அவனுக்கு கொஞ்சம் மூரி (பொரி) கொடுத்து அனுப்பி விடுங்களேன் அக்கா?" என்று அறைக்குள்ளிருந்தே சொன்னாள். அவனைப் பார்த்து "மூரி வாங்கிக்கொண்டு சந்தோசமா போடா பையா. என் குழந்தைப் பக்கம் கண் போடாதே..." சீனிவாஸின் இரண்டு கண்களும் ஒவ்வொரு வினாடியும் தின்பதற்கு ஏதாவது ஒன்றைத் தேடிக் கொண்டிருந்தன. எங்கிருந்து அவனுக்கு இந்த பசி வந்ததோ யாருக்குத் தெரியும்?

"இந்தா! பொரியை எடுத்துக்கிட்டுப் போய்ச்சேரு." சீனிவாஸின் தலை மேல் எந்த பூதம் ஏறி உட்கார்ந்து கொண்டதோ, தெரியவில்லை. அவன் கேட்டான், "ஆமாம், பெரியம்மா, கௌரங்கர் வந்த பிறகு நாங்க எல்லாரும் ஒரே இடத்திலே உட்கார்ந்து பிரபு ப்ரசாதம் சாப்பிடுவோம்னு கேள்விப்பட்டேன்-"

"என்ன சொன்னே?" பெரிய ஆச்சார்யிணி தொண்டை கிழிய அலறினாள். இந்த அலறலில் ஒரு பகுதி அவளுடைய கணவனுக்கு எதிரான போர் கோஷம்.

"ஆமாம், அவர்தான் கீழ்ச்சாதிக்காரன், பாக்தி எல்லாருடனும் ஆடுறார். அப்படி அவர் ஆடும்போது, அவர் முனியா, ரிஷியா, கடவுளா, யாருக்குத் தெரியும்? அவர் வெள்ளத்தைக் கொண்டு வருகிறார். வெள்ளம் உன்ன அடிச்சிட்டுப் போயிடும். ஆனால் நாங்க? இந்த கிராமத்திலேயே வாழணும், சாகணும். நாங்க ஏன் அவருடன் சேர்ந்து கூத்தாடணும்?"

ரூபஸீ பாக்திக்கு எதிராகவும் என்னவெல்லமோ ஏசினாள்.

'கீழ்சாதி பொம்பிளை, அவளுடைய பையனும் நீசன், கிராமத்திற்கே ஒரு களங்கம்.' சின்ன ஆச்சார்யிணி சீக்கிரமாகவே ஒரு டம்ளர் தண்ணீரும் ஒரு துண்டு வெல்லமும் எடுத்துக்கொண்டு வந்து நின்றாள். காரணமில்லாமல் பெரிய ஆச்சார்யிணி அடிக்கடி இப்படி அலறுவது வழக்கமாகப் போய்விட்டிருந்தது. அப்படி அலறும்போது, அவள் முகம் வெளிறிப்போய்விடும். அப்போ தெல்லாம் ஒரு துண்டு வெல்லம், ஒரு குவளை தண்ணீர் அவளை சாந்தப்படுத்தும். சீனிவாஸ் இடுப்பில் இருந்த துணியில் அவனுக்கு கிடைத்த சிறிதளவு பொரியை கட்டி எடுத்துக்கொண்டு ஓடத் தொடங்கினான். ஓடி ஓடி ஓடைக்கரையை வந்தடைந்தான். ஓடையில் தண்ணீர் நிறைந்து வழிந்துகொண்டிருந்தது. அவ்வளவு தண்ணீரில் மீன் பிடிக்க முடியாது. சின்னதும் பெரிதுமான நண்டுகள் கிடைக்கும். அவனுடைய பாட்டி, தென்னங்கீற்றிலிருந்து குச்சி உறுவும் வேலையை முடித்து விட்டு, நண்டு பிடிப்பதற்காக ஓடைக்கு வந்திருந்தாள். கிழவியால் சும்மா இருக்க முடியாது.

"நண்டைப்பிடிச்சு என்ன பண்ணுவே, பாட்டி?"

"வைத்தியரோட மாமனார் கண்ணுலெ பூ விழுந்திருக்கு. நண்டை கொதிக்க வைச்சு தின்னா சரியாப் போயிடும். வைத்தியரின் மனைவி அப்பப்போ தன் அப்பாவுக்காக நண்டு கேட்டு வாங்கிட்டுப் போவா." தன் பேரனின் கேள்விக்கு பதிலாக கிழவி மேலும் சொன்னாள்: "வாங்கிட்டா சரி. இல்லாட்டி அதையும் வெல்லத்தையும் போட்டு கத்து கறி சமைச்சிடலாம். உனக்கு பொரி யார் குடுத்தா? ஆச்சார்ஜியின் வீட்டுக்காரியா?"

"ஆமா" சீனிவாஸ் அவசர அவசரமாக பொரியை வாயில் போட்டுக் கொள்ள ஆரம்பித்தான். ஸ்ரீபஸீயின் அம்மா, சீனிவாஸின் பாட்டி வாயைக் கோணிக்கொண்டு யாரையோ திட்டிக்கொண்டு சொன்னாள்: "அப்போ என்னவெல்லாம் தர்றேன்னு சொன்னா! இது தரேன், அது தரேன் சோறு தரேன், துணிமணி தரேன், எல்லா பாரத்தையும் என்தலைமேல் எடுத்துக்கிறேன்– இதெல்லாம் இப்போ மறந்து போயிருச்சா?"

"யாரு பாட்டி?"

"ஒன்னோட சத்துரு, ஒன்னோட ஆயாவோட சத்துரு."

சீனிவாஸ் தன் பாட்டியுடன் வெகு நேரம் நண்டு பிடித்துக் கொண்டிருந்தான். கைகால் ஓய்ந்து போகும் வரை இருவரும் இவ்வேலையில் ஈடுபட்டிருந்தனர். பிறகு வீடு திரும்பியவுடன், சீனிவாஸ் பாட்டியிடம் சொன்னான்: "பாட்டி, இந்த வெள்ளம் எப்படியாவது போகட்டும், நீ அந்த வெள்ளத்த பத்திச் சொல்லு."

"ஓ! பிரளய வெள்ளத்தப்பத்திக் கேக்கறியா?" பாட்டி தலையை அப்படியும் இப்படியும் ஆட்டினாள். "ஒன் அம்மா அப்போ சின்னப்பொண்ணு- கொள்ளை அழகு. மேனா மினுக்கி, காலையிலிருந்தே தூத்தல் போட்டுக்கிட்டு இருந்துச்சு. காத்துல பஞ்சு பறக்கிறா மாதிரி அந்த காத்து என்னமா சத்தம் போட்டுகிட்டு இருந்துச்சு!"

"பொறகு-?"

"வெள்ளம் வந்தவுடனே. நாங்க எல்லாம் பெரிய ஆச்சார்யார் வீட்டுத் தாழ்வாரத்துக்குப் போய் ஒக்காந்துகிட்டோம். எத்தினியோ பேரு மரத்தில ஏறி கிளைங்க மேலே உக்காந்துக்கிட்டானுக! எத்தனை பேரு தொப்பலாய் நனைஞ்சு போயிருந்தானுக! சனங்க புழுமாதிரி செத்துகிட்டு இருந்தாங்க. இதையெல்லாம் பார்த்த ஐயருமாருங்க தாழ்வாரத்துக்குப் பக்கத்திலிருந்த கொட்டகையில ஒதுங்க இடம் கொடுத்தாங்க."

"பொறகு என்னாச்சு?" கதையின் இந்த இடம் சீனிவாஸுக்கு ரொம்பவும் பிடித்த இடம். இந்த இடத்திற்காகவே அவன் மறுபடியும் மறுபடியும் பாட்டியை இந்தக்கதையை சொல்லச் சொல்லி நச்சரிப்பான். இவ்விடத்தின் காரணமாகவே, இக்கதை எல்லா ரூப கதைகளையும் விட மேலும் கேட்கும் ஆர்வத்தைத் தூண்டுவதாக இருந்தது. வெள்ளம் வரும்போது எல்லா மனிதர்களும் தேவதைகளாகி விடுகின்றனர். இல்லாவிட்டால் இப்படிச் செய்வார்களா?

"சோத்துக்கில்லாம மனுசங்க சாகறதப் பாத்த ஐயருமாருங்க மூட்டை மூட்டையா பொரி, அவல், பாதாஷ் சக்கரை மிட்டாய் கொடுத்து எல்லாருடைய உசிரையும் காப்பாத்தினாங்க. யாருக் கெல்லாம் சமைக்க இடம் இருந்துச்சோ அவங்களுக்கு அரிசி, பருப்பு கொடுத்தாங்க."

"அம்மாவுக்கு?"

"அவளுக்கு அந்த பாப்பார பெரியவங்க துணி கொடுத்தாங்க. அவ மேல போட்டிருந்த சேலை கிளிஞ்சு போயிருந்துச்சு. புது மாட்டு கொட்டிலிலே இருக்க இடம் கொடுத்தாங்க,"

"பெறகு-?"

"காஞ்ச வெறகு கொடுத்தாங்க. அரிசி, பருப்பு, எண்ணை உப்பு எல்லாம். தண்ணி இறங்கினப்புறம் எல்லாரும் அவங்கவங்க எடத்துக்குப் போயிட்டாங்க ஆனா, ரூபஸீ மேலேயும் அவ ஆயா மேலேயும் ஆச்சார்யார் எவ்வளவு கரிசனமா இருந்தார் தெரியுமா? 'இவங்களைப்போல கஷ்டப்பட்றவங்க ஒருத்தரும் இருக்க

முடியாது. 'கேட்பாரற்ற அநாதைங்க பாவம்!' அப்படின்னு ஆச்சார்யார் அடிக்கடி சொல்லுவார். ரொம்பநாளக்கி இவங்களை தன்னோட வீட்டிலேயே வைச்சிக்கிட்டிருந்தார். தன்னுடைய வேலைக்காரன் ஒருத்தனுக்கே ரூபஸீயை கட்டிவைச்சார். கல்யாணமான ஒரு வருஷத்திலேயே நீ பிறந்தே. ஆனால், ரூபஸீயின் புருசனுக்கு காய்ச்சல் வந்து செத்துப் போய்விட்டான்."

"அப்புறம் என்ன ஆச்சு பாட்டி?"

"நீ பொறந்தப்பறம் கூட அவங்களுக்கு ஈவு இரக்கம் எல்லாம் இருந்துச்சு. இன்னிக்கு மாதிரி ஒரு பிடி பொரி கொடுத்து துரத்தி விடுற மாதிரி அந்த நாள்லே இரக்கமில்லாமே இருந்ததில்லே."

சீனிவாஸின் பாட்டி தலையை ஆட்டி ஆட்டி பேசிக் கொண்டிருந்ததை நிறுத்திவிட்டாள். அப்பொழுது தண்டோரா சத்தம் காதில் விழுந்தது தண்டோரா போட்டு ஆச்சார்யார் எல்லாரையும் தன் வீட்டிற்குக் கூப்பிடுகிறார்– பஜனை, சாமி பூஜை, பிரசாத விநியோகம், கௌரங்க பிரபுவின் தரிசனம் எல்லாம் இருக்கும்– எல்லாரும் வாங்க- என்று திவாகர் சக்ரவர்த்தி போன்ற பிராமணர்கள், சீனிவாஸ் போன்ற பாக்தி, எல்லாருக்கும் அழைப்பு.

"அடேயப்பா! மெய்யாலுமே ஐயாமாருங்க எல்லாரையுமே அழைப்பாங்களா? எல்லாருமே ஒரே இடத்திலே உட்கார்ந்து சாப்பிடுவாங்களா?"

சீனிவாஸின் பாட்டி புரிந்தும் புரியாமலும் தலையை ஆட்டிக் கொண்டிருந்தாள். இந்த வெள்ளமும் கங்கையின் பழைய வெள்ளம் மாதிரிதானோ என்னவோ? எல்லாரும் ஒரே இடத்தில் உட்காருவார்கள். பொரி, அவல் எல்லாம் பகிர்ந்துகொண்டு சாப்பிடுவார்களா?

"அவல், பொரி இல்லே பாட்டி– சோறு வடிச்சிருங்காங்க, நெய் போட்ட பருப்பு, தேங்காய் போட்ட கறி- பால்காரன் பொஞ்சாதி ஏகப்பட்ட தயிர் தோச்சிருக்கா, தெரியுமா?"

"போ, போ, அம்மா கிட்டப்போய் துவைச்ச சொக்கா வாங்கி போட்டுக்க, கொஞ்சம் எண்ணை கிடைக்குமா? பாலசன்யாசி யின் ஜடை மாதிரி என் தலை ஆயிடுச்சு. இந்த தலையைத் தூக்கிக்கிட்டு எப்படி அவருக்கு முன்னால போயி நிப்பேன்?"

சீனிவாஸ் காற்றில் மிதந்து கொண்டு அம்மாவிற்கு செய்தி கொடுக்கப் போனான். ரூபஸீ இரண்டு கைகளையும் மறுபடியும் மறுபடியும் தலைக்குமேல் வைத்துக்கொண்டு கும்பிடத் தொடங்கி னாள். இது என்ன சாதாரண விஷயமா? அவர் சீனிவாஸின்

தலையில் கையை வைத்து ஆசீர்வாதம் செய்தால், அப்போது எல்லாரும் சீனிவாஸையும் ஒரு மனிதனாக மதிப்பார்கள். ரூபஸீயையும் ஒரு மனுஷியாக மதிப்பார்கள். இன்னொரு மனிதன் இந்த கிராமத்தில் தலை நிமிர்ந்து கர்வத்துடன் நடப்பான். ரூபஸீக்கு இந்த கௌரங்கரைப் பார்த்து ஒரு வார்த்தை கேட்க மனது துடித்தது. இல்லாவிட்டால் யாரை விட்டாவது கேட்க வைக்கவேண்டும். 'யாரோ ஒரு அகங்காரம் கொண்ட புருஷனுடைய ஒரே பையன் பாக்கியாக இருந்துகொண்டு எப்போதுமே ஏழையாக இருப்பது, வேறு வீட்டுப் பையனுக்கு கிடைப்பதில் நூறில் ஒரு பங்கு கூடக் கிடைக்காமல் இருப்பது — இது என்ன நியாயம்?' என்று

ரூபஸீக்கு தோன்றியது: கௌரங்கர் வந்துவிட்டார், சீனிவாஸை அவருடைய நிழலில் வைத்துக் கொண்டுவிடுவார் என்று. ஒரு நொடியில் அவளுடைய எல்லாத் துயரங்களும் கிலேசங்களும் கரைந்து விட்டது போல் அவளுக்குத் தோன்றியது.

ஆனால் கௌரங்கர் வரவில்லை

சாந்திபூர், காடோயா மூலமாக அவருக்கு குமார்ஹம் செல்லும் வழியைப் பிடிக்க வேண்டியதாயிற்று. சன்னியாசம் எடுத்துக்கொண்ட சில ஆண்டுகளுக்குள்ளாகவே மக்கள் அவரை ஈக்களைப் போல் மொய்க்க ஆரம்பித்து விட்டனர். அவரைச்சுற்றி நாலாபக்கமும் தலைகளோ தலைகள். எல்லாருமே அவரைப் பார்க்க விரும்புகிறார்கள். ஒரு தடவையாவது அவர் காலைத் தொட்டு வணங்க விரும்புகிறார்கள். குருடன் சொல்கிறான்: 'என்னை ஒருமுறை தொடு, என் பார்வை திரும்பி விடும்.' முடவன் அவர் காலைப் பிடித்துக் கொண்டு கெஞ்சுகிறான்: 'என் காலைத் திருப்பிக்கொடு, பிரபு!' குழந்தை இல்லாத அநேக பெண்மணிகள் அவர் காலைத்தொட்டு வணங்கி 'பிரபு! எனக்கு ஒரு பிள்ளையைக் கொடு. ஏன் பிறக்கிற குழந்தைகள் பிழைப்பதில்லை என்றாவது சொல்!' இதுபோல் ஆயிரமாயிரம் மனக் குறைகள். மக்கள் வந்துகொண்டே இருக்கிறார்கள். போய்க் கொண்டே இருக்கிறார்கள். மிகவும் விரும்பியிருந்தாலும் இம்முறை அவர் சீனிவாஸின் கிராமத்திற்கு வர முடியவில்லை.

மக்கள் வெகுநேரம் ஆச்சார்யாரின் வீட்டிற்கு முன் உட்கார்ந்து கொண்டிருந்தனர். அவர்கள் கௌரங்கரின் தரிசனத்திற்காக மட்டும் வந்திருக்கவில்லை. வயிற்றுக்குள் இருக்கும் அக்னி மிகக் கொடுமையானது. வயிறு ரொம்ப சாப்பிடுவதற்காக தாய்-மகன், கிழவன்-கிழவி, நொண்டி-முடம் எல்லாரும்

உட்காந்திருந்தனர். 'கொட்டு எவ்வளவு வேண்டுமானாலும் கொட்டு. நிற்காதே!' என்று யாரோ ஆகாயத்திற்கு சவால் விட்டிருந்ததைப் போல முன்பு வந்த வெள்ளத்தைப் போலவே இந்த முறையும் மழை விடாது பெய்து கொண்டிருந்தது. இந்த மாதிரி மழையினால்தான் வெள்ளம் வருகிறது. மழையில் இப்படி மணிக்கணக்கில் நனைந்து கொண்டே யாரோ ஒருவன் யாரிடமோ சொல்கிறான்: "எப்போவாவது பிரசாதம் வாங்கிக் கொள்ள அழைப்பு வரும் என்கிற ஆசையில்தான் இங்கே எல்லாரும் உட்கார்ந்து கொண்டிருக்கிறார்கள்."

கடைசியில் பொழுது சாய்ந்த பிறகு, பொரி, சர்க்கரை மிட்டாய் எடுத்துக்கொண்டு ஆச்சார்யாரின் வேலைக்காரன் கூட்டத்தின் நடுவில் நுழைந்தான். சீனிவாஸனும் அவனுடனிருந்த ஆண்களும் பெண்களும் திண்ணையில் ஏறவில்லை. ஆச்சார்யரின் வேலைக்காரன், தேனொழுகச் சொன்னான்: "அவர் வந்திருந் தாரானால், நீங்கள் எல்லாரும் தாழ்வாரத்தில் உட்கார்ந் திருக்கலாம். நாங்களே உங்களைக் கூப்பிட்டு உட்கார வைத் திருப்போம். ஆனால், தம்பி, அவர்தான் வரவில்லையே, அனாவசியமா தாழ்வாரத்தை சேறாக்குவதில் என்ன லாபம்?"

"ஆனாலும் ஏன் பொரி சர்க்கரை மிட்டாய் கொடுக்கிறீங்க? பிரசாதம் கிடைக்கும்னு சொல்லியிருந்தீங்களே?"

"அவர் வந்திருந்தா கட்டாயம் பிரசாதம் தயாராகியிருக்கும். பஜனை நடந்திருக்கும். பிரசாதமும் கிடைத்திருக்கும். எல்லா ஏற்பாடுகளும் தயாராக இருந்தன. சாமானெல்லாம் வாங்கியாச்சு. எல்லாம் இருந்தது. ஆனால் அவர் வரவில்லையே? பிரசாதம் செய்து என்ன பிரயோசனம்?"

"ஆனா பாபு! நாங்க சாப்பாடு கிடைக்கும்ங்கற நம்பிக்கையில் தானே வந்திருக்கோம்..."

"பாத்தியா! பாத்தியா! நீ சன்யாசியைப் பார்க்க வந்தியா? சோறு தின்ன வந்தியா?"

"சன்யாசியப் பார்க்கவும் வந்தோம். சோறு தின்னவும் வந்தோம்."

"நான் கொடுக்கிறதை வாங்கிக்குங்க. உங்களோட வீணா வாதாட நான் தயாராக இல்லை. உங்களுக்கு சன்யாசியின் தரிசனத்தை விட சோறு முக்கியமாப் போயிடுச்சு இல்லையா? அந்தக் காரணத்தினாலதான் உங்களுக்கு விடிவு காலம் வரலெ, புரிஞ்சுதா பையா? எடுத்துக்க, சர்க்கரை மிட்டாய் எடுத்துக்க."

எவ்வளவு அழகான பொரி! எவ்வளவு பெரிய பெரிய

சர்க்கரை மிட்டாய்கள்! ஆனால் சீனிவாஸின் கண்களிலிருந்து கண்ணீர்தான் பொங்கி வழிந்தது. அவனுக்குத் தெரியும். காலை யிலிருந்து எவ்வளவு மீன்கள், காய்கள், பால், தயிர், இன்னும் என்னவெல்லாமோ கூடைகூடையாய் கொண்டு வரப்பட் டிருந்தன என்று. எதற்காக என்று கடவுளுக்குத்தான் தெரியும். திடீரென்று சீனிவாஸுக்கு தன் தாய் ரூபஸீயின் மேல் மிகவும் கோபம் வந்தது. "நீ ஏன் இந்தத் தடவை சமையல் பூஜை செய்யலே? வயிறு நிறைய சோறு திங்கணுங்கிற ஆசை ஏன் செத்துப்போக மாட்டேங்குது,"

அம்மாவை மனதிற்குள்ளேயே அடித்து உதைத்து கொன்று போட்டுக் கொண்டு பொரி, சர்க்கரை மிட்டாயை வாங்கிக் கொண்டு சினிவாஸ் ஓடிவிட்டான். வெகு நேரத்திற்குப் பிறகு, கையில் இருந்ததையெல்லாம் சாப்பிட்டு முடித்தான். மாலை வேளையில், நாலா பக்கமும் இருள் வளர்ந்து இங்கும் அங்கும் மின்மினிப்பூச்சிகள் பளிச்சிட்டுக் கொண்டிருந்தன. அப்போது தான் வெகுநேரம் தேடிக்கொண்டிருந்த அவன் பாட்டி அவனை மைதானத்தின் ஒரு மூலையில் கண்டுபிடித்தாள். தண்ணீரில் முழுகிக்கொண்டிருக்கும் பனைமரத்தின் பக்கத்தில் அவன் மவுனமாக உட்கார்ந்து கொண்டிருந்தான். அழுது அழுது அவன் மிகவும் களைத்திருந்தான். தூக்கமும் வந்து கொண்டிருந்தது. பேய் பிசாசின் பயமும் அவன் மனதில் எழத்தொடங்கியது.

"பாட்டி என் கையைப் பிடிச்சுக்கோ"

இருவரும் தண்ணீரில் 'சொதக் சொதக்' என்று நடந்தனர். வீட்டை நெருங்கிக்கொண்டே சீனிவாஸ் சொன்னான்: "பாட்டி கௌரங்கரின் இந்த வெள்ளத்தை விட அந்த பழைய வெள்ளம் தான் நல்ல வெள்ளம் பாட்டி அந்த வெள்ளத்திலே, ஐயா மாரெல்லாம் அவுல், பொரி, அரிசி எல்லாம் கொடுத்தாங்களே? நம்ம துக்கமெல்லாம் தூர விலகிப் போச்சில்லே? அந்த மாதிரியான வெள்ளம் மறுபடியும் வராதா?"

# விதை

ஹேஸாடி கிராமத்திற்கு வடக்கே உள்ள மேடு பள்ளமான நிலப்பரப்பு ஒரு வறண்ட பூமி — குருடா. மழை பெய்த பிறகும் இங்கு புல் கூட முளைப்பதில்லை. நடு நடுவே கள்ளிப் புதர்கள். ஒரு சில வேப்ப மரங்கள். இதன் நடுவில் அரை பீகா அளவில் சற்றே வேறுபட்ட ஒரு துண்டு நிலம். தொலைவிலிருந்து பார்த்தால் இந்த நிலம் கண்ணிற்குப்படாது. தென்படுவதெல்லாம் சுற்றியுள்ள வறண்ட பூமி, அதில் எருமை மாடு கூட மேயாது. ஆனால் கொஞ்சம் உயரமான இடத்திலிருந்து பார்த்தால் நடுவிலுள்ள ஓரளவு பசுமையான நிலம் தென்படும். அப்பசுமை ஏதோ ஒரு பூதத்தின் வடிவமாக இருக்கும்.

இந்த பூதத்தைவிட பூதமாக நிற்பது இந்நிலத்தில் கட்டைகளால் செய்யப்பட்ட ஒரு மச்சான் (பரண்); குடிசை மாதிரி தெரியும். இந்தப் பரண் இந்த இடத்திற்கு இயற்கையானதாகத் தோன்றாது. ஏனென்றால் இத்தகைய பரண்கள் சாதாரணமாக விளைநிலத்தில் முதிர்ந்த தானியக்கத்திர்களைக் காப்பதற்காக நிறுவப்படும். ஆனால் இந்த நிலத்தில் மண்டிக் கிடப்பது 'ஏலோ' என்ற மரங்கள். இதை எருமை கூட தீண்டாது. அதற்கு ஒரே உபயோகம் - இதன் பட்டையிலிருந்து தயார் செய்யப்படும் வலுவான கயிறு; அது உலகப்பிரசித்தி பெற்றது. பாரதத்தில் இந்த மரம் காட்டு மரமாக கணிக்கப்படுகிறது.

இதை விட பூதம் போன்ற காட்சி — மாலைப் பொழுதில் தென்படும் குருடா கிராம திசையிலிருந்து நீளக்காலடி வைத்தவாறு ஒரு மனிதன் இந்தப் பக்கம் வருகிறான். பக்கத்தில் வந்தவுடன் அவன் ஒரு கிழவன் என்பது தெளிவாகும். தோலெல்லாம் சுருங்கி தளர்ந்த உடல். இடுப்பில் ஒரு கோவணம். இடுப்பிலிருந்து ஒரு துணிப்பையும் தொங்கிக்கொண்டிருக்கிறது. கையில் ஒரு நீளமான தடி. அந்தத் தடியால் இரண்டு பக்கமும் இருக்கும் ஏலொ செடிகளை பாதையிலிருந்து விலக்கிக் கொண்டு மைதானத்திற்கு வருகிறான். வளைந்திருக்கும் ஒரு கிளையின் உதவியுடன் பரண்

மேல் ஏறுகிறான். இரண்டு சிக்கிமுக்கி கற்களை உரசி எழும் நெருப்பில் பீடியை பற்ற வைத்துக்கொண்டு உட்காருகிறான். இது அவனுடைய தினசரி வாடிக்கை. இருள் மண்டியவுடன் தரையில் ஒரு கட்டிலைப் போட்டுக் கொண்டு தூங்குகிறான்.

தினமும் குருடா கிராமத்தில் இதே சமயத்தில் ஒரு கிழவி அவனை திட்டித் தூற்றிக் கொண்டிருப்பாள். அவளுக்கு துலன் கஞ்சுவைத் திட்டுவதற்கு அதிகாரம் இருக்கிறது. அவள் அவனுடைய மனைவி. இப்படி அவள் திட்டுவது அவளுடைய மகன், மருமகள், பேரன், பேத்திகள் யாருக்குமே பிடிப்பதில்லை. ஆனால் இந்த விஷயத்தில் அவர்கள் ஒன்றும் செய்யமுடியாது வாயைத் திறந்தால், அவர்களையும் சேர்த்துத் திட்டுவாள். ததுவாவின் ஆயாவுடைய திட்டும் திறன், சண்டை போடும் ஆற்றல் எல்லாருக்கும் தெரியும். அவளிடம் ஏதாவது சொல்வது அவளுடைய திறமைக்கு சவால் விடுவதாகும். அவளை சீண்டினால், சீண்டுவோர்களின் ஏழு தலைமுறையினர்களுடைய பெயர்களை இழுத்து வந்து சகிக்கமுடியாத, வாயில் வராத வசவுகளால் அபிஷேகம் செய்து விடுவாள். சாதாரணமாக அவள் மூன்றாவது தலைமுறையினரை திட்டி முடிப்பதற்குள், எதிராளிகள் ஓடிவிடுவார்கள்.

எல்லாருக்கும் அவளிடம் நடுக்கம். எமர்ஜென்ஸி சமயத்தில் தாமாடி கிராமத்தில் ஒரு முறை ஏதோ தகராறு எழுந்தது. போலீஸ் விசாரணைக்கு வந்தது. ததுவாவின் ஆயா போலீஸின் மேல் வாயில் வராத திட்டுகளை வீசி எறிந்து விரட்டியே விட்டாள். அவர்கள் தேடி வந்த ஆள் ஒரு மாட்டுக் கொட்டிலில் மறைந்து கொண்டிருந்தான். ததுவாவின் ஆயா சொன்னாள்: "வாங்கடா வாங்க- எல்லா எடத்தையும் சலிச்சுப் பாருங்கடா பிணம் தின்னிகளா- வாங்க ஒங்க ஆத்தா-" கத்தி ஊரைக்கூட்டி அவள் செய்த ரகளையில் போலீஸ் கிராமத்தைவிட்டு ஓடியே விட்டது, கிராமம் நிரபராதியாகி விட்டது.

இதற்கு பிறகும், கிழவி சாந்தியடையவில்லை. போலீஸ் காரர்களை துரத்திக் கொண்டுபோய் வைது கொண்டிருந்தாள். "டேய் கபோதிப் பசங்களா- கிராமத்தில கௌவன், கௌவி பச்சக் கொளந்தைங்களத் தவிர யாருமில்ல. அவங்களப் பாக்கணுமா? பிடிச்சு ஜெயில்லெ போடணுமா? ஏண்டா ஓடுறே?"

போலீஸ் போனவுடன், ததுவாவின் ஆயா பயந்து நடுங்கிக் கொண்டிருந்த தன் மகனைப் பார்த்து தலையிலிருந்து கால் வரை வசவால் நனைத்தாள், "ஏய்- தேவிடியா மகனே- ஒன் புத்தி மாடு

மேய்க்கத்தான் லாயக்கு. ஒரு கிழ ஆட்டுக்குக்கூட ஒன்னெவிட அதிக புத்தி இருக்கும். அந்த ராஜ்புத் மஹராஜனின் காலை வெட்டினே, ரொம்ப சரி. கழுத்தையே வெட்டியிருந்தீன்னா, செஞ்ச பாவமெல்லாம் போயிருக்கும். ஆனா காட்டுல போயி ஒளிஞ்சிருக்க வேண்டாமா? இப்படி ஒரு காரியத்தை செஞ்சுட்டு எந்தக்கழுதை கிராமத்துக்குத் திரும்பி வரும்? போடா போ– காட்டிலேயே இரு–"

தன் ஆயாவை அப்பனைத் திட்டாதே என்று சொல்லும் துணிவு ததுவாவிற்கு இல்லை. கேட்டாலே சீறி எழுந்துவிடுவாள். "அப்பன் மேல அவ்ளோ கரிசனமா? ஒனக்கு ஆயா ஒண்ணு மில்லெ ஒரு கெழ ஆடு, அவ்ளோதான். ஒங்க அப்பனப் பத்தி ஒனக்கு என்னடா தெரியும்? எனக்குத்தாண்டா தெரியும்."

நாலு வயதில் ததுவாவின் கல்யாணம் நடந்தது. பதினான்கு வயது முடிந்தவுடனேயே அவளுடைய கவுனா (கணவன் வீட்டிற்குச் செல்லும் சடங்கு) நடந்தது. கிழவனின் குணம் அவளுக்கு நன்றாகவே தெரியும். "காட்டுக்கு நடுவில் குடிசை போட்டுக்கிட்டு தனியாக பிசாசு மாதிரி உட்கார்ந்துகிட்டு ஜமீன்தார் நிலத்தைக் காவல் காத்துட்டிருக்கானே, எதுக்காக?" கிழவி கேட்பாள்: "பாம்பு கீம்பு கடிச்சோ, புலி கிலி கொன்னு போட்டோ செத்துட்டான்னா, யாரு தாலி அறுப்பா? ததுவாவா, லடுவாவா? எனக்கு இந்த ஆளை நல்லாத் தெரியும். அவனுக்குப் பேராசை. பூண்டு முளைக்காத நெலத்தக் காட்டி வருசா வருசம் வெத வாங்கிட்டு வர்றான்– சர்க்கார் வெதய வாங்கி கடைத் தெருவுல விக்கறான். சிநேகிதன் பஹனோட ஏரைக் காட்டி வருசா வருசம் ஏரு மாட்டுக்கு துட்டு வாங்கிட்டு இருக்கான்– திருட்டு பயமவன்."

மக்கள் வாயடைத்துப் போய்விடுவார்கள். ஆயா வேகமாக ஹுக்காவை இழுத்துக்கொண்டு சொல்கிறாள்: "நா செத்தப் புறம்தான் என் அருமை உங்களுக்குத் தெரியும்." சொல்லிக் கொண்டே கிழவி படுத்து விடுவாள். மகன்கள், 'அப்பாடா– இன்னிக்குப் பொழுது கழிந்தது' என்று தங்களுக்குள் கிசுகிசுத்துக் கொள்வார்கள். புரண்டு கொண்டே ததுவாவின் ஆயா தனக்குள் பேசிக்கொள்வாள். "ஒரு நா அங்க செத்துக் கிடக்கப் போறான். மொகமுழி கூடக் கிடைக்காது–"

மக்களுக்குத் தெரியும். நாள் முழுவதும் குடிசையில் உட்கார்ந்துகொண்டு பாரா கொடுத்துக் கொண்டிருப்பது, இரவு முழுவதும் பேயடைந்த வீடு போன்ற இடத்தில் தங்குவது

சாதாரண மனிதனின் நடத்தையல்ல. ஆனால் தங்கள் தகப்பனை இவர்கள் சாதாரண மனிதர்களில் ஒருவனாக நினைக்கவில்லை. அவர்கள் பார்வையில் அவர்களுடைய தகப்பன் ரொம்ப சிக்கலான ஆசாமி, ரகசியமான ஆள், புரிந்து கொள்ள முடியாத மனிதன்.

கஞ்சு சாதியினரின் தொழில் செத்துப்போன மிருகங்களின் தோலை உரித்து எடுப்பது. ஒரு சமயம் இவங்க அப்பன், பத்துக்குக் குறையாத துப்பாக்கியை எப்போதும் கையில் வைத்துக்கொண்டு திரியும் பொல்லாத ராஜ்புத் மஹாஜன் லட்சுமண் சிங்கின் எருமை மாடுகளில் பலவற்றிற்கு விஷம் கொடுத்து கொன்று விட்டிருந்தான். அந்த சமயத்தில் லட்சுமண் சிங் அவனுடைய கிராமமான தமாடியில் இருந்தான். கொன்று போட்ட எருமைகளின் தோலை உரித்து விற்று விட்டான் துலன். லட்சுமண் சிங் இது தன் பங்காளி தைதாரி சிங்கின் வேலை என்று சந்தேகப்பட்டான். இதன் விளைவால் மூண்ட பகை இன்னமும் தீர்ந்தபாடில்லை.

இப்படியெல்லாம் விளையாடிய அப்பன் இப்பொழுது ஒன்றும் செய்யாமல் உட்கார்ந்து கொண்டிருக்கிறான். இதிலிருந்து தெரிகிறது அவன் வேறு உலோகத்தில் வார்க்கப்பட்ட மனிதன் என்று. பிழைத்துக் கிடப்பதற்காக எப்பொழுதும் யோசித்துக் கொண்டே இருக்கும் அவனுக்கு தன் மகனுடனோ பேரப் பிள்ளைகளிடமோ பேசக்கூட நேரமில்லை. ஆயாவும் ஒன்றும் குறைச்சலில்லை. எலும்பும் தோலுமாக இருந்தாலும் உழைப்புக்கு அஞ்சாத போக்கு, வலிமை, துணிச்சல், கர்வம், கோபம் எல்லாம் அவளை சாதாரணப் பெண் இனத்திலிருந்து பிரித்து தனி மனுஷியாக வைத்திருந்தன. தங்கள் அப்பனும் ஆயாவும் சேர்ந்து உட்கார்ந்து கொண்டிருந்ததை இவர்கள் பார்த்ததில்லை. ஆனாலும் அப்பனுக்கு எப்போதாவது முக்கியமான வேலை செய்ய வேண்டியிருந்தால், ஆயாவைக் கூப்பிட்டு முற்றத்தில் உட்கார வைத்துக்கொண்டு ஹுக்காவை புகைத்துக்கொண்டே சொல்லுவான்: "ஏ- ததுவாவோட ஆயா! ஒரு விஷயம் சொல்லு ஒன் புத்தியை கிராமத்து சனங்கெல்லாம் ரொம்பத்தான் மெச்சிக்கிறாங்க. போலீஸ் கூட ஒன்னக் கண்டு நடுங்குது-"

"என்னா விஷயம்? ஏதாவது திருட்டுத்தனம் பண்றதா இருக்கியா?" என்பாள் ஆயா. "யாரைக் கொள்ளையடிக்கப் போற? யாரை ஏமாத்தப்போறே?"

அவள் உரக்கதான் பேசுவாள். ஆனால் அதில் கோபத்தின் சாயை இருக்காது. பிறகு இருவரும் குரலைத் தாழ்த்திக் கொண்டு

யோசனை பரிமாறிக்கொள்வார்கள். இந்த மாதிரி சம்பவங்கள் ஒரு வருஷம், ஒன்றரை வருஷத்தில் ஒரு முறை நடக்கும். மற்ற நேரங்களில் ஆயாவுடன் அப்பன் பேசவே மாட்டான். சில சமயங்களில் அலுத்துக்கொண்டு ஆயா சொல்லுவாள்: "இதை விட ஆயா வீட்டுக்குப் போய் சொகமாயிருக்கலாம்"

அப்பன் அட்டகாசமாக சிரித்துக் கொண்டு தாழ்ந்த குரலில் காற்றோடு பேசுவான் "ஆமா, ஆமா- கிராமத்தில் அப்பன் கட்டி வெச்ச அரண்மனை காத்துகிட்டிருக்கா என்ன-" ஆயாவுக்கு அப்பனுமில்லை, அம்மாவுமில்லை. இருந்தாலும் அம்மா நடு நடுவில் இப்படிப் பேசி அப்பா அவளைக் கேலி செய்வதற்கு வாய்ப்புக் கொடுப்பாள். இப்படிப்பட்ட பெற்றோர்களை ததுவாவும் வடுவாவும் ஒன்றும் செய்வதற்கில்லை. மலை ஏன் மேற்கே இருக்கிறது, குருடா நதி ஏன் இரவு பகலில்லாமல் ஓடுகிறது—இவற்றையெல்லாம் பற்றி எப்படி ஒன்றும் செய்ய முடியாதோ, அப்படியே இவ்விஷயத்திலும் ஒன்றும் செய்ய முடியாது.

சனிசரி சொல்லுவாள்: "ஒங்க அப்பன், ஆயா ரெண்டு பேரும் பயித்தியங்க- அப்பன் முழுப் பயித்தியம், ஆயா அரைப்பயித்தியம். இல்லாட்டி இப்படிச் செய்வானா? எப்போதிலிருந்து நிலம் கிடைச்சுச்சோ அப்போதிலிருந்து பாரா கொடுக்கப் போறான் ஒங்க அப்பன். அதிலேந்து பத்து பைசாகூடக் கிடைக்கிறதில்ல. பழமொழி இருக்கில்லே, தானம் கொடுத்த மாட்டை பல்லைப் பிடித்துப் பார்க்கக் கூடாதுன்னு- இந்த நிலம் அவனுக்கு குருட்டு அதிர்ஷ்டத்தில் கெடச்சுது. ஆனா அதிலிருந்து பத்து பைசா கிடைக்கிறதில்லே-"

நிலம் லட்சுமண் சிங்குடையது. சில வருடங்களுக்கு முன் சர்வோதயத் தொண்டர்கள் இந்த இலாக்காவில் உள்ள ஜமீன் தார்களின் கதவுகளைத் தட்டிக்கொண்டிருந்தார்கள். அவர்களைப் பற்றி சனிசரி சொல்லுவாள்: "பாபு சாதியச் சேர்ந்த இவங்களும் பயித்தியங்க- கிளம்பிட்டானுக! ஜமீந்தாருங்க மனசுல கருணை சுரக்கச்செய்ய இவங்க நினைக்கிறாங்க, ஜமீந்தாருங்க தானாவே இவங்ககிட்ட வந்து சொல்லுவாங்க: 'ஐயையோ என்கிட்ட இவ்ளோ நிலமிருக்கு- இந்த அப்பாவி சனங்ககிட்ட ஒண்ணுமே இல்லேயே?' அப்படீன்னு சொல்லிட்டு தங்களோட நிலத்தை யெல்லாம் இந்தப் பயித்தியங்ககிட்ட ஏழைங்களுக்கு பங்கு போட்டுக்கொடுக்கச் சொல்லி கொடுத்துவாங்கன்னு நெனச்சிக் கிட்டிருக்காங்க- இது மட்டும் நடந்துச்சுன்னா அன்னைக்கு நான்

திண்ணை மேல ஒக்காந்து சக்கரை போட்ட வெண்ணை சாப்பிடுவேன்-"

ஆனால் ஜமீன்தார்கள் தங்கள் வர்க்கத்திற்குள் தமது பெருமையை நிலைநாட்டிக் கொள்வதற்காக தத்தம் நிலத்தின் மிகவும் மோசமான, விளைச்சல் இல்லாத, பாறையான பகுதிகளில் ஓரிரண்டு துண்டுகளை சர்வோதயத் தலைவர்களிடம் பூமிதானம் செய்ய முன்வந்தார்கள். இந்த ஜமீன்தார்களிடம் தலா ஐநூறு அறுநூறு பீகாவிலிருந்து 20000 பீகா வரை நிலம் இருந்தது. நெல், கோதுமை, மஹுவா, கடுகு, துவரம்பருப்பு, சோளம் எல்லாம் இந்த நிலத்தில் விளைந்தன. நிலக்கடலை விவசாயமும் இப்போ தெல்லாம் மிகவும் லாபகரமாக இருக்கிறது. ஆகவே, தரிசு நிலத்தை தானம் செய்ததில் ஜமீன்தார்களுக்கு நஷ்டம் ஏதுமில்லை. பூமிதானம் செய்வது சர்வார்த்த சாதகம்—எல்லாருக்கும் நன்மை பயக்கும் செயல். நிலதானம் செய்தவர்கள் பூமிதானப் பட்டியலில் இடம் பெறுவார்கள். சர்வோதயத் தலைவர்களும் தொண்டர்களும் நாடு முழுவதும் புகழ் பெற்றவர்கள். ஆகவே நிலம் கொடுத்தவர் களுக்கும் புகழ் பெருகுகிறது.

குருடா பகுதியில் வசிக்கும் ராஜ்புத், காயஸ்தர்கள், ஜமீன் தார்கள், மஹாஜன்கள் எல்லாரும் பூமிதானம் செய்யவில்லையா? அப்படி செய்தார்கள் என்றால் அவர்களுக்கு மனமாற்றம் எப்படி ஏற்பட்டது? கட்டாயமாக ஏற்பட்டது. சர்வோதய மிஷன் நிறைவடைந்தது. இதற்குப்பிறகு அவர்கள் மத்தியப் பிரதேசத்தில் கொள்ளைக்காரர்களின் மனதை மாற்றும் பணியில் ஈடுபடச் சென்று விட்டனர். ஜமீன்தார்கள், கொள்ளைக்காரர்களின் மனமாற்றம் ஏற்படும் வரை இவர்களுடைய நோக்கம் நிறை வடையாது.

பூமிதானம் ஜமீன்தார்களுக்கு எல்லா விதத்திலும் பயனுள்ள தாக இருந்தது. ஒன்று தரிசு நிலம் கழிக்கப்பட்டது. தானம் பெற்றவர்கள் ஆயுள் முழுவதற்கும் நன்றியுள்ளவர்களாகி விட்டார்கள். மேலும், அரசாங்கத்தில் அவர்களின் செல்வாக்கு அதிகரித்தது. விருந்துக்குப்பிறகு ரஸகுல்லா மாதிரி தங்களை கருணை நிறைந்தவர்களாகவும் தயாளகுணம் உள்ளவர்களாகவும் காட்டிக் கொள்வது எல்லாவற்றையும் விட இனிப்பாக இருந்தது.

அந்த நாட்களில்தான் துலன் கஞ்சுவிற்கு அந்த நிலம் கிடைத்தது. நிலம் பெறுவதில் அவனுக்கு உற்சாகமில்லை. ஆனால் லட்சுமண் சிங்கின் பிரதாபம் அதிகம். கண்கள் சிவக்கச் சொன்னான்: "இதுதான் கீழ்சாதி புத்தி என்கிறது. இன்னிக்கி

நான் நல்ல மூடுலெ இருக்கேன். அதனால நிலத்தை ஒனக்கு தானம் பண்றேன். நாளைக்கு என்மனம் இப்படியே இருக்குமோ என்னவோ சொல்ல முடியாது- யோசிச்சிக்கோ."

துலன் சொன்னான்: "ஹுஜுர் மாயிபாப்" (எசமான் தர்ம தேவதை).

"அப்போ? விளைச்சலில்லாத நிலம்னா என்ன கெட்டுப் போச்சு? மழைக்காலத்தில் மழை கொட்டோ கொட்டுன்னு கொட்டும். விதைக்கிறவன்தான் அறுவடை செய்வான்."

மலையிலிருந்து வழிந்தோடும் கலங்கிய நீர் இந்நிலத்தில் விழுவது வாஸ்தவம்தான். ஆனால் நாலா பக்கமும் தரிசும், கல் மண்டியதுமான பூமி இது. அப்படிப்பட்ட நிலத்தில் எவன் விவசாயம் செய்வான்? விளைச்சல் நிலமாயிருந்தால் லட்சுமண் சிங் தானம் பண்ணியிருப்பானா? கடன் வாங்கப் போயிருந்த துலன் நிலச்சுவான்தாராகத் திரும்பிவிட்டிருந்தான். கிராமத்து ஜனங்கள் சொன்னார்கள்: "இதெல்லாம் பெரிய மனுசங்க சுபாவம்- நெய் தடவிய பரோட்டா தின்னு தின்னு அவங்க மூளை சூடாயிரும். இன்னிக்கிக் கொடுப்பாங்க, நாளைக்கு மறந்துடுவாங்க."

"அப்படி அவங்க மறக்கலேன்னா?"

"சும்மா விட்டு வச்சிருப்பாங்க. ஆரா—சப்ரா பகுதியிலே சர்வோதயா ஆளுங்க சொன்னதால, இதேமாதிரி சனங்களுக்கு நிலம் கொடுத்தாங்க. நிலம் வாங்கிக்கிட்டவனுக எல்லாரும் வட்டிக்காரனுக்கு வித்துட்டானுக. இல்லாட்டி அடமானம் வெச்சுட்டானுக. நீயும் அதத்தான் செய்யப் போறே."

"இந்த நிலத்த எவன் வாங்குவான்? வட்டிக்காரன் நல்லபேர் வாங்கிக்கப் பார்ப்பான். தரிசு நெலத்த கடாசிடுவான்" துலன் இன்னும் ஏதேதோ சொல்ல வாயெடுத்தான். ஆனால் பஹுன் அவன் வாயை அடைத்து விட்டான். அவன் சொன்னான்: "அவங்களுக்கு ஆயிரம் கவலைங்க. துலன் தலையில பிசாசு வாழும் நிலத்தைக் கட்டுவது ஒண்ணும் பெரிய விசயமில்லே."

துலன் முணுமுணுத்துக்கொண்டே இருந்தான். அவன் மனைவி சொன்னாள்: "அட— எப்படி இந்த நிலத்துலேந்து லாபம் அடிக்கலாம்னு நீ யோசிச்சுகிட்டே இருக்கே, நீ ஒரு முட்டாப் பய! யோசிச்சுக்கிட்டே இருந்தா முடிவே இல்ல. இந்த நிலத் தினாலே என்ன லாபம்?"

சனிசரி மறுநாள் எல்லாவற்றையும் கேட்டபிறகு சொன் னாள்: "இதில என்ன கஷ்டம், ஆயா! தோக்ரியில பிடிஓ. ஆபீசுக்கு

உன் மகனை அனுப்பு. விவசாயம் பண்ண எல்லா சாமானும் சர்க்கார் கொடுக்குது."

இதைக்கேட்டவுடன் துலன் முகத்தில் புன்னகை வெடித்தது. அவன் கண்கள் இரண்டும் கனவு காண்பவனின் கண்களைப் போல் விரிந்தன. தேவதைக் கதைகளில் சினையாகாத பசுமாடு பால் கொடுப்பது போல் பல கதைகள் இல்லையா? துலன் போன்றவர்கள் எப்படி இந்த மாதிரியான தரிசு நிலத்திலிருந்து நாலு காசு சம்பாதித்து குடும்பம் நடத்த முடியும் என்று புரிய வில்லை. ஆனால் செய்தார்கள் என்பது உண்மை.

துலன் பேரில் நிலம் பதிவாகி பத்திரமெல்லாம் வந்தது. கஞ்சுபாடாவில் ஒருமுற்றத்தில் பக்கம் பக்கமாக இரண்டு அறைகள். அதில்தான் வாசம், சோறு பொங்குவது எல்லாம். இது தான் அவர்கள் உலகம். முற்றத்தின் ஒரு மூலையில் பாயை விரித்துக்கொண்டு புருஷன் பெண்சாதி தூங்குவார்கள். நாலாப் பக்கத்திலும் ராஜ்புத் நிலச்சுவான்தார்கள் மஹாஜன்கள் வீடுகள். தோஹாடைச் சேர்ந்த ஹனுமான் மிஸ்ரா, பிராமணன். இந்த பகுதியில் மிகவும் புகழ் பெற்ற மனிதன். இந்த மாதிரியான உயர்சாதிக்காரர்களின் ஆதீனத்தில் இருந்து கொண்டு, துலனின் இடுப்பு ஒடிந்து போனதில் அதிசயம் ஒன்றுமில்லை.

ஆனால், எந்த நிலையிலும் மூளையை உபயோகித்து லாபம் பண்ணுவதில் குறியாக இருப்பவன் துலன். அவனுக்குத் தெரியும். வலுவான உடல் இருந்தால் மட்டும் ஒண்ணும் நடக்காது. வெட்டிப் பேச்சு கவைக்குதவாது. கெட்டிக்காரத்தனத்தாலும், நெளிவுசுளுவாலும்தான் காரியம் ஆகும். தந்திரத்தால் எதிரிகளை முட்டாளாக்கும் திறனுள்ளவன் துலன். பலவிதமான குறுக்கு வழிகளெல்லாம் அவனுக்கு விரல் நுனியில்.

ததுவாவின் அம்மா சொன்னாள்: "இவ்வளவு நிலம் கிடைச்சிருக்கு, நிறையவே வெளைச்சல் வரும். ஓ ததுவா! ஒன் அப்பன்கிட்ட நெல்லு வைக்கிறதுக்கு ஒரு குதிர் தயார் பண்ணச் சொல்லு, அவன் ஜமீந்தார் ஆயிட்டான் ஜமீந்தார்!"

ஊரெல்லாம் ஜனங்கள் இவனுக்கு நிலம் கிடைத்ததைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தது என்னவோ உண்மை. ஆனால் கிராமத்து ஜனங்களும் அவன் வீட்டுக்காரர்களும் அவன் என்ன செய்யப் போகிறான் என்று ஆவலாய் இருந்தார்கள்.

துலனின் கெட்டிக்காரத்தனம், தனியாக போராடும் குணம், இவற்றையெல்லாம் கிராமவாசிகள் ஓரளவு மரியாதையுடன் பார்ப்பார்கள். லட்சுமண் சிங்கின் எருமை சமாசாரம் எல்லா

ருக்கும் தெரிந்த விஷயம். ஆனால் ஒருவர் கூட அவனைக்காட்டிக் கொடுக்கவில்லை. தைதாரி சிங்கின் வீட்டிற்கு அவன் பூசணிக் காயை இரண்டு மடங்கு விலைக்கு விற்றான். முதலில் தைதாரியின் பெண்சாதியிடம், இரண்டாம் முறை தைதாரியின் அம்மாவிடம். ஒரு முறை லட்சுமண் சிங்கின் வீட்டிலிருந்து மாட்டு வண்டி கறிகாய், பழம், மிட்டாய் எல்லாம் எடுத்துக்கொண்டு 'ஸட்' பூஜையன்று குருடா நதிக்கரைக்குப் போய்க் கொண்டிருந்தது. வண்டிக்குப் பின்னாலேயே துலனும் போய்க் கொண்டிருந்தான். நடுநடுவில் வண்டியின் மீது அமரும் 'கற்பனை' பட்சிகளை சத்தம் போட்டு விரட்டினான். அவன் செய்த ரகளையில் வண்டிக்காரன் கவனம் திரும்பியபோது, ஒன்று இரண்டாக காய்கறிகளை வண்டியிலிருந்து கீழேதள்ளி பிற்பாடு பொறுக்கி எடுத்துக் கொண்டு போய் விட்டான். கிராமத்து ஜனங்களுக்கு ஒன்று கூடக் கொடுக்கவில்லை. ஆனால், அவர்கள் அவனை மிகவும் மதித்தனர். தாங்கள் செய்ய முடியாததை அவன் செய்து காட்டுகிறான் என்ற காரணத்திற்காக.

நிலம் கிடைத்த பிறகு ஒரு நாள், துலன் லட்சுமண் சிங்கின் காலைத் தொட்டு வணங்கிய பின் சொன்னான்: "எசமான் நீங்க ஏழைப் பங்காளன், நீங்க தயவு பண்ணி நிலம் கொடுத்திட்டீங்க. ஆனால் அதில நான் எப்படி விவசாயம் பண்றது? பி.டி.ஓ. ஆபீசிலேருந்து எனக்கு ஒண்ணும் கிடைக்காது, நிலம் வந்து என்னாங்க பிரயோசனம்?"

"ஏன்? பி.டி.ஓ. ஆபீசுல ஏன் ஒனக்கு ஒண்ணும் குடுக்க மாட்டான்? கட்டாயம் கொடுப்பான்."

"நான் கீழ் சாதியில்லீங்களா எசமான்? எனக்குக் கொடுக்க மாட்டானுக."

"சொன்னாலும் சொல்லாட்டியும் நீ கீழ்சாதிதான். இந்த நெனப்பு இல்லாததாலதான் செருப்படி வாங்கிக்கிறீங்க. ஆனால் நான் யாருக்கு நிலம் கொடுத்திருக்கேனோ அவனுக்கு உதவி பண்ணாமலா இருப்பேன்? பிடி.ஓ. யார்?

"ஒரு காயஸ்துங்க. பொல்லாத பய, ராஜ்புத்துங்கள்ளாம் நாட்டுப்புறத்தானுக, முட்டாளுகன்னு சொல்லிட்டு திரியறான். எப்போ பாத்தாலும் ரேடியோ கேட்டுட்டு இருக்கான். இடது கையால தண்ணி , சாய் எல்லாம் குடிக்கிறான்."

"ராம்-ராம், சீச்சீ."

"கண்ணால பாத்துட்டு வரேன், எசமான்."

"நான் ஒனக்கு ஒரு லெட்டர் கொடுக்கிறேன்."

லட்சுமண்சிங் நாலு எழுத்துத் தெரிந்தவன், ஒரு வக்கீல் கூட வைத்திருக்கிறான். துல்னுக்காக தடபுடலான ஒரு மனு எழுதிக்கொடுத்தான் வக்கீல். அதில் ஏர், விதை, மாடு எல்லா வற்றிற்கும் சர்க்கார் கடன் கொடுக்க வேண்டும் என்று அரசாங்க இந்தியில் மனு எழுதிக் கொடுத்தான். பி.டி.ஓ. தோக்ரியில் இருக்கிறான் என்பதென்னவோ உண்மை. தோக்ரி லட்சுமண் சிங்கின் கிராமம் தமாடியிலிருந்து வெகுதூரம் என்பதும் உண்மை. ஆனால் யாருக்குமே தோளுக்கு மேலே ஒரு தலைதானே? பயந்தாங்கொள்ளி பிடிஓவிற்கு எஸ்டிஓவே சொல்லியிருக்கிறார்: 'லட்சுமண் சிங், ஹனுமான் மிஸ்ரா போன்றவர்களிடம் ஒருக்காலும் மோதாதே' என்று.

பி.டி.ஓ. உடனே மனுவை ஏற்றுக் கொண்டார். கோவணம் கட்டிக்கொண்டு திரியும் துலனுடன் மென்மையாகப் பேசினார். "விதை, மாடு, எரு எல்லாம் கிடைக்கும். முதலில் விதைக்கும் எருவுக்கும் பணம் கிடைக்கும். மாடு, ஏர் இரண்டிற்கும் உடனே பணம் கிடைக்காது. எங்கேயாவது கொஞ்சம் கடனோ உடனோ வாங்கி, ஒரு ஏர், ஒரு மாடு கொண்டு வந்து காட்டு. பிறகு கடன் கிடைக்கும்."

துலன் கிராமத்திற்குத்திரும்பி வந்து பஹனிடம் சொன்னான்: "சர்க்கார் சட்டம் பேசுது. மொதல்ல ஏரைக்காட்டினாத்தான் ஏருக்கு பணம் தருவாங்களாம். எப்படியிருக்கு? பணம் கொடுத்தா தானே ஏரு கிடைக்கும்? தவணையிலே ஏர், மாடு எல்லாம் எவன் விற்பான்? நீ ஒன்னோட ஏர், மாடு இரண்டையும் கொடு. பிடி.ஓ. கிட்ட காட்ட..."

அதே மாட்டையும் ஏரையும் காட்டி பிடி.ஓ.விடமிருந்து துலன் பணம் பெற்றுக்கொண்டான். ஒரு வருஷத்திற்குள் பல தடவை பணம் வாங்கிக்கொண்டான். ஒவ்வொரு சமயமும் "என்னத்த சொல்றது, எசமான்! நான் நாசமா போயிட்டேங்க..."

பணத்தை வாங்கிக் கொண்டு எரு வாங்கி அதை தோக்ரி பஜாரிலேயே விற்றான். மூட்டையில் விதையைக் கட்டிக் கொண்டு வீட்டுக்கு வந்தான். விதைக்கான தானியத்தை சமைத்து அவன் குடும்பம் சாப்பிட்டது.

முதல் தடவை விதை வந்தபோது அவனுடைய பெண்சாதி சொன்னாள் "இவ்ளோ விதையா! அவ்ளோ நிலம் ஒனக்கு இருக்கா?"

"என்னோட நிலத்த அளக்கமுடியாதுடீ"

"அது எந்த நிலம் அளக்க முடியாத நிலம்?"

"அதான், என் வயிறு... பசிக்கு அளவுண்டா அம்மே? வயிற்றின் அளவு வளந்துக்கிட்டே போவுது, அந்த பாறாங்கல் நெலத்துல நான் வெத வெதக்கப் போறேன்னா நெனச்சே? போடி பைத்தியக்காரி!"

"அப்போ என்னா பண்ணப்போறே-?"

"அதைப் பொங்குடி, அரிசியாக்கி சாப்பிடுவோம்."

"விதையை துன்னுட்டு சாகப்போறோமா?"

"இத்தினி நாள் செத்தா போயிட்டோம்? பஞ்சகாலத்தில எலியத் தின்னோம், செத்தா போயிட்டோம்? இப்போ சோறு தின்னா சாகப்போறேன்? செத்தாலும், சோறு தின்னு செத்தேன்னு நெனச்சுக்குவேன். நேர சொர்க்கத்துக்குப் போவேன்."

ஒரு முறை விதைக்கான நெல்லை சாப்பிட்ட பிறகு ததுவாவின் அம்மாவிற்கு இந்த மாதிரி ருசியான சாப்பாட்டை அவள் ஆயுளில் சாப்பிட்டதே இல்லை என்று பட்டது. கிராமம் பூராவும் இந்த விஷயத்தை தம்பட்டம் அடித்து விட்டாள். கர்வத்துடன் எல்லாரையும் கேட்டாள்: "இந்த கிராமத்திலே என்ன மாதிரி பொம்பிள யார் இருக்கா? எவளோட புருஷன் என் புருஷன் மாதிரி சாமர்த்தியமா கவர்மின்டையே முட்டாளாக்கி தன் குடும்பத்துக்கு அரிசிச் சோறு போட்டிருக்கான்?"

கிராமத்தில் எல்லாரும் மிகவும் மகிழ்ச்சியடைந்தார்கள். கவர்மெண்ட் எப்போதுமே அவர்களுக்கு ஒன்றும் செய்ததில்லை. பி.டி.ஓ. விவசாயத்திற்காக ஒரு உதவியும் செய்ததில்லை. கவர்மென்டின் பிரைமரி பள்ளியில் அவர்களின் குழந்தைகளை சேரவிடுவதில்லை.

லட்சுமண் சிங்கும் தைதாரி சிங்கும் துப்பாக்கியை கையில் வைத்துக் கொண்டு கொஞ்சம் அரிசி, சில சமயத்தில் நாலணா காசு கூலியாகக் கொடுத்து இவர்களை அறுவடை செய்ய வைத்துக் கொள்வதை வாடிக்கையாகவே கொண்டிருந்தார்கள். இதன் காரணமாகவே, கிராமத்தில் ஒரே டென்ஷன். ஏனென்றால் பக்கத்து பிளாக்கில் கஞ்சு, துஸாத், தோபி எல்லாரும் எட்டணா கூலி வாங்கிக் கொண்டிருந்தனர். இதன் காரணமாக இக்கிராமத் தவரும் இன்னும் இருபத்தைந்து பைசா வாங்குவதில் துடியாக இருந்தார்கள். எல்லாம் தெரிந்திருந்தும், தகராறு ஆரம்பித்த பிறகு எஸ்.டி.ஓ. போலீஸை அழைத்துக்கொண்டு பல குடியானவர்களை பிடித்துக்கொண்டு போனார்கள். லட்சுமண் சிங்கோ, தைதாரி சிங்கோ இது பற்றி வாயே திறக்கவில்லை.

கவர்மென்டே லட்சுமண் சிங் கையில்தானே. லட்சுமண்

சிங், தைதாரி சிங், ஹனுமான் மிஸ்ரா கையில் இந்த கவர்மென்ட். அதை முட்டாளாக்குகிறவன், அவன் துலன் கஞ்சுவோ அல்லது வேறு யாரோவாக இருந்தாலும், அவனை கிராமவாசிகள் புகழத்தான் செய்வார்கள்.

அந்த வறண்ட பூமி துலனுக்கு காமதேனு ஆகிவிட்டது. வருஷத்திலே அதிலிருந்து 500, 600 சம்பாதிக்கத் தொடங்கினான். ஆனாலும் இப்பொழுதும் தரையில்தான் படுத்து உறங்கினான். அந்தக் கல் வீட்டில் ஒரு பரண் மேல் அவன், ததுவாவின் அம்மாவுடன் தூங்குவான். ததுவாவின் அம்மாவிற்கு, இருமல், இழுப்பு வியாதி. அவள் பரணுக்குக் கீழே ஆடுகளைக் கட்டிவிட்டு தூங்குவாள். இரண்டு அறைகளிலும் பிள்ளைகள், அவர்களின் பெண்சாதிகள், குழந்தைகள் தூங்குவார்கள். கோதுமை, மஹுவா, சோள மூட்டைகள், பாத்திரம், அடுப்பு, எல்லாமே அந்த இரண்டு அறைகளில்தான். நிலத்தின் இந்த வரும்படியிலிருந்து அவனுடைய செலவுகளெல்லாம் கட்டி வருவதில்லை, ஆகவே, தகப்பன், மகன்கள் எல்லாரும் காட்டுக்குள் நுழைந்து, கிழங்கு, பழம் என்று ஏதேனும் தேடி எடுத்து வந்து சமாளிப்பார்கள். அல்லது தோக்ரிக்குப் போய் மூட்டை தூக்கி கூலி வேலை செய்து சம்பாதிப்பார்கள், எல்லாரையும் போல மிஸ்ராவின் தோட்டத்திலும் வேலை செய்வார்கள்.

இந்த சமயத்தில்தான் தமாடிக்கு கரன் துஸாத் வந்தான். மிகவும் நாணயமான ஆள். லட்சுமணின் நிலத்தில் கூலியாளாக இருந்தான். ஜமீன்தாருடன் எழுந்த கூலித் தகராறில் ஜெயிலுக்குப் போனான். ஜெயிலில் பீஹாரின் மற்ற கைதிகளுடன் அவனுக்குப் பரிச்சயம் ஏற்பட்டது. ஹஜாரிபாக் ஜெயிலில் இது மாதிரி அனேக கைதிகள். இவன் ஒரு துஸாத் என்ற காரணத்திற்காக அவர்கள் அவனை அலட்சியம் செய்யவில்லை. ஒரு போராளி என்ற முறையில் அவனுக்கு மதிப்பும் மரியாதையும் கொடுத்தார்கள். ஜெயிலில் ஒரு விஷயத்தை கேள்விப்பட்டு மிகவும் ஆச்சரியப் பட்டுப் போனான். எந்த வித அமைப்பின் உதவியும் இல்லாமல் ஒரு பயங்கரமான அடக்குமுறையை எதிர்த்து அறுவடைக்குத் தயாராக இருந்த கோதுமைக் கதிர்களுக்கு தீவைத்து நாசமாக்கி விட்டனர் என்று. இக்கைதிகள் இவ்விதம் மற்ற இடங்களிலும் போராட வேண்டியதன் அவசியத்தை அவனுக்கு வலியுறுத்தி சொன்னார்கள்.

இவர்களில் பலர் நடுநடுவே பல சட்டங்களுக்கு எதிராக சில சமயம் உண்ணாவிரதம் கூட இருந்தார்கள். அப்பொழுது

ஜெயில் அதிகாரிகள் அவர்களை அடித்து நொறுக்குவார்கள். அடித்து, அடித்து சில சமயங்களில் சாகடித்தும் விடுவார்கள். இத்தனை கஷ்டங்களை அனுபவித்த பிறகும், அவர்களுடைய தன்னம்பிக்கையும் உரிமைக்காகப் போராடும் தீவிரமும் மங்கவில்லை. கரனை ஒரு போராளி என்ற முறையில் மதித் தார்கள். அவன் செய்தது நியாயமானது என்று வாழ்த்தினார்கள். எப்பொழுதும் போராடிக் கொண்டிருக்க வேண்டும் என்பதை ஒரு போதும் மறக்கக்கூடாது என்று புத்திமதி கூறினார்கள்.

இதன் காரணமாக, கிராமம் திரும்பிய கரனின் நடை முறைகளில் பல மாறுதல்கள் ஏற்பட்டிருந்தன, ஜெயிலிருந்து வந்த பின்னர் மற்றவர்களுக்கு சொன்னான்: “போராட வேண்டிய சூழ்நிலை இன்றும் இருக்கிறது. எசமானர்கள் அநியாயம் பண்ணும் போதெல்லாம் அவர்களை நாம் எதிர்க்க வேண்டும். குண்டுகளை எதிர்கொள்வோம். ஜெயிலுக்குப் போவோம். ஆனால் முதலில் நாம் ஒன்றாகி ஒற்றுமையுடன் இருக்க வேண்டும். எசமானர் களுடன் பேச்சுவார்த்தைகள் நடத்துவோம். அறுவடை சமயத்தில் போலீசை வரச்சொல்லுவோம். நமது கோரிக்கைகள் மிகவும் சாதாரணமானவை. நம் போன்ற ஹரிஜனங்கள் ஆதிவாசிகளுக்கு இந்தப் பகுதியில் எப்படி நல்ல கூலி கிடைக்கும்? நாம் எட்டணாவிற்கு போராடுவோம். பெண்கள், ஆண்கள், பையன்கள் எல்லாருக்கும் எட்டணா கணக்கில் தினக்கூலி கொடு என்று கேட்போம். இப்போது நாலணா கொடுக்கிறார்கள், பாக்கி நாலணா வுக்குத்தான் நம் போராட்டம்.”

விஷயத்தைக் கேள்விப்பட்ட துலன் கரனை குருடாவிற்கு கூப்பிட்டனுப்பினான். அவன் எப்போதுமே சந்தேகப்பிராணி. கூட்டம்-நாட்டமெல்லாம் கூட்டாமல் தன்னுடைய நிலத்தின் மூலையில் அவனுடன் பேசினான். கரன் துஸாத், வயதான, ஒல்லியான அதிக உயரம் இல்லாத தோற்றம் உள்ளவன். ஹஜாரிபாக் ஜெயில் வாசத்தில் ‘சம்பாதித்த’ புதிய ஆளுமையுடன் தென்பட்டான். ‘ஜாதி கீதி எல்லாம் பொய். இந்த தீண்டாமை கீண்டாமை எல்லாம் பிராமணர்கள் மற்றும் பெரிய சாதிக்காரன் எழுப்பிவைத்தது.’

இப்படி அவன் சொன்னதும் துலனுக்கு அச்சம் ஏற்பட்டது. உள்ளூர தன் பயத்தை எடைபோட்டான். ஆனால் துலன் அனுபவத்தில் பழுத்தவன். முதிர்ந்த அனுபவசாலி அவன் சொன்னான் “நாலு எழுத்துத் தெரிந்த, மெத்தப் படித்த பாபு சனங்க பேசற பேச்சப்பா- இதெல்லாம் கவைக்குவாத சமாசாரம்.

நான் சொல்றேன் கேளு. லட்சுமண் சிங், பி.டி.ஓ., எஸ்.டி.ஓ. இவங்கெல்லாம் கூடிக்குடிக்கிற சினேகிதங்கப்பா. நீ முதல்லெ டோக்ரில ஆதிவாசி ஆபீசுக்குப் போ, அங்கே ஹரிஜன் சேவா சங்க ஆபீசுக்கும் போ. அவங்ககிட்ட எல்லா விசயத்தையும் சொல்லு. அவங்க ஒன் கூட எஸ்.டி.ஓ. போலீஸ் ஸ்டேசன் எல்லாத்துக்கும் கூடவே வருவாங்க."

"ஏன்? நம்ம கிட்ட என்ன பலவீனம்?"

"பலவீனம் நம்மகிட்ட ரொம்பவே இருக்கு அப்பா! தப்புக் கணக்குப்போடாதே. எல்லா சர்க்காரி சனங்களும் லட்சுமண் சிங்குக்கு ஒத்தாச செய்வாங்க. அவன் துப்பாக்கி தூக்கினா இவங்க கண்டுக்கக்கூட மாட்டாங்க. ஆனா, நாம தடியை தூக்கினா பிடிச்சுப் போட்டுடுவானுக. ஹரிஜன் சேவா சங்கத்துல மதன் லால்ஜி இருக்காரே, நல்ல மனுசன், உண்மையான ஆசாமி. எல்லாரும் அவரை மதிக்கிறாங்க. அவரை உன்பக்கத்தில வச்சுக்க."

அவனுடைய அறிவுரையை ஏற்றுக்கொண்டான் கரன். மதன்லாலுக்கு மக்களின் வோட்டுக்களின் மீது கண். லட்சுமண் சிங், போலீஸ் இன்ஸ்பெக்டர், எஸ்.டி.ஓ.வின் ரகசிய பேச்சு ஒத்திவைக்கப்பட்டது. கடைசியில் மதன்லால்ஜியின் அறிவுரையை அவர்கள் ஏற்றுக்கொண்டார்கள். தடைகளேதுமில்லாமல், சோள அறுவடை முடிந்தது. தினக்கூலியும் எட்டணா கணக்கில் கிடைத்தது. கரன் துஸாத் ஹீரோ ஆகிவிட்டான். தேவதைக்கதை உண்மையாகியது.

இதற்குப்பிறகு ஒரு நாள் லட்சுமண்சிங் திடீரென்று துலனிடம் சொன்னான்: "நாளைக்கு நிலத்திலேயே இரு, இப்படி உன்னிடம் ஒரு வார்த்தையை நான் சொன்னேன்னு யாருக்காவது சொன்னே- ஒன்னெ பிணமாக்கி கடாசிடுவேன்."

அன்றிரவு, எஸ்.டி.ஓ. ராஞ்சிக்குப் போய்விட்டார். இன்ஸ் பெக்டரும் கொள்ளைக்காரர்களைப் பிடிப்பதற்காக புரூடியாவிற்கு போய்விட்டார். பொழுது சாய்கின்ற நேரத்தில் சூரியன் முழுவதும் மறைவதற்குள், தன் ராஜபுத்திர பரிவாரங்கள் சூழ லட்சுமண்சிங் தமாடியில் துஸாத் சேரியின் மேல் படையெடுத்தான். குடிசை களுக்குத் தீவைக்கப்பட்டது. மனிதர்கள் மடிந்தார்கள். வீடுகள் நொறுக்கப்பட்டன.

மாலையில் புதிதாக எழுந்த சந்திரன் ஒரு அமானுஷ்யமான மௌனபயத்தை அளித்தது. ஒரு குதிரை மேல் லட்சுமண் சிங். இரு குதிரைகள் பக்கத்தில் நிறுத்தப்பட்டு அவற்றின் முதுகுகளில் ஒன்றிற்கும் அதிகமான பிணங்கள் ஏற்றப்பட்டிருந்தன. லட்சுமண்

சிங்குடன் பத்து அடியாட்கள் இருந்தார்கள்.

லட்சுமண் சிங்கின் துப்பாக்கி சமிக்ஞைக்கு ஏற்ப கரன் மற்றும் அவனுடைய அப்பாவித் தம்பி புலாகி இருவருடைய. உடல்களையும் துலன் கீழே எடுத்துப் போட்டான். பயத்தினால் நடுங்கிக் கொண்டு, தலையைக் கீழே தொங்கப் போட்டுக் கொண்டே, ஆழமான குழி ஒன்றை தோண்டினான். லட்சுமண் ஒரு ஓரத்தில் நின்றுகொண்டு வெற்றிலை குதப்பிக் கொண்டிருந்தான். பிறகு சொன்னான்: "அடே நாயே! உன் வாயிலிருந்து இதைப்பத்தி ஒரு மூச்சு வந்தது– இந்த கரன் துஸாதை பண்ணின மாதிரி உன்னையும் கொன்னு போட்டு கடாசிடுவேன். ஓநாய், நரியெல்லாம் இந்த சவங்களை தூக்கிகிட்டு போயிடும்னு நம்ப முடியாது. ஆகவே நாளைக்கே இங்க ஒரு பரண் போட்டுக்க. ராவுல இங்கேயே தங்கணும். கரன் நெருப்பை ஏத்திருக்கானில்ல அதனால இப்படி பிணங்க விழுந்துகிட்டே இருக்கும். நான் ராஜ்புத் வம்சத்தவன்–"

துலன் தலையை அசைத்தான். தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காகச் சென்னான் "சரி, எசமான்."

மறுநாள் போலீஸ் வந்தது. ரொம்பவும்தான் ஆட்டம் போட்டது. கடைசியில் சம்பவம் நடந்தபோது, அங்கு கரன் துஸாத் இல்லவேயில்லை என்று சொல்லப்பட்டது. ரிப்போர்ட்டர்கள் மிகவும் முயற்சி செய்த போதிலும் 'எ ட்ரூ ஹரிஜன் ஸ்டோரி' எழுதுவதற்கான வாய்ப்புக் கிடைக்கவில்லை. லட்சுமணுக்கு எதிராக ஒருவரும் குரல் எழுப்பவில்லை. தீவைத்த குற்றத்திற்காக லட்சுமணின் அடியாள் ஒருவன் சில நாட்கள் ஜெயிலில் இருக்க வேண்டியதாயிற்று. சர்க்கார் தரப்பிலிருந்து வீடு எரிந்து போனவர்களுக்கு மறுபடியும் வீடு கட்டிக் கொள்வதற்கு சிறிது உதவி செய்யப்பட்டது.

அப்பொழுதிலிருந்துதான் துலன் தனது நிலத்தில் வசிக்க ஆரம்பித்தான். முதலில் இது ஒரு பைத்தியக்காரத்தனம் என்று சொல்லி அவனுடைய பிள்ளைகள் தடுக்கப் பார்த்தார்கள். அந்த நாட்களில் துலனின் காதில் எதுவும் ஏறவில்லை. என்ன நடந்தது என்று கேட்டால் உதட்டைச் சுழித்துக் கொண்டு ரத்தம் பாய்ந்த கண்களுடன் கேள்வி கேட்டவர்களை பார்த்து பயங்கரமாக உறுமுவான். மேலும் ஒரு முறை கேட்டால், தலையை ஆட்டி, கை முட்டியை குவித்துக் கொண்டு "பேசாதே, ததுவா. பேசினா தலையை ஒடச்சு போட்டுடுவேன்–"

மனதில் ஒரு பயங்கரமான வெடி வெடித்து குழி விழுந்து

விட்டது போலவும் அதில் தான் விழுந்துவிட்டது போலவும் அவன் உணர்ந்தான். லட்சுமணுக்கும், அவனைச் சேர்ந்தவர் களுக்கும் இதெல்லாம் இவ்வளவு சுலபமா? துலனுக்குத் தெரியும்: மனிதனுக்கு உயிருடன் இருக்கும் போது எப்படி ஆசாரம் நியமம் எல்லாம் உண்டோ அதே மாதிரி இறந்தவர்களுக்கும் உண்டு. ஆனால் லட்சுமண்சிங் நிலை நாட்டி விட்டான்—பழைய ஆசார நியதிகள் எல்லாம் எவ்வளவு துச்சமானவை என்று. எவ்வளவு சுலபம்! குதிரையின் முதுகில் இரண்டு சவங்கள். அளவில்லா ஆணவத்துடன் தமாடியின் கண் முன்னாலேயே எடுத்துச் செல்லப்படுகின்றன. ஒன்றுமேயில்லை– யார் பார்த்திருந்தாலும் வாயைத் திறக்க மாட்டார்கள். லட்சுமணின் மௌனமான தீட்சண்யப் பார்வையின் கீழ் ஸ்தம்பித்துப் போயிருப்பார்கள். "யாராவது வாயைத் திறந்தா அவங்களும் இதே மாதிரி சவமாயிடுவாங்க."

இதெல்லாம் ஒன்றும் புதிதல்ல! முன்பும் நடந்திருக்கிறது, இனி மேலும் நடக்கும். நடுநடுவே ஆகாசத்தை எட்டும் நெருப்பைப் பரப்பி மரண ஓலத்தை நாலா பக்கமும் பரவச்செய்து ஹரிஜன் மற்றும் கீழ் சாதியினருக்கு உண்மையான சட்டத்தைப் புரிய வைக்க வேண்டியிருக்கிறது. அரசின் ஆபீஸர்கள், அவர்களுடைய சட்டங்கள், சாசனத்தின் அறைகூவல்கள் எல்லாம் கவைக்கு உதவாதவை. ராஜ்புத் ராஜ்புத்தாகவே இருக்கிறான்; பிராமணன் பிராமணனாகவே இருக்கிறான். துஸாத்-சமார்-கஞ்சு-தோபி எல்லாம் பிராமணன்—காயஸ்த்—ராஜ்புத்—பூமிஹார்—குர்மி ஆகியோருக்குக் கீழேதான் இருப்பார்கள். சில இடங்களில், சில ராஜ்புத் அல்லது பிராமணன் அல்லது காயஸ்த் அல்லது பூமிஹார் அல்லது யாதவ் அல்லது குர்மி வகுப்பினர் ஹரிஜனங்களின் நிலையிலேயே இருக்கக்கூடும். ஹரிஜனங்களை விட ஏழையாகவும் இருக்கக் கூடும். ஆனால், ஜாதி காரணமாக அவர்கள் எரிந்து கொண்டிருக்கும் தீயில் வீசப்படமாட்டார்கள். காண்டவ வன தகனத்தின் போது சில வனவாசி கறுப்பு மனிதர்களை உண்ட அக்னி தேவன் இன்றும் தீண்டத்தகாதவர்களின் மாமிசத்தை விருப்பமுடன் ருசித்து சாப்பிடுகிறான்–

இந்த சம்பவங்களெல்லாம் துலனுக்கு ஒரு சிந்திக்கும் திறனைக் கொடுத்தன. இதற்கு முன் அவன் ஒரு 'ஸர்ஃபேஸ் மனிதன்' — சாமனியன். தன் வயிற்றைக் கழுவுவதற்காக சிறு சிறு அயோக்கியத் தனங்களை செய்து வாழ்ந்து கொண்டிருந்தவன். ஆனால் இப்பொழுது தன் ஆத்மாவின் மேல் இரண்டு சவங்களின்

சுமையை மறைத்து வைக்க வேண்டியிருந்தது. அவ்விரண்டு சவங்களும் அவனுடைய ஆத்மாவின் மேல் கொஞ்சம் கொஞ்ச மாக அமுக்கிக் கொண்டிருந்தன. மண்ணில் புதைத்த கரன், புலாகி சவங்களின் மாமிசத்தின் கனம் கொஞ்சம் கொஞ்சமாக குறைந்து கொண்டிருந்தது. ஆனால் துலனின் ஆத்மாவின் மேல் வைக்கப்பட்டுள்ள சவங்களின் பளு அதிகரித்துக் கொண்டே இருந்தது. துலனின் முகம் வெளிறிப் போய்க் கொண்டிருக்கிறது. அவனுடைய வாயிலிருந்து பேச்சு குறைந்து கொண்டேயிருக்கிறது. இந்த விஷயத்தை அவன் யாரிடமும் சொல்லிக் கொள்ள முடியாது. இந்த கனத்தை அவன் நிரந்தரமாக தனியாகவே சுமந்து கொண்டிருக்க வேண்டும். வாயைத் திறந்தால், குருடாவின் துஸாத் சாதியினரின் குடிசைகள் தீப்பிடித்து சாம்பலாகிவிடும், அதனுடன் எரிந்துபோன மாமிசத்தின நாற்றமும் காற்றில் கலக்கும்.

நாட்கள் நகர்ந்தன. கரன், புலாகி இருவரும் இருக்குமிடமே தெரியாமல் போய்விட்டனர். வேறு வழியில்லாமல் அவர்களை மறந்தும் போனார்கள். தோக்ரியிலிருந்து புருடியா வரை ஒரு பக்கமும், மற்றொரு பக்கம் பூல்ஜர் வரை ரயில்வே லைன் போட்டார்கள். ஆதிவாசிகள், ஹரிஜனங்கள் மீது நடத்தப்படும் அநியாயங்களை உடனே விசாரிக்கவும், நடவடிக்கைகளுக்காகவும், கேஸ் தயாரித்து கோர்ட்டில் உடனே தாக்கல் செய்வதற்காகவும் இந்த இலாகாவில் தனி எஸ்.டி.ஓ., இன்ஸ்பெக்டர். போலீசுக்கும், எஸ்.டி.ஓவுக்கும் விசேஷ அதிகாரங்கள் அளிக்கப்பட்டன. டாயி கிராமத்தில் பஞ்சாயத்துக் கிணறு வெட்டப்பட்டது. இவ்வாறு ஆதிவாசிகளும் கீழ்சாதி ஜனங்களும் வசிக்கும் இப்பிராந்தியம் நவீன யுகத்தின் அருகே அழைத்துச் செல்லப்பட்டது.

இவற்றின் காரணமாக லட்சுமண் சிங்கின் பிரதாபம் மேலும் வளர்ந்தது. அரசாங்க ஆணைகளைச் சட்டை செய்யாது அவன் தனது கூலிகளுக்கு நாற்பது பைசா கூலிதான் கொடுத்துக் கொண்டிருந்தான். ஹனுமான் மிஸ்ரா தன் கோவிலில் சிவன் தலையில் தங்கத்தால் செய்த பாம்பு அணியைச் சூட்டினான். லட்சுமண்சிங் எஸ்.டி.ஓ.விற்கு ஸ்கூட்டரும், இன்ஸ்பெக்டருக்கு ட்ரான்ஸிஸ்டரும் வாங்கிக் கொடுத்தான். கரன்—புலாகியின் ஒன்றரை பீகா நிலத்தை ஏதோ பழைய கடனைக் காட்டி தன் வசப்படுத்திக் கொண்டான்.

இந்த நிலையில் எல்லாரும் திருப்தியாகவே இருந்தனர். ஆனால், திடீரென்று விவசாயக்கூலி சம்பந்தமாக அரசிடமிருந்து புது சர்க்குலர் ஒன்று வந்தது. கூடவே ஒரு புது எஸ்.டி.ஓ.வும்

நியமிக்கப்பட்டார். இடதுசாரி அனுதாபி என்ற முத்திரை அவர் மேல் குத்தப்பட்டிருந்தது. ஆகவே அவரை எப்படியாவது துன்புறுத்த வேண்டும் என்ற நல்லெண்ணம் சர்க்காருக்கு வந்தது. அதன் பலனாக அறுவடை தினங்களுக்கு ஒன்றரை மாதத்திற்கு முன்னர் அவரை தோக்ரிக்கு மாற்றியிருந்தார்கள். தோக்ரி இலாகாவில் விவசாயக் கூலி வேலை செய்பவர்கள் ஹரிஜனங்கள் ஆதிவாசிகள்தான் அதிகம். நில உடமையாளர் மகாஜன்கள் எல்லாரும் மேல் சாதியினர். இந்தப் பிராந்தியத்தின் விசேஷ பிரச்சினை தங்கள் எசமானர்களிடம் கூலியாளர்களுக்கு இருந்த ஆழமான அவநம்பிக்கை. இதன் காரணமாக, இங்கு விவசாயம் செழிப்பதில்லை, வரும்படியும் அதிகரிப்பதில்லை. சுகாதாரம், கல்வி, சமூக உணர்வு எல்லாவற்றிலும் இப்பிரதேசம் 'ஸப் நார்மலாகவே' இருக்கிறது. இங்கு ஒளிபடைத்த சிந்தனையுள்ள, ஏழைகளிடம் அனுதாபமுள்ள ஆபீஸர் தேவை.

இப்படி ஒரு சாக்கில் தன்னை தண்டிப்பதற்குத்தான் இங்கு அனுப்பியிருக்கிறார்கள் என்று எஸ்.டி.ஒ.விற்குத்தெரியும். தன் மாமனாரிடம் அவர் சொன்னார், "கடைசீல உங்களுக்குத்தான் வெற்றி. எனக்கு பாங்க்—கீங்கிலெ வேலை பாத்துக் கொடுத்திடுங்க. அக்ரோ இகனாமிக்ஸ் படிச்சிருக்கேன். பாங்கில் வேலை கிடைக்கும். இல்லாட்டா, என்னை இவங்க அனுப்புற இடத்துல உங்க ஏகபுத்ரி விதவையாகப் போக வேண்டியிருக்கும்."

மாற்று வேலைக்கு ஏற்பாடு செய்துவிட்டு வந்திருந்ததால், எஸ்டிஓ. மிக உற்சாகத்துடன் விவசாயக் கூலிகளுக்குத் தெரிவித்தார்: "உங்களுக்கு ஐந்து ரூபாய், எண்பது பைசா கணக்கில் கூலி கேட்கும் அதிகாரம் இருக்கிறது." இதே விஷயத்தை அவர் ஜமீன்தார்களிடமும் சொன்னார்.

தமாடி-புருடியா-குருடா-ஹொஸாடி-டாயி எல்லா கிராமத்திலும் லட்சுமண் சிங்குக்கு நிலம் இருந்தது. புருவா கிராமத்தின் பிரதானின் மகன் அஸர்பி மஹாதோ சொன்னான். "கரனின் நினைவு கடந்த மூன்று வருஷங்களாக என்னை வாட்டிக் கொண்டிருக்கிறது. எஸ்டிஓ. நல்ல மனிதர். அப்போ நாம் ஏன் இன்னமும் நாப்பது பைசாவுக்கு அறுவடை செய்யணும்? அஞ்சு ரூபா எண்பது பைசா வாங்கணும். சோறு வேண்டாம். முழுக் கூலியையும் கேட்போம்."

முன்பு எப்படி கரனுக்கு புத்தி சொன்னானோ, அதே மாதிரி அஸ்ரபிக்கும் புத்தி கூறினான் துலன். "கரன் ரொம்ப கூச்சல் போட்டான். ஆனா நடந்து என்ன? தமாடி கிராமத்து துஸாத்

சேரி எரிஞ்சு போச்சு. அவ்வளவுதான்."

"சுரன் எங்கே? புலாயி எங்கே?"

"யாருக்குத் தெரியும்?"

"செத்துப் போயிட்டான்."

"ஏன் இப்படிச் சொல்றே?"

"கொலை செஞ்சு காட்டில வீசிட்டானுக."

"எனக்குத் தெரியாது. நீ ஒரு காரியம் செய். எசமான்கிட்ட ஒரு வார்த்தை பேசிடு."

"அப்படியே செய்யறேன்."

"அவங்ககிட்ட சொல்லு, 'பின்னாலயும் ஒத்தாசை செய்யணும்'னு. போன தடவை கூலி என்னவோ குடுத்தான், ஆனா பிறகு அவனே நெருப்பு வெச்சான்."

"சரி சொல்றேன்."

ஒவ்வொரு பிராந்தியத்திலும் போராட்டம் தனித்தன்மையும் முக்கியத்துவத்தையும் பெறுகிறது. லட்சுமண்சிங் சொன்னான், "அவ்வளவு கொடுக்க மாட்டேன், இரண்டு ரூபா எடுத்துக்க. டீ நீ குடிக்கிறயா?"

"பூரா கூலிய கொடுங்க எசமான்."

"கொடுக்கிறேன்..." லட்சுமண் சிங்கின் கண்கள் மிகவும் மிருதுவாகி விட்டிருந்தன. "யோசனை பண்றேன். நீங்களும் யோசனை பண்ணுங்க. கொடுக்கறதுதான் நியாயம். ஒரு கழுதைக்கு கூட இது தெரியும். ஆனா ஒனக்குத் தெரியுமா, இந்த பகுதியில மக்கன் சிங், தைதாரி சிங், ராம்லகன் சிங், ஹஜாரி பிரஸாத் மஹாதோ யாருமே இவ்வளவு கூலி கொடுக்கிறதில்லே. போய் எஸ்.டி.ஓ.கிட்ட கேளு நான் மட்டும் ஏன் சாகணும்னு."

அஸர்பி, பயந்தபடி சிரித்துக்கொண்டே சொன்னான்: "எசமான், நீங்க ஏன் சாவீங்க..? கோதுமை அரைக்கிற மில்லு உங்ககிட்ட இருக்கு. ஒங்க வீடு எவ்ளோ தூரத்திலேந்து தெரியுது– நீங்களா செத்துப் போயிடுவீங்க?"

லட்சுமண்சிங் அலட்சியமாகச் சொன்னான்: "இரண்டு ரூபா தான், நான் சொன்னதுதான். என்கிட்ட நிலம் இருக்கிறதால நாங்க சர்க்கார் கண்ணில கொள்ளைக்காரங்களாகிட்டோம். உங்ககிட்ட இருக்கிற கொஞ்ச நஞ்ச நிலத்துக்கு சர்க்கார் உதவி கிடைக்குது. நான் துலனுக்கு நிலம் கொடுத்திருக்கேன். அந்த சோதாப் பய அதில விவசாயம் செய்யறதில்ல. நாய்ப்பய மவன், ஒவ்வொரு வருஷமும் சர்க்கார் விதையை வாங்கி சமைச்சு திங்கறான்– சரி, சரி, இதெல்லாம் விட்டுத்தள்ளு. எங்களுக்கு என்ன உதவி

கிடைக்குது? விதை, எரு., பூச்சிக்கொல்லி மருந்து, எல்லாம் காசுகொடுத்து வாங்கணும். போ, போ, போயி இதையெல்லாம் எஸ்டிஓகிட்ட சொல்லு."

இதற்குப் பிறகு அஸர்பி துலனிடம் சொன்னான்: "சாச்சா! (மாமா) ஜாக்கிரதையா இருங்க. அந்தப் பாவி மவனுக்குத் தெரியும் நீ விவசாயம் பண்றதில்லேன்னு."

துலனின் ஆத்மாவின் மேலிருந்த சவங்களின் பளு அதிகமாயிற்று. துலன் நிலம் பெற்றதிலிருந்து பல வருஷங்களாக அதில் விவசாயம் செய்யவில்லை என்று லட்சுமண் சிங்குக்குத் தெரியும். இதைத்தான் மறைமுகமாக சொல்லியிருக்கிறான். துலன் மிக துக்கத்துடனும் அஸர்பியின் மேல் பரிவுடனும் சொன்னான்: "அவனை நம்பாதே, மகனே! ஒங்க அப்பன்தான் என் பிள்ளைங்க ததுவா—வடுவா பிறந்தப்போ ஒத்தாசையா இருந்தான்."

"சரி, சாச்சா."

லட்சுமண் சிங்குக்கும் எஸ்டிஓவிற்கும் இடையே அஸர்பி நடையாய் நடந்தான். துலன் மேலும் கவலைக்குள்ளானான். ஏதோ ஒரு விபத்து ஏற்படவிருக்கிறது என்ற சந்தேகம் அவன் மனதில் எழுந்தது. மகன்களிடம் சொன்னான் "சின்னவங்க மவனுக சின்னவங்களாகவே தங்கிப்போறாங்க. அப்பன் கிழவன் நிலத்தை உழுது கொண்டு வர்றதை தின்னுக்கிட்டு கிடக்கிறீங்க. வேறே யாராவதாக இருந்தா அக்கம் பக்கத்தில் இருக்கிற கரிச் சுரங்கத்துல வேலை செய்யப் போயிருப்பானுக."

ததுவா தன் சாந்தமான கண்களை உயர்த்தி ஆச்சரியத்துடன் சொன்னான்: "அப்பா! இந்தத் தடவை நமக்கு இரட்டைக்கூலி கிடைக்கப் போகுது"

துலன் பதில் சொல்லவில்லை.

நேரே தோக்ரி பிளாக் ஆபீசுக்குப் போய்: "இந்தத்தடவை அறுவடைக்கு ராபி விதைக்கலாம்னு இருக்கேங்க. ஒங்க உதவி தேவைங்க."

பீடிஓவிற்கு தெரியும். எந்த நிலத்தில் விவசாயம் நடக்கிறது, எதில் நடக்கவில்லை என்று. விளையாத நிலத்திற்காக ஏன் ஒவ்வொரு வருஷமும் விதை கொடுக்கப்படுகிறது என்றும் அவருக்குத் தெரியும். இந்த மோசடியில் லட்சுமண் சிங், துலன் இருவருடன் அவரும் ஒரு கூட்டாளி. சிரித்துக்கொண்டே சொன்னார்: "பார்க்கலாம்."

பிடிஓ. ஐயாவின் வீட்டில் மிக உயரமான ஒரு பப்பாளி மரம் வளர்ந்திருந்ததை துலன் பார்த்தான். சாதாரணமாக

இவ்வளவு உயரமான பப்பாளி மரம் தென்படுவதில்லை. அவன் கேட்டான்: "பாபுஜீ! இந்தப் பப்பாளி மரம் இவ்வளவு உயரமா எப்படியாச்சு?"

பி.டி.ஓ. தன் சுயபிரதாபத்தை எண்ணியபடி சிரித்துக் கொண்டே சொன்னார்: "கோடைக் காலத்தில வெறி பிடிச்சுப் போன நாய் ஒண்ணை கொன்னு இங்கே புதைச்சேன். எலும்பு மாமிசம் எல்லாம் அழுகிப்போனா நல்ல எருவாயிடும். அதனால தான் இந்த மரம் இவ்வளவு உயரமா இருக்கு."

"அந்த எரு அவ்வளவு நல்லதா?"

"ரொம்பவும் நல்லது. ஏழை முஸ்லீம்களின் காய்ஞ்ச சுடு காட்டிலெ பூச்செடியெல்லாம் எப்படி நல்லா விளையுதுன்னு நீ பார்த்ததில்லையா?"

இதைக்கேட்ட பிறகு துலனின் ஆத்மாவின் மேல் அழுத்திக் கொண்டிருந்த பளு சற்றுக் குறைந்தது. கிராமத்திற்குத் திரும்பி பிற்பகலிலேயே தனது நிலத்தைப் பார்க்கப் போனான். 'ஆ! உணமைதான்! கரனும் புலாயியும் ஏலோ மரங்களிலும் மற்ற செடிகளிலும் உயிருடன் இருக்கிறார்கள்!' அவன் கண்களிலிருந்து கண்ணீர் பொங்கி வழியத் தொடங்கியது. "கரன் நீ இறந்தும் சாகவில்லை. ஏலோ மரம் ஒன்றுக்கும் உதவாதது. ஆடுமாடுகள் கூட அதைத் தொடுவதில்லை. நீ நமது உரிமைகளுக்காகப் போராடி செத்தாய். ஏன் கோதுமை அல்லது சோளமாக மாறி நீ பிறக்கவில்லை? குறைந்த பட்சம் கீரையாகவாவது மாறி யிருக்கலாம்- அதை கொதிக்க வைத்து சாப்பிட்டிருப்பேன்."

துக்கத்தினால் மனமொடிந்து தமாடிக்குச் சென்றான். அங்கு லட்சுமண் சிங்கின் கறிகாய் தோட்டத்திற்குப் போய் யாரும் பார்க்காத போது சுற்றியிருந்த வேலிக்கம்பங்களைத் தோண்டி, முள்கம்பிகளைப் பிடுங்கி எறிந்தான். அக்கம்பக்கத்திலிருந்த எருமை மாடுகளை சத்தம் போட்டு விரட்டி தோட்டத்தில் அவிழ்த்து விட்டான். இதற்குப் பிறகு மற்றொரு சாலை வழியாக லட்சுமண் சிங்கிடம் வந்து சொன்னான்: "எசமான் ஒரு காயிதம் எழுதிக்கொடுங்க ஆஸ்பத்திரியில சேரலாம்னு இருக்கேன்."

"அறுவடையாகட்டும், லெட்டர் தரேன்."

"ரொம்ப சரிங்க எசமான்."

துலனின் மார்பில் சவங்களின் அழுத்தம் மறுபடியும் அதிகமாயிற்று. ஆவேசத்துடன் தன் மனதின் ஆழத்தை மேலும் தோண்டத் தொடங்கினான். கரன், புலாகி இருவரையும் அதிலிருந்து கிளம்பிப் போய்விடுமாறு கெஞ்சினான். அறுவடை

முடிந்துவிட்டது. ஆனால் கரன் புலாகி இடத்திற்கு யாராவது வரப் போகிறார்களா?

அறுவடை நடந்து கொண்டேயிருக்கிறது. பல தர்க்க விவாதங்களுக்குப் பிறகு நாளுக்கு இரண்டரை ரூபாய் கூலியும் டீயும் என்று முடிவாயிற்று. குதிரை மேல் உட்கார்ந்து கொண்டு தானே மேற்பார்வை செய்து கொண்டிருந்தான் லட்சுமண்சிங். போலீஸ் முழு ஏற்பாட்டுடன் வந்திருந்து அறுவடை அமைதி யாக நடக்கிறதா என்று மேற்பார்வையிட்டுக் கொண்டிருந்தது. எல்லாருக்கும் ஏழு நாள் கூலி கிடைத்தது. எஸ்.டி.ஓ. திருப்தி யடைந்து போலீசுடன் திரும்பிப் போய்விட்டார். எட்டாவது நாள் ஒரு புயலே உருவாகியது. லட்சுமண் சிங் வெளியிலிருந்து அறுவடைக்கு ஆள் கொண்டு வந்திருந்தான். அஸர்பியும் மற்றவர் களும் மிகவும் எதிர்ப்பு தெரிவித்தார்கள்.

"நீங்க இப்படி செய்ய முடியாது."

"எந்த படவா சொல்றான் இப்படி செய்ய முடியாதுன்னு? அதான் பாத்துக்கிட்டு இருக்கீங்களே, நாய்க்குப் பிறந்தவனுகளா— நான் செஞ்சுகிட்டுதானெ இருக்கேன்?"

"ஆனா—"

"ஒங்கள அறுவடை செய்ய விடமாட்டேன், கூலியும் கொடுத்தாச்சு, ஆட்டம் க்ளோஸ்."

அஸர்பியும் அவனுடைய தோழர்களும் நிலைமை அபாய கரமாக உருவாவதை உணர்ந்து தங்களுடைய அரிவாள்களை கையில் எடுத்துக்கொண்டு ஒரு பக்கமாக நின்றார்கள். துப்பாக்கி சுடு என்ற குரல் எங்கிருந்தோ வந்தது. வெளியிலிருந்து வந்திருந்த கூலியாட்கள் ஓடிவிட்டனர். சுடு என்ற குரல் எழுந்தது.

எத்தனை பிணங்கள் விழுந்தன என்பது பற்றி கணக்கில்லை. துலன் போன்றவர்களின் கணக்குப்படி பதினோரு பேர். போலீஸ், லட்சுமண் கணக்குப்படி ஏழு பேர். அஸர்பியின் தகப்பன் ஒரேயடியாக பிள்ளையில்லாதவனாகி விட்டான். அவனுடைய பிள்ளைகள் மோஹர், அஸர்பி இருவரும் 'லாபதா' (காணாமல் போனவர்கள்) ஆகிவிட்டார்கள். சாமா கிராமத்தின் மதுவன் கோயரி, புருடியா கிராமத்து பாரஸ் தோபி, இருவர் பற்றியும் தகவல் இல்லை. எல்லா வீடுகளிலிருந்தும் 'ஐயோ, ஐயோ—' என்ற ஓலம். எஸ்.டி.ஓ. வந்தவுடன் மரித்தவர்கள், மறைந்தவர்களின் தாய் தந்தையர் காலில் விழுந்து கதறினார்கள். எஸ்.டி.ஓ.வின் முகம் பாறையாக உறைந்திருந்தது. லட்சுமண் சிங்கிற்கு எதிராக கேஸ் தொடங்கப்படும் என்று வாக்குறுதி அளித்தார். பத்திரிகை

நிருபர்கள் சுற்றி சுற்றி வந்து எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்தனர். எஸ்டிஓ. சொன்னார்: "நான் வாரண்ட் எடுத்துக் கொண்டு வரும் வரை லட்சுமண் சிங் வீட்டைவிட்டு வெளியே போகக்கூடாது."

பிறகு நிலா பாயும் இரவில் குளிர் காற்று வீசும் மதுரமான சூழ்நிலையில் லட்சுமண் சிங் வந்தான். இந்த பகுதியில் எதுவுமே நியமத்துடன் நடக்கும். இம்முறையும் நான்கு கால் மிருகங்களில் மிக சிரேஷ்டமான குதிரைகள் மேல் நான்கு சவங்கள் வந்தன. இம்முறை துலனுடன் லட்சுமண் சிங்கின் அடியாட்களும் கை கொடுத்தார்கள். மிகவும் ஆழமான குழிகள் தேவைப்பட்டன. மழையின் காரணமாகவும் சரத் ருதுவின் பனியின் காரணமாகவும் தரை மென்மையாக இருந்தது. மளமளவென்று நாலு சவங்களும் குழியில் வீசப்பட்டு மூடப்பட்டன. துலனின் ஆத்மாவின் மேல் இருந்த பளு மேலும் அதிகமாயிற்று.

துலன் மேலும் திராணியற்றவனாகிவிட்டான். பிடிஓவுடன் தகராறு செய்து மேலும் விதை வாங்கிக்கொண்டு வந்தான். ஏர் மாடு வாங்கவும் பணம் வாங்கி வந்தான். பிறகு இரண்டு மாதங்களுக்குள் புதிதாய் வளர்ந்த ஏலோ மரங்களைப் பார்த்த பிறகு அவனுக்கு கொஞ்சம் ஆறுதல் ஏற்பட்டது. புதிய ஏலோ மரங்கள் முன்னர் இருந்தவற்றை விட அதிக பளபளப்புடனும் பசுமையுடனும் இருந்தன.

எமர்ஜென்ஸி காலத்தில் தெற்கு பீஹாரில் எழுத்தில் பதிக்கப் படாத பல ஹரிஜன விவசாயக் கூலிகளின் படுகொலைகளைப் போல், இந்த ஏலோ மரங்கள் தினமும் சூரியனை வணங்கிக் கொண்டிருந்தன. நீதிமன்றங்கள் லட்சுமண் சிங்கை நிரபராதி என்று விடுதலை செய்துவிட்டன. அது எமர்ஜென்ஸி காலம். விவசாயக் கூலிகளைத் தூண்டிவிட்டு, ஆண்டான்-பண்ணை யாள்களுக்கிடையே இருந்து வந்த அமைதி மிக்க நல்லுறவை கெடுத்த குற்றத்திற்காக எஸ்டிஓ சஸ்பெண்ட் செய்யப்பட்டார். லட்சுமண் சிங் மற்றும் பல ஜமீன்தார் மஹாஜன்கள், ஹனுமான் மிஸ்ராவின் கோவிலில் ஆர்ப்பாட்டமாக பூஜை செய்தார்கள்.

மேலும் அறிவித்தார்கள்: 'ஒரு ரூபா கூலி; சிற்றுண்டி கிடையாது—அறுவடைக்கு வருவதானால் எந்த நாய் மகனும் வரலாம். வராவிட்டால், வெளியிலிருந்து கூலிகள் கொண்டு வரப்படுவார்கள்.' எமர்ஜென்ஸி காலமானதால் நாலா பக்கமும் இதை ஆமோதித்து குரல்கள் முழங்கின. காங்கிரஸ் குண்டர்கள் வெளியிலிருந்து கூலிகளைக் கொண்டு வருவதற்கு காண்ட்ராக்ட்

எடுத்துக் கொண்டார்கள். இந்த முறை அநியாயம் முன்பை விட பயங்கரமாக இருந்தது. ஒவ்வொரு கூலியின் வரும்படியி லிருந்தும் காண்ட்ராக்டருக்கு நாலணா கொடுக்க வேண்டும். வெளியிலிருந்து வந்த கூலியோ அல்லது உள்ளூர் கூலியோ, யாராக இருந்தாலும் இந்த முறை அமலில் இருக்கும். துப்பாக்கியைக்காட்டி அறுவடை செய்து வைக்கிறோம். இந்த இலாகாவில் போக்கிரித் தனத்தை ஒடுக்கி தீர்த்துக் கட்டிவிடுவோம் என்று அந்தக் குண்டர்கள் ஜமீன்தார்களுக்கு வாக்குக் கொடுத்திருந்தார்கள். துலன் தனது ஆத்மாவின் மேல் மேலும் பல பிணங்களின் சுமையை தூக்கிக்கொண்டு திரிந்தான். ததுவாவைப் பார்க்கும் போதெல்லாம் அவன் மனதில் தோன்றியது: 'ஏன் பசங்களை கூட்டிக் கொண்டு எங்கேயாவது ஓடிவிடக்கூடாது' என்று. ஆனால் எங்கே ஓடிப்போவது? தென் கிழக்கு பீகாரில் துலன் கஞ்சுவிற்கு அபாயமில்லாத இடம் எது? லட்சுமண் சிங் போன்றவர்கள் இல்லாத இடம் எது?

ஹோலி தினம் வந்தது. ஹோலிப்பாட்டை கேட்கக்கூட அவன் போகவில்லை. எங்கிருந்தோ வந்த ஒரு பாட்டு ஹோலி உற்சாகத்தை திடீரென்று அணைத்து விட்டது. மிகவும் குடித்து விட்டு ததுவா தப்பட்டை வாசித்துக்கொண்டு கண்ணை மூடிக்கொண்டு பாடுகிறான்:

"எங்கே போய் விட்டான் கரன்? புலாறகி எங்கே?
ஏன் யாரும் அவனைத் தேடிக்கண்டுபிடிக்கவில்லை?
போலீஸ் புத்தகத்தில் அவன் மறைந்து போயிட்டான்.
அஸர்பி ஹஜாம் எங்கே? அவன் தம்பி மோகர்?
மஹூவான் எங்கே? பாரஸ் எங்கே?
ஏன் யாரும் அவர்களைத் தேடிக் கண்டுபிடிக்கவில்லை?
போலீஸ் புத்தகத்தில் காணாமல் போய் விட்டார்கள்.
கரன் போராடினான், இருபத்தைந்து காசுக்கு
ஐந்து ரூபா நாற்பது பைஸா என்றான் அஸர்பி
புலாயியும் மோஹரும் அண்ணனோடு போனார்கள்.
மஹூவாவுக்குத் தெரியும் போதைன்னா என்னவென்று
பாரஸூக்குத் தெரியும் ஹோலி ஆட்டம் என்னவென்று.
போலீஸின் புத்தகத்தில் இரண்டு பேரும் மறைந்தார்கள்.

பாட்டு முடிந்தது. இருந்த இடத்திலேயே எல்லாரும் ஸ்தம்பித்து நின்றனர்.

ஹோலியின் வண்ணம் திடீரென்று கலைந்துவிட்டது. போதை இறங்குவதைப் போல் இறங்கிவிட்டது.

துலன் எழுந்து நின்றான் "யார் எழுதினது இந்த பாட்டு?"

"நான் தான் அப்பா."

துலன் 'ஓ'வென்று அழுத் தொடங்கினான். அழுதுகொண்டே அவன் சொன்னான், "மறைத்துவிடு இந்தப்பாட்டை. நீயும் போலீஸ் ஃைபலில் மறைஞ்சுடுவே. மவனே நீயும் போலீஸ் ஃைபலில் மறைஞ்சுடுவே"

துலன் தனது நிலத்தை வந்தடைந்தான். மிகவும் மெல்லிய குரலில் கேட்டான் "காதிலெ விளுதா? நீ நாட்டுப் பாட்டாகி விட்டாய். நீங்களெல்லாம் பாட்டாகி விட்டீங்க. என் மவன் ஓங்க பேர்ல பாட்டு எழுதிட்டான். பாட்டாயிட்டீங்க நீங்க, ஆனால் தானியமாகலே. கீரையாகக் கூட ஆகலே. இப்போவாவது என் மார்லேந்து எறங்குங்கடா. என்னால இனி மேலும் தாங்கிக்க முடியாது. முடியாது."

பௌர்ணமியின் சந்திரன் தனது ஒளியை அந்நிலத்தின் மேல் வாரி இறைத்துக் கொண்டிருந்தான். ஏலோ செடிகளின் பள பளப்பான இலைகளும் குட்ஸ்கு மர பூக்களின் கொத்துகளும் நிலவில் சிரிப்பது போல் விளையாடிக் கொண்டிருந்தன. இது மாதிரி சிரிப்பை அவன் இதற்கு முன் பார்த்ததேயில்லை. ததுவா பற்றிய கவலை அவன் இதயத்தில் இறக்கையடித்துக் கொண் டிருந்தது. பரண் மேல் ஏறும் போது ததுவாவின் பாட்டு காதில் விழுந்தது. இப்பொழுது அதை ததுவா மட்டும் பாடவில்லை. எல்லாருமே பாடினார்கள். ஆனால் அவர்கள் போலீஸ் ஃைபலில் மறைந்து விடவில்லை. நடந்ததையெல்லாம் யாரிடமும் துலனால் சொல்ல முடியாது. லட்சுமண் சிங்கிடம் அவனுக்கு பயம்.

கடைசியில் எமர்ஜென்ஸி முடிந்தது. ஒரு நாள் பாரதத்தின் விடுதலைச் சூரியன் வேடிக்கை பார்ப்பதற்காக தனது சிம்மாசனத் திலிருந்து இறங்கி கீழே வந்தது. கொஞ்ச நேரம் காற்று வாங்கி விட்டு மறுபடியும் பீடத்தில் ஏறி உட்காருவதற்காக ஓடி விட்டது. லட்சுமண் சிங்கின் அறுவடை நடந்தது. இரண்டு முறை வறட்சி, பஞ்சம், மோசமான விளைச்சலுக்குப் பிறகு பூமாதேவி அபார விளைச்சலை வழங்கினாள். தொடுவானம் வரை சாரி சாரியாக பரண்கள் கட்டப்பட்டன. கூடவே, முதிர்ந்த தானியக் கொத்து களின் மேல் நானா வித பட்சிகள் இரவு பகல் என்றில்லாமல் சுற்றிக் கொண்டிருந்தன.

இரண்டு வருஷங்களுக்கு முன் 'காங்கிரஸ்வாலா மஸ்தான்' கூலி காண்ட்ராக்டர்களாக இருந்தவர்கள், இப்பொழுது 'காங்கிரஸ் வாலா' என்ற அடைமொழியில்லாத வெறும் கூலி காண்ட்ராக்டர்

களாக புது அவதாரம் எடுத்திருந்தனர். ஆனால் அவர்களுடைய நடத்தையில் எந்த மாறுதலும் இல்லை. முன்பும் கூலிகளை திரட்டிக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். இப்பொழுதும் அதே காண்ட்ராக்டர்களாகவே செயல்படுகிறார்கள். ஜமீன்தார்களை விட உயர்ந்தவர்களாகவோ சமமானவர்களாகவோ நடந்து கொள்வதில்லை. ஆனால் அவர்களுடைய நான்கு சகபாடிகள் மிடுக்குடன் நடந்து கொள்கிறார்கள். டெரிலின் சராய் அணிந்து கொண்டு, கறுப்புக்கண்ணாடி போட்டுக் கொண்டு. கையில் துப்பாக்கியை வீசிக்கொண்டு நடமாடும் படிசுட்டிப் பையன்கள்.

அமிதாப்பச்சன் குரலில் அவர்களில் ஒருவன் லட்சுமண் சிங்கிடம் சொன்னான்: "இப்போ உங்க நாளெல்லாம் முடிஞ்சு போச்சு, ஹர்த்தாலை உடைப்பது, விவசாயக் கூலிகளை ஒன்று சேர்த்து அறுவடை செய்யவைப்பது—இதெல்லாம் காண்ட்ராக்டர்கள் கையில் வந்துவிட்டது. ஸவுத் ஈஸ்டர்ன் பீஹாரில் மெர்சினரி ஸர்வீஸ் நான் ஏற்பாடு செய்கிறேன். உங்களுக்கு தேவையில்லா விட்டால் கூட என் ஸர்வீசை நீங்க எடுத்தாகணும். அட்வான்ஸ் ஐயாயிரம் ரூபாய்."

"ஐயாயிரம்-?"

"வேண்டாம்னா சர்க்கார் கூலி கொடுங்க."

"ஊஹூம், அது மட்டும் முடியாது."

"சர்க்காரி கூலி கொடுக்காமல் எட்டாயிரம் ரூபா லாபம் கிடைக்கும்னா, ஐயாயிரம் ரூபா கொடுக்கக் கசக்குதா?"

"கொடுக்கிறேன் தம்பி, கொடுக்கிறேன்."

"அவ்ளோதான். கிராமத்தின் பெயர் சொல்லுங்க. கூலிகள் லிஸ்ட் கொடுங்க. தகராறு பண்றவன் யாராவது இருக்கானா?"

"இல்லே."

"சரி, நான் மக்கன் சிங். ராம்லக்ஷன் சிங்குக்கும் ஸர்விஸ் கொடுக்கணும். சமயத்திற்கு வந்துடுவேன். ஆமா.. இன்னொரு விஷயம் அவங்களுக்கு ஒண்ணே கால் ரூபா கூலி கொடுங்க. அதிலே என்னோட பங்கு நாலணா."

"ஒரு ரூபா இல்லையா?"

"இல்லே, ஒண்ணே கால் ரூபா. என் பேர் அமர்நாத் மிஸ்ரா. எனக்கு நீட்டி முழக்கிப் பேசும் பழக்கமில்ல."

"டஹாடில் இருக்கும் மிஸ்ரா உனக்கு என்ன ஆகணும்?"

"நான் அவருடைய மருமகன். என் சர்வீஸுக்கு முதல் கேபிடல் மாமாதான் கொடுத்தார்."

எல்லா விதத்திலும் ஏற்பாடுகள் நேர்த்தியாகிவிட்டன. பிறகு

ஹனுமான் மிஸ்ரா லட்சுமண் சிங்கிடம் சொன்னார்: "ஆமாம். என்னோட மருமகன்தான். என் பையனுக்கு நான் ஒரு ஸர்ஃபேஸ் கேலியரி (நிலக்கரிச் சுரங்கம்) வாங்கிக் கொடுத்தேன். மருமகனைக் கேட்டேன் 'உனக்கும் ஒண்ணு வாங்கி தரட்டுமா' என்று. அவன் சொன்னான், 'வேண்டாம் மாமா, இந்த மாதிரியான வேலை எனக்கு வேண்டாம்'; ரொம்ப சூடிகையான பையன். அவனுடைய ஸர்வீஸை எலெக்ஷன் காண்டிடேட்ஸ் கூட எடுத்துக்கிறாங்க. வேலை நிறுத்தம் அது இதுன்னு வரும்போது, ஆலை முதலாளிமார் கூட இவங்கிட்ட வர்ராங்க. ஸர்ஃபேஸ் கலியரிக்கு அவன் லேபர் கூட்டிக் கொடுக்கிறான். பெரிய அசத்தலான பேர்வழி. மூணு கல்யானம் செஞ்சுக்கிட்டிருக்கான். மூணு டவுன்ல மூணுபேரையும் வெச்சிருக்கான். மூணு பேருக்கும் வீடு கட்டிக் கொடுத்திருக்கான். முன்பிருந்த சர்க்கார்கிட்ட இவனுக்கு ரொம்ப செல்வாக்கு. என்னத்தச் சொல்றது! என் பசங்கள்லே ஒருத்தங்கூட இவ்வளவு சாமர்த்தியமாயில்ல."

லட்சுமண்சிங் நாகரீகமற்ற முரடனான ராஜ்புத். தன் பிராந்தியத்தில் அவன் ஒரு ஸஞ்ஜய். ஆனால் என்ன செய்வது? தன் பகுதியிலேயே இவனுடைய ஸர்வீஸை வாடகைக்கு கட்டாயப்படுத்தி திணிக்கிறான் இந்தப்பயல். ஏற்றுக்கொள்ளத் தான் வேண்டும். ஏற்றுக்கொள்ளாவிட்டால், மக்கன் சிங், ராம் லக்கன் சிங் முன்னால் அவன் ஒரு முட்டாளாகத் தென்படுவான்.

அறுவடை தொடங்கியது. வெளியூர் கூலிகள் இல்லை. ததுவா, அவனுடைய சகாக்கள் வேலை செய்து கொண்டிருந் தார்கள். ஒன்றேகால் ரூபாய் கூலி.

பலகாரத்திற்காக சோள ஸத்துமாவு, உப்பு மிளகாய்... ததுவாவின் அம்மா தன் மகன்களுக்கு கரம்சா ஊறுகாய் கொடுத்திருந்தாள்.

துலன் பரண் மேல் உட்கார்ந்து கொண்டிருந்தான். யாருக்குத் தெரியும் எதை எதிர் நோக்கிக்கொண்டு அறுவடை நடந்து கொண்டிருக்கிறது என்று. அறுத்துக் கொண்டே பெண்கள் பாடிக் கொண்டிருக்கின்றனர். தூரத்திலிருந்து அவர்கள் பாட்டு தாலாட்டு மாதிரி ஒரே சுரத்தில் இருந்தது. ஆனால் துலனுக்கு தூக்கம் வரவில்லை.

யார் துலனின் தூக்கத்தை திருடிக்கொண்டு விட்டார்கள்? போலீஸ் ஃைபலில் அவனுடைய தூக்கம் ஒளிந்து கொண்டு விட்டது. ததுவாவும் வடுவாவும் வீடு திரும்பும் வரை துலன் வீட்டிலிருப்பான். பிறகு தன் நிலத்துக்குச் சென்றுவிடுவான்.

மழைத்தண்ணீர், முன்குளிர்கால பனி காரணமாக நிலத்தின் மண் ஈரமாகிவிட்டிருந்தது. ஏலோ மரங்கள் மிகவும் பசுமையாகவும், கம்பீரமாகவும் நின்றன. புடுஸ் மரங்களில் கொத்துக்கு மேல் கொத்துகளாக பூக்கள் படர்ந்திருந்தன. துலனின் கண்களுக்கு தூக்கம் கிடையாது.

எதிர்பார்த்தபடி கூலி பட்டுவாடா தினத்தன்று தகராறு எழுந்தது. அமர்நாத் மிஸ்ரா அவனது பங்கைக் கேட்டான். லட்சுமண் சொல்லியிருந்தான்: 'யாரையும் அடிச்சு உதைச்சு ரகளை பண்ணாதே' என்று. "கூலியிலிருந்து கமிஷன் வெட்டுவது பற்றி நான் அவங்ககிட்ட பேசலை. நீயே அவங்ககிட்ட பேசி தீர்த்துக்க."

"எத்தனை பேரோட நான் பேசி தீர்த்துக்கமுடியும்?" அமர்நாத் ஓநாய் மாதிரி சிரித்தான். "நீங்களே கொடுத்துடுங்க."

கமிஷன் வெட்டும் விஷயம் பற்றி எல்லாரையும் விட துலன் மகன் ததுவா பொங்கி எழுந்தான். இதற்காகத்தான் லட்சுமண் சிங் இந்த விஷயத்தில் தலையிட விரும்பவில்லை. அவன் துப்பாக்கியைக் காட்டி தீண்டாதவர்களை அடக்கி ஆண்டு கொண்டிருந்தவன். ஆனால் என்ன செய்வது? ததுவாவின் மேல் குண்டு போட அவன் தயாராக இல்லை. துலன் அவனுக்கு வேண்டிய ஆள். ததுவா அவன் பிள்ளை.

அமர்நாத் மிஸ்ரா சொன்னான்: "அந்த நாயிங்களோட நான் பேசணுமா? முடியாது, ஐநூறு பேருக்கு இருபத்தி அஞ்சு பைஸா மேனிக்கு பதினைந்து நாளுக்கு 1875 ரூபா- சத்தம் போடாம கொடுத்திருங்க."

"முடியாது எசமான், நாங்க கொடுக்க மாட்டோம்." ததுவா பொங்கி எழுந்தான். லட்சுமண் சிங் பெருமூச்சு விட்டான். மறுபடியும் துப்பாக்கியைத் தூக்கவேண்டும் போலிருக்கிறது. கரன் போய்விட்டான். அஸர்பியும் போய்விட்டான் இப்போது ததுவா.

"பதினைந்து நாட்களுக்கு கூலி 18 ரூபா 12 அணா. பதினைந்து நாட்களுக்கு 15 ரூபாதான் கிடைக்கும்னு நீங்க சொல்லலே. தவிர, நாங்க வேலய வீணா நீட்டலே. சட்டுபுட்டுன்னு செஞ்சு முடிச்சிருக்கோம்."

லட்சுமண் சிங் அவனை அதட்டினான்: "புரிஞ்சுட்டு பேசு ததுவா."

லட்சுமண் சிங் அமர்நாத்துக்குப் பணத்தைக் கொடுத்து விட்டு ததுவாவிடம் சொன்னான் "நீ இங்கிருந்து போய் விடு. சும்மா பேச்சு வளக்காதே."

கரன் தன்னுடைய கோரிக்கைகளை மிகவும் மிருதுவாகவே முன்வைப்பான், ஆனால், அஸர்பியின் போக்கு கொஞ்சம் ஆவேசமானது. கூலியிலிருந்து கமிஷன் வெட்டி அமர்நாத்துக்கு தரும் விவகாரத்தில் ததுவா அவர்களையெல்லாம் விட இவ்விதம் தனது உரிமையை அடித்துக் கேட்டுப் பேசுவது அவனுக்கே ஆச்சரியமாக இருந்தது.

வெளியில் வந்து தன் தோழர்களிடம் ததுவா சொன்னான்: "நீங்க இப்போ போங்க, நான் ஒரு முடிவு செஞ்சுட்டுத்தான் வருவேன்."

பிறகு அவன் லட்சுமண் சிங் முன்னால் வந்து நின்றான். "25 பைசா வெட்டாமல் கொடுக்காவிட்டால் நாளை நாங்கள் அறுவடைக்கு வரமாட்டோம். அறுவடை ஆகாத பாக்கி நிலம் நிறையா இருக்கு. வெளியாட்களை அறுவடை செய்யவும் விட மாட்டோம். வேறு யாரையும் செய்யவும் விடமாட்டோம்."

"போலீஸ் தன்னோட வாடிக்கையான கமிஷனை வாங்கிட்டு போக வந்திருக்கு. அதனாலதான் நீ தப்பிச்ச, ததுவா."

"நீங்க போலீஸுக்குப் பயப்படுறீங்களா?"

உள்ளத்தில் தீ மூண்டுவிட்டது. ததுவா துலனுடைய மகன், துலன் லட்சுமண் சிங்கின் அந்தரங்கக் காரியங்களில் உதவி புரிந்திருக்கிறான். ஆகவே லட்சுமண் சிங் இந்த கீழ் ஜனங்களுக்கு இன்னொரு நாள் அவகாசம் கொடுத்தான்.

மறு நாள் கூலிகள் வந்தார்கள். ஆனால் வேலை செய்ய வில்லை. பயனில்லாத கோபத்தில் லட்சுமண் உறுமிக்கொண்டே இருந்தான். மெர்சினரி ஸர்வீஸ் ஜனங்கள் கிடைக்கவில்லை. அவர்கள் மக்கன் சிங், ராம்லக்கன் சிங் நிலங்களில் வேலை செய்யப் போய்விட்டிருந்தார்கள். வெளியிலிருந்து கூலிகளைக் கொண்டு வருவதென்பதும் சுலபமாக இல்லை. மாலையில் லட்சுமண் சிங் தனது ஆட்களுக்கு உத்தரவிட்டான்: "தாஜா பண்ணி அதட்டி உருட்டியும் காரியம் நடக்கவில்லை என்றால், துப்பாக்கி சுடாதீங்க."

முற்றிய தானியங்கள் நிறைந்த நிலத்தின் நடுவில் குதிரைகள் மேல் சவாரி செய்து கொண்டிருந்தனர் லட்சுமண் சிங்கின் ஆட்கள். சம்பல் கொள்ளைக்காரர்கள் பற்றிய சினிமாக்களைப் பார்த்துவிட்டு இவர்களும் காக்கி பச்சை யூனிஃபார்ம் உடுத்திக் கொண்டிருந்தனர். அவர்கள் முன்னே வந்தார்கள். ததுவாவும் அவனுடைய தோழர்களும் எழுந்து தயாராக நின்றார்கள்.

"ஏய்! பொட்ட நாய்க்குப் பிறந்தவங்களா! நல்லா காதைத்

திறந்து கேட்டுக்குங்கடா..”

“நீ ஆண் நாய்க்கு பிறந்தவன்டா.”

யார் கீரிச்சிட்டான் என்று தெரியவில்லை. அவர்கள் துப்பாக்கியைக் கையில் எடுத்துக் கொண்டார்கள். வியக்கத்தக்க வேகத்துடன் விளை நிலத்திற்குள் ததுவாவும் அவன் தோழர்களும் தானியங்களின் அசைவில் கண்ணுக்குத் தெரியாமல் போனார்கள். சிறிது நேரம் வரை ஏசலும் கெட்ட வார்த்தைகளில் வசவுகளும் ஏவுகணைகள் போல் இரு பக்கங்களிலிருந்தும் பறந்தன. பிறகு தவிர்க்கமுடியாத துப்பாக்கிச்சூடு... தானியங்களைத் தின்று கொண்டிருந்த பட்சிகள் கலவரமடைந்து ஆகாசத்தில் பறந்து சென்றுவிட்டன. நடுநடுவே நிலத்திலிருந்து தொண்டையிலிருந்து ரத்தம் கொப்பளிப்பது போன்ற சத்தம் கேட்டது.

பிறகு குதிரைகளின் கால்களின் அடியில், அரிவாள்களும் நீண்ட கத்திகளும் விழுகின்றன. சவாரி செய்து கொண்டிருந் தவர்களைத் தூக்கிக் கொண்டு குதிரைகள் இங்கும் அங்குமாக ஓடத்தொடங்கின. நிலத்திலிருந்து வெளியே கிளம்பி ஓடத் தொடங்கின. லடுவாவும் பரமுவும் தோக்ரி பக்கம் ஓடினார்கள். மிக மிக பயங்கரமான நெஞ்சை பிழிந்தெடுக்கும் கவலையுடன் துலன் காத்துக் கொண்டிருந்தான். மாலை மறைந்து இரவு வந்தவுடன் திரும்பி வந்தான்.

“ததுவா எங்கே?

“நாங்க போலீஸை கூட்டிட்டு வந்திருக்கோம். அவங்க இங்கேயும் வருவாங்க. போன தடவை வந்தாரே, அதே எஸ்.டி.ஓ இந்த தடவையும் வர்றாரு.”

“ததுவா எங்கே?”

துலனுடைய ஆத்மாவின் மேல் சவங்கள் ஆடுகின்றன. ஏன் ஆடுகின்றன? யாருக்கு இடம் கொடுப்பதற்காக ஆடுகின்றன? யாருக்காக? துலனுக்கு எல்லாம் புரிந்துவிட்டது. அவன் எழுந்து நின்றான்.

“எங்கே போறே?”

“நிலத்துக்கு.”

“மவன் இன்னும் வந்து சேரலே, நீ- பயித்தியக்காரனா, இல்லே ராட்சசனா?”

“வாய மூட்றீ, தேவிடியா மவளே..”

துலன் வீட்டை விட்டுக் கிளம்பி ஓட ஆரம்பித்தான். ஓடிக் கொண்டே இருந்தான். ததுவாவின் பாட்டு அவன் காதில் ஒலித்துக் கொண்டே இருந்தது.

'எங்கே போயிட்டான் கரன்? புலாயி எங்கே?

போலீஸ் ஃைபலில் மறைஞ்சுட்டானுக'

துலனின் கண்கள் மங்கிவிட்டன.

அவன் கையில் கத்தி இருந்தது. அவன் முணுமுணுத்துக் கொண்டே இருந்தான். "நீ தொலைந்து போய்டாதே, ததுவா தொலைந்து போய்டாதே! ஏலோ மரமே புடுஸ் மரமே இன்றிரவு நீங்க சிரிக்காதீங்க"

"ததுவா உயிரோடிருக்கான் ததுவா உயிரோடிருக்கான்."

லட்சுமண சிங். அவன் கூட ஒரு ஆள். அந்த மனிதனின் முகம் கண்ணெல்லாம் ரத்தக்களரியாக இருந்தது. லட்சுமண் சிங் அவனை ஒரு தடியால் அடித்துக் கொண்டிருந்தான். ஒரு அடிபட்டவுடன் அவன் தரையில் விழுந்துவிட்டான். அவர்கள் இருவர் மூன்று குதிரைகள். லட்சுமண் சிங் துலன் பக்கம் திரும்பிப் பார்த்தான்.

"துலன்-?"

"ததுவா எங்கே?"

"ரொம்ப வருத்தம்பா எனக்கு. ரொம்ப வருத்தம், துலன். நான் தடுத்திருந்தேன். ஆனபோதிலும் இந்த மிருகம் சுட்டுட்டான்." இப்படிச் சொல்லிவிட்டு மறுபடியும் லட்சுமண் சிங் அவனை உதைத்து விட்டுச் சொன்னான், "பொறுக்கிப்பய! ஆனா வாயைத் திறக்காதே, துலன். இல்லேன்னா, உன் மவன், மருமவ பேரக் கொளந்தைங்க யாரும் உயிரோட இருக்க மாட்டாங்க. வீட்டுக்கு வந்து அவன் பணத்த வாங்கிட்டு போ. உன் மவன் போலீஸக் கூட்டியாந்திருக்கான். போலீஸப் பத்தி எனக்குக் கவலையில்லே. பணத்தால அவங்கள சரி செஞ்சுடுவேன். ஆனா, ஒண்ணு மட்டும் நெனைப்புல வச்சுக்க, லடுவா ஒன் மவன். அதனால அவனை நான் விட்டுட்டேன். என்னுடைய துப்பாக்கியிலேந்து இன்னைக்கு ஒரு குண்டு கூட வீணாகல்ல. ஒரு குண்டுல லடுவாவை கொன்னு போட்டிருக்க முடியும். ஆனால் உன்ன நெனச்சுக்கிட்டு விட்டுட்டேன்-"

லட்சுமண சிங்கும் அவன் ஆளும் போய் விட்டார்கள். தனது ஆத்மாவின் மேலிருந்த ஏழு சவங்களின் பளுவைத் தூக்கிக்கொண்டு துலனால் நிற்க முடியவில்லை. பாறை ஓரத்தில் விழுந்து விட்டான். சரிவில் உருண்டு உருண்டு கீழே சென்ற போது ஏலோ மரத்தின் முட்கள் அவனுடைய உடலை சின்னா பின்னமாக்கி விட்டிருந்தன. சிறிது நேரத்திற்குப்பின் அவன் உருளவில்லை.

இம்முறை விசாரணை வழக்கம்போல் சீக்கிரம் முடிய வில்லை. எஸ்டிஓ. இந்தமுறை தலையிட்டார். குண்டு சுட்ட குண்டனும் அமர்நாத்தும் ஜெயிலுக்குப் போனார்கள். ததுவா திரும்பி வரவில்லை. துலன் யோசித்துக்கொண்டே இருந்தான். பயனில்லாமல் யோசித்துக்கொண்டிருந்தான். கடைசியில் அவன் பைத்தியக்காரனாக முடிவெடுத்தான். வைகாசி அந்திப் புயலுக்குப் பின் அவன் அந்த ஏலோ, குட்ஸா மரங்களையெல்லாம் வெட்டி வீழ்த்தத் தொடங்கினான். "எங்கே போனாரு இந்த வெயில்ல?" துலனின் பெண்சாதி கேட்டாள். மகன் லடுவாவின் பெண்சாதி சொன்னாள்: "அரிவாளும் கடப்பாறையையும் எடுத்துக்கிட்டு நிலத்துக்கு போயிருக்கிறாரு மாமானாரு."

"நீ தடுக்கலியா?"

"நா அவர்கிட்ட எப்பவாவது பேசியிருக்கேனா?"

தனது துக்கதாபங்களை மறந்து துலனின் மனைவி நிலத்தை நோக்கி ஓடினாள். கரையில் நின்றுகொண்டு கத்தினாள். "ஏன்யா! ஒனக்கு பயித்தியம் பிடிச்சுடுச்சா? எதுக்காக காட்டை அழிக்கிறே?"

"நீ வீட்டுக்குப்போ."

"நீயும் வா..."

"வீட்டுக்குப்போ."

துலனின் மனைவி அழுதுகொண்டே பஹன்னிடம் சென்றாள். பஹன் நிலத்துக்கு வந்து சொன்னான்: "ததுவா திரும்பி வருவாண்டா, துலன்! மவன் போன துக்கத்தில பயித்தியமாப் போகாதே, உனக்கு சுரம் வந்துடும்."

துலன் சொன்னான்: "நீ ஒன் வீட்டுக்கு போ, பஹன். தொலஞ்சு போனது ஒன் மவனா இல்லெ என் மவனா?"

"ஒன் மவன்."

"இந்த நிலம் என்னுதா இல்லெ ஒன்னுதா?"

"ஒன்னுது."

"அப்போ? நான் பயித்தியமானா என்ன, இல்லாட்டி என்ன? நான் இந்த தேவிடியா நிலத்த ஒருகை பாத்துடப்போறேன்."

"அப்பொ லடுவாவையும் கூட கூட்டிக்க..."

"இல்லே, இதை நான் ஒண்டியாவே செய்யப் போறேன்."

பஹனுக்குத் தெரியும் இவன் விவசாயம் செய்வதில்லை, ஆனால் செய்தானானால் அவன் கை ராசியான கை. துலன் மனைவிக்குச் சொன்னான்: "நீ வீட்டுக்குப்போ. அவன் மனம் போல செய்யட்டும். நீ தோக்ரிக்கு போகணும்."

துலனின் மனைவி மகன் லடுவாவுடன் திரும்பத் திரும்ப

தோக்ரி போலீஸ் ஸ்டேசனுக்கு சென்று ததுவாவைப் பற்றி விசாரித்துக் கொண்டிருந்தாள். சில நாட்களில் காட்டை சுத்தம் செய்துவிட்டான் துலன். பிறகு நிலத்தைத் தோண்டி தயார் செய்தான். பிறகு தோக்ரியிலிருந்து விதை வாங்கி கொண்டு வந்து சொன்னான்: "இந்த தடவை விதை சாப்பிடுவதற்கில்லை. விதைச்சு அறுவடை செய்யப்போறேன்."

"இந்த நிலத்திலா?"

"ஆமாம்."

விதையை விதைத்துக் கொண்டே துலன் மந்திரம் சொல்வது போல், 'இந்த இடத்திலே ஏலோ குட்ஸா மரங்களை விட்டு வைக்கப் போறதில்லே. இதுல விவசாயம் செய்யப்போறேன்.'

அந்த நிலத்தில் பயிர் வளர்ந்து நின்றபோது எல்லா ஜனங்களும் கண் கொட்டாமல் ஆச்சரியத்துடன் பார்த்தார்கள். மக்கன் சிங், ராம்லகன் சிங், லட்சுமண் சிங் நிலங்களில் கூட இப்படி முதிர்ந்த, பளபளப்பான தானியம் விளைந்ததில்லை. வறண்ட நிலத்தில் நெற்பயிரா என்று எல்லாரும் ஆச்சரியப்பட்டுப் போனார்கள். கூட்டத்தைப் பார்த்து துலன் சீற்றமைடைவான். எல்லாரையும் அங்கிருந்து விரட்டி விடுவான். அவன் தனியாக உழுவான். தனியாக விதைப்பான், தனியாகவே அழகான பசுமையைக் கண்டு களிப்பான்.

பஹன் ஒரு முறை சொன்னான்: "லட்சுமண் சிங் பார்த் தான்னா, பொறாமையில் பொசுங்கிடுவான்."

"யாரு?" துலன் கேட்டான்

"லட்சுமண் சிங்."

"எங்கே இருக்கான் அவன்?"

"கயாவுக்குப் போயிருக்கான் மாமியார் வீட்டுக்கு."

"ஓ-"

கொஞ்சம் கொஞ்சமாக பயிர் வளர்ந்து கொண்டிருந்தது புஷ்டியாக பளபளப்புடன் மின்னிக் கொண்டிருந்தது. பிறகு அவற்றில் முளை விட்டன. தானியம் முதிர்ந்தது. அப்போதுதான் துலனின் பயித்தியக்காரத்தனத்தின் முழுமை வெளிவந்தது.

அவன் சொன்னான்: "இந்த தானியத்தை அறுவடை செய்யப் போறதில்லை."

"அறுவடை செய்யப்போறதில்லையா? இதுக்கா வருஷம் பூரா இவ்ளோ ஒழைச்சே? மழைக்காலத்திலே கால்வாய் வெட்டித் தண்ணிய சேத்து வச்சே- பாறாங்கல் மாதிரி இருந்த நிலத்த ரத்தம், வேர்வை கொட்ட விவசாயத்துக்கு ஏத்த நிலமாக்கினே.

ராவு-பகல்னு இல்லாம இங்கேயே உட்கார்ந்து உனக்கு ரொட்டி தண்ணி கொண்டு வந்து கொடுத்து நான் செத்துப்போனேன். இதுக்கெல்லாம் பிறகு அறுவடை செய்ய போறதில்லியா?"

"ஆமாம். அறுக்கப் போறதில்லே. இன்னொரு விஷயம் இனிமே நீங்க யாரும் இங்கே வராதீங்க, எனக்கு வேலை இருக்கு."

"என்ன வேலை? இங்கே சும்மா உட்கார்ந்து கொண் டிருப்பதைத் தவிர?"

"ஆமா, அப்படித்தான் உட்கார்ந்து கொண்டிருப்பேன்."

எந்த வேலைக்காக துலன் உட்கார்ந்து கொண்டிருந்தானோ அந்த வேலையும் ஒரு நாள் நடந்தது. அறுவடை சமயம் லட்சுமண் சிங் தன் மாமியார் வீட்டிலிருந்து திரும்பி வந்தான். துலன் நிலத்தின் அதீத விளைச்சலைப் பற்றிய விவரம் அவன் காதிற்கும் எட்டியிருந்தது. ததுவாவின் கொலைக்குப் பிறகு ஒரு வருடம் ஓடிவிட்டிருந்தது. லட்சுமண் துலன் இருக்குமிடம் வந்தான். அவன் வருவான் என்று துலனுக்குத் தெரியும்.

"துலன்!"

"எசமான்?"

"எழுந்திரு, இங்கே வா,"

"இது என்னது! நீங்க தனியா?"

"வெட்டிப்பேச்சுப் பேசாத. இது என்ன?"

"எது?"

"நிலத்திலெ ஏன் தானியம் வெதச்சே?"

"விவசாயம் பண்ணேங்க எசமான்."

"நம்பளுக்குள்ளே என்ன ஏற்பாடு?"

"நீங்களே சொல்லுங்க."

"நாயிக்குப் பொறந்த பயலே! நீ இந்த நிலத்திலே தானியம் விதைப்பேன்னா ஏற்பாடு? புதரும் பூண்டும் காடாக்கிடக்கும்னு தானே பேச்சு?"

துலன் கீழே நின்றுகொண்டிருந்தான், லட்சுமண் சிங் குதிரையின் முதுகில். திடீரென்று துலன் லட்சுமண் சிங்கின் காலைப் பிடித்து வலுவுடன் இழுத்தான்.

லட்சுமண் சிங் குதிரையிலிருந்து தரையில் விழுந்தான். துப்பாக்கியும் கீழே விழுந்தது. இப்பொழுது அது துலன் கையில். லட்சுமணுக்கு எதுவும் புரிவதற்கு முன் துப்பாக்கிக் கட்டை அவன் தலைமேல் விழுந்தது. பிறகு துலன் சுட்டான். குண்டு ஒன்று அவன் தோளில் பாய்ந்தது. லட்சுமண் கிரீச்சிட்டான். துலன் மறுபடியும் லட்சுமண் சிங்கின் தோள்பட்டை எலும்பின்மேல்

துப்பாக்கிக் கட்டையால் அடித்தான். 'கடக்' என்ற சப்தத்துடன் எலும்பு உடைந்தது.

"நாய்க்குப் பொறந்தவனே! மிருகமே!"

"என்ன ஏற்பாடுங்க எசமான்? விவசாயம் பண்ணக் கூடாதுன்னா? நீ சவங்களாய் குவிப்பாய்- அவற்றை நான் தூக்கிக் கொண்டே இருக்கணும்னா? ஏன்? இனிமேல் செய்யாட்டி கிராமத்துக்கு தீவெச்சு சாம்பலாக்கிடுவியா? என் வம்சத்தையே அழுச்சிடுவியா? சபாஷ், எசமான்- ஆனால் யோசனை பண்ணு, எனக்கு ஏழு ஏழு மவனுவ இருக்கானுங்க- அவங்க உடல காட்டு மரத்துக்கும் புதருக்கும்தான் விதைக்கணுமோ? முடியாது எசமான் முடியாது. அதனாலதான் நான் தானியம் விதைச்சேன். தெரியுமா ஒனக்கு? எல்லாரும் என்னை பயித்தியம்னு ஏசறாங்க. ஆமாம், நான் பயித்தியமாத்தான் ஆயிட்டேன். எசமான், நான் இன்னிக்கி உன்னப் போக விடமாட்டேன். இனிமே எந்த அறுவடையும் ஒன்ன செய்யவிட மாட்டேன். துப்பாக்கி சுடுறது வீட்டுக்குத் தீ வைக்கிறது, மனுசங்கள எரிக்கிறது, எதையும் செய்ய விட மாட்டேன். நீ நிறையவே அறுவடை செஞ்சிருக்கே."

"ஒன்னை போலீஸ் விட்டுடுமா?"

"விடாட்டி என்ன குடி முளுகிப்போயிடும்? ஒன்னோட ஆளுங்கதான் இருக்காங்களே- அவங்க கூடத்தான் என்னை கொன்னு போடுவாங்க. எசமான். நீங்களெல்லாம் எப்போதான் எங்கள அடிச்சுக் கொல்லலே? இன்னொரு தடவை அடிச்சுக் கொல்லப்போறீங்க. இந்தத் தடவை செத்தும் போயிட்டாதான் என்ன...? எப்போவாவது ஒரு நாள் எல்லாரும்தான் சாகப் போறாங்க. இதுக்கு முன்னால தந்துவா செத்து போகலியா?"

அந்த சமயத்தில் லட்சுமண்சிங் தன்னை திக்கற்றவனாக உணர்ந்தான். பயத்தில் சாவை எதிர்கொள்வதைப் போலிருந்தான், ஆனால், சாவை எதிர்கொள்ளும் சமயத்திலேயும் தெற்கு பீஹாரைச் சேர்ந்த ராஜ்புத் ஒரு தீண்டத்தகாதவன் முன் தலை குனிவானா? அப்படித் தலை குனிந்தாலும், அந்த கீழ் சாதிக்காரன் ராஜ்புத்துக்கு உயிர் தானம் செய்யமாட்டான். துலனாலும் அப்படிச் செய்ய முடியவில்லை. லட்சுமண் எழுந்திருக்கப் பார்த்தான். முழு பலத்துடன் உரக்கக் கத்தப் பார்த்தான். இடது கையால் ஒரு கல்லை எடுக்கப் பார்த்தபோது துலன் சொன்னான்: "எவ்வளவு பரிதாபமான விஷயம், எசமான்! ஒரு கஞ்சுவின் கையால் நீ சாகப்போறது-?"

ஒரு கல்லை எடுத்து லட்சுமண் தலையில் அடிக்கத்

தொடங்கினான். அடித்துக் கொண்டே இருந்தான். லட்சுமணுக்கு கொலை பரிச்சயமான ஒன்றுதான். துப்பாக்கிக் குண்டின் மதிப்பை அறிந்தவன் அவன். கொலை செய்யும் போது சஞ்சலம் அடைபவன் அல்ல அவன். அவனிடம் துப்பாக்கி மட்டும் இருந்திருந்தால், அவனது வலது கை அடிபடாமல் இருந்திருந்தால் ஒரே குண்டில் துலனின் தலையை தூள்தூளாக்கியிருப்பான்.

துலனும் கொலைக்குப் புதியவன் அல்ல. கல்லுக்கு விலை யேதுமில்லை. இந்தக் கொலை வாழ்நாள் முழுவதும் அவன் மனதில் நடந்து கொண்டிருந்த போராட்டத்தின் பரிணாம வளர்ச்சி. அவன் லட்சுமண் சிங் தலையில் கல்லைப் போட்டான்.

மேலும் கல்லை உபயோகிப்பதற்குத் தேவையில்லாத நேரமும் சீக்கிரமே வந்தது. அதை வீசி விட்டு துலன் எழுந்து நின்றான். இப்பொழுது ஒன்றன் பின் ஒன்றாய் எல்லா வேலைகளையும் செய்ய வேண்டும். குதிரையின் லகானைப் பிடித்து கொஞ்ச தூரம் நடத்திச் சென்று அதன் பின்காலில் ஒரு கட்டையால் சுளீரென்று அடித்தான். குதிரை துடித்துக்கொண்டு ஓடிற்று. எங்கே வேண்டு மானாலும் திரியட்டும்.

பிறகு துப்பாக்கியுடன் லட்சுமணின் சவத்தை ஒரு கயிற்றால் கட்டி வெகு தூரம் இழுத்துக் கொண்டு போனான். ஒரு குழியில் வீசினான். பிறகு ஒன்றன் மேல் ஒன்றாக கற்களை குழியில் அடுக்கினான். மனதிற்குள் இருந்து சிரிப்பு பொத்துக்கொண்டு வந்தது. ஏழைப்பங்காளன் லட்சுமண் சிங் இகழ்ச்சிக்கு உரிய ஒரு ஓராவ்ன்—முண்டாவாகி விட்டான். கல்லுக்கடியில் மூடப் பட்டான். அதன் மேல் ஒரு கல் சமாதி எழுப்பலாம். கல்லும் பாறையும் மண்டிய இந்த நிலத்தில் தரையில் எவ்வித அடை யாளமும் தெரியும் வாய்ப்பு இல்லை. இருந்தாலும் குட்ஸா மரம் ஒன்றின் கிளைகளை ஒடித்து அந்த இடத்தை நன்றாக சுத்தம் செய்தான். பிறகு தனது பரண் மேல் ஏறி உட்கார்ந்து கொண்டான்.

லட்சுமண் சிங்கின் தேடல் வெகு நாட்கள் வரை நடந்தது. எந்தக் காரணத்தினால் எந்த விஷயத்திலும் யாரிடமும் கலந்து ஆலோசித்து முடிவு எடுப்பதில்லை என்ற கொள்கையைக் கடைப்பிடித்து வந்தானோ அதே காரணத்தினால்தான் துலனைப் பார்க்கப் போவது பற்றியும் யாரிடமும் அவன் சொல்லி யிருக்கவில்லை. இப்படிச் சொல்லாமலிருப்பது இந்த விஷயத்தில் புத்திசாலித்தனமும் கூட. எந்தக் காரணத்திற்காக துலனைத் தேடிப்போனானோ அதை ரகசியமாகவே வைத்திருப்பது உசிதம். அவனுடைய சகபாடிகளில் இது பற்றித் தெரிந்தவர்களும் வாயைத்

திறக்கவில்லை. எஜமானன் எப்பொழுது காணாமல் போய் விட்டானோ, அவனுடைய குதிரை தைதாரி சிங்கின் நிலத்தில் மேய்ந்து கொண்டிருந்ததோ, பிறகு அனாவசியமாக நோண்டி நோண்டிப் பார்ப்பதில் என்ன பயன்! லட்சுமண் சிங்கின் வேலைக்காரன் சொன்னான்: "வழக்கம் போல், கல்கண்டுப்பால் சாப்பிட்டுட்டு குதிரையில கிளம்பினாரு- எங்கே போனாருன்னு என்னால எப்படிச் சொல்ல முடியும்?"

மிகவும் அதிர்ச்சிகரமான நிகழ்ச்சிதான் அது.. நரிகளின் ஓலத்தைக் கேட்ட மக்களின் காது முனைகள் சிலிர்த்தெழும்பி நின்றன. அதுவும் ஐந்து நாட்களுக்குப் பிறகு. இந்த ஐந்து நாட்களில் மாமிசம் தின்னும் பிராணிகளுக்கு கற்களின் நடுவிலிருந்து மாமிசத்தின் வாசனை வந்து கொண்டயிருந்தது. மிகுந்த முயற்சிக்குப்பிறகு, சில கற்களை நீக்கி லட்சுமண் சிங்கின் முகத்தின் சில பகுதிகளை மட்டும் அவற்றால் தின்ன முடிந்தது. சவத்தை மறைப்பதில் சாமர்த்தியம். கூடவே தைதாரி சிங்கின் நிலத்தில் தானியத்தை மென்று கொண்டிருந்த குதிரையைக் கண்டுபிடித்தது. இரண்டும் தைதாரி சிங்கின் மேல் சந்தேகத்தைக் கிளப்பிவிட்டது. லட்சுமண் சிங்கின் மகன் இதை மேலும் ஊர்ஜிதம் செய்தான். அவர்களிடையே இருந்த பழைய பகையின் காரணமாக தைதாரி சிங் சிலகாலம் ஜெயிலில் இருக்க வேண்டியிருந்தது. சரியான சாட்சி இல்லாத காரணத்தால் போலீஸ் அவனை விடுதலை செய்யவேண்டியதாயிற்று. லட்சுமண் சிங்கின் மகனுக்கும் தைதாரி சிங்குக்கும் பழைய பகை வரலாறு தொடர்ந்து புத்துயிர் பெற்றது. எந்த விதத்திலும் துலன் மேல் சந்தேகம் விழவில்லை. சந்தேகம் விழாததில் ஆச்சரியம் ஏதுமில்லை. எந்தக் காரணத்திற்கும் துலன் லட்சுமண் சிங்கின் மேல் கை வைப்பானா என்ன...? இது கற்பனைக்கு அப்பாற்பட்டது.

லட்சுமண் சிங்கின் தேடல் நடந்து கொண்டிருக்கும் வேளையிலே தன் பரணிலிருந்து கீழே இறங்கிய துலன் வேறு ஆளாகிவிட்டான். சந்தோஷமும் உற்சாகமும் நிறைந்த புதிய துலன் இவன். அவன் பஹனிடம் ஏதோ சொன்னான். பிறகு ஒரு நாள் பஹனின் முற்றத்தில் எல்லா ஆதிவாசிகளும் கூடியிருந்தார்கள். துலன் சொன்னான்: "நான் ஒரு நாளும் என் கையால யாருக்கும் எதுவும் கொடுத்ததில்லே."

துலனின் இந்த வார்த்தைகளைக் கேட்ட எல்லாரும் அதிர்ச்சி யடைந்தார்கள். துலன் மேலே சொன்னான்: "என்னுடைய தானிய விளைச்சலை நீங்க ரொம்ப பாராட்டுனீங்க. நான் அறுவடை

செய்யப்போறதில்லைன்னு சொன்னப்போ, நீங்களெல்லாம் என்னைப் பயித்தியக்காரன்னு கேலி செஞ்சீங்க. ஒங்க பேர்ல தப்பில்லே. நீங்க பயித்தியத்தை பயித்தியம்னீங்க, இந்தப் பயித்தியத்தின் இன்னொரு பைத்தியக்காரத்தனத்தையும் நீங்க ஏத்துக்கணும்–"

"சொல்லு, சொல்லு–" எல்லா பக்கத்திலிருந்தும் குரல்கள் எழுந்தன. லட்சுமண் சிங்கின் சாவுக்குப் பிறகு எல்லாருக்குமே ஒரு விதத்தில் சாந்தி கிடைத்திருந்தது. அவனுடைய மகன் அப்பனின் வழியில் செல்வானா இல்லையா என்பதைப்பற்றி இன்றே யோசிக்க அவர்கள் விரும்பவில்லை.

"என்னுடைய தானியம் உங்களோட வெதை. அத நீங்க வெதையா எடுத்துக்குங்க."

"நீ ஒன்னோட தானியத்த எங்களுக்குக் கொடுக்கிறியா?"

"ஆமாம் அறுவடை செய்து எடுத்துகிட்டுப் போங்க. ஏன் இப்படிச் செய்யறேங்கிறதுக்குப் பின்னால ஒரு பெரிய கதையே இருக்கு–"

"நீ எரு போட்டியா?"

"எரு–? ஆமாம், எரு போட்டேன். மிகவும் விலையுயர்ந்த எரு போட்டேன்–" துலனின் குரல் எங்கோ மறைந்தது போல் ஒலித்தது. ஒரு கணத்திற்கு பிறகு குரலை கனைத்து சரி செய்து கொண்டு சொன்னான்: "நீங்க அறுவடை செய்யுங்க. எனக்கும் கொஞ்சம் கொடுங்க. நான் மறுபடியும் வெத போட்றேன்."

ஆமாம்! மறுபடியும் சமயம் வரும்போது நிலத்தில் இறங்கு வோம், அறுவடை செய்வோம் என்ற வாக்குறுதியை அவர்களிட மிருந்து வாங்கிக் கொண்டு துலன் தனது நிலத்தை நோக்கி நடந்தான். ஆச்சரியத்திலும் ஆச்சரியம்! அவனுடைய மனம் இப்பொழுது மிகவும் லேசாக இருந்தது. நிலத்தின் ஒரு மேட்டின் மேல் நின்றுகொண்டு அவனது தானியத்தின் முதிர்ச்சியைப் பார்த்துக்கொண்டே இருந்தான்.

கரன், அஸர்பி, மோகர், புலாகி, மஹுவன், பராஸ், ததுவா இவர்களின் மாமிசம் கலந்த எருவிலிருந்துதான் இவ்வளவு புஷ்டியுள்ள செழிப்பான கதிர்கள் அதிசயமான காட்சியை அளிக்கின்றன போலும்– தாங்கள் விதையாகப் போகிறோம் என்பதால்– விதையின் பொருள்—உயிருடன் இருப்பது, புதிய வாழ்வு பெறுவது.

துலன் மெதுவாக பரண் மேல் ஏறிக்கொண்டான். அவன் மனதில் ஒரு பாட்டின் ஒலி, தடுக்க முடியாதபடி திரும்பித்திரும்பி

ஒலித்துக்கொண்டே இருந்தது. ததுவா அதை புனைந்திருந்தான். துலன் அதைப்பாட முயன்றான்.. ஆனால் "ததுவா' என்று சொல்லும் போதே அவன் குரல் கம்மியது.

"ததுவா! உன்னை நான் விதையாக்கிவிட்டேன்..."

# திரௌபதி

## 1

பெயர் தோப்தி மேஜேன். வயது இருபத்தேழு. புருஷன் துலன் மான்சி (இறந்தவன்). இருப்பிடம் சேராகான். போலீஸ் ஸ்டேஷன் பாங்டாஜாட். கழுத்தில் அடிபட்ட காயம் (தோப்தி துப்பாக்கிக் குண்டால் காயம் பட்டவள்). உயிருடனோ, சவமாகவோ கிடைத்த செய்தி கொடுத்தாலோ அல்லது உயிருடன் இருந்தால் கைது செய்வதற்கு உதவி புரிந்தாலோ நூறு ரூபாய் இனாம்.

டவாலி அணிந்த இரண்டு காவலர்கள் பேசிக் கொண்டிருக்கிறார்கள்.

முதல் காவலன்: ஸந்தால்களிடையே ஏது இந்த தோப்தி என்ற பெயர்? நான் ஆபீசிலிருந்து கொண்டு வந்த லிஸ்டில இந்தப் பேர் இல்லையே? லிஸ்டுல இல்லாத பேரை எப்படி நுழைக்க முடியும்?

இரண்டாமவன்: திரௌபதி மேஜேன். அவளுடைய அம்மா பகூலி சூர்ய ஸாஹுவின் வீட்டில் வேலை செய்து கொண்டிருந்த போது இவள் பிறந்தாள். சூர்ய ஸாஹுவின் மனைவி அவளுக்கு இந்தப் பெயரை வைத்தாள்.

முதல் காவலன்: இந்தப் பக்கத்து ஆபீசருங்க 'தஸ்புஸ்'னு இங்கிலீஸ்லே எதையாவது கிறுக்கிடறானுக. இவளப்பத்தி ஏன் இவ்வளவு நீட்டி முழக்கி எழுதியிருக்காங்க?

இரண்டாமவன்: மோஸ்ட் நொடோரியஸ் பொம்பிள. லாங் வான்டட் இன் மெனி—

டோஸியர்: துலனும் தோப்தியும் கொள்ளை, டெகாய்டின்னு மோசமான காரியங்களில் ஈடுபட்டுக் கொண்டிருந்தனர். பிட்வீன் பீர்பூம் - பர்தமான் - முர்ஷிதாபாத் - பாங்டா ரோடுகளில் திரிபவர்கள். 1971ஆம் வருட பிரசித்தி பெற்ற 'ஆப்ரேஷன் பகூலியில்' மூன்று கிராமங்கள் ஹெவி கார்டன் செய்யப்பட்டு மெஷின்

கன் சூடு நடந்த போது இவர்கள் இருவரும் இறந்து விட்டது போலப் பாசாங்கு செய்து தரையில் கிடந்தனர். உண்மையில் இவர்கள்தான் மெயின் கிரிமினல்கள். சூர்ய ஸாஹு, அவன் மகன் இருவரையும் கொலை செய்தது, வறட்சிப் பருவத்தில் அப்பர் காஸ்ட்காரர்களின் கிணறுகள், ட்யூப் வெல்களை ஆக்கிரமித்துக் கொண்டது இவற்றில் இவர்கள்தான் மெயின். அந்த மூன்று இளைஞர்களை போலீஸில் சரண்டர் செய்யாதது மற்றொரு குற்றம். 'ஆப்ரேஷன் பகூலி'யின் ஆர்கிடெக்ட் காப்டன் அர்ஜுன் சிங். காலையில் பிணங்களின் கணக்கெடுக்கும்போது இந்தக் கணவன்-மனைவி இருவரையும் காணக்கிடைக்காத அதே நொடியில் அவருடைய ப்ளட் ஷுகர் அதிகரித்து விட்டது. இந்த விளைவு மறுபடியும் ஒரு உண்மையை எடுத்துக்காட்டியது: கவலையினாலும், உத்வேகத்தினாலும் டயாபடிஸ் வியாதி மேலும் மோசமடைகிறது. டயாபடிஸின் பன்னிரெண்டு காரணங்களில் ஆங்ஸைடியும் ஒன்று.

துலனும் தோப்தியும் வெகு காலமாக நியாண்டர்தால் இருளில் தலைமறைவாக இருந்தனர். அந்த அந்தகாரத்திலிருந்து அவர்களை மீட்கும் பணிக்காக அனுப்பப்பட்ட விசேஷப்படை மேற்கு வங்காளத்தின் வெவ்வேறு ஜில்லாக்களில் நாடோடிகளாகத் திரிந்து கொண்டிருந்த சந்தால்-சந்தாலிகளை அவர்களின் விருப்பத்துக்கு மாறாக, அவர்களைப் படைத்த கடவுளை நேர் காண அனுப்பி வைத்தனர். அரசியல் சாசனப்படி சாதி-மத வித்தியாசமில்லாமல் எல்லா மனிதர்களின் உயிர்களும் பவித்திர மாகப் பாவிக்கப்பட வேண்டும். இருந்தாலும் இந்த மாதிரியான அசம்பாவிதங்கள் நிகழ்ந்து விடுகின்றன. அதற்கு இரண்டு காரணங்கள்: காணாமல் போய்விட்ட ஒரு தம்பதியை ரகசியமாக மறைத்து வைத்துக்கொள்ளும் அவர்களுடைய திறன்; இரண்டாவது, 'ஆப்ரேஷன் பகூலி'க்காக நிறுவப்பட்ட விசேஷப் படையினர் கண்களில் சந்தால்கள் மட்டுமல்ல, அஸ்ட்ரோ ஏஷியாடிக் முண்டா கிளைப் பழங்குடியினரைச் சேர்ந்த எல்லா மனிதர்களின் முகங்களும் ஒரே மாதிரியாக இருக்கின்றன.

உண்மையில் பாங்டா ஜாட் காவல் நிலையத்தின் கண் காணிப்பில் இருந்த (பாரத தேசத்தின் ஒவ்வொரு மூலைமுடுக்கும் ஏதோஒரு காவல்நிலையத்தின் கண்காணிப்பில்தான் உள்ளது) அவப்பெயர் பெற்ற ஜாட்கானி காட்டின் நாலாப்புறமும் - தென்கிழக்கிலும், தென்மேற்கிலும் கூட - காவல் நிலையங்களை ஆக்கிரமிப்பது, துப்பாக்கிகளைப் பிடுங்குதல், (சில சமயங்களில்

'துப்பாக்கி' என்று கூறத்தெரியாமல் 'சேம்பரைக் கொடு' என்றும் மிரட்டியதுண்டு) முதலியன நடந்து கொண்டே இருந்தன. ஜமீன்தார், மஹாஜன். காவல்காரன், பேப்பர் உலக குமாஸ்தா, கொலை-குத்துவெட்டு சம்பந்தமாக சந்தேகத்துக்கு உள்ளானவர்கள் ஆகியோரிடமிருந்து திரட்டப்பட்ட தகவல்கள் ஆச்சரியம் அளித்தன.

கரிய நிறமுடைய இருவர் - ஆணும் பெண்ணும் சம்பவம் நடக்கும் முன்பு போலீஸ் சைரன் போல ஒலியெழுப்பினர். கொலையுண்டவரைச் சுற்றி அசிங்கமான, சந்தால்களுக்கும் புரியாத மொழியில் பாட்டுப் பாடினர். அதாவது—

"ஸாமாரே ஹிஜுலேனாகோ மார் கோயே கோபே..."

அப்புறம்—

"ஹேன்தே ராம்ப்ரா கேசே கேசே
புன்டி ராம்ப்ரா கேசே கேசே..."

இதிலிருந்து எந்த சந்தேகமுமின்றி நிரூபணமாகி விட்டது— காப்டன் அர்ஜுன் சிங்கின் டயாபடிஸின் காரணம் இவர்களே என்று. அரசாங்க விதிமுறைகள் தாங்கிய தத்துவத்தின் 'புருஷன்' என்ற நுண்கருத்தைப் போலவும் 'சாமானியர்கள்' கண்ணில் அன்டோனியானியின் தொடக்க காலப் படங்கள் போலவும் புரியாத ஒரு புதிர். இதன் காரணமாகவே அர்ஜுன் சிங் 'ஆப்ரேஷன் ஜாட்கானி'க்குத் திருப்பி அனுப்பப்பட்டார். மேலே கூறப்பட்ட பாட்டைப்பாடிய தம்பதிதான் அந்த மறைந்து போன சவங்கள் என்ற விஷயத்தை சி.ஐ.டியிடமிருந்து அறிந்து கொண்ட பிறகு சில கணங்களுக்கு அர்ஜுன் சிங் ஒரு நடைப்பிணம் போல மாறி விட்டார்.

கடைசியில் கறுப்பு நிற மனிதர்களைப் பற்றி ஒரு காரணமற்ற பயம் அவரைத் தொற்றிக் கொண்டது. கோவணம் கட்டிய கறுப்பு மனிதன் யாரையாவது பார்த்தால் "என்னைக் கொல்றாண்டா! என்னைக் கொல்றாண்டா!" என்று அலறி மூர்ச்சையடைந்து விடுவார். பிறகு அவசர அவசரமாக தண்ணீர் குடிப்பார். அவசர அவசரமாக சிறுநீர் கழிக்கத் தொடங்குவார். யூனிபார்ம் இருந்தாலும் சரி, கிரந்த ஸாகிப்பும் சரி, எதுவுமே அவருக்கு இந்த அவஸ்தையிலிருந்து விடுதலை கொடுக்கவில்லை.

அதற்குப் பிறகு ப்ரீமெச்சூர் ஃபோர்ஸ்டு ரிடையர்மென்ட் பூச்சி காட்டி அவரை ஒரு வங்காளி ராணுவ அதிகாரி—அவர் இடதுசாரி மற்றும் தீவிரவாதிகளைப் பற்றிய ஸ்பெஷலிஸ்ட்— முன்னால் ஆஜர்படுத்தினார்கள். எதிர்தரப்பினரின் சித்தாந்தங்கள்,

வியூகங்கள் எல்லாவற்றையும் பற்றி எதிர் தரப்பினரைக் காட்டிலும் நன்றாகத் தெரிந்தவர் அவர். ஆகவே முதலில் சீக்கியர்களின் போர்த்திறனைப் பற்றி அர்ஜுன் சிங் முன்னால் புகழ்ந்து துதி செய்தார். பிறகு அவருக்கு விளக்கினார்: "அதிகார சக்தி துப்பாக்கி பேரலில் இருந்து வருவது எதிரிகளுக்கு மட்டும்தானா? அர்ஜுன் சிங்கின் சக்தியும் துப்பாக்கி என்ற மேல் ஆர்கனிலிருந்து வருகிறது. கையில் துப்பாக்கி இல்லாவிட்டால் இன்றைய யுகத்தில் எல்லாம் பலனில்லாமல் போய் விடுகின்றன."

இந்த விஷயங்களை எல்லாம் அவர் படையாளிகளுக்கும் சொன்னார். அதன் விளைவாக படையினருக்கு 'ஆர்மி ஹாண்ட் புக்'கின் மீது நம்பிக்கை சுரந்தது. இந்தப் புத்தகம் சாதாரண ஜனங்களுக்குப் பயனில்லை. அதன்படி, பண்டைய காலத்திய ஆயுதங்களை ஏந்திக்கொண்டு கொரில்லா யுத்தம் புரிவது மிக மோசமான கீழ்த்தரமான செயல். இப்படிப் போர் புரிபவர்களைக் கண்ட மாத்திரத்திலேயே சுட்டுக் கொல்வதுதான் எல்லா சேனைகளின் பவித்திரமான கடமை. தோப்தியும் துலனும் இந்தக் கேடக்ரியில் உள்ளவர்கள். ஏனென்றால் அவர்களும் கோடாலி, கத்தி, அம்பு, வில் எல்லாம் எடுத்துக் கொண்டு தங்களுடைய கொடுமைகளைச் செய்து கொண்டிருக்கின்றனர். உண்மையில் அவர்களுடைய கொல்லும் திறன் பாபுக்களின் திறனை விட மிக அதிகம். எல்லா பாபு வர்க்கத்தின் படைவீரர்களும் துப்பாக்கி சுடுவதில் நிபுணர்கள் அல்ல. அவர்கள் துப்பாக்கி சுடும் திறன் தானாகவே முளைக்கும் என்று நினைக்கிறார்கள். ஆனால் துலனும் தோப்தியும் படிப்பில்லாதவர்களாக இருப்பதால் பரம்பரை ஆயுதங்களைக் கையாளுவதை பிறந்த தினத்திலிருந்தே பழகியிருக்கிறார்கள். இந்த இடத்தில் ஒரு விஷயம் சொல்ல வேண்டும். மேலே குறிப்பிடப்பட்ட ராணுவ அதிகாரியை எதிர்த் தரப்பினர் துச்சமாக நினைக்கிறார்கள் என்றாலும் அவர் சாமானியமானவர் அல்ல. அவருடைய பிராக்டிஸ் எப்படியிருந்தாலும், தியரியில் அவர் எதிராளிகளின் லட்சியங்களை மிக சிரத்தையுடனும் மரியாதையுடனும் பார்க்கிறார். அவர் கொண்டுள்ள மரியாதைக்கு காரணம் இருக்கிறது. 'இதெல்லாம் பெரிய விஷயமில்லை. சின்னப் பசங்க துப்பாக்கியை வைத்துக் கொண்டு விளையாடுகிறார்கள்' என்ற மனோபாவத்தில் அவர் செயல்படுவதில்லை. இத்தகைய நோக்குடன் எதிராளிகளைப் புரிந்து கொள்வதோ நாசமாக்குவதோ முடியாது. 'இன் ஆர்டர் டு டெஸ்ட்ராய் தி எனிமி, பிகம் ஒன் ஆஃப் தெம்.' இதனால்தான் அவர் அவர்களில் ஒருவராகி

தியரியில் அவர்களைப் புரிந்து கொள்ள முயற்சி செய்கிறார். வருங்காலத்தில் இதைப்பற்றி எழுத உத்தேசித்திருக்கிறார். இந்தப் புத்தகத்தில் பாபு வர்க்கத்தை டெமாலிஷ் செய்து, இப்பொழுது போராட்டத்தில் ஈடுபட்டிருக்கும் எதிரிகளின் தத்துவ வெளிப் பாடுகளை ஹைலைட் செய்வார். அவர் மனதில் எழும் இந்தப் பிராசஸ்கள் எல்லாம் சிக்கலானவை என்று தோன்றக்கூடும். ஆனால் உண்மையில் அவர் மிக சரளமான மனிதர். தன்னுடைய மூதாதையரைப் போலவே ஆமை இறைச்சி சாப்பிட்டு திருப்தி யடைபவர். உண்மையில் அவருக்குத் தெரியும், பழைய 'இப்டா' குழுவினரின் கீதத்தின் சொற்களில் 'உலகம் சுழன்று சுழன்று மாறும்'. எல்லா உலகங்களிலும் மதிப்புடன் வாழ்வதற்கு அவருக்கு பாஸ்போர்ட் வேண்டும். அவசியம் ஏற்பட்டால், அவர் ஒருவரே இந்த விஷயத்தில் சரியான பர்ஸ்பெக்டில் பார்க்கிறார் என்று வருங்காலத்திற்கும் அவரால் காட்ட முடியும். இன்று எதிரியின் நோக்குகள், வியூகங்கள் பற்றிய அறிவுடன் அவர்களை அழிக்கும் போராட்டத்தை அவர் செயல்படுத்தும் அதிசயத்தை வருங்கால மனிதன் முற்றிலும் மறந்து விடுவான் என்பதில் அவருக்கும் துளியும் சந்தேகமில்லை. இருந்தாலும் அவருக்குத் தெரியும்—ஒரு காலகட்டத்திலிருந்து மற்றொரு கால கட்டம் வளர்கிறது. அபபடி நிகழும்போது, மாறிவரும் வண்ணத்திற்கு ஏற்ப தன்னை மாற்றிக் கொண்டால், அந்தந்தக் காலத்தின் பிரதிநிதியாக அவரால் இருக்க முடியும். இன்று 'அப்ரிஹென்ஷன் அண்ட் எலிமினேஷன்' செய்து இளைஞர்களுக்கு இந்த உலகத்திலிருந்து விடை கொடுத்து அனுப்பிக் கொண்டிருக்கிறார். ஆனால் இந்த ரத்தப் பாதையின் நினைவையும் அது புகட்டிய பாடத்தையும் மக்கள் மிக சீக்கிர மாகவே மறந்து விடுவார்கள். அதே சமயத்தில், ஷேக்ஸ்பியரைப் போல, அவரும் இந்த உலகத்தின் லெகஸியை இளைஞர்கள் கையில் கொடுத்து விடுவதில் நம்பிக்கை கொண்டிருக்கிறார். அவர் ஒரு ப்ராஸ்பெரோ.

இது எப்படி இருந்தாலும் இதற்குப் பிறகு செய்தி வந்தது—பல யுவ-யுவதிகள் பாட்ச் பாட்சாக ஜீப் வண்டிகளில் வந்து ஒவ்வொரு போலீஸ் ஸ்டேஷனாகத் தாக்கி அந்தப் பிராந்தியத்தை ஒரு பக்கத்தில் அச்சுறுத்தி, மற்றொரு பக்கத்தில் களிப்பெய்தச் செய்து, ஜாட்காஙி காடுகளில் மறைந்து விட்டார்கள். பகூலியிலிருந்து காணாமல் போன பிறகு, தோப்தியும் துலனும் எல்லா ஜமீன் தார்களின் வீடுகளிலும் வேலை செய்தனர். ஆகவே, கொலை செய்யப்பட வேண்டியவர்களைப் பற்றி கொலை செய்வோருக்கு

உடனடியாக செய்தி அனுப்பிக் கொண்டிருக்கின்றனர். 'நாங்களும் படை வீரர்கள், ராங்க் அண்ட் ஃபைல்' என்று வீறாப்புடன் சொல்லிக் கொண்டார்கள்.

கடைசியில் அடர்த்தியான, புகமுடியாத ஜாட்கானி காடு ராணுவ அதிகாரிகள், படைவீரர்களின் சக்கர வியூகத்தினால் சூழப்பட்டு விட்டது. அதன் நாலா பக்கமும் கெரோ செய்யப்பட்டு, ஆர்மி உள்ளே நுழைந்தது. அந்த ரணபூமியைத் துருவித் துருவி ஓடுகாலிகளைத் தேடிக் கண்டுபிடிக்கத் தொடங்கினர். ஒரு கார்ட்டோகிராபரும் காட்டின் மேப் தயார் செய்து கொண்டிருந் தார். படை வீரர்கள் எல்லா சுனைகள், குட்டைகளுக்கும் பாரா கொடுத்துக் கொண்டிருந்தனர். இன்றும் செய்து கொண்டிருக் கின்றனர். இன்றும் ஓடுகாலிகளின் வேட்டை தொடர்ந்து நடந்து கொண்டிருக்கிறது. இப்படி ஒரு தேடல் வேட்டையில்தான் படையின் ஒற்றன் துகிராம் கடாரி, ஒரு பாறைமேல் ஒரு சந்தால் இளைஞன் தண்ணீர் குடித்துக் கொண்டிருப்பதைப் பார்த்தான். அதே நிலையில் அந்த இளைஞன் சுடப்பட்டான். த்ரீ-நாட்-த்ரீ யால் அடிபட்டு கீழே விழும் முன் இரண்டு கைகளையும் விரித்துக் கொண்டு சிம்மகர்ஜனைக் குரலில் 'மஹோ' என்ற கோஷத்தை எழுப்பி விட்டு, உடலிலிருந்து ரத்தநுரை பொங்க செத்து விழுந்து விட்டான். பிறகுதான் தெரிந்தது அவன் நொடோரியஸ் துலன் மான்ஜு என்று.

இந்த 'மஹோ' என்ற கோஷத்தின் பொருள் என்ன? ஒரு வேளை தீவிரவாதிகளின் ஆதிவாசி மொழிக் கோஷமாக இருக்குமோ? இதற்கு என்ன பொருள்? இதைத் தெரிந்து கொள்ள சாந்தி வாஹினி அலுவலகத்தில் மிகப்பெரிய சர்ச்சை எழுந்தது. ஆனால் ஒரு பயனுமில்லை. இரண்டு ஆதிவாசி வல்லுனர்கள் கல்கத்தாவிலிருந்து விமானம் மூலமாக தருவிக்கப்பட்டார்கள். பாவம்! அந்த மனிதர்கள் ஹாஃப்மன்-ஜெஃபர், கோல்டன்-பாமர் போன்ற மகானுபாவர்களால் எழுதப்பட்ட அகராதிகளைப் படித்துப் படித்து வியர்வை வடித்ததுதான் மிச்சம். கடைசியில் சகல விஷயமும் அறிந்த ராணுவ அதிகாரி சம்ருவைக் கூப்பிட்டு அனுப்பினார். காம்புக்கு தண்ணீர் கொண்டு வந்து கொடுக்கும் சந்தால் சம்ரு இரண்டு வல்லுனர்களையும் பார்த்து 'கொல்'லென்று சிரித்து விட்டான். பிறகு பீடியைக் காதுக்கு மேல் செருகிக் கொண்டு சொன்னான்: "மால்டாவில் வசிக்கும் சந்தால்கள் காந்திராஜா காலத்தில் நடந்த போரில் தயார் நிலையில் இருப்பதற்காக 'மஹோ' என்று கோஷமிடுவார்கள். இது சண்டை-

ஆரம்பத்தின் அழைப்புக் குரல். ஆனால் இங்கே 'மஹோா' என்று கத்த எந்தப் பய மகன் வந்திருக்கான்? யாராவது சந்தால் மால்டாவிலிருந்து இங்கே வந்திருக்கானா என்ன?"

பிரச்சினைக்கு இப்படி ஒரு மாதிரியாக தீர்வு கிடைத்தது. இதற்குப் பிறகு துலனின் சவம் அதே பாறையின்மேல் வைக்கப் பட்டது. படைவீரர்கள் தங்களை இலைகளால் காமஃப்ளாஜ் செய்து கொண்டு பக்கத்திலிருந்த மரத்தின்மேல் ஏறி உட்கார்ந்து கொண்டார்கள். யவன புராணக் கதைகளில் வரும் 'பான்' தேவதையைப் போல உடலைச்சுற்றி பச்சை வண்ண இலைகளை சுற்றிக்கொண்டு, கிளைகளில் உட்கார்ந்து கொண்டிருந்தனர். இப் பிரதேசத்தில் மண்டிக்கிடக்கும் சிவப்பு எறும்புகள் அவர்களின் மர்மஸ்தானங்களைக் கடிப்பதையும் சகித்துக்கொண்டு யாராவது சவத்தை எடுத்துச்செல்ல வருகிறார்களா என்று உஷாராகக் காத்துக் கொண்டிருந்தனர். இப்படிச் செய்வது வேட்டைக் காரர்களின் வழிமுறை, படைவீரர்களின் வழிமுறையல்ல. ஆனால் அதிகாரிக்குத் தெரியும்—தெரிந்த வழிமுறைகளால் இந்த கச்சடா ஜனங்களை ஒழித்துக் கட்ட முடியாது என்று. அதனால் அவர் காட்டில் நாலு பக்கத்திலும் ஒற்றர்களை நிறுத்தி தனது வேட்டைக் குறியை தன் பக்கம் இழுத்துவர விரும்பினார். அவருக்குத் தெரியும்—எல்லாம் சீக்கிரம் தெளிவாகி விடும் என்று. தோப்தி பாடிய பாட்டின் பொருளும் அவருக்குப் புரிந்து விட்டது.

அவருடைய ஆணையைத் தலை மேல் ஏற்றுக்கொண்டு படைவீரர்கள் தயாராக நின்றார்கள். ஆனால் துலனுடைய உடலை எடுத்துச் செல்ல யாரும் வரவில்லை. கடைசியில் இரவின் இருளில், காய்ந்து போன இலைகளில் 'சர்-சர்-' என்ற சப்தத்தைக் கேட்ட அவர்கள் பாறையில் புணர்ச்சியில் சுகித்துக் கொண்டிருந்த ஒரு முள்ளம்பன்றி தம்பதியை சுட்டுக் கொன்றனர். காட்டில் படைக்கு வழிகாட்டிக் கொண்டிருந்த துக்ராம் கடாரி, சன்யாசி வேஷத்தில் துலனுக்காக அறிவிக்கப்பட்டிருந்த இனாமைப் பெறுவதற்கு முன்னமே கழுத்தில் கத்தி விழுந்து செத்துப் போனான். துலனின் சவத்தை இழுத்துச் செல்ல முயன்ற படையினர், விஷ எறும்புகளால் கடிக்கப்பட்டு உடல் நலத்தை இழந்தனர். இந்த எறும்புகள் துலனின் உடலைத் தின்றுகொண் டிருந்தன. தங்கள் விருந்துக்கு இடைஞ்சலாக வந்த படையினரை அவை கடிக்க ஆரம்பித்தன. சவத்தை எடுத்துச் செல்ல யாரும் வரவில்லை. இதைக் கேட்ட அதிகாரி, 'டெபுடி' என்ற 'ஆன்டி-பாசிஸ்ட்' புத்தகத்தை டேபிள் மேல் ஓங்கி அடித்துவிட்டு 'வாட்!'

என்று கத்தினார். அப்போது ஒரு ஆதிவாசி மொழி வல்லுனர் ஆர்க்கிமிடீஸ் மாதிரி ஓடோடி வந்து மிகுந்த ஆனந்தத்துடன் சொன்னார்: "ஸார்! 'ஹேன்தே ராம்ரா' என்ற சொற்றொடரின் பொருளைக் கண்டுபிடித்து விட்டேன். அது முண்டாரி லேங்வேஜ் சொல்."

தோப்தியின் தேடல் நடந்து கொண்டே இருந்தது. ஜாட்கானி பெல்டில் ஆப்ரேஷன் நடந்து கொண்டேயிருந்தது. நடந்து கொண்டே இருக்கும். ஆட்சியாளர்களின் ஆசனத்தில் எழுந்த ராஜபிளவை அது. சித்த வைத்திய களிம்பினால் ஆற்ற முடியாது. பற்றுப் போட்டு உடைக்க முடியாது.

முதல் ஃபேஸில், காட்டின் டோபாக்ராஃபி தெரியாததால் ஓடுகாலிகள் உடனடியாகப் பிடிபட்டு, நேருக்கு நேர் நிகழ்ந்த மோதல்களில், கிரமப்படி வரி செலுத்துவோரின் பணத்திற்கு மரியாதை கொடுக்கும் வகையில், குண்டுகளால் சின்னாபின்ன மாக்கப்பட்டனர். அதே நேருக்கு நேர் போராட்ட விதிமுறைப்படி, அவர்களுடைய உடலின் அங்கங்கள் எல்லாம் நரிகளுக்கும் ஓநாய்களுக்கும், காட்டுப்பூனைகளுக்கும், எறும்பு-புழுக்களுக்கும் ஆகாரமாக விடப்பட்டன. அவர்களுடைய சதையில்லாத எலும்புகளை டோம் ஜனங்கள் சந்தோஷமாக விற்பதற்கு எடுத்துச் சென்றனர்.

அடுத்த ஃபேஸில், நேருக்கு நேர் மோதல்களில் அவர்கள் பிடிபடவில்லை. இதிலிருந்து ஒன்று தெரிகிறது—நம்பிக்கைக்கு உகந்த ஒரு கூரியரின் சேவை அவர்களுக்கு இருக்கிறது என்று. தொண்ணூறு சதவிகிதம் தோப்திதான் இந்தக் கூரியர். துலனை தோப்தி தன் உயிரையும் விட அதிகமாக நேசித்திருந்தாள். இப்பொழுதும் அவர்களை அவள்தான் நிச்சயமாகக் காப்பாற்றிக் கொண்டிருக்கிறாள்-

'அவர்கள்' என்பதும் ஒரு ஹைபாதஸிஸ்தான்.

'ஏன்?'

'ஓரிஜனலி எத்தனை பேர் இருந்தார்கள்?'

பதில் மவுனம்தான். இந்த விஷயத்தைப் பற்றிப் பல கதைகள், பல புத்தகங்கள் அச்சில். இவற்றில் எல்லாவற்றையுமே நம்பாமல் இருப்பது நல்லது.

'நேருக்கு நேர் மோதல்களில் இறந்தவர்கள் எத்தனை?'

பதில் மவுனம்தான்.

மோதல்களுக்குப் பிறகு தென்பட்ட சவங்களின் கைகால்கள் முறிந்தோ வெட்டப்பட்டோ இருந்தது ஏன்? கையில்லாதவர்கள்

எப்படி சண்டை போட முடியும்? அவர்களின் கழுத்து-கால்-விலா எலும்புகள் ஏன் நொறுக்கப்பட்டிருந்தன?

இரண்டு விதமான பதில்கள்: ஒன்று மவுனம்; இன்னொன்று, வேதனை செறிந்த கண்களில், புகார் தொனியில் 'சீ! இதெல்லாம் பேசப்படும் விஷயமா? எது நடக்கணுமோ அது.'

'இந்தக் கணத்தில் காட்டில் எத்தனை பேர் இருக்கிறார்கள்?'

'ஒரு லீஜன் இருக்குமா? இவர்களுக்காக ஒரு முழு படா லியனை வரிப்பணத்தில் காட்டுப் பிரதேசத்தில் வைத்திருப்பது முறைதானா?'

பதில் : "அப்ஜெக்ஷன்! இதை காட்டுப் பிரதேச வாழ்வு என்று வர்ணிப்பது சரியல்ல. இங்கு செயல்படும் படைக்கு சத்தான ஆகாரம், உடல்நல பாதுகாப்பு, அவரவர் மத தர்மப்படி அனுஷ்டானங்களுக்கான சௌகரியங்கள், 'யே ஹை ஜிந்தகி' திரைப்படத்தில் சஞ்சீவ் குமார்-கிருஷ்ணபிரான் இருவரையும் நேருக்கு நேர் வைத்து ரசிப்பதற்கு வேண்டிய வாய்ப்பு எல்லாம் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன. ஊஹூம். இது ஒரு காட்டுப் பிரதேசம் இல்லவே இல்லை."

'எத்தனை பேர் இருக்கிறார்கள்?"

பதில்: மவுனம்.

'எத்தனை பேர் பாக்கி?'

பதில் நீளமானது.

உதாரணமாக: "வெல்! ஆக்ஷன் நடந்து கொண்டிருக்கிறது. ஜமீன்தார், மஹாஜன், அரிசித் தரகர்கள், வேசிகள் இருப்பிடங் களின் பினாமி உடைமையாளர்கள், பழைய போலீஸ் ஒற்றர்கள்— இவர்கள் எல்லாரும் இன்றும் பயந்து செத்துக் கொண்டிருக் கிறார்கள். அரைப்பட்டினி கிடந்தும் அரைத்துணியுடனும் திரியும் ஏழை ஜனங்கள் இன்றும் தலைவணங்காது வீறாப்புடன் எதிர்ப்புத் தெரிவித்துக் கொண்டிருக்கிறார்கள். சில சில பாக்கெட்டுகளில் இன்றும் தீவிரவாதிகளுக்கு பெட்டர் வேஜ் கிடைக்கிறது. இவர்களுக்கு அனுதாபம் காட்டும் கிராமத்து மக்கள் மவுனமாக சர்க்கார் மீது வெறுப்புக் காட்டுகிறார்கள். இச்சம்பவங்களிலிருந்து ஊகிக்க முடிகிறது."

"இந்த வரைபடத்தில் தோப்தி மேஜேன் எப்படி இடம் பெறுகிறார்?"

"நிச்சயமாக அவள் தலைமறைவானவர்களுடன் சம்பந்தப் பட்டிருக்கிறாள். ஆனால் பயத்திற்குக் காரணம் வேறு எங்கேயோ இருக்கிறது. இவர்களில் எஞ்சியவர்கள் வெகுநாட்களாகவே

காட்டில் வசிக்கும் ஆதிவாசி உலகத்துடன் ஒன்றியவர்களாகி விட்டார்கள். இந்தக் கூட்டுறவின் பலனாக நிச்சயமாக தங்கள் புத்தகப் படிப்பை மறந்து போயிருக்கிறார்கள். எந்த மண்ணில் வசிக்கிறார்களோ அந்த மண்ணுடன் தங்களுடைய புத்தக அறிவை இணைத்துக் கொண்டு, ஓரியன்டேஷன் செய்து கொண்டு புதுவிதமான போராட்ட வழிகளையும் தப்பிப் பிழைக்கும் நெளிவுசுழிவுகளையும் கற்றுக் கொண்டிருக்கிறார்கள். வெளி யுலகத்துப் புத்தகப்படிப்பு, உள்ளுலக ஆர்வம் மட்டுமே உள்ளவர்களை சுட்டுத் தீர்த்துவிட முடியும். ஆனால் கையையே பேனாவாக பயன்படுத்துவோர்களை அவ்வளவு சுலபமாக தீர்த்துக்கட்டிவிட முடியாது. ஆகவே, ஆப்பரேஷன் ஃபாரஸ்ட் முடிவில்லாத ஒன்று. காரணம்—ஆர்மி ஹேண்ட்புக்."

## 2

"தோப்தி மேஜேனைப் பிடித்துவிடு. அவள் உங்களை அவர்களிடம் இட்டுச் செல்வாள்."

இடுப்பில் சுற்றிய துணியில் சிளிதளவு சோற்றைக் கட்டிக்கொண்டு மெல்ல நடந்து கொண்டிருக்கிறாள் தோப்தி. முஸாயி டுடுவின் மனைவி கொஞ்சம் சோறு சமைத்துக் கொடுத்திருந்தாள். நடுநடுவே அவள் இப்படிக் கொடுப்பது வழக்கம். வடித்த சோறு ஆறியவுடன் அதை அப்படியே இடுப்புத் துணியில் முடிந்து கொண்டு நடப்பாள் தோப்தி. நடந்து கொண்டே விரல்களால் தலைமுடியைக் கோதி பேன் எடுத்து நசுக்கிக் கொண்டிருப்பாள். கொஞ்சம் கெரோசின் மட்டும் கிடைத்தால் தலையில் தேய்த்து இப்பேன்களை அகற்றிவிட முடியும். பிறகு தலையில் சோடா உப்பைத் தேய்த்து அலம்பிவிட முடியும். ஆனால் 'இந்தத் தேவிடியா மகனுக தண்ணி இருக்கிற இடத்துக்குப் போற வழியெல்லாம் பொறி வச்சிருக்கானுக. தண்ணீரில் கெரோசின் வாடையடித்தால் அதை வைத்து மோப்பம் பிடித்துத் தேடிக் கண்டுபிடித்து விடுவானுக.'

"தோப்தி_"

தோப்தி திரும்பவில்லை. தன் பெயரைச் சொல்லி யாராவது கூப்பிட்டால் ஒரு போதும் அவள் பதில் சொல்வதில்லை.

பஞ்சாயத்து ஆபீசில் தன் பேரில் ஒரு விளம்பரம் போட்டிருப்பதை இன்றுதான் அவள் பார்த்தாள். முஸாயி டுடுவின் மனைவி கேட்டாள்: "இதை என்ன பார்வை? யார் இந்த தோப்தி மேஜேன்? அவளப் பிடிச்சுக் கொடுத்தா பணம் கொடுப்பாங்களாமே-?"

"எவ்ளோ பணம்?"

"இருநூறு ரூபா-"

"அடி ஆத்தா-!"

வெளியே வந்தவுடன் முஸாயியின் மனைவி சொன்னாள்: "ரொம்ப மும்முரமா இருக்காங்க இந்தத் தடவை. எல்லாரும் புதுப் போலீஸ்காரங்க-"

"உம்-"

"இனிமே நீ வராதே."

"ஏன்?"

முஸாயியின் மனைவி தரையைப் பார்த்துக் கொண்டே சொன்னாள்: "டுடு சொன்னான்—தொரை மறுபடியும் வந்திருக்காராம். உன்னைப் பிடிச்சுட்டா கிராமம் குடிசை- மேலும், அந்த துகிராம் விஷயம்-"

"தொரக்கித் தெரிஞ்சு போச்சு. அதானே?"

"ஸோமாயியும் புத்னாவும் காட்டிக் கொடுத்துட்டானுக. ரயிலேறி ஓடிட்டானுக."

தோப்தி யோசனையில் ஆழ்ந்து விட்டாள். பிறகு, "நீ வீட்டுக்குப் போ. என்ன நடக்கும்னு எனக்குத் தெரியாது. என்னைப் பிடிச்சுட்டாங்கன்னா, உனக்கு என்னைத் தெரியவே தெரியாதுன்னு சொல்லு. சரியா?"

"உன்னால ஓடிப்போயிட முடியாதா?"

"முடியாது. நீயே சொல்லு. எத்தன வாட்டி ஓடிப்போக முடியும்? அப்படிப் புடிச்சுட்டாதான் என்ன செய்ய முடியும்? 'கௌன்ட்டர்' பண்ணுவாங்க. பண்ணட்டும்."

"எங்களுக்குப் போக்கிடமில்ல-" முஸாயியின் மனைவி சொன்னாள்.

தோப்தி மிருதுவாகச் சொன்னாள், "யாரோட பேரும் என் வாயிலேருந்து வராது."

தோப்திக்கு நன்றாகவே தெரியும். இத்தனை நாள் கேட்டுக் கேட்டு கற்றுக் கொண்டிருக்கிறாள், சித்திரவதை செய்யப்படும் போது எப்படி சமாளிப்பது என்று. கொஞ்சம் கொஞ்சமாக வதைக்கப்படும்போது, மனமும் உடலும் முறிந்து போனால், நாக்கைக் கடித்துத் துப்பிவிட வேண்டும். அந்தப் பையனும்

இப்படித்தான் நாக்கைக் கடித்துத் துப்பி விட்டான். அவனை கௌன்ட்டர் பண்ணியிருந்தார்கள். கௌன்ட்டர் பண்ணும்போது கைகளை உனக்குப் பின்னால் கட்டி விடுவார்கள். உடம்பில் உள்ள ஒவ்வாரு எலும்பும் நொறுக்கப்படும். அல்குல் ரணமாக்கப் படும். 'கில்ட் பை போலீஸ் இன் ஏன் என்கௌன்ட்டர்... அன்னோன் மேல்- ஏஜ் ட்வென்டி டூ.'

இதையெல்லாம் அசைபோட்டுக் கொண்டே நடந்து கொண்டிருந்த தோப்திக்கு தன் பெயரைச் சொல்லி யாரோ கூப்பிடுவது காதில் விழுகிறது. அவள் பதில் சொல்லவில்லை. தன்னைப் பெயர் சொல்லிக் கூப்பிட்டால், பதில் சொல்லும் வழக்கம் அவளுக்கு இல்லை. இங்கு அவள் உபி மேஜேன். பழைய பெயர் சொல்லிக் கூப்பிடுவது யாராக இருக்கும்..?

சந்தேக முட்கள் எப்போதுமே அவள் மனதில் குவிந்து கிடக்கும். 'தோப்தி' என்ற அழைப்பைக் கேட்டவுடனே முள்ளம் பன்றியின் முட்களைப்போல சந்தேகங்கள் விறைப்படைகின்றன. நடந்து கொண்டே தனக்குத் தெரிந்த முகங்களின் பிலிம் ரோலை அன்ரோல் செய்கிறாள். யாராக இருக்கும்? ஸோம்ராவாக இருக்காது. அவன் இப்போது தலைமறைவில். ஸோமாயியும் புத்னாவும் ஓடி விட்டவர்கள், வேறு காரணத்தால். கோலக் பகூலியில் இருக்கிறான். அல்லது பகூலியிலிருந்து வந்த வேறு யாரவதா..? பகூலியிலிருந்து அவர்கள் இரண்டு பேரும் ஓடிவந்த பிறகு அவள் பேர் உபி மேஜேன். துலனின் பெயர் மாதங் மான்ஜு. இங்கு முஸாயி, அவன் மனைவி தவிர வேறு எவருக்கும் அவளுடைய உண்மைப் பெயர் தெரியாது. இங்கு வந்துள்ள பட்டினத்துப் பிள்ளைகள் முதல் பாட்சில் கூட எல்லாருக்கும் அவளுடைய நிஜப் பெர் தெரியாது.

அந்த நாட்கள் மிகப் பயங்கரமானவை. அவற்றின் நினைவு வரும்போதெல்லாம் அவள் மனம் கலங்கும். பகூலியில் அப்போது 'ஆப்ரேஷன் பகூலி' நடந்துகொண்டிருந்தது. சூர்ய ஸாஹு பிட்டி பாபுவுடன் சதி செய்து இரண்டு ட்யூப்வெல் போடவும், மூன்று கிணறுகள் தோண்டவும் ஏற்பாடு செய்திருந்தான். பீர்பூமில் வறட்சி. ஒரு பொட்டுத் தண்ணீர்கூட இல்லை. ஆனால் சூர்ய ஹாஹு வீட்டில் மட்டும் வற்றாத தண்ணீர் - காக்கையின் கண்ணைப் போல தெளிவான தண்ணீர்.

மக்கள் நெருப்பென வெகுண்டனர்.

"கெனால் டாக்ஸ் கட்டிட்டு தண்ணி எடுத்துக்கிட்டுப் போ."

"டாக்ஸ் கட்டி தண்ணி எடுத்து என்ன பிரயோசனம்.

எல்லாம் பொசுங்கிட்டு இருக்கு."

"அட, போங்கடா, போக்கத்த பசங்களா! உங்க பஞ்சாயத்து கிஞ்சாயத்து போக்கிரித் தனமெல்லாம் எனக்குத் தெரியும். தண்ணி பாய்ச்சி வெவசாயம் செய்வீங்க. வெளச்சல்ல பாதி குத்தகையா கேப்பீங்க. சும்மா கெடச்சா யாருக்குத்தான் கசக்குது. வீட்டுக்கு வந்து நெல் அளங்க. ரொக்கம் குடுங்க. தெரிஞ்சு போச்சு..."

"என்ன நல்லது பண்ணியிருக்கே எங்களுக்கு?"

"கிராமத்து தண்ணி கொடுக்கலியா?"

"எங்களுக்கு எங்கே கொடுத்தே? உன் சம்பந்தி பகுனாலுக்குக் குடுத்தே..."

"உங்களுக்குத் தண்ணி கெடச்சுதா இல்லியா?"

"இல்ல. கிடைக்கலே. தோட்டி, சந்தால்களுக்கெல்லாம் தண்ணி கெடைக்கலே."

இதில்தான் ஆரம்பித்தது சண்டை. வறட்சிக் காலத்தில் மனிதனின் பொறுமை சுலபமாக தீப்பற்றிக் கொள்கிறது. கிராமத்துப் பையன்கள் சதீஷ், ஜுகல், அந்தப் பட்டணத்துப் பையன், அவன் .பேரென்ன, ராணாவோ என்னவோ, அவன் எல்லாரும் சேர்ந்தார்கள். "பண்ணைக்காரங்க, மஹாஜன்களை எல்லாம் ஒதைக்கணும். ஒண்ணும் குடுக்க மாட்டான். அவங்கள ஒழிச்சுக் கட்டணும். அது ஒண்ணுதான் வழி."

அன்றிரவு சூர்யஸாஹுவின் வீடு கெரோ செய்யப்பட்டது. சூர்யா தன் துப்பாக்கியை எடுத்தான். மாடு கட்டும் தாம்புக் கயிற்றால் அவனுடைய கைகள் இரண்டும் பின்னால் வைத்துக் கட்டப்பட்டன. அவனுடைய கண்விழிகள் திரும்பித் திரும்பிச் சுழன்ன. பயத்தால் அவனுடைய உடை ஈரமாயிற்று.

துலன் சொன்னான்: "நான்தான் இவனை முதலில் அடிக்கப் போறேன். எங்க அப்பனோ, பாட்டனோ எப்பவோ இவங் கிட்டேயிருந்து கொஞ்சம் கடன் வாங்கியிருந்தான். அந்தக் கடனை அடைக்க நான் இன்னைக்கும் இவங்கிட்டே அடிமையா வேலை செஞ்சுகிட்டு இருக்கேன்."

தோப்தி சொன்னாள்: "என்னைப் பார்க்கறப்போ எல்லாம் இவன் வாயிலிருந்து ஜொள்ளு சொட்டுது. இவன் கண்ணை நான் பிடுங்கணும்."

பிறகு ஸியூரிலிருந்து டெலகிராஃபிக் மெசேஜ். ஸ்பெஷல் ட்ரெயின், ஆர்மி ஜீப் எல்லாம். 'மார்ச்-மார்ச்-மார்ச்.' சரளைக்கல் பாதையில் லாடம் பதித்த பூட்ஸ்களின் 'சரக்-சரக்' என்ற ஒலி. 'கார்டன் அப்'—மைக்கிலிருந்து உத்தரவு. 'ஜுகல் மண்டல், ஸதீஷ்

மண்டல், ராணா அலயஸ் ப்ரபீர் அலயஸ் தீபக், துலன்மான்ஜு, தோப்தி மேஜேன், சரண்டர், சரண்டர், சரண்டர்_' நோ சரண்டர்! 'மோ-மோ-மோ டௌன் தி வில்லேஜ்_ கடாகட், கடாகட்_' ரவுண்ட் தி க்ளாக் 'கட்-கட்...' காற்றில் கார்டைட் நாற்றம்_ ஃப்ளேம் த்ரோவர். பகூலி பற்றி எரிகிறது. 'மோர் மென் அண்ட் விமன் அட் சில்ட்ரன்_ ஃபயர், ஃபயர். க்ளோஸ் கௌால் அப்ரோச். ஓவர்_ ஓவர்_ ஓவர் பை நைட் ஃபால்_'

தோப்தியும் துலனும் குப்புறப் படுத்துக்கொண்டு, ஊர்ந்து ஊர்ந்து தப்பி விட்டனர். பகூலிக்குப் பிறகு பல்தாகுடிக்கு அவர்களால் சென்றடைய முடியவில்லை. பூப்தியும் தபாவும் அவர்களை அழைத்துச் சென்றனர். அதற்குப் பிறகு தோப்தியும் துலனும் ஜாட்கானி இலாகாவின் அக்கம்பக்கத்தில் 'வேலை' செய்ய வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது. துலன் தோப்திக்கு விளக்கினான்: "இதுதான் நல்லது தோப்தி. வீடு, வாசல், குழந்தை, குட்டின்னு ஒண்ணும் இருக்காது. யாருக்குத் தெரியும்? என்னைக் காவது ஒரு நாள் இந்த மஹாஜன், பண்ணைக்காரங்க, போலீஸ் காரங்க எல்லாரும் ஒழிஞ்சு போனாலும் போயிருவானுக_"

ஆனால் இன்று யார் அவளைப் பின்னாலிருந்து கூப்பிடுவது?

திடீரென்று தோப்தி நிற்கிறாள். முன்னால் கிராமப் பிராந்தியத்திற்கே உரித்தான வயல்கள், புதர்கள், பாறைகள், பிடபிள்யுடியின் மைல்கற்கள்_ பின்னால் ஓடிவரும் காலடிகளின் சத்தம். ஒரு ஆள்தான் வருகிறான். ஜாட்கானி காடுகள் மேலும் இரண்டு மைல் தூரத்தில் உள்ளன. காட்டிற்குள் புகுந்து விட்டால் தப்பிவிடலாம் என்று அவளுக்குத் தோன்றுகிறது. அவர்களுக்குச் சொல்லிவிட வேண்டும் - போலீஸ் மறுபடியும் அவள் தலைக்கு விலை வைத்திருக்கிறது என்று. அந்த தேவிடியா மகன், பெரிய தொரை மறுபடியும் வந்திருக்கிறான் என்பதையும் அவர்களுக்குத் தெரிவிக்க வேண்டும். தங்கள் ஹைட்அவுட்களை மாற்றிக் கொள்ளுமாறு எச்சரிக்க வேண்டும். ஸந்தாராவில் தினக் கூலிகளுக்கு சரியான கூலி வாங்கிக் கொடுக்கும் விவகாரத்தில் தகராறு எழுந்திருந்தது. அதை அடுத்து அங்கு லக்கி பெஹரா, நாராயண் இருவரையும் 'சூர்ய ஸாஹு' செய்து விட திட்டம் போடப்பட்டிருந்தது. அதைக் கைவிடவேண்டும் என்றும் சொல்லிவிட வேண்டும். ஸோமாயிக்கும், புத்னாவிற்கும் எல்லாம் தெரியும்.

தோப்தியின் இதயம் நடக்கவிருக்கின்ற ஆபத்தின் அர்ஜன்சியை அறிந்து விட்டது. ஸோமாயியும் புத்னாவும்

உண்மையான சந்தால்கள் இல்லை. அதனால் அவர்களுடைய நம்பிக்கைத் துரோகத்தால் சந்தால் ஜாதிக்கு அவமானம் இல்லை. தோப்தியின் நரம்புகளில் ஓடுவது கலப்படமற்ற சம்பா பூமி சந்தால்களின் கறுப்பு ரத்தம். சம்பாவிலிருந்து பகூலி வரை உள்ள வழியில் எவ்வளவு லட்சம் சந்திரோதயங்கள்- ரத்தத்தில் கலப்படம் ஏற்பட்டிருக்கலாம். தன்னுடைய மூதாதையரைப் பற்றி அவளுக்குக் கர்வம் ஏற்பட்டது. கறுப்பு வண்ண முனைகள் கொண்ட அம்பு ஏந்திக்கொண்டு அவர்கள் தங்கள் பெண் இனத்தின் ரத்தத்தை பாரா போட்டு காத்துக்கொண்டு வந்திருக்கிறார்கள். ஸோமாயியும் புத்னாவும் தகப்பன் பெயர் தெரியாத தான்தோன்றிகள். இரண்டாம் உலக யுத்தத்தின் அறுவடைகள். ராட் பூமியில் சியன்டங்காவில் கூடாரமடித்திருந்த அமெரிக்கச் சிப்பாய்களின் உபகாரம். காக்கை மற்றொரு காக்கையின் மாமிசத்தைத் தின்னாலும் தின்னும், ஆனால் ஒரு சந்தால் மற்றொரு சந்தாலைக் காட்டிக்கொடுக்க மாட்டான்.

பின்னால் காலடிச் சத்தம். சற்றே தூரத்தில் ஒரே சீராக வந்து கொண்டிருக்கிறது. இடுப்புத் துணியில் சோறு. இடுப்பில் செருகியுள்ள பையில் புகையிலை. அர்ஜித், மாலினி, சாமு, மண்டு ஒருவரும் பீடி சிகரெட் பிடிப்பதில்லை. புகையிலையும் சுண்ணாம்பும். தேள்கடிக்கு சுண்ணாம்பு நல்ல மருந்து. இப்பொழுது கொடுக்க முடியாது.

தோப்தி இடதுபக்கம் திரும்புகிறாள். இந்தப் பக்கம்தான் அந்தக் காம்ப். இரண்டு மைல் தூரத்தில். இது காட்டுப்பக்கம் போகும் வழியல்ல. பின்னால் ஒரு ஒற்றன் வந்து கொண்டிருக்கும் போது தோப்தி எப்படிக் காட்டுப்பக்கம் போவாள்? 'உன் உயிர் மேல் ஆணை துல்னா! வாயைத் திறக்க மாட்டேன்.' காலடிகளின் சத்தமும் இடதுபக்கம் திரும்புகிறது. தோப்தி தனது இடையைத் தொட்டுப் பார்த்துக் கொள்கிறாள். அவளுடைய விரல்கள் ஒரு பிறைச் சந்திரனைத் தொடும் இதத்தைப் பெறுகின்றன. அது ஒரு சின்ன அரிவாள். ஜாட்கானி கொல்லர்கள் திறமை மிக்க பொறியாளர்கள். "உபி, நூறு துகிராம்களைப் பதம் பார்க்கிற மாதிரி தீட்டி இந்த அரிவாளைக் கொடுக்கிறோம்" என்பார்கள். உண்மையில், இவர்கள் கோடரி, அரிவாள் போன்ற சாதனங்களின் தன்மையை நன்கறிந்தவர்கள். தங்கள் பணியை நிசப்தமாகச் செய்து வருபவர்கள்.

தூரத்தில் காம்பின் விளக்குகள். தோப்தி ஏன் இந்தப் பக்கம் போய்க்கொண்டிருக்கிறாள்? 'கொஞ்சம் நில்!' மறுபடியும் திசை

திரும்புகிறாள். 'இரவு முழுவதும் கண்ணை மூடிக்கொண்டு திரிந்தாலும் எங்கிருக்கிறேன் என்று என்னால் சொல்ல முடியும். காட்டிற்குள் நுழைய மாட்டேன். ஆனால் வழிதப்பிச் செல்ல மாட்டேன். மூச்சுவிட மாட்டேன். அட, கயவாலிப்பயலே! சாகப் பயப்படும் பேடி நீ! உன்னால என்னைச் சுற்ற முடியுமா? உன்னை மூச்சிளைக்க வைத்து சாக்கடையில் தள்ளி நாறடிக்கப் போகிறேன். பார்த்துக்கொண்டே இரு...'

ஒரு வார்த்தைகூட வெளிவரக்கூடாது. தோப்தி புதிய காம்ப்பைப் பார்த்திருக்கிறாள் - பஸ் ஸ்டாண்டில் உட்கார்ந்து, பீடி பிடித்துக்கொண்டு, வம்பு பேசிக்கொண்ட எத்தனை கான்வாய்கள் வந்திருக்கின்றன, எத்தனை ஒயர்லெஸ் வேன்கள் வந்திருக்கின்றன என்றெல்லாம் சரியாகக் கணக்கு வைத்திருக் கிறாள். ஸ்குவாஷ் நான்கு, வெங்காயம் ஏழு பெட்டி, மிளகாய் ஐம்பது பெட்டி, இத்தியாதி. ஆனால் அவற்றை இப்பொழுது தெரிவிக்க முடியாது. அவர்களுக்குத் தெரியும்—தோப்தி கௌன்ட்டர் செய்யப்பட்டு விட்டாள் என்று. பிறகு ஓடிப்போய் விடுவார்கள். அரிஜித்தின் குரல் ஒலிக்கிறது. நீங்கள் 'யாராவது பிடிபட்டு விட்டால் டைமிங்கைப் புரிந்து கொண்டு ஹைட் அவுட்களை மாற்றிக்கொள்ள வேண்டும். காம்ரேட் தோப்தி நேரம் கழித்து வந்தால் நாம் இருக்க மாட்டோம். எங்கே போயிருக்கிறோம் என்பது பற்றி ஒரு குறியீடு மட்டும் இருக்கும். எந்த காம்ரேடும் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள மற்றவனை டெஸ்ட்ராய் ஆக விட மாட்டான்...'

அரிஜித்தின் குரல். தண்ணீரில் சலசலப்பு. அடுத்த ஹைட் அவுட் பற்றிய குறியீடு ஒரு மர அம்பின் நுனியில். ஒரு பாறைக்கு அடியில் அது வைக்கப்பட்டிருக்கும். எந்தத் திக்கில் ஹைட்அவுட் மாற்றப்பட்டிருக்கிறது என்பது பற்றிய சங்கேதம் அதில் இருக்கும்.

தோப்திக்கு இதெல்லாம் நன்றாகவே தெரியும். பிடிக்கவும் செய்யும். துலன் செத்துப்போனான். ஆனால் அவன் யாரையும் காட்டிக் கொடுக்கவில்லை. துரோகம் இழைக்கும் எண்ணத்தைப் புகவிடாததால் மற்றவர்களைக் காப்பாற்றுவதற்காக கௌன்ட்டர் ஆகத் தயங்குவதில்லை. ஆனால் இன்றைய விதி சுலபமானது, தெளிவானது. 'தோப்தி திரும்பி வந்து விட்டாளா? நல்லது. திரும்பி வரவில்லையா? பேட்... சேஞ்ச் ஹைட்வுட்...' புதிய ஹைட்அவுட் தெரிவிக்கும் குறியீடு அப்போசிஷன் கண்களில் படாது. பட்டாலும் புரியாது.

பின்னால் காலடிகளின் சப்தம். தோப்தி மறுபடியும்

திரும்புகிறாள். நீளமான மலைப்பாங்கான பாதை காட்டிற்குள் நுழைவதற்கு சௌகரியமானது. ஆனால் தோப்தி அந்தப் பாதையை பின்னால் விட்டுவிட்டு வந்திருக்கிறாள். முன்னால் ஒரு சமதளம். மறுபடியும் மலைப்பாங்கான பூமி. இந்தப் பாறை நிலத்தில் ஆர்மி ஒருக்காலும் கேம்ப் நிறுவியிருக்க முடியாது. ஆள் அரவமற்ற இடம். கோணல்மாணலான, சிக்கலான வலைபோல அமைந்த பாதை. சின்னச்சின்ன மரங்களுக்குப் பின்னால் இருக்கும் ஒவ்வொன்றும் மற்றொன்றைப் போலவே இருக்கிறது. நல்லதாயிற்று. தோப்தி அந்த ஒற்றனை அவனுடைய சுடு காட்டிற்கே அழைத்துச் செல்வாள். ஸாராந்தாவாசி பதீதபாவன் இப்படித்தான் சுடுகாட்டுக் காளிக்கு பலியானான்.

"அப்ரிஹெண்ட்!"

பாறைகளில் ஒன்று நிமிர்ந்து நிற்கிறது. மற்றும் ஒன்று. இன்னமும் ஒன்று. அந்த நடுவயது அதிகாரி ஒரே நேரத்தில் வெற்றி வெறியிலும் மனச்சோர்விலும் இருந்தார். 'இஃப் யூ வான்ட் டு டெஸ்ட்ராய் தி எனிமி, பிகம் ஒன்!' அப்படியே அவர் செய்திருக்கிறார். ஆறு வருஷங்களுக்கு முன்னரே இவர்களுடைய ஒவ்வொரு மூவையும் ஆன்டிசிபேட் செய்யும் திறம் பெற்றவராக இருந்தார் அவர். இப்பொழுதும்கூட. அதனால் ஆனந்தம். இலக்கியத்துடன் தொடர்பு வைத்துக்கொண்டிருந்ததன் பயனாக அவர் 'கர்ஸ்ட் ப்ளட்' புத்தகத்தைப் படித்திருந்தார். அதில் தனது எண்ணங்களுக்கும் செயல்களுக்கும் அங்கீகாரங்கள் இருப்பதை சுவைத்திருக்கிறார்.

தோப்தியால் தன்னை ஏமாற்ற முடியவில்லை என்பது அவருக்கு துக்கத்தையும் நிராசையையும் கொடுத்தது. இதற்கு இரண்டு காரணங்கள். ஆறு வருஷங்களுக்கு முன் தனது மனதில் பதிந்து வைத்திருந்த புள்ளிவிவரங்களின் ஆதாரத்தின்பேரில் ஒரு கட்டுரை எழுதி வெளியிட்டிருந்தார். அதில் அவர் தன் சிக்கலான மனோநிலையைப் பற்றிய விளக்கங்களையும் பிரமாணங்களையும் கொடுத்திருந்தார். அந்த நூலில் கூலிவேலை செய்து பிழைப்பவர் களின் நோக்கிலிருந்து அவர்களுடைய போராட்டத்தை ஆதரிப்பவ ராக தன்னைக் காட்டியிருந்தார். தோப்தி கூலிவேலை செய்து பிழைப்பவள். வெடரன் ஃபைட்டர். 'ஸர்ச் அண்ட் அப்ரிஹெண்ட் தோப்தி மேஜேன்' இப்போது சீக்கிரமே அப்ரிஹெண்ட் ஆக இருக்கிறாள். டெஸ்ட்ராய் ஆகிவிடுவாள். அந்தோ பரிதாபம்!

"ஹால்ட்!"

தோப்தி சட்டென்று நிற்கிறாள். பின்னாலிருந்த காலடிகள்

திரும்பி முன்னால் வந்து நிற்கின்றன. தோப்தியின் விலாவிலிருந்த கெனாலின் அணை தகர்கிறது. எல்லாம் முடிந்து விட்டது- சூர்ய ஸாஹுவின் தம்பி ரோதோனி ஸாஹு- முன்னால் இருந்த இரண்டு பாறைகளும் எழுந்துநின்று முன்னே வருகின்றன. ஸோமாயியும் புத்னாவும். அவர்கள் ரயிலில் தப்பி ஓடிப் போயிருக்கவில்லை.

அரிஜித்தின் குரல் ஒலிக்கிறது—'ஜெயித்து விட்டாய் என்று எப்படி உனக்குத் தெரிகிறதோ அதே மாதிரி தோற்று விட்டதையும் நீ இனம் கண்டுகொள்ள வேண்டும். அடுத்த ஸ்டேஜுக்கான துவக்கப் பணிகளைத் தொடங்க வேண்டும்.'

இரண்டு கைகளையும் உயர்த்தி, வானத்தை நோக்கி முகத்தை உயர்த்தி காட்டின் பக்கம் திருப்பிக் கொள்கிறாள். பிறகு, உடல், உயிர், ஆவி மூன்றையும் ஒருங்கே இணைத்து தனது சக்தியை எல்லாம் ஒன்று திரட்டி "ஓ-"வென்று ஓலமிடுகிறாள். ஒரு முறை, இரண்டு முறை, மூன்றாம் ஓலம் வெடித்தெழுந்தபோது ஜாட்கானி காட்டின் விளிம்புகளிலிருந்த மரங்களில் வசிக்கும் பறவைகள் உறக்கம் கலைந்து சிறகடித்துக்கொண்டு பறக்கின்றன. ஓலத்தின் எதிரொலி வெகுதூரம் செல்கிறது.

## 3

மாலை ஆறுமணிக்கு தோப்தி அப்ரிஹெண்ட் ஆனாள். அவளை காம்ப்புக்கு அழைத்துச்செல்ல ஒருமணிநேரம் பிடித்தது. கேள்விகள் சரியாக ஒருமணிநேரம் பிடித்தன. ஒருவரும் அவள் மேல் கை வைக்கவில்லை. ஒரு கான்வாஸ் ஸ்டூலில் உட்கார வைக்கப் பட்டாள். எட்டு ஐம்பத்தேழுக்கு அதிகாரியின் டின்னர் டைம். "அவளைக் கவனித்துக்கொள். டூ தி நீட்ஃபுல்' என்று சொல்லி விட்டு அதிகாரி அந்தர்தியானமானார்.

பிறகு பத்து லட்சம் சந்திரர்கள் தோன்றி மறைந்தனர்- பத்துலட்ச சந்திர வருடங்கள் கடந்தன. ஒரு லட்சம் ஒளி வருடங் களுக்குப் பிறகு திரௌபதி கண்ணைத் திறக்கிறாள். என்ன அதிசயம்! வானையும் சந்திரனையும்தான் முதலில் பார்க்கிறாள். பிறகு அவளுடைய மனதிலிருந்து ரத்தம் தோய்ந்த நகநுனிகள் நகர்ந்து நகர்ந்து நகர்ந்து செல்கின்றன. தான் அசைய முயன்றபோது

கால்களும் கைகளும் கட்டில் கால்களில் கட்டப்பட்டிருப்பதை உணர்கிறாள். ஆசனத்திலும், இடுப்பிலும் இது என்ன 'பிசுக், பிசுக்' என்று–? அவளுடைய ரத்தம். வாயில் சுருட்டி அடைக்கப்பட்ட துணி மட்டும் இப்போது அங்கில்லை. தாங்க முடியாத தாகம். 'தண்ணீர்' என்று கேட்க வாயை அசைக்க முயன்ற கணத்திலேயே பற்களால் கீழ் உதட்டைக்கடித்து வார்த்தையை விழுங்குகிறாள். தனது அல்குலில் ரத்தப் பெருக்கை உணர்கிறாள். எத்தனை பேர் தன்னைப் புணர்ந்திருக்கிறார்கள்–

கண்களின் ஓரத்தில் நீர் சுரந்தபோது வெட்கமடைந்தாள். கலங்கிய நிலவொளியில் பார்வையற்ற தன் கண்களைத் திருப்பி தன் முலைகளைப் பார்க்கிறாள். நன்றாகக் 'கவனிக்கப்பட்டிருப் பதை' உணர்கிறாள். இந்தமுறை ராணுவ அதிகாரிக்கு பூரண திருப்தி கிடைத்திருக்கும். அவளுடைய முலைக்காம்புகள் கடித்துக் குதறப்பட்டு சின்னாபின்னமாக்கப் பட்டிருந்தன. எத்தனை பேர்? நான்கு? ஐந்து? ஆறு? ஏழு–?

திரௌபதி மூர்ச்சையடைகிறாள்.

கண்களைத் திறந்து பார்க்கும்போது, பக்கத்தில் வெண்ணிற மான ஒன்றைப் பார்க்கிறாள். அவளுடைய உடை. வேறொன்றும் கண்ணில் படவில்லை. திடீரென ஆண்டவன் அருள் மேல் நம்பிக்கை சுரக்கிறது. ஒருவேளை அவளை விட்டெறிந்திருக் கிறார்கள்—நரிக்கு உணவாக. ஆனால் காலடிகளின் ஒலி கேட்கிறது. தலையைத் திருப்பிப் பார்க்கும்போது பயனெட் ஏந்திய கார்ட் ஒருவன் சுற்றி வருவது தெரிகிறது. அவன் கண்களில் காமம் புகைந்து கொண்டிருக்கிறது. உதட்டில் வெறிச் சிரிப்பு.

திரௌபதி கண்களை மூடிக்கொள்கிறாள். வெகுநேரம் காத்திருக்க வேண்டியிருக்கவில்லை. மறுபடியும் அவளைக் 'கவனித்துக் கொள்ளும்' பணி தொடங்குகிறது. தொடர்ந்து கொண்டே இருக்கிறது. ஒரு துண்டு வெளிச்சத்தைக் கக்கிவிட்டு நிலவு தூங்கப்போய்விட்டது. இருள் மட்டுமே மிஞ்சியது. கைகளும் கால்களும் கட்டப்பட்டு, படுக்க வைக்கப்பட்ட அசையாத பெண் தேகம். அதன்மேல் சுறுசுறுப்பாக இயங்கும் தசைகளால் செய்யப் பட்ட பிஸ்டன்கள் ஏறுகின்றன, இறங்குகின்றன, ஏறுகின்றன, இறங்குகின்றன–

மறுபடியும் காலை வருகிறது.

தோப்தி மேஜேன் கூடாரத்திற்குக் கொண்டுவரப்பட்டு வைக்கோல் போரின்மேல் தூக்கி எறியப்படுகிறாள். அவள் உடல் மேல் அவளுடைய ஆடை வீசப்படுகிறது.

ப்ரேக்ஃபாஸ்ட், தினசரி பத்திரிகைகள் படிப்பது எல்லாம் முடிந்து, 'திரௌபதி மேஜேன் அப்ரெஹெண்டட்' என்ற ரேடியோ மெசேஜ் அனுப்பப்பட்ட பிறகு, அந்த ராணுவ அதிகாரி திரௌபதி மேஜேனை தன்முன் ஆஜர்ப்படுத்த உத்தரவிட்டார்.

திடீரென ஒரு விபரீதம் நிகழ்கிறது. "உம்- கிளம்பு" என்ற உத்தரவு வந்தவுடனே, திரௌபதி எழுந்து உட்காருகிறாள். "எங்கே போகச் சொல்லுகிறாய்?" என்று கேட்கிறாள்.

"பெரிய தொரை கூடாரத்துக்கு."

"எங்கே இருக்குது?"

"அதோ அங்கே."

திரௌபதி தன் சிவந்த கண்களை அருகிலேயே இருந்த அந்தக் கூடாரத்தின் மேல் திருப்புகிறாள். "சரி, நீ போ. நான் வருகிறேன்." என்கிறாள்.

சென்ட்ரி ஒரு தண்ணீர்க் குவளையை அவள் முன்னால் தள்ளுகிறான்.

திரௌபதி எழுந்து நிற்கிறாள். குவளையை உதைத்து தண்ணீரைத் தரையில் கொட்டுகிறாள். தன் துணியை பல்லால் கடித்துக் குதறுகிறாள். இந்த அதிசய நிகழ்ச்சியைக் கண்ட சென்ட்ரி "பைத்தியமாயிட்டா! பைத்தியமாயிட்டா!" என்று கூச்சலிட்டுக் கொண்டே மேலிட ஆணைக்காக ஓடுகிறான். சாதாரணக் கைதிகளை அவனால் சமாளிக்க முடியும். ஆனால் புரியாதபடி இப்படி நடந்து கொள்ளும் கைதியை சமாளிப்பது அவனால் இயலாத காரியம். ஆகவேதான் அவன் மேலதிகாரியின் உத்தர விற்காக ஓடுகிறான். ஜெயிலில் 'பைத்தியக்கார மணி' அடிக்கும் போது இப்படித்தான் அங்குமிங்கும் ஓடுவார்கள்.

கூச்சல் குழப்பத்தைக் கேட்டு ராணுவ அதிகாரி கூடாரத் திலிருந்து வெளியே வருகிறார். கண்ணைக் கூசவைக்கும் சூரிய ஒளியில் நிமிர்ந்த தலையுடன் முழுநிர்வாணமான திரௌபதி தன்னை நோக்கி நடந்து வருவதைப் பார்க்கிறார். ஆயுதம் தரித்த ஸென்ட்ரிகள் நடுங்கிக் கொண்டே அவள் பின்னால் வந்து கொண்டிருக்கிறார்கள்.

"இதெல்லாம் என்ன?" என்று கேட்கத் தொடங்கிய அவர் மௌனமாகி விடுகிறார். திரௌபதி அவர் முன்னால் வந்து நிற்கிறாள். நிர்வாணமான தொடையிலும் அல்குலிலும் தோய்ந்து உறைந்து போன ரத்தம். இரண்டு முலைகளிலும் ரணங்கள்.

"இதெல்லாம் என்ன-?" அவர் அச்சுறுத்தப் பார்க்கிறார்.

திரௌபதி மேலும் அருகில் நெருங்குகிறாள். இடுப்பில்

கைகளை வைத்துக்கொண்டு சிரிக்கிறாள். “நீ தேடிக்கிட்டு இருந்தியே அந்த தோப்தி மேஜேன் நான்தான்–! ‘கவனிச்சுக்க’ன்னு சொன்னேயில்ல? அவங்க எப்படி கவனிச்சாங்கன்னு நீ பார்க்க வேண்டாமா–?”

“இவ துணியெல்லாம் எங்கே–?”

“உடுத்த மாட்டேங்குறா சார்! கிழிச்சுப் போட்டுட்டா–”

திரௌபதியின் கரிய உடல் மேலும் அருகில் வருகிறது. அதிகாரிக்குப் புரியாத ஆவேசத்துடன் சிரித்துக் குலுங்குகிறாள். சிரிக்கச் சிரிக்க, குதறப்பட்ட உதடுகளிலிருந்து ரத்தம் பெருக் கெடுக்கிறது. அந்த ரத்தத்தை புறங்கையால் துடைத்துக் கொண்டு வானத்தைக் கிழிக்கும் பயங்கரக் குரலில் கேட்கிறாள்: “துணி என்ன துணி–? யாருக்கு வேணும் துணி? என்னை நிர்வாணமாக்க உன்னால முடியும். ஆனா என்னை திரும்ப உடுத்த வைக்க முடியுமா உன்னால? சீ– நீ ஒரு ஆம்பிளயா–?”

நாலாபக்கமும் பார்த்துவிட்டு ராணுவ அதிகாரியின் தூய வெள்ளை புஷ் ஷர்ட்டின் மேல் ரத்தம் கலந்த எச்சிலை ‘தூ–’ என்று துப்புகிறாள்.

“நான் பார்த்து வெட்கப்பட வேண்டிய ஆம்பிள இங்க யாருமில்ல. என்மேல் துணியைப்போட எவனையும் விட மாட்டேன். அப்போ என்ன செய்வே? வா– என்னை கௌன்ட்டர் பண்ணு– வா– கௌன்ட்டர் பண்ணு–”

அருகில் நெருங்கி சிதைக்கப்பட்ட இரு முலைகளையும் அதிகாரியின் மேல் உரசுகிறாள். தனது ஆயுளில் முதல்முறையாக ஒரு நிராயதபாணியான டார்கெட் முன்னால் நிற்க ராணுவ அதிகாரி பயப்படுகிறார். அது ஒரு அமானுஷ்ய பயம்.

# ராங் நம்பர்

இரவு ஒரு மணி. தீர்த்த பாபுவின் நித்திரை கலைந்து விட்டது. டெலிபோன் மணி! நடு இரவில் டெலிபோன் மணி அடித்தால் ஏன் இத்தனை பயம்? "ஹலோ! காது கேட்கிறதா? ஆஸ்பத்திரியிலிருந்து பேசறோம். உங்க பேஷண்ட் செத்துப் போய்ட்டார். ஹல்லோ-?"

"எங்க பேஷண்டா? ஆஸ்பத்திரியில் எங்களுக்கு பேஷண்ட் யாருமில்லை."

"ஒங்க நம்பர் என்ன?"

"ராங் நம்பர்- லைனை விடுங்க."

ராங் நம்பருக்கு ஏன் போன் செய்கிறார்கள்?

தீர்த்த பாபு போனை திருப்பி வைத்துவிட்டார். பயப்பட ஆரம்பித்தார்.

"திடீரென்று ஏன் போன் அடித்தது? ஏன் இத்தனை ராங் நம்பர் வருது?" என்று கேட்டாள் ஸவிதா.

சில நாட்களாகவே தீர்த்த பாபுவோ, ஸவிதாவோ சரியாகத் தூங்குவதில்லை. பன்னிரண்டு மணிக்கு தீர்த்த பாபு ஒரு தூக்க மாத்திரையை விழுங்குவார். பிறகு கண்ணை மூடிக்கொண்டு படுத்துக் கொண்டு மனதை சூன்யமாக்கிக் கொள்ள முயல்வார். முடிவதில்லை. கொஞ்சம் கூட முடிவதில்லை. அவருடைய மேல் மட்டச் சோதனைக்கும் கீழ்நிலை சோதனைக்கும் இடையே சுவர்கள் எழுந்து வானளாவி நிற்கின்றன. இச்சுவர்களின் மேல் போஸ்டர்கள் ஒட்டியிருக்கின்றன.

தீபாங்கரின் படம். குழந்தைப்பருவ தீபாங்கர். மொட்டைத் தலை. ஒன்றுமறியா பால்மணம் மாறாத முகம். மெட்ரிகுலேஷன் பாஸ் செய்த தீபாங்கர், கிராஜுவேட் தீபாங்கர். உயரமான ஒல்லியான உடல். சாந்தியும் ரசனையும் இணைந்த களையான முகம்.

தீபாங்கர்! தீர்த்த பாபுவின் ஏகபுத்திரன். 'மகன்களை ஏன் மனிதர்கள் விரும்புகிறார்கள்? ஏன் தன் குழந்தைகளை நேசிக்கிறார்கள்?' தீர்த்த பாபு தினமும் இக்கேள்வியை தனக்குத்

தானே கேட்டுக்கொள்கிறார். பிறகு தூக்கம் வரும். ஆழ்ந்த, ஆனால் பயங்கள் நிறைந்த, நிலை குலைந்த தூக்கம். ஸவிதா தூங்கவில்லை போல் தோன்றுகிறது. அவரைக் கேட்கிறாள்:

"யாரோட போன்?"

"ஹாஸ்பிடலிலிருந்து."

"ஹாஸ்பிடலிலிருந்தா? என்னங்க, ஒருவேளை நமக்காகவே வந்த போனாக இருந்திருந்தால்?"

"பைத்தியக்காரி மாதிரி பேசாதே. தீபு நிரேன் கூட இருப்பது உனக்குத் தெரியும். அங்கிருந்து நிரேன் அவனை தில்லியில் சேர்க்க முயன்று கொண்டிருக்கிறான். எல்லாம் தெரிந்தும் ஏன் பைத்தியக் காரத்தனம் பண்ணுகிறாய்?"

நிரேன் ஏன் நமக்குக் கடிதமே எழுதலே? நீங்க என்ன, நான் அழுது ஆர்ப்பாட்டம் பண்ணுவேன்னு நினைக்கிறீங்களா? இல்லே நான் நிரேனிடம் ஓடிவிடுவேன்னா?"

"ஸபூ! நீ வீணாக கலவரப்படாதே."

"என் மனசு சொல்றது - தீபு நிரேன் கூட இல்லேன்னு. வேணும்னே நிரேன் நமக்கு ஒண்ணும் சொல்லக்கூடாதுன்னு இருப்பானா என்ன?"

"சும்மா இரு, ஸபூ, அழாதே. எல்லாம் சரியாத்தான் இருக்கு. தீபு ஓடிப்போறதுக்கு எந்தக் காரணமும் இல்லை."

"பின்ன ஏன் அவன் வரலே?"

"ஸபூ, உனக்கு உடம்பு சரியில்லே. ஏதேதோ நினைச்சுட்டு புலம்பாதே. காலம் கெட்டுக்கிடக்கு. இந்த பேட்டையும் நல்லா இல்லே. அதான் அவன் வரல்லே."

ஸவிதா அழ ஆரம்பித்தாள். முதலில் மெதுவாக, பிறகு விம்மி விம்மி அழுது கொண்டே கண்ணீர் விட்டாள். அழுதுகொண்டே உறங்கியும் விட்டாள். தீர்த்த பாபுவிற்கு உறக்கம் பிடிக்க நேரமாயிற்று. 'இந்த நாட்டின் நிலை எப்படியாகிவிட்டது! சரி, ஒரு ரோகி இறந்துவிட்டான் அதற்காக உடனே 47 எக்சேஞ் நம்பருக்கு போன் செய்ய வேண்டுமா என்ன? ராங் நம்பர், யாரோட உறவோ —அவங்க மனம் என்ன பாடுபடும்..?'

ஒருவேளை எந்த பாதிப்பும் ஏற்படாமல் இருக்கலாம். இந்த நாட்களில் எல்லாரும் குருக்ஷேத்திரத்தில் அர்ஜுனன் மாதிரி அத்யந்த வைராக்கியத்துடன் சாவை எதிர்கொள்கிறார்கள். பிணம் படுக்கையிலேயே கிடக்கும். செலவை மிச்சப்படுத்துவதற்காக உறவினர்கள் அங்கிருந்து போய் விடுகின்றனர். திரும்பி வருவதில்லை. இல்லாவிட்டால் யாராவது வரும் வரை சவம்

மார்ச்சுவரியிலேயே கிடக்கும்.

தீர்த்த பாபுவுக்கு ஒரே பயம். எவ்வளவு முயன்றாலும் விரட்டியடிக்க முடியாத பயம். அவர் வேறு, கல்கத்தா வேறு. மேற்கு வங்காளத்தில்தான் வசிக்கிறார். பார்த்தால், அதே பட்டணம்தான் மனதுக்குத் தெரிகிறது. அதே பெரிய மைதானம், மானுமென்ட், பவானிப்பூர், அலிப்பூர், சிடசாங்க் திருப்பம்! அதே ஆஷாட் மாதத்து தேர் உத்ஸவம். சைத்திர காளிகாட்டில் சிவ பூஜைத் துதிகள். மார்ச் மாதத்தில் கிறிஸ்துமஸ் பண்டிகை, அலங்கார விளக்குகள்...

ஆனால் அந்த நகரமில்லை இது. இது தவறான நகரம், ராங் சிடி... தவறான ரயிலில் தவறான ஊருக்கு வந்துவிட்டார் தீர்த்தபாபு.

இல்லாவிட்டால், தீர்த்த பாபு ஸவிதாவுக்கு தான் சொன்ன பொய் ஆறுதல்களை மறந்துவிட்டு 'ஏன் தீபாங்கர் கடிதம் எழுத வில்லை? ஏன் நிரேன் தீபாங்கர் பற்றி சமாசாரம் தெரிவிக்க வில்லை?' என்று கவலைப்படுகிறார்?

எதற்காக, எதற்காக மனிதன் குழந்தைகள் வேண்டும் என்று தவிக்கிறான்? எதற்காக தன் மகனை மகளை நேசிக்கிறான்?

செத்த பிறகு தனக்குக் கொள்ளி போடுவான் என்பதாலா? தவறு, தவறான விடை. தீர்த்தபாபு தான் ஜீவித்திருக்கும் வரை தன் பிள்ளை தன்னுடன் இருப்பதை விரும்பினார். 'கிட்ட இரு, அருகில் இரு, என் வலியையும் எரிச்சலையும் வாங்கிக்கொள் எங்களுடன் ஒன்றிவிடக் கற்றுக்கொள்.'

ராங் ஹோப்- எங்கு இருக்கிறது அந்த எக்ஸ்சேஞ்ஜ்? இந்த ஊரில் எங்கிருக்கிறது அந்த எக்ஸ்சேஞ்ஜ்? யார் அங்கு உட்கார்ந்து கொண்டு தீர்த்த பாபுவுக்கு மட்டும் சொல்கிறார்கள். 'ராங் நம்பர், ராங் ஸிடி, ராங் ஹோப்.'

'யார் அது? எங்கே, கண்ணில் படாத அந்த ஆப்ரேட்டர்? ஆப்ரேட்டர் ஏன் தென்படுவதில்லை?'

சிந்தித்துச் சிந்தித்து தீர்த்த பாபு மௌனமாக தூக்கத்தில் முழுகிவிடுவார். பகலிலிருந்து இரவு வரை இப்படியே கழிந்தது திங்களிருந்து ஞாயிறு வரை, விடிகாலையிலிருந்து மாலை வரை. இரவு தொடங்கியதும் தூக்கத்தின் நடுவில் சாரி சாரியாய் வெறும் சுவர்களே தென்படும் என்று தீர்த்த பாபுவை பயம் பற்றிக் கொள்ளும்.

எல்லாச் சுவர்களிலும் தீபாங்கரின் முகம் ஒட்டியிருக்கும். மனோஜிடம் போகலாமா என்று தூக்கத்தின் நடுவில் தீர்த்த பாபு

நினைப்பார். மனோஜ் அவருடைய நண்பர். மனோவியாதி நிபுணர்.

நிச்சயமாக தீர்த்தபாபுவின் உடல்நிலை சரியாக இல்லைதான். "உனக்கு உடம்பு சரியில்லை, தீர்த்தா" மனோஜ் அபிப்பிராயம் சொன்னார். தீர்த்த பாபுவின் வற்றிய முகம், ஆறுதல் கெஞ்சும் கண்கள், அடிக்கடி நெற்றி வியர்வையைத் துடைக்கும் போக்கு, எல்லாவற்றையும் கவனித்தார் மனோஜ்.

"என்ன வியாதி?"

"நரம்பு வியாதி."

"என் நரம்பெல்லாம் சரியாகத்தான் இருக்கிறது. நீ பொய் சொல்கிறாய்-"

"அப்படி நீ நினைக்கிறது தப்பு, உன் மனதில் வரும் கவலைகள் உண்மையல்ல, கற்பனையில் பிறந்தவை."

"கற்பனை-?"

"நீ பேசுவதை நீயே கேள்,"

மனோஜ் டேப் ரெகார்டரைப் போட்டார். மனோஜ் அவரிடம் வரும் நோயாளிகள் சொல்வதை எல்லாம் ரெகார்ட் செய்து கொண்டு விடுவார். பிறகு அதைக் கேட்டு ஆலோசித்து விட்டு தன் முடிவுகளைச் சொல்வார். தீர்த்த பாபு டேப் ரெகார்டாரைப் பார்த்தவுடன் மனதிற்குள் செலவு கணக்குப் போட ஆரம்பித்து விட்டார். அப்பொழுது திடீரென ஒரு சோர்வான குரல் கேட்டது:

'எனக்குத் தோன்றுகிறது. இந்த வீடு என்னுடையதல்ல என்று. கதவைத் தட்டினால் யாரும் கதவை திறப்பதில்லை. ஏனென்றால், நான் ராங் அட்ரஸுக்கு வந்திருக்கிறேன். ரோட்டில் நடந்து கொண்டிருக்கும் போது தோன்றுகிறது - இந்த கல்கத்தா, கல்கத்தா மாதிரியே இல்லை. வெளியில் இருக்கும் வீடு வாசல்கள், பெரிய மைதானம், மானுமெண்ட் எல்லாவற்றையும் வேறு நகரத்திற்கு ஒப்படைத்துவிட்டு கல்கத்தா எங்கோ பறந்து போய்விட்டது. எனக்குத் தோன்றுகிறது - இட் இஸ் தி ராங் சிடி... ஒரு பிரயோசனமும் இல்லை. இருந்தாலும் இந்தக் கல்கத்தாதான் நிஜமான கல்கத்தா என்ற நம்பிக்கையை உறுதி செய்து கொள்வதற்காக அன்று கெவுடாதலாவுக்குப் போயிருந்தேன். அங்கு சுவர்களில் எழுதியிருந்த வாசகங்களைப் படித்தவுடன் எனக்குப் புரிந்துவிட்டது நான் தப்பான இடத்திற்கு வந்திருக் கிறேன் என்று- நேற்று நான் ஒரு கனவு கண்டேன்-'

மனோஜ் டேப்ரெகார்டரை நிறுத்தினார். "என்ன கனவு

கண்டாய் தீர்த்தா?"

"அதை என்னால் சொல்லமுடியாது."

"என்ன கனவு?"

"என்னைக் கேட்காதே மனோஜ். என்னைக் கேட்காதே. நடுநடுவே எனக்குக் கனவு வரும்."

"அதனால்தான் அது பற்றி எனக்கு அவசியம் தெரிய வேண்டும்."

"வேண்டாம் மனோஜ்."

"உனக்கு உடம்பு சரியாக இல்லை, உடல்நிலை சரியாக இல்லாதிருப்பது சாதாரணம்தான்"

"எப்படி? எனக்கு வியாதி இருப்பது எப்படி சாதாரணமான சமாசாரம்?"

"உன் பிள்ளை- வந்து-"

"என் பிள்ளைக்கு என்ன?"

"உன் வீட்டில் இல்லை."

"மனோஜ் உனக்கு யார் என்ன சொன்னாங்கன்னு எனக்குத் தெரியாது. தன் கஸின் நிரேனுடன் லக்னோவில் அவன் இருக்கான், அங்கிருந்து மேற்படிப்புக்கு டெல்லிக்குப் போகப் போகிறான் தீபாங்கர்."

"காட்!"

மனோஜ் ஆழமான பெருமூச்சுடன் மிக வருத்தத்துடனும் வேதனையுடனும் பேசத் தொடங்கினார். அவர்கள் எல்லாரிலும் தீர்த்த பாபுதான் மிகவும் நிதானமான, எளிதில் பதட்டப்படாத திடமனநிலை உள்ளவர். நல்ல மனிதர். ஏன் இப்படியாகி விட்டது அவருக்கு- "காட்!" சட்டுப் புட்டென்று ஒரு மருந்தின் பெயரை எழுதி காகிதத்தை அவரிடம் கொடுத்தார்.

"இதைச் சாப்பிடு, தூக்கம் வரும்."

"சரி, கொடு."

தீர்த்த பாபு மருந்துப்புட்டியை எடுத்துக் கொண்டார். மனோஜ் பாபு கூடவே வாசல் வரை வந்தார். பிறகு கேட்டார்: "போஸ் அப்புறம் உன்னிடம் வரவில்லையா?"

"இல்லை, ஏன்?"

"நான் அவனை தடுத்திருந்தேன்."

"அவன் வந்தால், வீட்டிற்குள் நுழைய விடமாட்டேன். ஸவிதாவிடம் கண்டதையும் உளறிவிட்டுப் போகிறான்."

தீர்த்த பாபு வெளியே வந்தார். மாலையாகி விட்டிருந்தது. இல்லை. ஒரு வேளை காலையோ? தெருவில் சாரி சாரியாக

ஜனங்கள்- ஜனங்களில்லாத தெருவே இல்லையா?

ஜனசஞ்சாரமற்ற பாதை- மேகங்கள் சூழ்ந்த இரவு- புயல் காற்றும் மழையும்... ஜயஸிம்மனின் வாளுக்கு பட்டொளி கொடுக்கிறது- ரவீந்திர நாத்தின் நூலில் வரும் இந்த வர்ணனை தீர்த்த பாபுவுக்கு மிகவும் பிடிக்கும்

தீபாங்கரின் பாடப் புத்தகத்தில் ஒரு பாடம் 'ராஜரிஷி.'

தீர்த்த பாபுவுக்கு நன்றாகவே தெரிகிறது. தன் கண்களிலிருந்து நீர் வந்து கொண்டிருக்கிறது என்று. 'மகன்கள் கொலைகாரர்கள், அவர்கள் கொலைகாரர்கள், தங்கள் தாய் தந்தையரை தொடர்ந்து கொன்று கொண்டே இருக்கிறார்கள்-'

தீர்த்தபாபு மருந்துப் புட்டியை மிகுந்த கவனத்துடன் எடுத்துக் கொண்டு செல்கிறார். ஒலிம்பிக் பந்தயங்களுக்கு முன்னர் அதன் பவித்திர ஜோதியைச் தூக்கிச் செல்வார்களோ அப்படி.

இன்று இரவு தூக்கத்திலும் அதே கனவைத் திரும்பத் திரும்ப மறுபடியும் கண்டார் தீர்த்த பாபு. சௌரங்கி ரோட்டின் இரு புறமும் ஆடாமல் அசையாமல் லட்சக் கணக்கில் மக்கள் நிற்கின்றனர். ரோட்டின் இருபுறமும் பெரிய பெரிய ஜொலிக்கும் விளக்குகள். ரத்தம் தோய்ந்த சாலை. மத்தியில் நின்று கொண் டிருக்கிறாள் ஒரு வயதான மாது, அவிழ்ந்த கூந்தலுடன் மார்பில் அடித்துக் கொண்டு, 'ப்ரவீர், ப்ரவீர்' என்று கதறுகிறாள். பெண்ணைப் பார்த்தவுடன், தீர்த்த பாபுவிற்கு தெரிந்து விடுகிறது. அவள் புராணங்களில் வரும் ஜனா என்று:

"தூரத்திலே, தூரத்திலே, கடும் பிராந்தியத்திலே
பாலையிலே மரு பூமியிலே, பயங்கர மயானத்திலே,
உனக்கு இடமில்லை.
அண்ட இயலாத காட்டில், பனி மையத்தில்,
மலைச் சிகரத்திற்குச் செல்.
செல், பாவம் மண்டிய ராஜ்ஜியத்தைத் துறந்து செல்.
உன் கணவன் தன் மகனை கொன்ற அராதியின் தோழன்,
செல், புத்திரசோகத் சுமையை தூக்கிச்செல்:"

பெண்மணி வானத்தைப் பிளக்கும் குரலில் கத்துகிறாள்.

இதுதான் சமயம். 'திரைச் சீலையை கீழே விடு- மணியடி-' இப்படி யாரோ கத்துகிறார்கள், 'யார் சொன்னது இது மாஹிஷ் மதிபூர் இல்லை என்று? போய்விடு போய்விடு.'

அதே கணத்தில் தீர்த்த பாபு, 'ஷீ இஸ் இன் தி ராங் ஸிடி' என்று சொல்ல ஆரம்பித்தார். ஆனால் அதே சமயத்தில் மணி அடிக்கத் தொடங்குகிறது. போன் மணி ஒலிக்கிறது.

தீர்த்த பாபு எழுந்து உட்கார்ந்தார். டெலிபோனை ஏன் மனிதர்கள் வைத்துக் கொள்கிறார்கள்? வாடகை கொடுத்து, பிராணன் போய் விடுகிறது- சுவாசம் நாபியிலிருந்து மேலே எழும்பி, எழும்பி, உயிர் போகிறது.

தீர்த்த பாபு ரிஸீவரை எடுத்தார்.

"ஃபோர் ஸெவன்- நைன்?"

இதே நம்பர்தான். தீர்த்த பாபுவின் ஃபோனிலேயே எழுதியிருக்கிறது.

தீர்த்த பாபு சொன்னார் "இல்லை."

"இது தீபாங்கர் சடர்ஜியின் வீடு தானே?"

"இல்லை."

"தீர்த்த பாபு! நான் போஸ் பேசுகிறேன். அன்று சொன்னேன் இல்லையா? தூரத்தில் ரயில்வே லைன் பக்கத்தில் ஒரு உடல் கிடக்கிறது என்று? அது தீபாங்கரின் உடல். அவன் காயங் களினால் செத்துப் போய்விட்டான். நீங்கள் வராததால் உடலை எரித்து விட்டார்கள். ஹலோ! ஹலோ! காதில் விழுகிறதா?"

"இல்லை."

"இது தீபாங்கர் சட்டர்ஜி வீடு இல்லையா!"

"இல்லை."

"இது 47 –? இல்லை?

"இல்லை, ராங் நம்பர்."

தீர்த்த பாபு ஃபோனை வைத்து விட்டார். பிறகு என்ன நினைத்துக் கொண்டாரோ என்னவோ, ரிஸீவரை அதன் இடத்திலிருந்து எடுத்துக் கீழே வைத்துவிட்டார்.

பிறகு படுக்கைக்குத் திரும்பி விட்டார். மறுபடியும் அந்த கனவைக் காண வேண்டும்- எப்படியாவது. இன்னொரு முறை அந்தக் கனவைக் காண வேண்டும். அக்கனவை கண்டால்தான் எப்படி அந்த ஆவேசமடைந்த ஜனா ராங் ஸிடியிலிருந்து ஓடிப்போனாள் என்று தீர்த்த பாபுவுக்குப் புரியும். கனவைத் தவிர வேறு ஒன்றும் தீர்த்த பாபுவின் கையில் இல்லை. இன்று விழித்து விழித்திருந்து கல்கத்தா சாலைகளில் சுற்றினாலும் தப்பி ஓடுவதற்கான பாதையை அவரால் தேடிக் கண்டுபிடிக்க முடியாது. இப்பொழுது அவர் ஜனாவுக்குப் பின்னால் செல்ல வேண்டும்- பிரவீரின் சாவிற்குப்பிறகு பிரவீரின் தந்தையோடு எல்லாரும் விஜயோத்ஸவம் கொண்டாடினார்கள். ஜனா ஒருத்தி மட்டும் தனியாக ஓடிவிட்டாள்.

தீர்த்த பாபு தூங்கிப் போய்விட்டார்.

# வேட்டை

இடம் கோமோ. ஒரு காலத்தில் டால்டன் கஞ்ஜ் லைனில் வரும் ஸ்டேஷனில் ட்ரெயின் நிற்பதுண்டு. அங்கு ரயிலை நிறுத்துவதற்கான செலவு ரயில்வேக்காரர்களுக்குக் கட்டுப்படியாகவில்லை. அதனால்தான் ஸ்டேஷன் குவார்டர்ஸ், கூலி லைன்கள் எல்லாவற்றிலும் ஆடு மாடுகள் திரிந்து கொண்டிருப்பதைக் காணமுடியும். 'குருடா அவுட் ஸ்டேஷன்—அபாண்டண்ட்' என்ற போர்ட் ஒன்று அங்கு தொங்குகிறது. இங்கு ரயில் கடக்கும்போது. 'வேகம் குறையும். பெருமூச்சு விட்டுக்கொண்டு ஊர்ந்து கொண்டே மேலே செல்லும். மிக மெதுவாக இங்கிருந்து குருடா மலை மேல் ஏறும். சரிவான மலை, கொஞ்ச தூரம் சென்ற பின் ஓர் டனலுக்குள் நுழையும். அரை மைல் நீளமான இந்த குகையின் இரு பக்கமும் வெடி மருந்தினால் தகர்க்கப்பட்ட கற்கள் சிதறிக் கிடக்கும். மலைக்கு மேலே மூங்கில் காடு. நடு நடுவே காற்றில் அசையும் மூங்கில்கள் வளைந்து ரயிலின் கூரையை இடிக்கும். பிறகு ரயில் இறங்கும். வேகமும் அதிகரிக்கும். அடுத்த ஸ்டேஷனின் பெயர் தோக்ரி. இதுதான் இந்த பிராந்தியத்தில் மிக சுறுசுறுப்பான ஸ்டேஷன். பல திசைகளிலிருந்து வரும் லைன்கள் சந்திக்கும் தோக்ரி ஜங்ஷன், 'கோல் ஹால்ட்' என்று அழைக்கப்படும் இந்த இடத்தில் ரயிலில் கரி ஏற்றப்படும். நாலா பக்கமும் ஸர்பேஸ் கேலியரீஸ் (நிலக்கரிச் சுரங்கம்). இந்த பிராந்தியத்தில் மேல்தரையிலேயே கரி கிடைக்கும். ஆனால் தோக்ரியின் உண்மையான லட்சுமி மர காண்ட்ராக்டர்கள்தான். ஸால் மர, தேக்கு மர பிராந்தியம் இது. ட்ரக்குகளில் இரவு பகல் என்று இல்லாமல் ஸால் மரக்கட்டைகள் வரும். மர பேக்டரிகளில் வெட்டி இழைக்கப்பட்டு பல இடங்களுக்குச் சென்று விடும். குருடாவின் நிச்சலனத்திற்கு பிறகு தோக்ரியின் ஆரவாரம் ஒரு புது அனுபவம்.

தூரத்திலிருக்கும் கிராமங்களிலிருந்து மலையின் மேல் செல்லும் ரயில் ஒரு ரம்யமான காட்சி. தினமும் இதைக் காணும்

கிராமவாசிகளுக்குக் கூட இது ஒரு அதிசயக் காட்சி, அவர் களுடைய ஆச்சரியம் இன்றும் குறைந்தபாடில்லை. ரயில் போகிறது. இஞ்ஜினுக்கு மூச்சு வாங்குகிறது. இம்முறை ரயிலை எங்கே அது துப்பித் தள்ளிவிடுகிறது என்று ஓடிப்போய் பார்க்க வேண்டும்.

மலைகளில் ஒரு நாள் யானைகள் தென்பட்டன. மூங்கில் இலைகளைத் தின்று கொண்டே ஒரு யானைக் கூட்டம் நின்று கொண்டிருந்தது. தொலைவில் அவை பொம்மை யானைகள் மாதிரி தோற்றமளித்தன. ரயில் நெருங்கியவுடன் மிரண்டு போய் தும்பிக்கைகளை ஆட்டிக்கொண்டு பிளிறிக் கொண்டு ஓடத் தொடங்கின.

குருடா கிராமம் ஸ்டேஷனிலிருந்து தொலைவில் உள்ளது. இரண்டு குன்றுகள், ஒரு மைதானத்தை தாண்டிச் செல்ல வேண்டும். கிராமம் சற்றே பக்கத்தில் இருந்திருந்தால் கிராம வாசிகள் ரயில்வேக்காரர்கள் பாராமரிப்பின்றி புறக்கணித்து விட்டிருந்த கட்டடங்களில் வசித்துக் கொண்டிருந்திருக்க கூடும்.

குருடா போன்ற கிராமங்களில் வசிப்பவர்களின் வாழ்க் கையில் ஆண்டு தோறும் வரும் பூஜா "உத்ஸவம் தவிர வேறு விதமான கொண்டாட்டங்கள் மிகக்குறைவு. இதனாலேயே மனோரம்யான குருடா மலைக் காட்சிகளே அவர்கள் கண்களைக் கவர்ந்து விடுகின்றன.

மேரி ஓராவ்ன் ரயிலை எவ்வளவு ஆர்வத்துடனும் ஆச்சரியம் கலந்த உற்சாகத்துடனும் பார்த்துக் கொண்டிருப்பாளோ அதே ஆர்வத்துடன் எல்லா பயணிகளும் அவளைக் கண் கொட்டாமல் பார்ப்பார்கள். வயது பதினெட்டு. உயரமான, வாளிப்பான உடல். மூக்கும் முழியுமான களையான முகம். தாமிர வண்ண நிறம். சாதாரணமாக அவள் ப்ரின்ட்டட் ஸாரி உடுத்தியிருப்பாள். தூரத்தில் மோகினியாகக் காட்சியளிப்பாள். ஆனால் நெருங்கி வந்து நோக்கினால், அவள் கண்களில் ஒரு கண்டிப்பான எதிர்ப்பு தேங்கியிருப்பது தென்படும்.

அவளைப் பார்ப்பவர்கள் யாரும் அவள் ஒரு ஆதிவாசி என்று சொல்ல மாட்டார்கள். ஒரு காலத்தில் குருடாவில் ஸாஹப்புகள் டிம்பர் ப்ளான்ட்டேஷன்கள் வளர்த்துக் கொண்டு வசித்து வந்தார்கள். சுதந்திரத்திற்குப் பிறகு நாளடைவில் அவர்கள் அங்கிருந்து சென்று விட்டார்கள். டிக்ஸனின் பங்களாவை மேரியின் அம்மா பராமரித்துக் கொண்டிருந்தாள். டிக்ஸனின் பிள்ளை 1959இல் திரும்பி வந்து வீடு, காடு, எல்லாவற்றையும்

விற்றுவிட்டுப் போய்விட்டான். ஆஸ்திரேலியாவுக்குத் திரும்பு முன் பிக்னியின் கர்ப்பத்தில் மேரியை வைத்து விட்டிருந்தான். பிறந்த பெண் குழந்தைக்கு சர்ச் பாதிரியார் மேரி என்று பெயர் வைத்தார். அப்பொழுது பிக்னி கிறிஸ்தவளாக இருந்தாள். பிறகு பிரஸாத்ஜி ராஞ்சியிலிருந்து டிக்ஸன் பங்களாவில் வசிப்பதற்கு வந்த போது, பிக்னியை வேலைக்கு வைத்துக் கொள்ளத் தயாராக இல்லாதால், பிக்னி கிறிஸ்துவ மதத்தைக் கைவிட்டு விட்டாள். மேரிக்கு பிரஸாதின் மாடு கன்றுகளை மேய்க்கும் வேலை. இதில் அவள் மிக கெட்டிக்காரி. தவிர. மொத்தப் பழ வியாபாரிகளுடன் மிக சாமர்த்தியமாகப் பேரம் பேசி பிரஸாத்தின் தோட்டத்து சீதாப்பழம், கொய்யாப்பழம் எல்லாவற்றையும் நல்ல லாபத்தில் விற்பாள். தோட்டத்துப் பழங்களையும் காய்கறிகளையும் விற்பதற்கு அவள் தோக்ரிக்கு ரயிலில் போவாள்.

எல்லாரும் பிரஸாத்ஜியை மிக அதிர்ஷ்டசாலி என்று சொன்னார்கள். பிக்னிக்கு மாத சம்பளம், மேரிக்கு உணவு. உடைகள் என்று ஏற்பாடு. ஸாஹப்புகள் வசிப்பதற்குத் தோதான முறையில் டிக்ஸன் பங்களா கட்டப்பட்டிருந்தது. பிக்னி சொல்லுவாள்: ‘ஸாஹப்கள், ஆயா, எடுபிடி வேலைக்காரர்கள். ஜமேதார் என்று பன்னிரண்டு பேர்களை வைத்துக் கொண்டிருப்பார்கள்.’ இப்பொழுது பிரஸாத்ஜியின் ஆட்சியில் இந்த பரந்த பங்களா பூராவையும் மேரி ஒருத்தியாகவே சுத்தம் செய்து பளிச்சென்று வைக்கிறாள்.

தோக்ரி பஜாரில் மேரியின் ரசிகர்கள் கூட்டத்திற்குக் கணக்கேயில்லை. ராணிபோல் ஸ்டேஷனில் வந்து இறங்குவாள். பஜாரில் ஹோதாவுடன் தன்னிடத்தில் உட்காருவாள். மற்ற கடைக்காரர்களிடமிருந்து பீடி வாங்கிக் கொள்வாள். டீ, வெற்றிலை, எல்லாம் அவர்கள் செலவில். ஆனாலும் ஒருவரையும் அணுக விடமாட்டாள். பஜாரில் எல்லாரையும் விட பெரிய ரௌடி அவளுடைய காதலன் ஜாலிம். என்றைக்கு ஜாலிமிடமோ, அல்லது மேரியிடமோ நூறு ரூபாய் சேமிப்பாகிறதோ, அன்று கல்யாணம் செய்து கொள்ளவிருக்கிறாள்-

அவனை மணம் செய்து கொள்வதென்று தீர்மானித்த பிறகு தான் தன்னை அணுக அவனை அனுமதித்தாள். ஒரு ஒராவ்ன் தாயின் மகளான மேரி ஆதிவாசி மாதிரியே இல்லை. உயரமும் அதிகம். ஆகவே அவள் ஜாதியிலிருந்து அவளுக்குத் தகுந்த மணமகன் கிடைக்கவில்லை. ஆதிவாசி இளைஞர்களுக்கு அவளுடைய நிறம் ஒரு சுவர் மாதிரி நடுவில் நின்றது. பிரசாத்தின்

மனைவி மேரிக்காக மாப்பிள்ளை தேடினாள். அவளுடைய தோட்டக்காரனின் மகனுக்கே செய்து வைக்கலாம் என்று அவளுக்குப் பட்டது. அவள் பிக்னிக்கு சென்னாள்: "நீயும் இங்கேயே இருக்கலாம்."

பிக்னிக்கு சம்மதம்தான், ஆனால் மேரி மறுத்துவிட்டாள், "வேணாம். இந்த ஏற்பாடு எதுக்குத் தெரியுமா? வேலைக்காரங்க எல்லாரையுமே அவங்க கைதிகளாக இங்கேயே வச்சுக்கிடலாம். அதுதான் விஷயம்."

"வீடு தர்றேங்கிறாங்களே?"

"வீடு என்ன பெரிய வீடு, வெறும் குடிசை..."

"பையன் நல்லவன்."

"இல்லே... குடிசையில இருக்கணும். அடி உதை வாங்கிக்கணும். புருஷன் குடிப்பான் சோப்பு, எண்ணை இருக்காது. நல்ல துணிமணி கிடைக்காது. இந்த மாதிரி வாழ்க்கை எனக்கு வேண்டாம்."

மேரி ஏற்றுக்கெள்ளவில்லை. கிராமத்து சமூகம் மேரியை ஏற்றுக் கொண்டது. பெண்கள் அவளுடைய சிநேகிதிகள். வருடாந்திர விழாக்களில் அவள் அற்புதமாக நடனமாடுவாள். இருந்தாலும் அவள் மற்ற பெண்களைப் போல் வாழ விரும்பவில்லை.

பலர் அவளுடைய அன்பிற்கு பல தடவை ஆசைப் பட்டார்கள். அவர்களை எல்லாம் மேரி விரட்டி விட்டாள், "பிக்னிக்கு நேர்ந்த மாதிரி, தன் வயிற்றையும் நிரப்பிவிட்டு துரத்தி விடமாட்டார்கள் என்று என்ன நிச்சயம்?"

ஒருமுறை அவள் காரணமாக தோக்ரி பஜாரியில் ஒரு பெரிய கலவரமே நிகழ்ந்து விட்டது. ட்ரக் டிரைவர் ரத்தன் சிங் ஒரு முறை குடித்துவிட்டு அவளைக் கடத்த முயன்றான். அப்பொழுது ஜாலிம் அங்கு வந்து மறிக்க, அடிதடி ஆகிவிட்டது. அதற்குப் பிறகுதான் மேரி ஜாலிம் அருகில் உட்கார்ந்து கொண்டு கறிகாய், வேர்க்கடலை, சோளம் என்று விற்க ஆரம்பித்தாள். ஆனால், ஒரு நாள் கூட ஜாலிமின் வீட்டிற்கு அவள் சென்றதில்லை. கூடாது, முதலில் கல்யாணம் ஆகட்டும். ஜாலிம் மனதில் மேரியின் மேல் மிகுந்த மரியாதை இருந்தது. மேரியிடம் உண்மையிருக்கிறது, ஆஸ்திரேலிய ரத்தத்தின் வீரியம் இருக்கிறது...

மேரியின் மனதில் எங்கோ ஒரு மூலையில் ஒரு அவநம்பிக்கை குடிகொண்டிருக்கிறது. ஜாலிமைக்கூட அவள் முழுதும் நம்பவில்லை. ஒரு நூறு ரூபாய் சேர்ந்தவுடன் கல்யாணம் என்பது

தோக்ரி பஜார் ஜனங்களுக்குத் தெரியும். அந்த நூறு ரூபாயை தான் சேர்ப்பதாக சொன்னான் ஜாலிம். மேரி ஏதாவது கொண்டு வருவதானால் கொண்டு வரட்டும். ஆனால் பணம் சேர்க்கும் பொறுப்பு அவனுடையது. என்றாலும் ஜாலிமின் பொறுப்பு அவ்வளவு எளிதானதல்ல. கிராமத்தில் அம்மா, அப்பா, சகோதர சகோதரிகள். மேலும் இங்கு வீட்டு வாடகை, பாத்திரம் பண்டம் எல்லாம் தேவைப்படும்– இந்த செலவெல்லாம் ஒரே சமயத்தில் சமாளிக்க முடியாது. தவிர, மேரிக்கு துணி, ரவிக்கை, சோப்பு, சீப்பு எல்லாம் கொடுக்கணும்.

மேரிதான் முதலில் ஜாலிமுக்குப் பரிசு தந்தாள். கலர் நூலால் ஆன பனியன்.

“எனக்கு நீ கொடுக்கிறியா?” ஜாலிமுக்கு ஒரே குஷி.

“இல்லே! ஒன்அண்ணி கொடுத்தனுப்பினா!”

அதன்பிறகு ஜாலிம் அது இது என்று மேரிக்கு கொடுக்க ஆரம்பித்தான். அவன் கொடுத்த ரவிக்கை. புடவையெல்லாம் மேரி அணிவதில்லை. கல்யாணத்திற்குப் பிறகுதான் என்று வைத்து விட்டாள்.

பணம் சேர்க்க ஜாலிம் மிகவும் சிரமப்படுகிறான் என்று மேரிக்குத் தெரியும். இருந்தாலும் அவள் ஒன்றும் சொல்வதில்லை. அவளிடம் நூறு இல்லாவிட்டாலும் எண்பது ரூபாய் சேமித்து வைத்திருக்கிறாள்.

இந்தப்பணம் அவளுடைய சொந்த சேமிப்பு. பிரஸாத்ஜியின் வீட்டிலிருந்து கிடைத்தது. சர்க்கார் சட்டப்படி இந்த பிராந் தியத்தில் எந்த வீடுகளிலெல்லாம் மஹுவா மரங்கள் இருக் கின்றனவோ, அந்த மரங்களின் பலனை அவ்வீட்டுக்காரர்கள் அனுபவிக்கலாம். மஹுவா ஒரு பணம் ஈட்டும் மரம். மஹுவா விலிருந்து கள் தயார் செய்யமுடியும். அதன் கருத்த கொட்டையி லிருந்து கறுப்பு எண்ணெய் எடுத்துத் துணி தோய்க்கும் சோப்பு தயார் செய்யலாம். பிரஸாத்ஜியின் வீட்டில் நான்கு மஹுவா மரங்கள். அதன் வரும்படி மேரியினுடையது. மற்ற கிராமத்து ஜனங்கள் விளையாட்டாகக்கூட அந்த மரங்களின் மேல் கை வைக்க முடியாது. உடனேயே மேரி தனது உரிமையை அடித்துச் சொல்லுவாள். இது அவளுடைய சொத்து. இதற்காகத்தான் அவள் பிரஸாத்ஜியின் வீட்டில் சம்பளமில்லாமல் இவ்வளவு உழைக்கிறாள்.

பிரஸாத்ஜியின் மனைவிக்கு இதெல்லாம் சற்றும் பிடிக்க வில்லை. ஆனால் லட்சுமண் பிரஸாத் சொன்னார்: “அவகிட்ட

வம்புக்குப் போகாதே. யார் இப்படி வீட்டை இவ்வளவு சுத்தமா வெச்சுக்குவா? மாடு கன்றுகளை மேய்ப்பா? தோக்ரிக்குப் போய் பழம், காய்கறி, வேர்க்கடலை எல்லாம் விற்று பணம் பண்ணிக் கொண்டு வருவா?"

மேரி குட்டிச்சாத்தான் மாதிரி உழைப்பாள். ஆனால் தன்னுடைய சொந்த விஷயங்கள் எதிலும் பிரஸாத்ஜி தலை யிடுவதைப் பொறுத்துக் கொள்ளமாட்டாள்.

"என்ன மேரி மஹுவா வித்து எத்தனை பணம் பண்ணே?"

"இதெல்லாம் உங்களுக்கென்னத்துக்குங்க?"

"ஒண்ணு பண்ணு, வட்டிக்கடை ஆரம்பி, நல்ல வட்டி வரும்."

"அப்படியே செய்யறேன்."

"இதோ பாரு, நான் உனக்கு மஹுவா மரத்திலிருந்து வேண்டியதை எடுத்துக் கொள்ள விட்டிருக்கேன். இல்லேன்னா இது சர்க்கார் சொத்து. நான் வேலைக்காரங்க வெச்சு இதை யெல்லாம் பறிச்சுக்க முடியும். ஆனால், அப்படி நான் செய்யலே."

"வேலைக்காரங்கள வெச்சுத்தான் பாருங்களேன். என் கையில அரிவாள் இல்லையா என்ன?" மேரி கோபமான, கணீரென்ற குரலில் பதில் சொல்வாள். தலையை ஆட்டிக் கொண்டு பிரஸாத்ஜி தன் மனதிற்குள் சொல்லிக் கொள்வார்: "இருக்காதா, பின்னே! உடம்புல ஆஸ்திரேலிய ரத்தம் இல்லே ஓடுது."

பிரஸாதின் மனைவி மேரியின் கையால் தன் தலைக்கு எண்ணெய் தேய்த்துக் கொள்வாள். உடம்பைப் பிடித்து விடவும் சொல்வாள். ஊளைச்சதை கொண்ட தன் உடலையும் மேரியின் முறுக்கின மணிக்கயிறு போன்ற உடலையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டு, "ஏண்டி! கல்யாணம் எவ்வளவு தூரத்தில் இருக்கு? ஜாலீம் என்ன சொல்றான்?" என்று கேட்பாள்.

"ஏழைங்க சமாச்சாரமெல்லாம் உங்களுக்கு எதுக்கு அம்மா? நீங்க என்னை கட்டிக்கொடுக்கப் போறீங்களா?"

"ராம ராமா! முஸல்மானுடனா? நான் உன்னைக் கல்யாணம் பண்ணிக் கொடுக்கிறதா?"

"ஏன்- முஸல்மானாவது கல்யாணம் கட்டிக்கிறேங்கறான், ஒங்க தம்பி என்னை வைப்பாட்டியா வெச்சுக்கிறேங்கறாரு."

செருப்பால் அடிக்கப்பட்டது போன்ற முகத்துடன் பிரஸாத் மனைவி மவுனமாகிவிட்டாள். எந்த ஒரு பெண் குட்டிச்சாத்தான் மாதிரி உழைக்கிறாளோ, அரை மணு மூட்டையை முதுகில் அனாயாசமாக தூக்கி கொண்டு ரயிலில் ஏறிப் பயணம்

செய்கிறாளோ, அரைமணி நேரத்தில் இத்தனை பெரிய வீடு முழுவதையும் சுத்தம் செய்கிறாளோ, அவள் பேச்சை கேட்டுக் கொண்டுதானே இருந்தாகணும்?

மேரியிடம் எல்லாருக்கும் பயம். அப்பழுக்கில்லாத உடல் வளம், அயராது உழைக்கும் திறன், தீட்டிய கத்தி போன்ற கூர்மையான புத்தி, இவற்றின் உதவியுடன் வீட்டு வேலைகளை சுத்தமாக செய்து கொண்டும், மாடு கன்றுகளை மேய்த்துக் கொண்டும் இருந்தாள். மேய்த்துக் கொண்டே வறுத்த சோளத்தை மதிய உணவாகத் தின்பாள். பழங்களை நின்றபடியே பறித்து விடுவாள். தானே நிறுத்து, கறிகாய்களை மொத்த வியாபாரிகளுக்கு விற்றுவிடுவாள். பட்சிகள், குரங்குகள், பாதி தின்ற பழங்களை யெல்லாம் பொறுக்கி சாக்கு மூட்டைகளில் போட்டு எடுத்துச் சென்று தன் தாயாரின் கோழிகளுக்கு ஆகாரமாகப் போட்டு விடுவாள். மழை நாட்கள் தொடங்கியவுடன், விதைகளில் துளிர்க்கும் முளைகளை சீர் செய்வாள். இப்படி எல்லா விஷயங் களிலும் தனது உஷாரான பார்வையை வைத்திருப்பாள்.

பிரஸாத்ஜியின் வீட்டிற்கு வேண்டிய, அரிசி, எண்ணெய், நெய், மசாலா, எல்லாம் தோக்ரி பஜாரிலிருந்து அவள்தான் வாங்கி வருவாள். அவளே சொல்லுவாள்: "மாஜி! உங்களுக்குத் தெரியுமா, வருஷத்தில உங்களுக்கு எவ்வளவு பணம் மிச்சப் படுத்துறேன்னு? எவ்வளவு லாபம் பண்ணிக் கொடுக்கிறேன்னு? பிறகு நான் ஏன் மலிவான புடவையெல்லாம் கட்டிக்கணும்? நான் நல்ல துணிமணிதான் உடுத்திக்குவேன். சோப்பு, எண்ணையெல்லாம் உபயோகிப்பேன், இதெல்லாம் நீங்க எனக்கு வாங்கி கொடுத் தாகணும்." வேறு வழியில்லாது பிரஸாதின் மனைவி அவளுக்கு நல்ல துணிமணிகளையே வாங்கிக் கொடுப்பாள்.

நடுநடுவே கிராமத்துக்குச் சென்று வம்பளப்பாள். அங்கு பிரஸாத்ஜியின் மனைவியைப் போல் வயிற்றைச்சுற்றி புடவையை அணிவாள். ப்ரஸாத்ஜியைப் போல ஒரு காலைத் தூக்கிக் கொண்டு நொண்டி நொண்டி நடந்து நடித்துக் காட்டுவாள். கிராமவாசிகள் எல்லாரும் சிரிப்பார்கள்.

அங்கு எல்லாரிடமும் சகஜமாகப் பழகுவாள். சில இளம் வாலிபர்கள், "முஸல்மானின் பெண்சாதி எங்கே இப்படி?" என்று கேட்பார்கள்.

"நீங்க ஒருத்தனும்தான் என்னைக் கல்யாணம் பண்ணிக்க மாட்டேனுட்டீங்களே?"

"நீ பண்ணிக்க ஒத்துக்க மாட்டியே."

“என்னைப் போல ஏன் உயரமா செகப்பா நீங்க இல்லே?”

“நீ ஸாஹப்பு மக..”

“பெரிய ஸாஹப்! பொண்டாட்டி வயித்திலெ கொழந்தய கொடுத்துட்டு ஓடிட்டான் அந்தப் பேமானி. என் அம்மாதான் போக்கத்தவ, கொழந்தை சிகப்பாயிருக்குன்னு பாத்தவுடனேயே கழுத்தெ நெறிச்சு கொன்னு போட்டிருக்க வேண்டாமா? பண்ணியிருந்தா இந்தக் குழப்பமெல்லாம் இருந்திருக்காது இல்லியா?”

“கொன்னு போட்டிருந்தா ஒன் கதியென்ன ஆயிருக்கும்?”

“அப்போ நான் உயிரோட இருந்திருக்க மாட்டேன்-

“சரி சரி, வெட்டிப் பேச்சை விடு, நீ முஸல்மானி ஆகணும்னா ஆயிக்கோ, அதுக்கு முன்னால எங்க எல்லாருக்கும் ஒரு நாள்..”

“என்ன..”

“சோறு, கறி, ஆடு, கள்ளு..”

“ஓ! கட்டாயமாப் போடுவேன். எப்போ நான் போடலே சொல்லுங்க பார்ப்போம்?”

அவள் கட்டாயமாக கிராம யுவயுவதிகளுக்கு விருந்து வைப்பாள்.

எந்த மேரி பிரஸாத்தின் லாபத்திலேயே கண்ணாய் பழ வியாபாரிகளுடன் சண்டை போடுவாளோ, அதே மேரி கடலை எண்ணெய், மாவு, வெல்லம் எல்லாவற்றையும் வீட்டிலிருந்து திருடிக்கொண்டு வருவாள். மசாலாவும் கூட. ஒரு ஓராவ்ன் குடும்பத்தினர் வீட்டில் உட்கார்ந்து கொண்டு மண் பானையில் மாவினால் இனிப்பு பண்டங்கள் செய்து எல்லாருடனும் பகிர்ந்து உண்பாள். அவள் ஜாலிமை கல்யாணம் செய்து கொள்ளப்போவது எல்லாருக்கும் தெரியும். பார்ப்பதற்கு அவள் மற்ற ஓராவ்ன் பெண்களை போல் இருந்தால், அவளுடைய தகப்பன் அவர்களைப் போல ஒரு ஸோமா ஓராவ்னாகவோ, புத ஓராவ்னாகவோ, மங்கள் ஓராவ்னாகவோ இருந்திருந்தால் இந்தத் திருமணத்தை நடக்க விடமாட்டார்கள். வெள்ளை தகப்பனின் முறை தவறிப் பிறந்த பெண் என்பதால் அவளை தங்கள் ரத்தத்தைச் சேர்ந்தவளாக இவர்கள் கருதுவதில்லை. அதன் காரணமாகவே தங்கள் கடுமையான நியதிகளை அவள் மேல் திணிப்பதுமில்லை.

கட்டுப்படுத்தினால் எதிர்த்துப் போராடுவாள். அவர்கள் தன்னைக் கட்டுப்படுத்தவில்லை என்பதில் அவளுக்கு வருத்தமும் உண்டு. ஓராவ்ன் சாதியினரில் தானும் ஒருத்தியாக எற்றுக் கொள்ளப்பட வேண்டும் என்ற ஏக்கம் அவள் உள்மனதின்

ஆழத்தில் புதைந்து கிடந்தது. ஒரு பதின்மூன்று, பதினான்கு வயது வீர சூர ஓராவ்ன் பையன் தன்னை இழுத்துக் கொண்டு ஓடி கட்டாயப்படுத்தி கல்யாணம் செய்து கொண்டால்-! மேரி தோக்ரியில் இரண்டு மூன்று இந்திப்படங்கள் பார்த்திருக்கிறாள். அங்கு அறுவடை முடிந்த உடன் டூரிங் டாக்கீஸ் வரும். திறந்த வெளியில் படம் போடுவார்கள். குருடா கிராமத்தில் பெண்கள், பெண்கள் என்ன, ஆண்கள் கூட சினிமா பார்த்தது கிடையாது. சினிமா என்ன, நல்ல துணிமணி கூடக் கிடையாது. வயிறு நிரம்ப உண்டதில்லை. நடுநடுவே மேரிக்கு அவர்கள் மேல் பரிதாபம் ஏற்படும்.

இவ்விதமாக மேரியின் வாழ்க்கை சுழன்று கொண்டிருந்தது. ஒரு நாள் திடீரென்று பிரஸாத்தின் மகனுடன் காண்ட்ராக்டர் தஷீல்தார் சிங் ரயிலில் வந்திறங்கினான். அதிலிருந்து மேரியின் வாழ்க்கை தலைகீழாகிவிட்டது. குருடாவின் வறுமையும் அமைதியும் ஒரு புயலில் சிக்கிக் கொண்டது.

பிரஸாத்தின் பங்களாவை சுற்றி 57 ஏக்கர் நிலம். அதாவது 225 பீகா. இந்தப் பிராந்தியத்தில் நிலத்தின் மேல் சீலிங் கீலிங் எல்லாம் யாரும் மதிப்பதில்லை. பரந்து கிடந்த டிம்பர் ப்ளான்ட்டர்களின் பங்களாக்களை சுற்றி ஏகப்பட்ட நிலம். டிக்ஸன் ஸாஹிப் ஐம்பது ஏக்கரில் ஸால் மரங்களை நட்டிருந்தார். இந்தப் பிராந்தியத்தின் ஸால் மரங்கள் குறுகியவை அல்ல, அசுர வளர்ச்சி கொண்ட ஸால் வகை. இப்பொழுது அவை பிரம்மாண்டமாக வளர்ந்து பருத்து விட்டிருந்தன. வெட்டுவதற்கு சரியான நிலையில் இருந்தன. இங்கு இந்த ஸால் மரங்கள் இல்லாதிருந்தால், என்ன என்னவெல்லாம் சாகுபடி செய்திருக்கலாம் என்பது பற்றி சில சமயங்களில் பிரஸாத் துக்கப்படுவதுண்டு. ஆனால், இப்பொழுது ஸால் மரத்தின் விலையைக் கேட்டதிலிருந்து, அவருடைய ஒரே சிந்தனை எப்படி அதை நல்ல விலைக்கு விற்பது என்பதுதான். இது பற்றிய பேச்சு கிளம்பியவுடன் இந்த பிராந்தியத்து காட்டுச் சொந்தக்காரர்கள் லால்சந்தும், முல்னிஜியும், மகிழ்வுற்றனர். பிரஸாத்தின் மகன் பன்வாரியும் சுறுசுறுப்பாகி டால்டன் கஞ்சுக்குப் போய் முற்றுகையிட்டான். அதன் விளைவுதான் தஷீல்தார்சிங்.

தஷீல்தார் சிங் வந்தவுடனையே முதலில் வெட்டப்பட வேண்டிய மரங்களை பார்வையிட்டான். பிறகு விலை பற்றி பேரம் நடந்தது. பிரஸாத் சொன்னார்: “இந்த ரக ஸால் கட்டைகளுக்கு இவ்வளவு விலைதானா?”

"பின்னே ஏன் என்கிட்டே விக்கிறீங்க? எங்கே நல்ல விலை கிடைக்குதோ அங்கே வித்துக்கங்க."

"கொடுக்கிற மாதிரி விலையைச் சொல்லப்பா."

"பிரஸாத்ஜி! பன்வாரி என் நெருங்கிய நண்பன், சிக்படோரில் வேலை செய்கிறான். என் தொழில் காண்ட்ராக்டர் தொழில், பொய் சொல்லமாட்டேன். நெச்சூர் மரம், பருத்த கட்டை."

"ஸாஹப்கள் வைத்த மரம்!"

"அது சரி. ஆனா, முதல்லெ மரத்தெ வெட்டணும், பிறகு துண்டு போடணும். ட்ரக்கெல்லாம் இங்க வராது. இப்போ ஸாஹப் காலமில்லை, காட்டு இலாக்காவிலிருந்து யானைகள ஏற்பாடு பண்ணி கட்டையை தோக்ரி வரைக்கும் இழுத்துட்டுப் போறதுக்கு. நான் முராயி வரைக்கும் எடுத்துட்டுப் போகணும். கச்சா ரோடு- ட்ரக் டயர் மாட்டிக்கொண்டுவிடும். அதுக்கு முன்னால மரத்தை வெட்டியாகணும். எவ்வளவு செலவு, நீங்களே சொல்லுங்க."

"நிச்சயமா லாபமில்லாம யாராவது தொழில் செய் வாங்களா?"

"ஆனால் உங்களுக்கும்தான் நல்ல லாபம். தண்ணி விலைக்கு நீங்க பங்களா வாங்கினீங்க. தயாரான ஸால் மரங்கள் கூடவே கிடைச்சுது. கிடைச்சதெல்லாம் லாபம். இதுக்காக நீங்க எந்த இன்வெஸ்ட்மென்டும் செய்யலை. மக்காச் சோளமில்லை, மாடுகள் தின்றுவிடுவதற்கு, வேலைக்காரர்கள் பறித்துக் கொண்டு போறதுக்கு. சீதாப்பழமோ, கொய்யாக் காயோ இல்லை, குரங்கு பட்சின்னு தின்னு போட்டுவிட.. இது காட்டு ஏரியா. மரங்கள் இருக்கின்றன. சட்டுப்புட்டுன்னு வித்துப்போடுங்க."

லால் சந்தும் முல்னியும் சொன்னார்கள்: "வீணா தகராறு பண்ணாதீங்க அண்ணாச்சி, அவன் போயிட்டா என்ன பண்ணு வீங்க? காற்றடிக்கும் போது ஆற்று வெள்ளம் போல இந்த ஸால் மரங்கள் கர்ஜிக்கின்றன."

"அதை கேட்டுக்கினு சும்மா குந்திகிட்டு இருந்தா என்னா பிரயோசனம்? பூக்கிறது, ஆனால் பழுக்கலை, சும்மா உட்கார்ந்து கிட்டுப் பூவை பாத்துகிட்டு இருக்கப் போறியா? காண்ட்ராக்டர் வாங்கிக்கிறேன்னு சொல்றான் வித்துப்போடு. சனியன் விட்டது."

காண்ட்ராக்டரும் இதையேதான் விரும்பினான். 'எப்படியாப் பட்ட மரங்களை நட்டுவிட்டுப் போனானுக இந்த ஸாஹபுங்க! ஆகாயத்தை முட்டும் உயரம்; சுற்றளவோ, ரயில் இன்ஜின் மாதிரி, நல்ல பருமன். பிரஸாத்ஜியின் மரங்களை மட்டும்தானா, இந்தப்

பிராந்தியத்திலுள்ள எல்லா மரங்களையும் வளைத்து வாங்கிப் போட்டுவிடவேண்டும். ஆறேழு வருடங்களுக்கு ஒரு முறை சில மரங்கள் தயாராகிவிடும். அதையும் நானே சட்டுப்புட்டென்று வாங்குவேன். இதுவரை இது வர்ஜின் ஏரியா. இங்கு மொனாபலி ஃபெல்லிங்கை நானே எடுத்துக் கொள்வேன்.'

கடைசியில் அதுதான் நடந்தது. பிறகுதான் பிரஸாத்ஜிக்குத் தெரிந்தது கட்டைகளை எடுத்துச் செல்வதற்கான செலவு பற்றி அவன் சொன்னது முழுதும் உண்மையல்ல என்று. ஏனென்றால், ட்ரக்குகள் முராவை கடந்து குருடா வரை வருகின்றன. அதுவரை சமதரைதான். ட்ரக்குகள் வருவதற்கு எந்த சிரமமும் இல்லை. அங்குதான் காண்ட்ராக்டர் காம்ப் போட்டுக் கொண்டான். மரம் வெட்டும் பணிக்கு திறமையான இரண்டு ஆட்கள் வந்தனர். காண்ட்ராக்டர் மேன் பவர் ரெக்ரூட் செய்யத் தொடங்கினான். குருடா, முராஹி, ஸிஹோரா, தபாரி, தூமா, சினாடோஹா என்ற ஆறு கிராமத்து ஓராவ்ன், முண்டா ஆண்களும் பெண்களும் வந்தனர். நம்பவே முடியாத சமாசாரம். வீட்டில் உட்கார்ந்து கொண்டே காசு. வெட்டிய மரத்துண்டுகளிலிருந்து இலைகளை நீக்கிவிட்டு, அவற்றை ட்ரக்குக்குச் சுமந்து சென்று ஏற்ற வேண்டும். ஆண்களுக்கு ஒரு நாளுக்கு பனிரெண்டணா, பெண்களுக்கு எட்டணா கூலி. பிறகு மதியத்தில் எல்லாருக்கும் சோள மாவு ஸாத்து, உப்பு மிளகாய். ஒருவராலும் நம்ப முடியவில்லை. கிராமத்துத் தலையாரிகளும், வயதானவர்களும் ஆண் பெண்களை அழைத்து வரவேண்டும். ஒவ்வொரு வாரமும் ஒவ்வொரு கிராமத்துக்கும் ஒரு மூட்டை உப்பு. கிராமத்து பெரியவர்கள் கேட்டார்கள்: "பெண்கள் வேலைக்குப் போனால் அவர்களுடைய கௌரவம் என்ன ஆவது?"

காண்ட்ராக்டர் சொன்னான்: "எல்லாரும் எல்லாருடைய தாய்மார்கள், சகோதரிகள். இதை யாராவது மறந்தால் அவங்களை விரட்டி விடுவோம்."

ட்ரக் போக்குவரத்தின் ஸ்பீட், காண்ட்ராக்டரின் பேச்சு வார்த்தைகளின் ஸ்பீட். மரம் வெட்டும் வேலையின் ஸ்பீட், எல்லாம் கிராமத் தலைவர்களின் தலையை கிறக்கிவிட்டது. காண்ட்ராக்டர் சொல்வதெல்லாமே சரியல்ல என்ற எண்ணமே அவர்களுக்குப் பிடிபடவில்லை. எல்லாரும் எல்லாருடைய தாய்மார்களாகவும் சகோதரிகளாகவும் ஆக முடியாது. தனது ஏற்பாட்டைப் பக்காவாக்கிக் கொள்ள காண்ட்ரக்டர் ஆறு கிராமப் பெரியவர்கள் கைகளில் ஆறு பாட்டில் ஒண்ணாம் நம்பர்

*நாட்டுச் சாராயத்தைத் திணித்தான். குருடாவின் முதியவர்கள் மற்றவர்களிடம் சொன்னார்கள்: “வாங்க கிராமத்துக்கு போய் பூசை போடுவோம். நமக்கு நல்ல காலம் பொறந்துடுச்சு.”*

*காண்ட்ராக்டர் ரயில் இன்ஜின் டிரைவரிடமும் பேசினான். முராவில் ரயில் நிற்கும். அவசியமானால் குருடாவில் கூட நிற்கும். வான்கள் கிடைக்கும். காண்ட்ராக்டர் டிரைவருக்கும் பாட்டில் கொடுத்தான். ஒவ்வொரு முற்றிய மரத்திற்கும் அவன் பதினைந்து ரூபாய் கொடுத்திருந்தான். எத்தனை செலவு ஆனாலும் அவனுடைய ஏராளமான லாபத்திற்கு குறைவே இல்லை. க்யூபிக் புட் அளவில் விற்கப் போகிறான். பன்வாரிக்கு ஒரு ட்ரான்ஸிஸ்டர் கொடுத்தான். பன்வாரி சொல்லியிருக்காவிட்டால் அவனுக்குத் தெரிந்தே இருக்காது—குட்டை மட்ட ஸால் விளையும் பூமியில் இந்த குவாலிடி ஸால் மரங்கள் உண்டு என்று. இந்த பேரம் மிக லாபகரமாகவே முடிந்து விட்டிருக்கிறது.*

*காண்ட்ராக்டர் தனது சாதியினரான, முல்னி, லால்சந்த் மற்றும் பிரஸாத்ஜி போன்றவர்களின் அறியாமையை நினைத்துக் கொண்டு தனக்குள்ளேயே சிரித்துக் கொண்டான். இந்த முட்டாள்களுக்குத் தாங்கள் நழுவவிடும் பொருள்களின் மதிப்பு தெரியவே இல்லை. மகன் பன்வாரிக்கு மரமொன்றிற்கு ஒரு ரூபாய் மறைவாகக் கொடுத்துவிட்டான். இதற்குப் பிறகு லாபமோ லாபம் தான். பல மரங்கள் ஐந்து வருடங்களுக்குப் பிறகு வெட்டுவதற்குத் தயாராகிவிடும். பிரஸாதை கையில் வைத்துக் கொள்வது மிக அவசியம். விரைவில் இப்பிராந்தியத்தில் ஒரு பக்கத்தில் தோக்ரி யுடனும் மற்றொறு பக்கத்தில் நிர்லா காட்டுடனும் இணைந்து விடும் சாலை தயாராகிக் கொண்டிருக்கிறது. ரோடு வந்துவிட்டால் ட்ரான்ஸ்போர்ட் செலவு மிச்சம்.*

*சில தினங்களுக்குப் பிறகு காண்ட்ராக்டர் தோக்ரியிலிருந்து இனிப்புப் பெட்டி ஒன்றும் ஒரு சட்டி நெய்யையும் எடுத்துக் கொண்டு பிரஸாத்ஜியின் வீட்டிற்கு வந்தான். பிரஸாத் சொன்னார்: “மேரி, விருந்தாளிங்க வந்திருக்காங்க, டீ கீ ஏதாவது கொண்டு வா.”*

*மேரி அப்போதுதான் குளித்திருந்தாள். அழுக்குப்போக தேய்த்து விட்டிருந்த பளபளப்பான முகம். கூந்தல் எண்ணெய் போட்டுச் சீவி ஜடை போடப்பட்டிருந்தது. முன் பக்கம் தலைப்புத் தொங்கும் பிரின்ட்டட் ஸாரி. கையிலும் காதிலும் பித்தளை அணிகள். ட்ரேயில் டீ, தின்பண்டங்களை எடுத்துக் கொண்டு மேரி நுழைந்தாள். தஷீல்தார் சிங் நிமிர்ந்து உட்கார்ந்தான்:*

அடேயப்பா! இந்த மாதிரி ஒரு பெண் இந்தக் காட்டிலா!'

பிரஸாத்ஜிக்கும் புரிந்து விட்டது. மேரி சென்றவுடன் அவர் சொன்னார்: "அவ எங்க வீட்டு வேலைக்காரியின் பெண். அவளுடைய அம்மா அவளைப் போல யுவதியாக இருந்தபோது-" மேரியின் அழகின் பின்னால் புதைந்து கிடந்த காரணத்தை சுருக்கமாகச் சொன்னார். பிறகு, "நாங்கள் அவளை எங்க பெண் மாதிரி நினைக்கிறோம். அவளும் எங்களைத் தாய்தந்தையர் போலவே மதிக்கிறாள்-"

"அப்படித்தான் இருக்கும்." தஷீல்தார் சிங் சொன்னான், "அதனாலதானே எல்லாரும் உங்களை பெரிய மனிதர் என்று போற்றுகிறார்கள். யாருடைய இதயம் விசாலமாக இருக்கிறதோ அவர்தான் பெரிய மனிதர்."

மனதிற்குள்ளே சொல்லிக் கொண்டான் 'காட்டுல மரம் வெட்டி விற்கும் வியாபாரம் மட்டும் லாபகரமானதல்ல, மேரி இங்கு இருப்பதால் மற்றொரு விதத்திலும் லாபம்..'

மேரிதான் பிரஸாதிற்கும் வெளி உலக தோக்ரிக்கும் குடுவா விற்கும் பாலமாக இருந்தாள். இரவில் பிரஸாத்ஜிக்கு மருந்து குடிக்க வெந்நீர் கொண்டு வந்து கொடுத்தபோது சொன்னாள்: "அந்த படுவாப்பயல் உங்களை ஏமாற்றி, கொள்ளை அடிச் சிருக்கான். தோக்ரியிலிருந்து சிபோடோர் வரைக்கும் எல்லாரும் சிரிக்கிறாங்க."

பிரஸாத்ஜி பொய்ப் பல்லை கழற்றி கிண்ணத்தில் வைத்தார். பிறகு மருந்தைக் குடித்தார். சிறிது நேரத்திற்குப் பிறகு சொன்னார்: "என்ன செய்யறது மேரி? ரோடு இல்லை. வேறு யாருக்காவது அதிக லாபத்தில் விக்கிறதுக்கு எனக்குத் திறமை இல்லை. காட்டில இருந்தா இப்படித்தான் ஆகும். பன்வாரி அழைத்துக் கொண்டு வந்தான். அவன் நாட்டுப்புறத்தான், அவன் அம்மாவைப்போல. நான் முதலில் மாட்டேன் என்றுதான் சொன்னேன். அந்த லால்சந்தும் முல்னியும் ரொம்ப வெறுப்பு காட்டினாங்க. வீட்டிலும் ரொம்ப எதிர்ப்புகள்."

"பன்வாரியும் இதில் பைசா வாங்கியிருக்கிறான்."

"உனக்கு எப்படித்தெரியும்?"

"எனக்குத் தெரியும்,"

"பாத்தியா, என்ன வெட்கக்கேடான விஷயம்?"

பெருமூச்சு விட்டுக் கொண்டே பிரஸாத்ஜி ஒரு ரூபாயை எடுத்து அவளிடம் கொடுத்தார். அவ்வப்போது அவர் இப்படிச் செய்வது வழக்கம். அவர் சொன்னார்: "இதோ பார். ஒரு பழம்,

ஒரு சோளக் கொத்துக்கூட பறி போகாதபடி நீ எப்படியெல்லாம் கஷ்டப்படுகிறாய்- என்னையே ஏமாத்துறான் என் சொந்தப் பிள்ளை- ஒண்ணும் புரியலே, என்ன செய்யறது? நீயே சொல்லு, நான் செத்துப் போயிட்டா இதெல்லாத்தையும் வித்துட்டு ஓடிப் போய் விடுவானோ என்னவோ எனக்கெப்படித் தெரியும்-?"

"எப்போவாவது ரோடு வந்தே தீரும். இனிமே மரம் வித்தால் அவனுக்குக் கொடுக்காதீங்க. நீங்களே சிபாடோவுக்குப் போய் பெரிய கம்பெனிக்காரங்களோட நேராகப் பேசி காரியத்த முடிச்சிடுங்க. பேரம் பண்றப்போ இளகிடாதீங்க."

"நீ எல்லாம் சரியாத்தான் சொல்றே-"

குருடா கிராமத்து முதியோரிடம் மேரி சொன்னாள்: "இது என்ன, பன்னெண்டு அணாக்கும் எட்டணாவுக்கும்! தோக்ரி யிலும் சிபாடோவிலும் இதுக்கெல்லாம் பாபுங்க பையைக்கூட தூக்கமாட்டாங்க."

கிராமத்து முதியோர் சொன்னார்கள் : "என்ன செய்யறது மேரி? நாங்க தடுத்தா கிராமத்து ஜனங்க எங்க மேல வெறுப்புக் காட்டுவாங்க. யார் எங்களுக்கு இதுவாவது கொடுக்கிறாங்க அப்படின்னு சொல்லுவாங்க."

"அவங்களுக்குப் பேராசைதான் வந்திருக்கு. மறுபடியும் அஞ்சாறு வருஷத்தில வருவானுக. அப்போவாவது, மூணு ரூபா, இரண்டு ரூபான்னு பேசிக்கிங்க. அவன் கொடுத்துத் தானாகணும், இல்லாட்டி இங்கே வேலை செய்ய வெளியிலிருந்து எவன் கிடைப்பான்?"

"ரோடு இல்லை. வேலை கிடைக்கிறல்லை. ஒனக்குத்தான் எல்லாம் தெரியுமே மேரி?"

காண்ட்ராக்டரின் உண்மையான சொரூபத்தை தன் ஜனங் களுக்குச் சொல்லி எச்சரித்து விட்டதாக மேரி நினைத்தாள்.

ஆனால் தஷீல்தார் சிங் அவளை மறக்கவில்லை. சில நாட்களுக்குப் பின் மேரி ஒரு எருமை மாட்டின் மேல் உட்கார்ந்து கொண்டு மற்ற மாடுகளை மேய்த்துக்கொண்டு வீடு திரும்புகையில் தஷீல்தார் எதிரே வந்து நின்றான்.

சொன்னான்: "ஆஹா! என்ன அழகு! ஒன்னப்பாத்தா ஹேமா மாலினி மாதிரியிருக்கு."

"என்ன சொன்னே?"

"நீ ஹேமாமாலினி போல இருக்கே!"

"நீ ஆந்தை போல இருக்கே"

இந்த பதிலடியால் உற்சாகமடைந்த தஷீல்தார்சிங் அவளை

நெருங்கினான். மேரி எருமை மாட்டின் முதுகிலிருந்து இறங்க வில்லை. சட்டென்று கூரிய அரிவாள் ஒன்றை உருவிக் கையில் வைத்துக்கொண்டு அலட்சியமான குரலில் சொன்னாள்: "உன்னைப் போல டைட் பாண்டு, கருப்புக் கண்ணாடி போட்டுக் கிட்டிருக்கும் காண்ட்ராக்டருங்க தோக்ரி ராஸ்தாவில் ரூபாய்க்கு பத்து பேர் கிடைப்பாங்க. அவங்களுக்கும் இந்த அரிவாளைத்தான் காட்டியிருக்கேன். நம்பலேன்னா போய் கேட்டுத் தெரிஞ்சுக்க."

தஷீல்தாருக்கு அவள் பேசிய விதம் மிகவும் வசீகரமாக இருந்தது.

இரவு சாப்பாட்டு வேளையின்போது மேரி தன் நண்பனை அவமானப்படுத்தியதாக பன்வாரிலால் தந்தையிடம் புகார் செய்தான். ஆனால் பதில் சொன்னது மேரி. "என்ன அவமானப் படுத்திட்டேன் உன் நண்பனை?" மேரியின் குரலில் கடுமை தொனித்தது.

"ஏளனமாகப் பேசினியாமே-"

"இந்தத் தடவை பேச்சோடு விட்டுட்டேன். அடுத்த முறை இந்தமாதிரி வம்பு பண்ணினால் அவன் மூக்கை அறுத்துருவேன்."

பன்வாரி பயந்து விட்டான். "என்ன, ஏதாவது கேவலமா நடந்துக்கிட்டானா?"

"எனக்கு அது கேவலமாத்தான் பட்டுது. ஆனால் அது உங்களுக்கு சரியான நடத்தையாகப் படலாம்."

பிரஸாத்ஜி சொன்னார்: "நீ அவனிடம் கண்டிப்பாக சொல்லி விடு- மரம் வாங்க வந்துவிட்டு இந்த மாதிரி நடத்தையெல்லாம் நல்லாயில்லே."

"மேரியிடமும் சொல்லுங்கள்—ஸால் மரங்கள் வெட்டுறதப் பத்தி தோக்ரி பஜாரில் அவள் பேசக்கூடாதுன்னு. வீட்டு நிலத்தில் இருந்தாலும் ஸால் மரங்கள் சர்க்காருடையது. அவற்றை வெட்டுறது சட்ட விரோதம்."

"உன்னோட சட்டத்தை உங்கிட்டேயே வெச்சுக்க. இந்த பகுதியிலே யார்தான் ஸால் மரங்களை விக்கலே?"

மேரி பன்வாரியிடம் நேரிடையாகவே, "ஆமாம், ஸால் மரங்கள விற்பதை டோக்ரி பஜாரில் நான் சொன்னேன்."

"சொல்லாதேன்னு சொல்லியிருக்கிறபோது சொன்னியா?"

"என்னை ஒண்ணும் மிரட்டாதீங்க," மேரி சென்று விட்டாள். பிரஸாத்ஜி சொன்னார்: "இதெல்லாம் நல்லாயில்லை. உன் ஃப்ரெண்டுகிட்ட சொல்லிடு, நம்ம வீட்டிலே இருக்கா, நம்ம பொண் போல. அவளை ஏதாவது சொன்னா அது நமக்குத்தான்

அவமானம்."

பன்வாரி தஷீல்தாரிடம் சொன்னான்: "அவ ரொம்ப ராங்கிக்காரி. யாரையும் மதிக்கிறதில்லே."

"யாருக்கு மரியாதை வேணும்?"

"தவிர, அவளுக்குக் கல்யாணம் நிச்சயமாயிடுச்சு."

"எங்கே?"

"ஒரு முஸல்மானோட."

"ராம, ராமா! இந்த சமூகத்துல வேற மாப்பிள்ளை யாரும் கிடைக்கலியா?"

"அவ இஷ்டம்."

குருடா மாதிரி ஒரு காட்டுக் கிராமத்தில் மேரி ஓராவ்ன் மாதிரி ஒரு பெண் தன்னைத் தூக்கி எறிந்துவிட முடியும் என்று தஷீல்தார் சிங்கால் நம்பவே முடியவில்லை. மரங்கள் மேல் நம்பர் எழுதுவதும், அவற்றை வெட்டுவதும், துண்டாக்குவதும் நகர்த்துவதுமான காரியங்களில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும் போதே மேரியுடன் தன்னை பிணைத்துக் கொண்டிருந்தான். மேரி அவனுக்குப் பிடி கொடுக்க மாட்டாள், ஒரு முஸல்மானையே கல்யாணம் செய்து கொள்வாள் என்பதாலேயே அவனுடைய பிடிவாதம் அதிகரித்தது.

இதற்குப் பிறகுதான் அவன் டால்டன் கஞ்ச்சிலிருந்து மேரிக்கு ஒரு நைலான் புடவையும் பிரஸாத்ஜிக்கு ஒரு இனிப்புப் பெட்டியும் வாங்கி வந்தான். அடிக்கடி வந்து போவதாலும், அவ்வப்போது இங்கேயே சாப்பிடுவதாலும், மேரிக்கு ஒரு சேலை தருவதாகச் சொன்னான். பிரஸாத்ஜி ஏற்றுக் கொள்ளவில்லை. ஆனால் தஷீல்தார் சிங் விடுவதாக இல்லை. அப்போது மேரி தோக்ரி சென்றிருந்தாள். திரும்பி வந்தவுடன் புடவை விஷயம் கேள்விப்பட்டாள். முதலில் பிரஸாத்ஜியிடம் கணக்கு ஒப்பு வித்தாள். பிறகு சமையல் அறைக்குச் சென்று, ரொட்டியும் டீயும் சாப்பிட்டாள். பிறகு அந்தப் புடவையை எடுத்துக் கொண்டு கிளம்பினாள்.

தஷீல்தார் தனது கூடாரத்தில் உட்கார்ந்து கொண்டு ஆண், பெண் கூலிகளுக்கு கூலிப்பணம் பட்டுவாடா செய்து கொண் டிருந்தான். பெரிய கூட்டம். அதன் நடுவில் மேரி நுழைந்தாள். மட்டமான வசவுகளை அள்ளி வீசிவிட்டு துணியை அவன் முகத்தில் எறிந்தாள். "என்னை என்ன பட்டணத்து தேவிடியான்னு நெனச்சியா? புடவை கொடுத்து மயக்க வந்தியா? மறுபடியும் இப்படி வம்பு பண்ணினே- மூக்கு அறுந்து போகும். ஆமா-"

கையை ஆட்டிக்கொண்டு வெளியேறினாள்.

அவர்களிடையே தஷீல்தார் சிங்கின் முகம் சிறுத்துவிட்டது. இருந்தாலும் சமாளித்துக் கொண்டு சொன்னான்: "நல்ல மனசோட ஒரு சாமான் கொடுத்தேன்."

கிராமத்துப் பெரியோர்கள் சொன்னார்கள், "இனிமே இப்படிச் செய்யாதே."

"என்ன சொன்னீங்க?"

"இனிமேல் தராதே."

"அவ என்ன பதிவிரதையா? முஸல்மானோட கல்யாணம் கட்டிக்கிறவ.. என்ன பெரிய நல்ல பொம்பளெ?"

"மேலே பேசாதே-"

திடீரென தஷீல்தார் சிங்குக்குப் புரிந்தது. தன் சாதி ஜனங்களின் எண்ணிக்கை இங்கு மிகக்குறைவு. இவர்களோ அதிகம் பேர். எல்லாரிடமும் ஈட்டி, அரிவாள். அவன் மவுனமாகி விட்டான்.

இரவில் டிரைவரும் அவனிடம் சொன்னான்: "இந்த வீண் வம்பெல்லாம் உங்களுக்கு எதுக்கு? ஆதிவாசிங்க மட்டமானவங்க. போலீசுக்குத் தெரிஞ்சா ஆபத்து."

தஷீல்தாருக்கு மனைவி குழந்தைகள் உண்டு என்று டிரைவருக்குத் தெரியும். இருந்தாலும் தஷீல்தார் மேரியின் சபலத்தில் இருக்கிறான் என்றும் அவனுக்குப் புரிந்தது. மேரி என்னவோ மோகினிதான். ஆனால் அதற்காக ஆதிவாசிகளை கோபப்படுத்தி போலீஸ் வரை விவகாரம் போகவிடுவது முட்டாள் தனம். மேரி இணங்கினால் ஒரு தகராறும் இல்லை. மேரிக்கு மிக கோபம். இதை தஷீல்தார் புரிந்து கொள்ளவேண்டும்.

இதன் பின் பிரஸாத்ஜியும் உஷாராகி விட்டார். இதற்குப் பிறகு பிக்னிதான் டீ கொண்டு வந்தாள். தஷீல்தாரும் வீட்டுக்கு வருவதை விட்டு விட்டான். ஆனால் மேரியை அடைவதற்கான திட்டங்களை மட்டும் கைவிடவில்லை.

மேரி மாடு மேய்த்துத் திரும்பும் போதும், தோக்ரியிலிருந்து திரும்பிவரும் போதும், தோக்ரி போவதாகச் சொல்லிவிட்டு மூன்று மைல் தூரத்திலுள்ள முராயி ஸ்டேஷனுக்கு சென்றாலும், சும்மா சுற்றுவதற்கு மார்க்கெட்டுக்குச் சென்றாலும், தஷீல்தார் சற்று தூரத்தில் அவளைப்பின் தொடர்ந்து கொண்டிருந்தான்.

அவளுடைய தோழிகள் மேரியிடம், "அந்த காண்ட்ராக்டருக்கு உன் மேல கொள்ளை ஆசை."

"இதுவரைக்கும் அவன் கையில சிக்கலே இல்லியா? அதான்

இப்படி கிடந்து அலையறான். . . ஒரு தடவை அவன் கையில சிக்கிட்டாப் போதும். காதல் கீதல் எல்லாம் காத்துல பறந்துடும். எங்கம்மாவையும் இப்படித்தான் அந்த பாழாப்போன ஸாஹப் காதலிச்சான்."

"ஒன்னை நிச்சயம் கல்யாணம் பண்ணிக்குவான்."

"அவனுக்கு பெண்டாட்டி இருக்கு."

"இருந்தா என்ன?"

"இந்த வம்புப் பேச்செல்லாம் விட்டுத்தள்ளு."

மரம் வெட்டுவது தொடர்ந்தது.

நாளடைவில் குளிர் குறைந்தது. இங்கு மைல் கணக்கில் பலாச மரங்கள். புதுக் குருத்துகள் தோன்ற ஆரம்பித்தன. பிறகு ஒரு நாள் பஹான் தேவதையின் இருப்பிடத்திலிருந்து பெரிய டமார சத்தம் கேட்டது. ஆதிவாசிகளின் ஹோலி விழாவில் வேட்டையாடுவது இம்முறை பெண்களுடையது. பன்னிரண்டு வருடங்களுக்கு ஆண்களின் முறை. அதன்பிறகு ஒரு வருடம் பெண்களின் முறை. ஆண்கள் மாதிரி பெண்கள் ஈட்டி, வில், அம்புகளுடன் புறப்படுவார்கள். காட்டிலே, மலையிலே சின்ன சின்ன வேட்டைகள்—முள்ளம் பன்றி, முயல், பட்சிகள், தென்பட்ட எதையும் அடிப்பார்கள். பிறகு எல்லாரும் கூடி வனபோஜனம் செய்வார்கள். குடிப்பார்கள். மாலையில் வீடு திரும்புவார்கள். ஆண்கள் அவர்களின் முறையில் செய்வதையெல்லாம் பெண்கள் இம்முறை செய்வார்கள். பன்னிரண்டு வருடங்களில் ஒரு முறை, ஹோலிப் பண்டிகையின்போது அடுப்பை மூட்டி சுற்றி உட்கார்ந்து கொண்டு தங்கள் வீரப்பிரதாபங்களைப் பற்றிக் கதையளப்பார்கள். பூத்னி சொல்லுவாள்: "அந்த முறை நாங்க ஒரு சிறுத்தை அடிச்சுப் போட்டோம்- அப்போ நான் ரொம்ப சின்னப் பொண்ணு-"

கிழவிகள் வம்பு பேசுவார்கள். நடுவயதினர் சமைப்பார்கள். இளம் பெண்கள் பாடுவார்கள். எதற்காக வேட்டையாடுகிறார்கள் என்று இவர்களுக்குத் தெரியாது, ஆம்பிளைகளுக்குத் தெரியும். ஆயிரம் லட்சம் ஆண்டுகளாக இந்தத் தினத்தில் இவர்கள் வேட்டையாடி வந்து கொண்டிருக்கின்றனர். முன்பெல்லாம் காடுகளில் விலங்குகளில் இருந்தன. காட்டைச்சுற்றி வாழ்க்கை சுழன்று கொண்டிருந்தது. வேட்டையாடுவதில் பொருள் இருந்தது. இப்பொழுது காடு சூனியம். வாழ்க்கையும் ஜீவனற்ற பாழ். வேட்டையாடுவது இப்பொழுது அர்த்தமில்லாத சடங்கு. சொல்லப் போனால், ஒரு நாளைய அற்ப சந்தோஷத்திற்காகத்தான் இந்த ஆர்ப்பாட்டமெல்லாம்.

தஷீல்தாரின் சோர்வில்லாத, ஒருமுனைப்பாங்கான பின் துரத்துதலால், மேரியின் தைரியம் குறைந்து கொண்டு வந்திருந்தது. விஷயம் ஜாலிம் வரை எட்டலாம். அவனுக்குத் தெரிந்தால் அவன் சீறியெழுந்து தஷீல்தாருடன் அடிதடியில் இறங்கலாம். தஷீல் தாருக்குப் பணமிருக்கு, ஆள் பலமும் இருக்கு. நகரமோ கெட்டுக் கிடக்கு- ஏதாவது திருட்டு கிருட்டு வழக்கை ஜோடித்து ஜாலிமை மாட்டி விடலாம்-

தஷீல்தாரும் தனது உறுதியை இழந்து கொண்டிருந்தான் விரைவில் மரம் வெட்டும் பணி முடிந்துவிடும். கிளம்பிப் போகவேண்டும். பிறகு-? தஷீல்தார் ஒரு முறை துணிச்சலாக மேரியின் கையைப் பிடித்து விட்டான்.

வேளையும் அனுகூலமாகவிருந்தது. இம்முறை ஆண்கள் வேட்டையாட மாட்டார்கள். குடித்துவிட்டு புதிய புதிய ஹோலிப் பாட்டுகளைப் பாடிக்கொண்டு, கூட்டமாக பணம் சேகரிக்க புறப்படுவார்கள். ஹோலிக்காக அவர்களுக்கு கள் சப்ளை செய்வதாக தஷீல்தார் சொல்லியிருந்தான். மரம் வெட்டும் இடத்திலிருந்து வீடு திரும்புகையில் பாட ஆரம்பித்து விடுவார்கள். ஒவ்வொரு நாளும் பாட்டு! ஒரே மாதிரி அலுப்புத் தட்டும் வர்ணமெட்டில். மேரி அதை கேட்டுக் கொண்டிருந்தாள். கேட்டுக் கொண்டேயிருந்த போது மாலை ஆகி விட்டிருந்தது. வீட்டை நோக்கிப் புறப்பட்டாள்.

தஷீல்தாருக்கு அவள் வருவாள் என்று தெரியும், அவளை மறித்து கையை கெட்டியாகப் பிடித்துக்கொண்டு, “இன்று உன்னை விடமாட்டேன்,” என்றான்.

மேரி முதலில் பயந்து விட்டாள், தன்னை விடுவித்துக் கொள்ளும் போராட்டத்தில் அவளுடைய அரிவாள் நழுவி கீழே விழுந்துவிட்டது.

கடும் முயற்சிக்குப் பிறகு, சத்தமேயில்லாத மல்லாட்டத் திற்குப் பிறகு, தன்னை விடுவித்துக் கொண்டாள். இரண்டு பேரும் எழுந்து நின்றார்கள். தஷீல்தாரின் முகத்தில் இப்பொழுது கறுப்புக் கண்ணாடியில்லை. அடர்ந்த ஸைட் பேர்ன். நீளமான மயிர், டெர்ரி க்ளாத் பேண்ட், கூர்மையான ஷூக்கள், மார்பில் சிகப்பு நிற சட்டை. ஹோலிப் பாட்டு இசைப் பின்னணியில் அவன் அவளுக்கு ஒரு மிருகமாகத் தோன்றினான். மிருகம் என்ற சப்தம் மேரியின் மனதில் இடித்தது.

சட்டென்று மேரி சிரித்தாள்.

“மேரி!”

"போதும், அங்கேயே நில். கிட்ட வராதே,"

"உன்னை- நான் உன்னை-"

"என்னை நீ மிகவும் விரும்பறே. அதானே?"

"ரொம்ப."

"நல்லது."

"என்ன நல்லது?"

"நிஜமாகவே விரும்பறேன்னு தெரிஞ்சுகிட்டேன்."

"நிஜமாகவே உன்னை நான் விரும்பறேன். உன்னைப் போல ஒரு பொண்ணை நான் பாத்ததேயில்லை. உனக்கு லட்சக்கணக்கில பணம் கொடுக்கலாம். உன்னை சரியா வெச்சுக்கத் தெரியுமா அந்த பஜார் ரௌடிக்கு, அந்த முஸல்மானுக்கு?"

"நீ வெச்சுப்பியா?"

"நிச்சயமா- துணிமணி குடுப்பேன், நகைகள் போடுவேன்."

"அப்படியா?"

"எல்லாம் கொடுப்பேன்."

மேரி நீண்ட பெருமூச்சு விட்டாள். பிறகு சொன்னாள். "இன்னிக்கு வேண்டாம். இன்று நான் வீட்டிலில்லை."

"எப்போ, மேரி- எப்போ?"

மேரியின் முகமும் கண்களும் மிருதுவாயின. சொன்னாள்: "ஹோலி தினத்தன்னிக்கு. நீ அந்தப் பள்ளத்துக்குப் பக்கத்துல இரு. எல்லாப் பொண்களும் வேட்டையாட வெகு தூரம் போயிரு வாங்க. நான் உன்னிடம் வருகிறேன். உனக்குத்தான் எந்தப் பள்ளம்னு தெரியுமே? தினமும் அந்த பாறாங்கல் மேல உட்கார்ந்து பார்த்துக்கிட்டே இருப்பியே?"

"புரிஞ்சுது-"

"சரி, அந்த இரவே இருக்கட்டுமா?"

"சரி, மேரி."

"ஆனா ஒருத்தருக்கும் ஒண்ணும் சொல்லாதே. ஆம்பிளைங்க கெட்டுத் திரிஞ்சா ஒண்ணும் ஆகாது. பொம்பிளங்கன்னா ஆபத்து. நான் வீணா அந்த முஸல்மானை கட்டிக்க விரும்பியிருந்தேன்."

"இப்போ அவனை கல்யாணம் கட்டிக்கப் போறதில்லியா?"

"இனி மேலுமா? நீயும் தைரியமா இரு- முன்ன மாதிரி என் பின்னால சுத்தாதே."

"உனக்காக நான் எவ்வளவு கஷ்டப்பட்டிருக்கேன் தெரியுமா?"

"எல்லாக் கஷ்டத்தையும் ஹோலியன்னிக்கு நீக்கிடுறேன்."

மேரி அவன் கழுத்தில் கையைப் போட்டு கொண்டு, "நீ ரொம்ப நல்லவன். முதல்லே எனக்குப் புரியாம போச்சு," என்று

சொல்லி வீட்டுக்கு திரும்பிப் போய்விட்டாள். மறுபடியும் தன்னை பிடிக்க தஷீல்தார் வரமாட்டான் என்று அவளுக்குத் தெரியும்.

முந்தின இரவு தீ கொழுந்து விட்டெரிந்தது. இன்றிரவும் ஹோலித் தீ எரியும். நேற்றைய தீ வானத்தை அளாவி அதை சிறிது நேரத்திற்கு வண்ணமயமாக்கி விட்டிருந்தது. இன்று காலையிலிருந்தே ஆடவர்கள் குடிப்பது, பாடுவது, வண்ணப்பொடி தூவுவது போன்ற கேளிக்கைகளை ஆரம்பித்திருந்தனர். மிக வயதான கிழவிகள் மட்டும் குழந்தைகளை கவனித்துக் கொண்டிருந்தனர்.

பெண்கள் எல்லாரும் காட்டில். அவரவர் வீட்டு முன்பு, ஈட்டி, ஆண்களின் அம்பு, வில், எல்லாம் எடுத்துக்கொண்டு தயாராக இருந்தனர். பஹான் தேவதையின் முரசொலி கேட்ட வுடன் அவர்கள் வானைப் பிளக்கும் கோஷத்துடன் கிளம்பி விட்டனர். பிரஸாத்ஜியின் சட்டையையும் அவர் மனைவியின் ஒரு பாவாடையையும் அணிந்து கொண்டு பிக்னியும் கிளம்பி விட்டாள்.

பூத்னி, மூங்ரி, ஸோமாரி, சனிசரி—இவர்களுக்கு இங்கும் அங்கும் ஓடித் திரிவதிலேயே பகல் கழிந்தது. பருப்பு, அரிசி, பாத்திரம், குடித்த பின் உண்பதற்கான பொரித்த சோளம், வெங்காயம், பச்சை மிளகாய் எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு கேட்பாரற்றுக் கிடக்கும் பம்ஃபீல்ட் பங்களாவுக்குச் சென்றனர். அங்கு கிணற்றுத் தண்ணீர் கிடைக்கும். ஆண்களும் அங்கு சென்றுதான் சமைத்து உண்பார்கள். பூத்னி சொன்னாள்: "எங்க காலத்துல முயல், பறவைகள், முள்ளம்பன்றியென்று ஏதாவது ஒண்ணும் இல்லாம வரவே மாட்டோம்– நீங்கள்ளாம் எப்படி வேட்டை ஆடுறீங்கன்னு பார்ப்போம்.'

மேரி இன்று ஜாலிம் தந்திருந்த புடவையை உடுத்தியிருந்தாள். ஆடிக்கொண்டே பூத்னியை கட்டிப் பிடித்துக் கொண்டு, "வேட்டை ஆடி முடிந்த பிறகு உன்னை வந்து கல்யாணம் கட்டிக்கப் போறேன். அப்போ நான்தான் மாப்பிள்ளை– நீதான் மணப்பொண்ணு!"

"அப்படியே ஆகட்டும்."

"உன்னை ஆடச்சொல்லுவேன்."

"ஆடுகிறேன்."

மேரி இன்று ஆனந்தத்தில் மிதந்து கொண்டிருந்தாள். அம்மா வளர்த்த நான்கு கோழிகளை பத்து ரூபாய் கொடுத்து அவளிட மிருந்து வாங்கிகொண்டு வந்திருந்தாள். கோழிகள் இப்பொழுது

சனிசரியின் கையில். இரண்டு கள் பாட்டிலும் கொடுத்திருந்தாள். இது கொஞ்சம் அதிகமானதுதான். ஏற்கெனவே இப்பெண்கள் தஷீல்தாரிடமிருந்து கள்ளைக் கேட்டு வாங்கியிருந்தார்கள். கள்ளைத் தவிர ஒரு ஆட்டையும் தஷீல்தார் கொடுத்திருந்தான். "மாலையில் வந்து, உங்களுக்கு பட்டினத்து 'டுவிஸ்ட்' டான்ஸ் செய்து காட்டுகிறேன். பாட்டில் பாட்டிலா உங்களுடன் குடிக்கப் போறேன்," என்றான்.

மரங்கள் வெட்டியாகி விட்டது. எங்கு பார்த்தாலும் மரத் துண்டுகள் இறைந்து கிடந்தன. தஷீல்தார் மிகுந்த தாராளத்துடன் அவற்றில் சிலவற்றை குருடா ஜனங்களுக்கு ஹோலித் தீ கொளுத்திக் கொள்ள கொடுத்திருந்தான் "திரும்பவும் வருவேன், உங்களைக் கொண்டே மரம் வெட்டுவேன், அப்போதும் உங்களைக் கள்ளில் மூழ்கடித்து விடுகிறேன்" என்றான்.

பூத்னியுடன் விளையாட்டுப் பேச்சு முடிந்த பிறகு மேரியும் கிளம்பி விட்டாள். சனிசரி சொன்னாள்: "ஆஹா! இன்று மேரி எப்படியிருக்கிறாள். மூல்ஜி பிள்ளையின் மனைவி மாதிரி."

பூத்னி, "அவள் கல்யாணம் செய்து கொண்டு போய்விட்டால் குருடா வெறிச் சோடிப்போய்விடும்" என்றாள்.

மூங்கிரி சொன்னாள்: "ஒரு போதும் வெறும் கையை வீசிக்கொண்டு அவன் வந்ததில்லை. நீங்க மேரியத்தான் பார்த் திருக்கீங்க. பிகினியை மறந்துவிட்டீங்க. சின்ன வயசுலெ பிக்னி எப்படியிருப்பா தெரியுமா?"

ஸோமுரி அப்பொழுது உள்ளே நுழைந்தாள். திடீரெனப் பாடத் தொடங்கினாள்.

"ஹோலித் தீயே! ஹோலித்தீயே!
வீட்டுக்கு வா, வீட்டுக்கு வா!
மறந்துவிடாதே. மறந்துவிடாதே"

மற்ற பெண்களும் அவளுடன் இணைந்து பாடினார்கள். வயதானவர்களும் நடுவயதினரும் நாலு பழைய பாட்டுக்களைப் பாடினார்கள். வெய்யில் ஏறுகிறது. மயக்கம் கூடுகிறது. சூரியன் எரிக்கிறது. தொலைவின் எல்லையிலிருந்து முரசு ஒலிக்கிறது.

மேரி எழுந்து சென்றுவிட்டாள். பெண்கள் எல்லாரும் குருடா மலை மேல் ஏறத் தொடங்கினர். காட்டுக்குள் நுழைந்தனர். ஆற்றின் ஓரமாகவே சென்றனர். மேரி சிரித்தாள்.

அவளுக்கு இந்த வேட்டை தேவையில்லை. எல்லா விளை யாட்டுகளுக்கும் போலவே இந்த வேட்டை விளையாட்டுக்கும் விதிகள் உண்டு. முள்ளம்பன்றி, முயல் போன்ற விலங்குகளை

வேட்டையாடி என்ன பயன்? வலை விரித்து பெரிய வேட்டை யாட வேண்டும்.

வண்ணப்புடவையும் சிகப்பு ரவிக்கையும் அணிந்த மேரி பார்ப்பதற்கு நடமாடும் பலாச மரம் போல் துலங்கினாள். காற்றில் மிதக்கும் பலாசப்பூ போலிருந்தாள். நாலாபக்கமும் பலாச மரங்கள். மேலும் மேலும் பலாச மரங்கள்தான். எல்லாவிடத்திலும் சிகப்பு. ஒரே சிகப்பு. ஒரு முயல் நகர்ந்தது. மேரி சிரித்தாள். அதன் இருப்பிடம் எந்தப் பள்ளத்தில் என்று அவளுக்குத் தெரியும். "போ, போ, பயப்படாதே-" என்றாள் சிரித்துக் கொண்டே. 'ஓ! மதுவின் போதைதான் எப்படி மயக்குகிறது! என்ன கிறக்கம்! ரத்தத்தில் ஏதோ தாகம் நாட்டியமாடுவது போல், தஷீல்தார்! நான் வந்து விட்டேன்-'

தஷீல்தார் அவனை மிகவும் விரும்புகிறான். அவனிடத்தில் ஜாலிமின் சாயை கொஞ்சம் கூட இல்லை. தஷீல்தார் எவ்வளவு உக்கிரமாக இருக்கிறான்! எவ்வளவு டிகிரி ஃபாரன்ஹீட் இருக்கும் இவனுடைய வெப்பநிலை? மேரியைப்போல் அவனிடமும் காட்டு ரத்தமிருக்குமோ? என்ன துணிச்சல்!

ஒரு முள்ளம் பன்றி. "போ, போ, போய்விடு-" வேறு தினமாக இருந்தால் அவள் தின்பதற்காக அதை அடித்துப் போட்டு விட்டிருப்பாள். இன்று எந்தச் சின்ன வேட்டையிலும் அவள் மனது செல்லாது. பெரிய வேட்டை வேண்டும். மனிதன் வேண்டும். தஷீல்தார்-

தூரத்திலிருந்து பள்ளம் தெரிகிறது. பாறை நிமிர்ந்திருந்தது. மேலேயிருந்து ஒரு கார்னிஸ் மாதிரி நீட்டிக் கொண்டிருந்தது. அங்கிருந்த கிஷ்கிந்தா கொடி இறங்கி வந்து ஒரு வலையாக உருவெடுத்திருந்தது. வலை முழுவதும் கிஷ்கிந்தா பூவின் மஞ்சள் நிறம். கொடிக்குப் பின்னால் மறைவிடம். நினைக்கவே மேரியின் ரத்த ஓட்டம் அதிகரித்தது. முன்னால் சென்றால் கொடி. வலைக்குப் பின்னால் பள்ளம். பள்ளம் அருகில் தனியான ஒரு பாறை. பள்ளத்தின் ஆழம் எவ்வளவு என்று யாருக்கும் தெரியாது. யாரும் இறங்கிப் பார்த்ததில்லை. அந்த ஆழமான, குளுமையான இருளுக்குப் பெயர் வைக்க வேண்டுமென்றால்? ஆஹா! தஷீல்தார்! தஷீல்தாரின் கருஞ்சிகப்புச் சட்டை தெரிகிறது.

ஃபாரின் விஸ்கி, சிகரெட், தஷீல்தார்.

"போங்க, உள்ளே போங்க."

"உள்ளே எங்கே? உன் உள்ளத்திலா?"

"ஆமா, ஆமா."

"பள்ளத்தின் வாயிலே, கொடி வலையின் மறைவிலே?"

"முதல்ல கள்ளைக்குடி,"

"கள்ளு மட்டும் ஏன்? முதல்ல சிகரெட் கொடு."

'எப்படி இருக்கு?"

"ரொம்ப ஒசத்தியா இருக்கு-"

"இவ்வளவு வேகமாக் குடிக்காதே."

"போதை வேணும்."

"எவ்வளவு போதை வேணும்?"

"ரொம்ப, ரொம்ப போதை வேணும்." மறுபடியும் கள்ளைக் குடிக்கிறாள்.

மயக்கம் வருகிறது. தலையில் நட்சத்திரங்கள் மின்னுகின்றன. அணைகின்றன, மின்னுகின்றன, அணைகின்றன. ஆஹா!

போதை மயக்கத்தில் சுழலும் அவள் கண் மேல் திரை படர்கிறது. பிறகு அது அசைகிறது. திரைக்கு மேலே தஷீல்தாரின் முகம் தெரிகிறது. "இன்னும் கொஞ்சம் கள் கொடு, இன்னும் கொஞ்சம் கள் கொடு." பாட்டிலை பிடுங்கிக் கொண்டு போகிறாள். பள்ளம் மிக ஆழமானது, சப்தமே வரவில்லை. எவ்வளவு ஆழமோ! முகம் இப்பொழுது ஒரு வேட்டைக்காரனுடையது போல் ஆகிவிட்டிருந்தது.

மிகுந்த ஆதரவுடன் தஷீல்தாரின் முகத்தை தன் கைகளால் வருடுகிறாள். திடீரென்று அவன் உதடுகளில் முத்தமிட்டாள். தஷீல்தாரின் கண்களில் ஒரு ஜ்வாலை எழுந்தது. வாய் பிளந்தது. உதடுகள் சிவந்தன. காயம் பட்டாற்போல் பற்கள் மின்னின. மேரியைப் பார்த்துக் கொண்டே இருந்தான். முகம் மாறுகிறது. மாறிக் கொண்டே இருக்கிறது. மறுபடியும்? ஆமாம், ஒரு மிருகத்தின் முகம்.

"இப்போ என்னை எடுத்துக்கொள்."

மேரி சிரித்துக் கொண்டே அவனை தழுவிக் கொண்டாள். தஷீல்தார் சிரித்தான். மேரி அரிவாளைக் கையில் எடுத்துக் கொள்கிறாள். உயர்த்துகிறாள், இறக்குகிறாள், உயர்த்துகிறாள், இறக்குகிறாள்.

லட்சம் சந்திரர்கள் உதித்து மறைந்து விட்டிருந்தார்கள். மேரி எழுந்து நின்றாள். ரவிக்கையில், சேலை மேல் ரத்தம். ஆற்றில் அலசிக்கொள்ளலாம். டக்கென்று, லாவகத்துடன் தஷீல்தாரின் பாக்கெட்டிலிருந்து பர்ஸை எடுத்தாள். நிறைய பணம். இடுப்பி லிருந்த தன் பையைத் திறந்து, தான் சேகரித்து வைத்திருந்த பணத்துடன் இந்தப் பணத்தையும் சேர்த்துக்கொண்டாள்.

பிறகு தஷீல்தாரை பள்ளத்தில் தள்ளினாள். அவனுடைய பர்ஸ், சிகரெட், கைக்குட்டை, எல்லாவற்றையும் அதே பள்ளத்தில் வீசினாள். கல் மேல் கல் மேல் கல். ரத்த வாசனையை மோப்பம் கண்டு, ஓநாய் நரி எல்லாம் இரவில் வரலாம். ஒருவேளை வராதோ?

மேரி வெளியே வந்தாள். ஆற்றின்பக்கம் நடக்கத் தொடங்கினாள். பிறகு ஆற்றில் இறங்கி நிர்வாணமாக நீந்தி நீந்தி குளித்துத் திளைத்த போது அவள் முகம் அபூர்வமான திருப்தியில் மிளிர்ந்தது. ஒரு ஆணுடன் சம்போகம் செய்து முடிந்தவுடன் எழும் எல்லையில்லாத் திருப்தி அவள் முகத்தில் திகழ்ந்தது.

பெண்கள் கூட்டத்தில் எல்லாரையும் விட மேரிதான் அதிகம் குடித்திருந்தாள். பாட்டுப்பாடினாள். நாட்டியம் ஆடினாள். எல்லாரையும் விட அதிகமாக மாமிசம், சோறு, எல்லாம் தின்றாள். வேட்டை ஒன்றும் கிடைக்கவில்லை போலும் என்று அவளைக் கேலி செய்தனர். பிறகு பூத்னி சொன்னாள்: "எப்படி சாப்பிடுகிறாள், பாரு! வேட்டையில் மிகப் பெரிய மிருகத்தை அடித்து விட்டவள் போல!"

மேரி பொய்க் கோபத்துடன் பூத்னிக்கு ஒரு முத்தம் கொடுத்தாள். பிறகு இரண்டு காலி பாட்டில்களை எடுத்துக் கொண்டு நாட்டியமாடத் தொடங்கினாள்.

மாலைக்காற்றின் குளிர். சனிசரி நெருப்புக் கொளுத்தினாள்.

சாரயம், பாட்டு, சாராயம், பாட்டு- பிறகு நடனம். எல்லாரும் சேர்ந்து தீயைச் சுற்றி ஆடினார்கள். ஆடும்போது பாடினார்கள். .

"ஹர ஹர மஹா தேவா!
ஹர ஹர மஹா தேவா
ஆண்டு தோறும் நடக்கட்டும்,
ஆண்டு தோறும் நடக்கட்டும்
இதே அளவில் ஹோலி விழா
இதே அளவில் ஹோலி விழா
ஆண்டு தோறும் நடக்கட்டும்
ஆண்டு தோறும் நடக்கட்டும்
இதே அளவில் எங்கள் வேட்டை
இதை அளவில் எங்கள் வேட்டை.
இதே அளவில் உனக்குப் படைப்போம்
இதே அளவில் உனக்குப் படைப்போம்
சாராயம், சாராயம்."

ஆடிக்கொண்டே மேரி பின்னுக்குச் சென்றுவிட்டாள்.

ஆடிக்கொண்டே இருளில் மறைந்து விட்டாள். மற்றவர்கள் அதை கவனிக்காமல் தங்கள் ஆட்டத்தில் மூழ்கிவிட்டிருந்தனர். மேரி இருட்டில் ஓடத்தொடங்கினாள். வழி அவளுக்கு அத்துபடி. குருடா மலையிலிருந்து இன்றிரவே அவள் ஏழு மைல் கடந்து தோக்ரிக்குச் செல்ல வேண்டும். ஜாலிமை அழைத்துக் கொள்ள வேண்டும். தோக்ரியிலிருந்து பஸ் போகும், மரம் ஏற்றிச்செல்லும் ட்ரக்குகள் போகும். எங்கேயாவது போய்விட வேண்டும். ராஞ்சி, ஹஜாரிபாக், கோமோ, பாட்னா எங்காவது- இன்றைய பெரிய வேட்டைக்குப் பிறகு அவளுக்கு ஜாலிம் தேவை.

தூரத்தில், வெகு தூரத்தில், ஹோலியின் தீ அந்தகாரத்தில். அத்தீயின் வெளிச்சத்தில் ரயில்வே லைன் மேல் ரயில் போய்க் கொண்டிருக்கும். மேரியின் மனதில் பயம் எழவில்லை. எந்த மிருகத்திடமும் பயமில்லை. இன்று அவள் எல்லாவற்றையும் விட பெரிய மிருகத்தை வேட்டையாடி விட்டிருக்கிறாள். ஆகையால், மற்ற நாலு கால் மிருகங்களிடம் அவளுடைய ரத்தத்தில் ஊறியிருந்த பயம் அவளிடமிருந்து முழுமையாக விலகிவிட்டிருந்தது.

# மாலையும் காலையும் நீ அம்மா

## 1

சித்திரை வைகாசி மாத வெய்யிலில் நிலம் பிளந்து பட்டுக்கிடந்தது. அச்சமயத்தில்தான் கந்தோரியின் அம்மா ஜடி டாகூர்ணி செத்துப்போனாள். இறப்பதற்கு முன், ஜடி டாகூர்ணியின் வயிறும் கழுத்தும் வீங்கிப்போய் ஒரு ட்ரம் மாதிரியாகி விட்டிருந்தாள். மூங்கிலால் வேயப்பட்ட டோலியில் அவளை உட்காரவைத்து ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் சென்றான் ஸாதன் கந்தோரி.

"என்ன ஆஸ்பத்திரி இட்டுகிட்டு போகாதே, ஸாதன். இங்கே இருக்கிற தோட்டிப்பய மவனுக என் வயத்தக் கிளிச்சு கொடல வெளியே எடுத்து போட்டுடுவானுக."

"டாக்டரே சொல்லியிருக்காராம்மே- உன்ன ஆஸ்பத்திரிக்கு கூட்டிகிட்டு போகணும்னு."

"என் ராசா, என் செல்லக் கண்ணு- அந்தப் பசங்க என் வயித்தக் கிளிச்சுப் போட விடாதேடா, ராசா."

"யாரும் ஒன் வயித்தக் கிளிக்க மாட்டாங்க அம்மே."

"கிளிப்பாங்கடா. ஒனக்கு என்னா தெரியும்-? நீ மொலப் பால் குடிக்கிற பாப்பா. ஆஸ்பத்திரித் தோட்டிப்பசங்க குடலை யெல்லாம் வெளில இழுத்துப் போடுவானுங்க, டாக்டருங்க அதை பாட்டில்ல போட்டு மூடி வெச்சுப்பாங்க, கண்ணு."

"எதுக்கு அம்மே?"

"ஒனக்கு என்னா தெரியும்? நீ இன்னமும் பச்சப் புள்ள. இந்தக் கலிகாலத்துல சனங்க ஒடல எரிக்கிறதுமில்ல. பொதைக் கிறதுமில்ல."

"சீ, அம்மே! என்னா ஒளர்றெ?"

"மெய்யாலுமே, கண்ணு- வீட்டுல ஒருத்தன் செத்துப்போனா வேண்டியவங்க பாடையில எடுத்துகிட்டுப் போவாங்க, மரியாதை

பண்ணுவாங்க, இல்லியா? நீயே சொல்லு-"

"நெசந்தான்."

"இந்த டாக்டருங்க, ஆஸ்பத்திரிக்காரனுக எல்லாம் கழுகு மாதிரி சுத்தி சுத்தி செத்தவங்களை குறி வெக்கறானுங்கடா."

"அம்மே-"

"ஆமா, சுத்தி சுத்தி பாத்துகிட்டே இருக்காங்க. வாரிசில்லாத பொணம் கெடச்சா, இவங்க கூட்டுகாரங்களா பங்கு போட்டுக் கிறாங்க. காலிப்பசங்க கொடல டாக்டருக்கு கொடுத்துருவானுக, பாக்கியிருக்கிற துணிமணியை அவங்க எடுத்துக்குவானுக. பொறகு, தோல உரிச்சு, எலும்பெடுத்து வித்து பணம் பண்ணுவானுக-"

"தத்தெரிக்கெ! இது நடக்க நா வுடுவேனா?"

"நீ விடமாட்டே, எனக்குத் தெரியும். நான் ஒன்னோட ராவுத் தாய் இல்லையா? என்ன ஆஸ்பத்திரில சாக விடாதே."

"பெனாத்தாதெ, அம்மே-"

ஸாதன் அதட்டி விட்டு எழுந்தான். ஒரு காலத்தில் இவனை வயிற்றில் சுமந்தவள் அவள். இருவரும் மிகவும் புராதனமான சாதியைச் சேர்ந்தவர்கள். கிழப்புலி வம்சத்தினர். அவர்களின் பரம்பரைப் பெயர் பாக்மாரா — (பட்சியைக் கொன்ற) பரம்பரை, அதே வம்சத்தில் பெண்ணாய்ப் பிறந்த ஜடேஸ்வரிதான் இந்த ஸாதனை பத்து மாசம் சுமந்து பெற்றெடுத்தாள்.

எப்படி இந்தப் பிள்ளையைப் பெற்றெடுத்த தாய் 'மாலை-காலை அன்னையாக' மாறினாள் என்பது ஒரு அதிசயமான விருத்தாந்தம். ஸாதன் பதினெட்டு மாதக் குழந்தையாயிருக்கும் போது, ஜடேஸ்வரியின் மேல் 'சாமி' வந்தது. அப்போதிலிருந்து, பகலில் அவள் ஜடி டாகூர்ணி அம்மன். சூரியன் உதித்ததிலிருந்து பொழுது சாயும் வரை டாகூர்ணியை எவரும், அம்மா, மருமகள் அக்கா போன்ற உறவுப்பெயர்களைச் சொல்லிக் கூப்பிடக் கூடாது.

ஸாதனையும் ஜடி இவ்வாறு தடுத்திருந்தாள்.

"அம்மான்னு கூப்பிடாதே, என் ராசா."

"எப்போதுமா?"

"இல்லே, கருக்கெல்லெ. பொறகு பொழுது சாஞ்சப்புறம், நீ என்னை அம்மான்னு கூப்பிடலாம்."

"அப்படீன்னா மாலையில, காலையில மாத்திரம் அம்மான்னு கூப்பிடலாம்?"

"ஆமா கண்ணு."

"மாலையில, காலையில நீ அம்மா. பகல்ல டாகூர்ணி. அப்படித்தானே?"

*"ஆமா, ராசா. நான் ஒன்னோட மாலை-காலை அம்மா."*

*எப்படி இந்த காலை-மாலை ஜடேஸ்வரி, ஜாதவ்பூர் ரயில்வே லைனைக் கடந்து இந்தப் பக்கத்திற்கு வந்து சேர்ந்தாள், எப்படி தன் மகனுக்கு ரிக்ஷா ஏற்பாடு செய்து கொடுத்தாள், எல்லாம் ஒரு பெரிய கதை.*

*தன் ஆயாவைத் தவிர வேறு எதுவும் அறியாதவன் ஸாதன் கந்தோரி. முப்பது வயதான பிறகும் அவன் ஒன்றும் தெரியாத வெகுளி. எருமை மாடு போல அவன் உடலில் வயிறு தவிர வேறு ஒன்றுமில்லை. சிகப்பு சைனா ரோஜா போன்ற இதயம், பாம்பைப் போல வழுக்கிச் செல்லும் நாளங்கள். பூப்போன்ற மென்மையான ஜீவகோசங்கள்—இவையெதுவும் அவன் உடலில் இல்லை. ஒரு வயிறு மட்டும்தான் இருந்தது.*

*மேலும் இருந்தது பசி. அவனுடைய தீராத பசியை பயன் படுத்திக் கொண்டு, அவனுடைய எஜமானின் இளைய மனைவி அவனை விறகு வெட்டி குவிக்கவும், ட்யூப்வெல்லிருந்து தண்ணீர் அடித்துக் கொண்டு வரவும், வேண்டுமென்ற அளவுக்கு கரி உடைத்துக் கொடுக்கவும் பயன்படுத்துகிறாள்.*

*எஜமானனின் அந்த இளம் மனைவி முக்காடு போட்டுக் கொண்டிருக்கும் ஒரு அழகி.*

*'ஸாதன்! எசமானி அம்மாவ கண் கொட்டாம பாக்காதே."*

*"மாட்டேம்மே."*

*"அப்படி பாக்கணும்னு தோணினா, அவளை ஆயான்னு நெனச்சுப்பாரு."*

*"சரிம்மே."*

*அம்மா எது சொன்னாலும், ஸாதன் சரி என்று சொல்லு வான். அவன் அம்மாதான் அவனுடைய உலகம், வாழ்க்கை, அவனுடைய சந்திர சூரியன் எல்லாம்.*

*அப்படிபட்ட அம்மா காய்ச்சலும் கழிச்சலும் வந்து உடல் வீங்கிப்போன போது, தன் எஜமானனிடம் சென்று "எனக்குக் கொஞ்சம் பணம் வேணும் எசமான்" என்றான்.*

*"என்ன விஷயம், ஸாதன்?"*

*"ஆயா சாகக் கிடக்கிறா எசமான்."*

*"என்ன ஆச்சு?"*

*"காய்ச்சலுங்க. பகல்லயே இருட்ட பாக்குறா, சக்கரை மிட்டாய் திங்கிறப்போ, அவலுங்கிறா, இன்னிக்கு பகல்ல என்னைப் பார்த்து, நீ என்ன அம்மான்னு கூப்பிடுங்கிறா."*

*"நீ அப்படிக் கூப்பிட்டாயா?"*

"ஆமா, எசமான். டாக்டரை இட்டுட்டு வரணும், பணம் கொடுங்க."

ஸாதனின் எஜமானர் அவனுக்குப் பத்து ரூபாய் பணம் கொடுத்துவிட்டு, "ஆயாவுக்கு வைத்தியம் பண்ணு, ஸாதன். ஆயிரம் இருந்தாலும் அவ உன்னைப் பெத்த மனுஷி."

"எங்க ஆயா மனுஷியில்லே, எசமான், அவ தேவிங்க, டாகூரிணீங்க—"

"நீ டாக்டரை கூட்டிக்கொண்டு வா."

அனாதி டாக்டர் யாருக்கு வைத்தியம் செய்தாலும் அவர்கள் செத்துப் போய்விடுகிறார்கள் என்பதால் மேற்குடி காலனி ஜனங்கள் அவரை அடித்து விரட்டி விட்டார்கள். இப்பொழுது அவர் ரயில்வே லைனுக்கு அந்தப் பக்கம் தனது டிஸ்பென்ஸரியை துவக்கியிருந்தார். இப்போது அவருக்கு யோக காலம். கொலை செய்யப்பட்டு கொண்டு வரப்படும் பிணங்களுக்கு "டைட் ஆஃப் ஹார்ட் ஃபெயிலியர்" என்று சர்டிஃபிகேட் எழுதிக்கொடுத்து உடனடியாக சுடுகாட்டுக்கு அனுப்பிவிடுகிறார். அந்தக் காலத்தில் மற்றும் ஒரு சௌகரியம் என்னவென்றால் சுடுகாட்டில் பணம் கொடுத்து எதையும் வாங்க முடியும்.

ஜடி டாகூர்ணி அனாதி டாக்டருக்கு சுக்கிரதசை அடிக்கப் போகிறது என்று முன்னரே சொல்லியிருந்தாள். அந்தக் காரணத் தினாலோ, அல்லது பல கொலைகள், பல கர்ப்பக் கலைப்புகள், பொய் சர்டிஃபிகேட்கள் போன்ற பாவங்களுக்குப் பயந்தோ, பிராமண வைத்தியர் அனாதி ஜடி டாகூர்ணியின் காலைப் பிடித்துக் கொண்டு, எண்ணெய், தேங்காய்-அரிசி-பருப்பு எல்லாம் கொடுத்து வணங்குவார்.

இந்தக் காரணத்தினாலேயே, அனாதி டாக்டர் அவசரமாக ஜடி டாகூர்ணியைப் பார்க்க வந்து சேர்ந்தார். ஜடியின் அறையில் பயங்கர நாற்றம். கட்டிலில் சிகப்பு நிற அழுக்குப் புடவை அணிந்துகொண்டு புராணக்கதைகளில் வரும் ராட்சசிகளைப் போல படுத்துக் கொண்டிருந்தாள், வயிறு உப்பி, கால் கைகள் ஊதிப்போய் கிடந்தன. அவள் கண்களில் மட்டும் ஆச்சரியமான ஒளி வீசிற்று. பீளை நிரம்பிய சிவந்த கண்கள் இவ்வளவு அழகாக இருக்க முடியும் என்று அனாதி டாக்டருக்கு இதற்கு முன் தெரிந்ததில்லை.

அனாதி டாக்டரின் டேபிளில் நடு நடுவே இளம் வயதுப் பெண்கள் தாங்கமுடியாத வேதனையில் படுத்திருப்பதுண்டு. அவர்கள் கண்களை விட ஜடி டாகூர்ணியின் கண்கள் அழகாக

இருந்தன. சாவின் வாயிலில் இருப்பவர்கள் கண்களில் தவிர வேறு எந்தக் கண்களிலும் இத்தனை சௌந்தர்யம் இருக்கமுடியாது.

அனாதி அதிர்ந்து விட்டார். நாடி பார்த்தார். வயிற்றைப் பார்த்தார். அவர் கண்களில் நீர் சுரந்தது.

ஜடி டாகூர்ணியிடம் தனது பாவங்களுக்குப் பிராயச்சித்தம் பெற வருஷத்தில் அவர் ஓரிரண்டு முறை வருவது வழக்கம்.

"தாயே, பாவம் நடந்துவிட்டது."

பகல் நேரத்தில் யாரும் ஜடி டாகூர்ணியை 'தாயே' என்று அழைப்பதில்லை. அனாதி டாக்டர் இரவில் முகத்தை மூடிக் கொண்டு வருவது வழக்கம்.

"என்ன பாவம், மவனே, என்ன பாவம்?"

"அந்தப்பொண்ணு செத்துடுத்து தாயே."

ஜடி டாகூர்ணி நீண்ட பெருமூச்சு விட்டுக்கொண்டே சொல்லுவாள்: "அவ மகாபாவி, மகனே. ஒனக்கு என்ன தெரியும்? அவளுடைய ஆத்மாவை யம தூதர்கள் இப்போ ஈட்டியால பொளந்துக்கிட்டிருகக்காங்க. பாவம் பண்ணி அவங்க குடும் பத்தின் முகத்தில கரியப் பூசிட்டுப் போயிட்டா. நல்ல வீட்டுப் பொண்ணு, அவ புத்தி இப்படி போயிருக்க வேண்டாம்."

"இப்போ என்ன பண்ணுறது, தாயே?"

"இதெ வாங்கிக்க கண்ணு, இந்த தாயத்து உடும்பு தொண்ட எலும்பால பண்ணது. கட்டிலுக்கு அடியில வெச்சுட்டு தூங்கு. தவிர ரூமுல கங்கா ஜலத்த மாலையில மூணு வாட்டி தெளி. எல்லாம் சரியாயிடும், என்ன...?"

அனாதி போன்ற பாவிகளுக்காக, ஜடி டாகூர்ணியை தவிர, வேறு யார் பிறந்தவுடன் இறக்கும் சிசுக்களின் நகம், உடும்பின் தொண்டை எலும்பு, தானேஷ் பறவையின் எண்ணெய் எல்லாம் சேகரித்து வைத்திருப்பார்கள்? ஜடி காசு வாங்குவதில்லை. ஒரு பைசா கூட வாங்குவதில்லை. ஒரு பிடி அரிசி மட்டும்தான் அவள் வாங்கிக் கொள்வாள். பொழுது சாய்ந்ததும், ஜடி டாகூர்ணி ஸாதனின் தாய் ஆகிவிடுவாள். அரிசியை சோறாக்கி தன் மக்குப் பிள்ளைக்குக் கொடுப்பாள்.

இனிமேற்பட்டு அனாதியை யார் காப்பாற்றுவார்கள்? இந்த துக்கத்தில் அனாதியின் கண்ணில் நீர் சுரக்கத் தொடங்கியது. அனாதி சொன்னார்: "ஸாதன், ஆஸ்பத்திரிக்கு எடுத்துக்கொண்டு போக ஏற்பாடு செய். டாகூர்ணிக்கு என்ன வியாதி என்று எனக்குப் புரியவில்லை."

கொஞ்சம் பணம் கொடுத்து விட்டு அனாதி சொன்னார்:

"ஒரு டாக்ஸி வெச்சிக்கிட்டுப் போ?"

ஸாதன் பீதியடைந்து விட்டான். பணத்தை' வாங்கிக் கொண்டு மிட்டாய்க் கடைக்கு போனான். துக்கத்தில், அவல், பொரி, சர்க்கரை மிட்டாய், கஞ்சா எல்லாம் வாங்கிக் கொண்டு அங்கேயே உட்கார்ந்து தின்னத் தொடங்கினான். குடம் குடமாக தண்ணீர் குடித்தான்.

டாக்ஸி டிரைவர் ஐடியை ஏற்றிச்செல்ல மறுத்துவிட்டான். "சாவு கிராக்கி, போற வழியில உயிர உட்டுரும்."

அவனுடைய எஜமானர் தன்னுடைய மூங்கில் தோப்பி லிருந்து கொஞ்சம் மூங்கில் வெட்டிக்கொள்ள அனுமதி கொடுத்தார். ஒரு டோலி தயார் செய்து அதில் அவளை உட்கார வைத்து ஸாதன் பங்கூர் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் சென்றான்.

ஆஸ்பத்திரி அவனுக்கு முற்றிலும் தெரியாத இடம். எவ்வளவு பெரிய கட்டிடம், எவ்வளவு ஜனக்கூட்டம்! ஸாதன் சொன்னான்: "பலராம் அண்ணே, பயமாயிருக்கு அண்ணே! கால் கையெல்லாம் உதறுது. இந்த ஆஸ்பத்திரிலே எவ்ளோ கதவுங்க! இதில் எது வழியா டாகூர்ணியெ உள்ளெ எடுத்துகிட்டுப் போறதுன்னு சொல்லண்ணே-"

"நீ ஒரு முட்டாப்பய, ஸாதன்!"

பலராம், ஜகதீஷ், உத்தர் ஆகியோர் டாக்டரை அழைத்து வந்தார்கள். ஐடி டாகூர்ணியை கட்டாயம் ஆஸ்பத்திரியில் சேர்த்து விட்டுத்தான் போகணும். டாக்டர் சாகக்கிடக்கிற கிழவியை சேர்த்துக் கொள்ள மறுத்த போது, ஸாதன் ஒரேடியாக கதறத் தொடங்கினான். "டாகூர்ணியெ காப்பாத்துங்க, டாக்டர் பாபு. அவ இல்லாம என் வாழ்வு இருண்டுடும். ஐயோ! சாயந்திரமானா எனக்கு ஆயாவாயிடுவா, சாமி! என் தல மயிருகூட நரைச்சுப் போச்சு, அப்பவும் என்னை எவ்ளோ செல்லமா வளத்தா! தான் திங்காம எனக்கு சோறு போடுவா"

"நீ என்னப்பா பெனாத்தறே? எனக்கு ஒண்ணும் புரியலியே?"

"அய்யோ டாக்டர் பாபு-"

பலிக்கு தயாராக இருக்கும் எருமை போல், ஸாதன் தரையில் புரண்டு புரண்டு ஓலமிட்டுக் கொண்டிருந்தான்.

பலராமுக்கு இந்தப் பகுதியில்தான் கலியாணமாயிருந்தது. இந்த நகர்ப்பகுதி காலனியில்தான் வசித்து வந்தான். ஆகவே அவனுக்கு மேல்மட்ட ஜனங்களைக் கண்டு பயமில்லை. அவன் ஏழையாயிருந்த நாட்களில் இந்த பெரிய மனுசங்களைக் கண்டால் கோபம் வராது. அப்போதெல்லாம் அவன் உடம்பில் தலேஸ்வரி

நதியின் குளுமையும் தன்னிச்சையாக சுபாவத்தில் மயங்க வைக்கும் நெற்பயிரின் பசுமையும் இருந்தன.

இப்பொழுது அவனுக்குக் காலனியில் வீடு, சொந்த ரிக்ஷா, பரூய்ப்பூரில் கொஞ்சம் நிலம். இதனாலேயே பலராம் மாறி விட்டிருந்தான்.

பெரிய மனிதர்களைப் பார்க்கும் போது, அவர்கள் அவனுக்கு மரியாதை கொடுக்கும் போது, தேனொழுகப் பேசும்போது, தூவென்று காரித்துப்ப வேண்டும் என்று அவன் மனம் துடிக்கிறது. அவனுக்குத் தெரியும், நிகழ்கால வங்காளம் அவனுடைய பாட்டனாருடையதல்ல, முரட்டு அதிகாரம் செலுத்துபவர் களுடையது.

பலராம் டாக்டரிடம் நெருங்கி வந்தான். கடுமையான குரலில் சொன்னான்: "உங்களுக்கு தெரியுமா இவ யாருன்னு? இவ சாமனிய மனுஷி இல்ல- தேவாம்சம் பெற்றவ- நாங்கல்லாம் அவளிடம் ரொம்ப பக்தி விசுவாசம் உள்ளவங்க. திருவிழா காலத்தில பூமாலை போட்டு வணங்குவோம். பெட் இருந்தால் அவளை அட்மிட் பண்ணுங்க டாக்டர். பெட் எங்களுடையது மில்ல. ஒங்களுடையதுமில்ல, எல்லா ஜனங்களுடையது."

கடைசியில் ஐடி டாகூர்ணி சேர்க்கப்பட்டாள்.

ஸாதனின் அழுகை ஓலம் எல்லாவற்றையும் பார்த்த டாக்டருக்கு சங்கடமாய் இருந்தது. வயது வந்த ஆண்பிள்ளை அவன் அம்மாவிற்காக அழுது புரள்வதை இதற்கு முன் அவர் பார்த்ததில்லை.

"டாகூர்ணி பொழப்பாளா, டாக்டர் பாபு?"

"பயப்படாதே ஸாதன், முயற்சி பண்ணுவோம்."

"யாரு அவளை இங்கே கொண்டு வருவாங்க? அவங்க மனித ஜன்மமில்ல டாக்டர் பாபு. அவங்க கடவுளுங்க. அவங்க பக்கத்துல வர எல்லாரும் பயப்படுவாங்க, டாக்டர் பாபு-"

"ஆமாம், ஆமாம் உண்மைதான்-"

"பகல்ல அவங்க டாகூர்ணி, பாபு. ராவுல எனக்கு ஆயா ஆயிடுவாங்க. கங்கா ஜலத்தில் முளுகி, செகப்புப் புடவையைக் கட்டிக்கிட்டா, அம்மனாயிடுவாங்க. அப்போ நானும் மத்தவங்கள போல அவங்கள கடவுளாப் பாக்கிறேன்."

"அப்படியா?"

"ஆனா அம்மான்னு கூப்பிட மனசு துடிக்கும்- அதனால, பொழுது சாஞ்சவுடனே நான் அவ மடியில தலைய வெச்சுகிட்டு 'அம்மே, அம்மே'ன்னு கூவிக்கிட்டு என் ஆசைய தீத்துக்குவேன்-"

டாக்டர் வியப்புடன் ஸாதனை நோக்கினார்.

கூட இருந்த நர்ஸ் புன்னகைத்துக் கொண்டே கேட்டாள்: “இவ்ளோ பெரிய தலைய அவ மடியில எப்படி வைக்க முடியுது?”

ஸாதன் மிகவும் கம்பீரமான, அந்தரங்கமான குரலில் சொன்னான்: “தலையை மடியில வைச்சுக்குவேன், அம்மே, அம்மேன்னு ஆசை தீர அழைப்பேன். பகல்ல அவளுக்கு அநேக பக்த ஜனங்க. ஆனா, ராவுல என்னைத் தவிர வேறு யாரும் கிடையாது.”

“பகல்ல உன் அம்மா என்ன சாப்பிடுகிறாள்?”

“எனக்கு என்ன தெரியும் பாபு? ஏதோ கொஞ்சம் டீ, கஞ்சா, கங்கா ஜலம். தேவாம்சமுள்ள உடல் அரிசி சோறு தின்னுமா என்ன?”

“ராத்திரியில?”

“சோறு வடிப்பா, எல்லாத்தையும் எனக்குக் கொடுத்துடுவா. தான் கொஞ்சம் தின்னுவா, சின்ன புள்ள தின்கிற அளவுக்கு-”

“அதனாலேதான் அவளுக்கு இந்த வியாதி.”

“அதெல்லாமில்லீங்க. அம்மன் ஒடம்புல வியாதி புக முடியுமா என்ன? எனக்குத் தோணுது யாரோ கோபத்தில சூனியம் வெச்சுட்டாங்கன்னு-”

“சரி சரி, என்ன முடியுமோ செய்து பார்க்கிறோம்.”

“டாக்டர் பாபு-”

‘என்னப்பா?”

ஸாதன் தரையை விரலால் பிறாண்டிக் கொண்டே சங்கோசத்துடன் சொன்னான்: “ஒங்க வீட்டில லட்சுமி தாண்டவ மாடறா. அங்க சோறு மலையா குவிஞ்சிருக்கு, பருப்பு கடலா ஓடுது, அதிலெ கொஞ்சம் எனக்கு கொடுப்பீங்களா?”

“அது முடியாது ஸாதன்,”

டாக்டர் திடுக்கிட்டு மறுபடியும் ஸாதனையே பார்த்துக் கொண்டிருந்தார். மனித உருவில் ஒரு விலங்கு போன்ற வெகுளிப் பிராணியை இதற்கு முன் அவர் பார்த்திருந்ததில்லை.

ஆனால் டாகூர்ணிக்கு வைத்தியம் செய்ய முடியவில்லை.

“அவங்களுக்கு என்ன ஆச்சு, டாக்டர் பாபு, என்ன ஆச்சு?” திருப்பித் திருப்பி இதையே கேட்டுக் கேட்டு டாக்டரை உலுக்கி விட்டான் ஸாதன். டாக்டர் என்ன சொல்லுவார்? டாகூர்ணிக்கு அவர் க்ளுகோஸ் ஏற்றினார். தொண்டை அடைத்துப் போய் விட்டிருந்ததால், குழாயைப் பொருத்தி உணவை உள்ளே தள்ள முயற்சி செய்தார். முயற்சிகளில் எந்த குறையுமில்லை. ஜடி

டாகூர்ணியின் உடல்நிலை தேறவில்லை. அவ்வவ்போது நினைவு வரும்போது புலம்புவாள்: "என்னை ஆஸ்பத்திரியில வைக்காதே. என் ராசா, என் செல்ல ஸாதன்! அந்த டாக்டர் என் கொடல புடுங்கி வெளில போட்டுடுவார். அந்த தோட்டி பசங்க என் எலும்பையெல்லாம் வித்து காசாக்கிடுவானுவ. என்ன வீட்டுக்கு அளைச்சுக்கிட்டுப்போ-"

மூன்று நாட்களுக்குப்பிறகு டாக்டருக்கு ஜடி டாகூர்ணிக்கு என்ன வியாதி என்று பிடிபட்டது. பெரிய தொற்று வியாதிதான். இன்றும் பாரதபூமியில் அதற்கு மருந்து கண்டுபிடிக்கப்படவில்லை. இந்த வியாதிக்குப் பெயர் - பட்டினி. சாப்பிடாமல், சாப்பிடாமல் நொய் அரிசியை ஸாதனுக்கு கொடுத்துக் கொடுத்து ஜடி டாகூர்ணியின் நாடி வற்றி போய்விட்டிருந்தது.

"இது தேவ வியாதி, ஸாதன், இதற்கு மருந்து என்னிடமில்லை." டாக்டர் ஜோக் அடித்தார்.

"அப்போ எடுத்துகிட்டுப் போகட்டுமா?"

"சரி. எடுத்துக்கொண்டு போ-"

ஜடி டாகூர்ணி சற்றே கண்ணை திறந்து கொண்டு சொன்னாள்: "அட முட்டாப் பய மகனே! அட துப்பு கெட்டவனே! என்னோட கதை தெரியாதாடா ஒனக்கு? நான் எந்த லோகத்து பிறவின்னு ஒனக்குத் தெரியுமாடா, மடையா? என்ன வீட்டுக்கு இட்டுகிட்டுப் போடா. அங்கேதான் நான் உடல விடப்போறேன்."

பலராம், ஜகதீஷ், ஸாதன் மற்றும் ஐந்து பேர் கூடி ஒரு விழா போல அவளை வீட்டிற்கு அழைத்து வந்தார்கள். ஜடியின் வீட்டிற்கு முன் ஒரு வேப்ப மரம். அதன் நிழலில் ஜடி படுக்க வைக்கப்பட்டாள்.

"வேப்ப மரத்தின் நிழல் ரொம்ப நல்லது. ஸாதன், நாம் ஐந்து பேர் இருக்கோம். நீ அவ பக்கத்துல போய் உட்கார்." பலராம் சொன்னபடி ஸாதன் அவள் பக்கத்தில் போய் உட்கார்ந்தான்.

"யாராவது ஒரு ஐயரைக் கூப்பிடு."

"ஒரே ஒரு ஐயர்தான இருக்காரு-"

"யாரு?"

"அனாதி டாக்டர்."

"அவரையே இட்டுட்டு வா. அவ பக்கத்துல உட்கார வை."

அனாதி டாக்டர் ஜடி டாகூர்ணியின் பக்கத்தில் உட்கார்ந்தார். ஸாதன் ஒரேடியாக தளர்ந்து போய்விட்டிருந்தான்.

"ஏதாவது சொல்லம்மா, சொல்லு, அம்மா மாலை-காலை அம்மா-"

"சொல்றேன்-"

கடைசி சமயத்தில் ஜடிக்கு பிரக்ஞை வந்தது.

"சொல்லம்மா!"

"உன் அப்பன் கந்தோரி. ஒன் சாதி பேதியா சாதி. அவங்க காட்டில சுத்துவாங்க, மலையில திரிவாங்க, ரொம்ப ரொம்ப அழகான பாய் பின்னுவாங்க."

"நீ?"

"நான்?"

இப்பொழுது ஆகாயத்தில் சூரியன், காலை பத்து மணி. ஜடி ஆரோக்கியமாய் இருந்த நாட்களில் இந்த நேரத்தில்தான் அம்மனாகி வீட்டில் உட்கார்ந்திருப்பாள். ஜனங்கள் வந்து பூஜை செய்வார்கள். ஸாதனுக்கு இப்பொழுது ஒரு ஆசை—அவள் தாயாக மாறி "ஏய் ஸாதன், கிட்ட வா," என்று சொல்லணும்.

ஜடிக்கும் "ஏய் ஸாதன், கிட்ட வா" என்று ஸாதனை தன்னிடம் கூப்பிட வேண்டுமென்று ஆசை.

ஆனால் சொல்லவில்லை. இப்பொழுது அவளைச் சுற்றி நாலா பக்கத்திலும் எத்தனை பக்த கோடிகள்! எத்தனை ஜனங்கள்! அவர்கள் எல்லாரும் பக்கத்தில் வருகிறார்கள். வணங்குகிறார்கள். மரியாதை செலுத்துகிறார்கள். அவர்கள் தினந்தோறும் கொடுக்கும் அரிசியை சோறாக்கித்தான் ஸாதனை உயிரோடு வைத்திருக்கிறாள்- ஒரு காலத்தில் சொந்த விருப்பத்தினாலேயே அவள் ஜடி அம்மனானாள். இன்று அம்மனாகவே மரிக்க வேண்டியிருக்கிறது.

"நீ யாரம்மா?" ஸாதன் கனிவான பக்தியுடன் கேட்கிறான்.

ஜடி யார்? ஸாதனின் தந்தை கந்தோரி என்றால், ஜடி எப்படி வேறு ஒரு சமூகத்தவளாக இருக்க முடியும்? ஸாதன், பலராம், ஜகதீஷ் எல்லாரும் அவள் பக்கம் சென்று அவளை சூழ்ந்து கொண்டார்கள்.

"செல்லங்களா! நீங்களெல்லாம் சின்ன சாதி ஜனங்களில்லே, நீங்க மேல் சாதி சனங்க, ரொம்ப மேல் சாதி சனங்க-"

"நீ?"

"என் கதை ரொம்ப ஆச்சரியமான கதை. என் புருஷன் யார் தெரியுமா? அவன் பெயர் வ்ருத்த வ்யாக்ரன், வயசான புலி. இந்தப் பேரை கேள்விப்பட்டு இருக்கீங்களா?"

"வ்ருத்த் வ்யாக்ரன்-?"

"என்னைக்கூட கிழப்புலின்னு கூப்பிடுவாங்க, எங்க நாக்கு ஒங்க நாக்குபோல இல்ல, டாக்டர்."

"ஜன்னியில் பிதற்றுகிறாள்." அனாதி டாக்டர் பீதியடைந்த

குரலில் சொன்னார். "இந்த மாதிரியான வியாதிக்காரியை ஆஸ்பத்திரியிலிருந்து ஏன் கொண்டுவந்தீங்க? அவளைச் சுற்றி இத்தனை கும்பல் ஏன்? அவளுடைய புலி மகாபாரதத்து புலியப்போல புராணக்கதை."

"இது ஜன்னி பிதற்றல் இல்ல டாக்டர்– நான் சொன்னது நெசம்னு என்னால நிரூபிக்க முடியும். சின்ன வயசுல கேள்விப் பட்டிருக்கேன்–"

ஜடி ஒரு அதிசயக் கதையைச் சொல்லத் தொடங்கினாள்.

"மாபெரும் கடல் இருக்கும் பிரதேசத்தில் த்வாரகாபுரி! அந்தக்கிழப்புலி அந்த தேசத்தில ஒரு முறை அம்பு விட்டது."

"யார் மேலே?"

"கிருஷ்ணன் மேல. நீ புராணக்கதை படிச்சதில்லையா?"

"அது எல்லாருக்கும் தெரியும்."

"இது பாதகச்செயல், பாவத்திற்கெல்லாம் ராஜா போல மகாபாவம்.. பகவான் மேல அம்பு போட்டு கொன்றதை விட பெரிய பாவம் ஏதுமில்லை, அதற்கு பிறகு அந்த தேசத்தை விட்டு, இந்த தேசத்துக்கு அது வந்தது."

"எங்கே?

"ஹிஜிலி — தம்லுக் — மேதினிபூர்–"

"பிறகு?"

"எங்க சாதி மிகச்சிறிய சாதி, எங்க சனங்க சுடுகாடு சவக் காட்டுல திரிஞ்சுக்கிட்டு இருப்பாங்க. பாம்பு பிடிப்பாங்க. நாங்க சுடுகாட்டுப் பானையிலதான் தண்ணி குடிப்போம்–"

"சீ–!"

"பறவைங்களப் பிடிப்போம், அதனாலதான் எங்களை குருவிக்காரங்கன்னு கூப்பிடுவாங்க."

"குருவிக்காரங்க எந்த சாதிய சேர்ந்தவங்க, அமமே? கேட்ட பேராயில்லையே?"

"நாங்க மத்தவங்க கூட சேர்றதில்லெ. ஆனா ஸாதனோட அப்பாகிட்ட நான் எம்மனசைப் பறி கொடுத்துட்டேன். அவங்க சனங்களுக்குள்ளெ ரொம்ப விவாதமெல்லாம் நடந்துச்சு. நாங்க ரெண்டு பேரும் அங்கேயிருந்து கிளம்பி வந்து புருசன் பொஞ்சாதியா 'ஸங்கா' (சேர்ந்து வாழும்) கலியாணம் செய்து கிட்டோம்."

தொண்டை உலர்ந்து போய் ஜடியால் சரியாகப் பேச முடியவில்லை. முதல் கல்யாணத்திற்குப் பெயர் கல்யாணம், இரண்டாம் கல்யாணத்திற்கு பெயர் 'ஸங்கா'. குருவிக்காரர்கள்

சாதி தர்மப்படி, பெண்குழந்தை பிறந்தவுடனே அவளுடைய தேவதையுடன் அவளுக்குக் கல்யாணம் ஆகிவிடும். முதலில் தேவதைக்குத் தண்ணீர், தேங்காய் எல்லாம் கொடுத்து விட்டுத் தான் குடும்பம் நடத்தத் துவங்குவார்கள்.

"பிறகு, ரொம்ப நாட்களுக்குப் பிறகுதான் நான் ஜடி டாகூர்ணி ஆனேன், என் உடம்புல காலை-மாலை தேவதை புகுந்துக்கிச்சு-"

"ஜடி டாகூர்ணி, கொஞ்சம் தண்ணி குடிக்கிறியா?"

"வேண்டாம், செல்லங்களா! இப்போ நான் ரொம்ப ஆனந்தமா சுவர்க்கத்துக்குப் போறேன்- ஆனா! ஸாதன்-" ஜடிக்கு விக்கல் எடுத்தது.

"என்ன? எனக்கு என்ன சொல்றே?"

"நான், டாகூர்ணி ஆயிட்டேன். அதோ பாரு. தலைக்கு மேல சூரியன்! ஆமாம் இப்போ பகல் இல்லையா?"

"ஸாதன்! சொர்க்கத்துக்குப் போறது ஒன்னோட அம்மா இல்ல, டாகூர்ணி. அவளுக்காக நீ ரொம்ப ரொம்ப தானமெல்லாம் பண்ணணும்"

"என்ன தானம்?"

எல்லார் மனதிலும அது பற்றித் தெரிந்து கொள்ள ஆர்வம் ஓங்கியது. ஸாதனின் வீட்டு வாசலில் பக்கத்து வீட்டுக்காரர்களின் கூட்டம். இறக்கப்போவது ஒரு மரியாதைக்குப் பாத்திரமான பெரிய மனுஷி. அதனால்தான் இத்தனை கூட்டம்.

எல்லாரும் மவுனமானார்கள். நீண்ட மூச்சு விட்டார்கள். கடைசி வினாடிகளில் என்ன விருப்பங்களை வெளியிடப் போகிறாள் டாகூர்ணி?

"நான் பொழுது சாய்ந்து கருக்கலுக்குள் செத்துப் போனால் நீ ஒரு பைசா கூட செலவழிக்க வேண்டாம். ஆனா இப்போ செத்து போவதால், நீ ஒரு யானையே தானம் செய்ய வேண்டும். என்னோட சிராத்தத்திற்கு யானை தானம் செய்யணும்."

"கட்டாயம் செய்யறேன்- ஆணையாச் சொல்றேன்."

சோகம், துக்கம் காரணமாக அவன் பைத்தியமாகி விட்டான். இந்த அசாதாரண நிகழ்ச்சியின் விளைவாக நெகிழ்ந்து போய் விட்ட ஸாதன் உரக்கக் கத்தினான்: "எல்லாரும் கேளுங்க! இவங்க சிரார்த்தத்து அன்னிக்கு நான் ஒரு யானை தானம் செய்வேன்."

"கு- கு- குதிரை கொடுக்கணும்-"

'கொடுக்கிறேன்-"

ஸாதன் தேம்பித் தேம்பி அழத் தொடங்கினான். "எல்லாம்

கொடுக்கிறேன், ஆயா. நீ என்னை விட்டு விட்டுப் போயிடாதே. எனக்கு வேறு யாருமில்லே..."

"உன்னோட... பொ- பொ- பொ..."

ஜடியின் வார்த்தைகள் அவள் தொண்டையிலேயே நின்று விட்டன. தன் பிறந்த வீட்டிற்கு ஓடிப்போய்விட்ட ஸாதனின் மனைவியை அவன் கூட்டிக்கொண்டு வரவேண்டும் என்று சொல்லவிருந்த வார்த்தைகளை அவளால் சொல்ல முடியவில்லை அதற்கு முன்னரே அவளுடைய தலை சாய்ந்துவிட்டது.

வெள்ளைத் துணியுடுத்தி, புஷ்ப சந்தனமணிவித்து, தம்பட்டம் அடித்து, அவளைத் தகனம் செய்ய எடுத்துப் போனார்கள். எல்லா செலவுகளையும் அனாதி டாக்டர் ஏற்றுக் கொண்டார். ஜடியின் முகத்தைப் பார்த்துக் கொண்டே, அனாதி டாக்டருக்கு தோன்றிய முதல் எண்ணம், "நல்லதாயிற்று, இனிமேல் தினம்தோறும் அரிசி கொடுக்க வேண்டிய நிர்ப்பந்தம் இல்லை, அரிசியின் விலை பனைமரத்தின் உயரத்திற்கு ஏறியபோதும் அனாதி பாபு ஜடி டாகூர்ணிக்கு அரிசிகொடுத்து வணங்குவதை நிறுத்தியதில்லை. அவருடைய மனைவி சொல்லுவாள்: "தேவி அம்சம் பெற்ற மனுஷி, அவளுடைய பக்த ஜனங்களின் கஷ்டத்தை ஏன் உணர்வதில்லை?"

அனாதிக்கு மிக துக்கம். பலராமின் கையில் பணத்தைத் திணித்து, "நீங்க என்ன வேணுமோ வாங்கி சாப்பிடுங்கள். ஆனா டாகூர்ணியை சந்தனக் கட்டை சிதையில்தான் தகனம் பண்ணனும். கட்டை ஈரமில்லாம பார்த்துக்குங்க. பூப்போடுங்க. காசு போடுங்க. தெரிஞ்சுதா? ஒங்க கூடப்பிறந்த பொண்ணுங்க ஒரு பஜனைக்குழு இருந்தது இல்லையா?"

ஜடியின் மரணம் பலராமுக்கும் அவன் தோழர்களுக்கும் ஒரு உலகத்தில் நடக்காத அதிசய சம்பவமாக இருந்தது. ஜடியின் கடைசி காலத்தில் ஜுரவெறியில் அவள் சொன்னதெல்லாம் தேவ வாணியாகத் தோண்றியது. அதனால் அவன் சொன்னான், "உடன் பிறந்தவர்கள் வராவிட்டால் அவங்க தலையச் சீவி எறிந்து விடுவேன்."

நடுநடுவே பலராம் இப்படிப் பேசுவான். இதைக் கேட்ட வுடனேயே அவனுடைய மாப்பிள்ளை முன்னால் வந்து நின்றான். பெயர் ஸதானந்த். அவன் சுபாவமும் அப்படியே. அரசாங்க ஆபீசில் பியூன் உத்தியோகம்.

"வேலை என்ன வேலை, கேஷுவல் லீவ்தான் இருக்கவே இருக்கே? ஒரு நாள் போகாட்டா வேலை போயிடாது."

இப்படிச் சொல்லிவிட்டு இடுப்பில் சட்டையை கட்டிக் கொண்டான். தலை மயிரை வாரிக் கட்டிக்கொண்டு கழுத்தில் காகிதப்பூ மாலை அணிந்து கொண்டு, அவனும் அவனுடைய தோழர்களும் "ராம் ராம் ஸத்ய ஹை, பிரபு கி நாம் ஸத்ய ஹை." என்று சொல்லிக் கொண்டு டாகூர்ணியை தூக்கிக்கொண்டு சென்றார்கள்.

## 2

ஸாதனின் மாலை-காலை அன்னை எப்படி மனுஷி என்ற நிலையிலிருந்து தேவியானாள் என்பது ஆச்சரியமான நீண்ட கதை. அவள் மேதினிபூரில் பறவை பிடிக்கும் சாதியை சேர்ந்தவள். அவர்கள் நாடோடிகள். அவர்கள் சொல்லிக் கொள்வார்கள் — தாங்கள் கிழப்புலி வம்சத்தினர்கள் என்று. கடவுளைக் கொலை செய்தவர்கள் என்ற காரணத்தினால் சபிக்கப்பட்டவர்கள். வெகு தூரத்திலிருந்த துவாரகையிலிருந்து வெளியேறியவர்கள்.

அவர்கள் நிலையான வீடுகளில் வசிப்பதில்லை. பறவை களைப் பிடித்து விற்றுப் பிழைப்பவர்கள். சுடுகாட்டு மரத்தடியில் சமையல் செய்து கொண்டு வாழ்பவர்கள். அவர்களுடைய பிள்ளைகள், மருமகள்கள், பெண்கள், பிணங்களை சுற்றிப் போடப்பட்டிருக்கும் துணிகளை எடுத்து உதறிப்போட்டுப் படுத்துக்கொண்டு காதல் புரிவார்கள். சிதையில் எரியும் பிணங் களைப் பார்த்துப் பார்த்து அவர்கள் மனதில் வாழ்வின் நிலை யாமை பற்றிய எண்ணங்கள் உதிப்பதில்லை. தாய்மார்கள் தங்கள் குழந்தைகளை கொஞ்சி விளையாடுவார்கள். புருஷனும் மனைவியும் கூடிப்பாடி மகிழ்வார்கள்.

மேதினிபூர் உப்புத்தொழிற்சாலைகளிலும், முந்திரிப்பருப்புத் தோட்டங்களிலும் தென்னிந்தியப் பிரதேசங்களிலிருந்து அனேக ஜனங்கள் வந்துபோய்க் கொண்டும் வேலை செய்து கொண்டும் இருக்கிறார்கள்.

இவர்கள் சமூகத்தில் வெளியிலிருந்து பெண் எடுப்பதில்லை. ஆனால் ஜடியின் உடலில் அதிசயமான வசீகரமிருந்தது. தாமிர நிறம், நீல நிறக் கண்கள். அடர்ந்த மயிர். தலையை வாரி முடித்து அதில் சிவப்பு நிறப்பூவை சூட்டிக் கொள்வாள். தன் முகத்தை

நதித் தண்ணீரில் பார்க்கும் போது ஜடி பரவசப்படுவாள். உடலில் நீல நிறப் புடவையுடுத்தி தன்னை அலங்கரித்துக் கொள்வாள்.

குளிர் காலத்தில் ஜடியும் அவள் சாதியினரும் ஸ்வர்ணரேகை நதி தீரத்திற்கு வருவார்கள். அதன் மணல் மேடுகளில் நாடோடியாக வரும் பட்சிகளின் கூட்டமிருக்கும். அவ்விடத்தில் வலை விரித்து பறவைகளைப் பிடிப்பார்கள்.

அங்கேதான் ஒரு விழாவின் போது அவர்களுடைய சந்திப்பு நிகழ்ந்தது. உத்ஸவ் கந்தோரி ஜாதியினன். அவர்கள் சாதித்தொழில் வண்ணப்பாய் புனைவது. அச்சமயம் உத்ஸவின் வயது முப்பது இருக்கும். கட்டு மஸ்தான, பலசாலியான கரிய உடல். கழுத்து வரை தலை மயிர் சுழன்று விளையாடிக் கொண்டிருக்கும்.

உத்ஸவ் சொந்தமாகப் புனைந்த ஒரு பாட்டைப் பாடினான்:

“ஓ, நீலப்புடவை வண்ணப் பெண்ணே!
என்னைக் கொஞ்சம் திரும்பிப்பாரு!
உன்னைக் கண்டு என் இதயம்
கொழுந்துவிட்டு எரியுது பாரு!”

அப்பொழுது ஜடியின் வலையில் சிக்கிய நீலகண்டப் பறவை அவள் கையில் சிறகடித்துக் கொண்டிருந்தது. அவன் முன் வந்து நின்றுகொண்டு தரையில் ‘தூ..’ என்று துப்பினாள், “இதயம் எரியுதா! அப்போ இந்தப் பாட்டக் கேளு. என்னோட பறவைய ஓட்டிவிட்டேல்ல!”

உத்ஸவ் பாடினான்:

“ஓ, அந்த பட்சியப் பிடிச்சு என்ன பயன்?
தோழிப்பெண்ணே! தோழிப்பெண்ணே!
என்னோட உயிர்ப்பட்சியை பிடிச்சு வந்து
உன் காலின் கீழே போட்டிருக்கேன்.
ஓ உன்னைக் கண்டு என் இதயம்
கொழுந்துவிட்டு எரியுது!”

அவனுக்கு மிகவும் தமாஷாக இருந்தது. அவனுடைய சமூகத்தில் பெண்கள் இவ்வளவு ‘ஜங்கிலியாக’ (காட்டுவாசியாக) இருப்பதில்லை. இப்படி கண்ணை வீசி இழுப்பதில்லை. இந்தப் பெண்ணின் கண், மூக்கு, உதடு எல்லாம் கல்லில் செதுக்கின மாதிரி அவனுக்குத் தோன்றியது.

“போடா போக்கத்தவனே.”

ஜடி அவனைத் திட்டிவிட்டு கிளம்பத் தயாரானாள். உத்ஸவ் குதித்தெழுந்து அவள் கையைப் பிடித்தான்.

“நீ என்னை ஏன் திட்டினே?”

"நீ ஏன் பாட்டுப் பாடினே? ஏன் பட்சிங்களையெல்லாம் ஓட்டிவிட்டே."

உத்ஸவ் "ஹா-ஹா-" என்று சிரித்தான். பிறகு திடீரென்று அவள் கையிலிருந்து வலையைப் பிடுங்கி அந்த நீலகண்டப் பறவையை விடுவித்தான். திடுக்கிட்டு, சீற்றமடைந்த ஜடியின் மேல் வலையை வீசிவிட்டு, "நீ என்னோட பட்சி இப்போ, தப்பி ஓடுவியா? என்னோட உயிர்ப்பறவை இப்போ நீதான். ஓடு பார்ப்போம்!"

ஜடி அழத்தொடங்கினாள். பிறகு வலையை வீசியெறிந்து விட்டு ஓடிப்போனாள். உத்ஸவின் அட்டகாசச் சிரிப்பு அவளைத் துரத்திக் கொண்டே வந்தது.

மறு நாள் உத்ஸவ் அவர்கள் தங்கியிருந்த கூடாரத்திற்கு வந்தான். ஜடியின் பாட்டியின் காலைத் தொட்டு வணங்கி, "நான் ஒன்கிட்டேந்து மருந்து வாங்கிப்போக வந்திருக்கேன். காடு மலையில திரியறேன். என் உடம்புல ஒரே வலி. நீங்க நல்லவங்களா தோணுது. மருந்து வியாபாரம் பண்றீங்க. எனக்கும் கொஞ்சம் மருந்து குடுங்க."

ஜடி தன் பாட்டியின் பக்கத்திலேயே நின்று கொண்டிருந்தாள். உத்ஸவின் பேச்சைக் கேட்டுவிட்டு, கோபத்தில் சொன்னாள்: "இந்த பேமானிக்கு சரியான மருந்து நாலு அடிதான். அடி வாங்கினா உடம்பு சரியாப் போயிடும்... உனக்குத் தெரியுமா பாட்டி, என்னோட பட்சிய இவன் துரத்தி விட்டுட்டான்."

ஜடியின் பாட்டி சிரித்தாள். அவளைத் திட்டி விட்டு, "போ, போ, ஒன் வேலையை பாரு" என்றாள்.

அவர்கள் சமூகத்தில் பெண் பிள்ளைகளுக்கு வெளியே சம்பந்தம் செய்வதில்லை. தங்களுக்குள்ளேயே முடித்துக் கொள்வார்கள். ஜடியின் போக்கைக் கண்டு கிழவிக்கு பயம் ஏற்பட்டது.

உத்ஸவ் அவர்கள் இருக்குமிடத்திற்கு இதற்குப் பிறகு வரவில்லை. ஜடிக்குப் பின்னாலேயே திரிந்து கொண்டு அவள் மனதில் இதற்கு முன் எழுந்திராத புதுப்புதுக் கனவுகளை எழுப்பிய வண்ணமிருந்தான்.

தனக்கென ஒரு வீடு, தானியம் நிறைந்தது வழியும் குதிர்கள், வீட்டு நடுவில் தொட்டிலில் குழந்தை போன்ற கனவுகள். அந்த வீட்டில் ஜடி கண்ணாடியில் தன் முக அழகைப் பார்த்து ரசிப்பது, வெள்ளி நகைகள்... வீட்டு முற்றத்தில் வெய்யில் காய்ந்து கொண்டிருக்கும் சிகப்பு, நீலம் மற்றும் நானாவித வண்ணச்

சேலைகள் போன்ற கனவுகள்.

பட்டுப் பாய்களை விட வசீகரமான கனவு வலையைப் புனைந்து அதில் அவளை மாட்டி விட்டான் உத்ஸவ். இந்த வலையை வீசி எறிந்துவிட்டு தப்பி ஓடிவிட ஜடியால் முடிய வில்லை. அவர்கள் இருவரும் ஓடிப்போய்விட்டார்கள்.

கரக்பூரிலிருந்து, டீகா. முந்திரிப் பருப்பு அறுவடை நாட்களில், அந்தத் தோட்டத்தில் கூலி வேலை, மீன் பிடிக்கும் பருவகாலங் களில் வலை விரித்து மீன்பிடிப்பது.

வெகுதூரம் ஓடிப்போகாவிட்டால், கௌமாரா சமூகத்தினர் தங்கள் சாதியை விட்டு ஓடிப்போய் விட்டவர்களை சபித்து, அம்பு எய்து கொலை செய்துவிடுவார்கள்.

உத்ஸவால் அவளுடைய எல்லாக் கனவுகளையும் நனவாக்க முடியவில்லை. ஆனால் ஜடி மிக ஆனந்தமாகவே இருந்தாள். என்ன வாழ்க்கை! இரண்டு பேருக்காக சமையல் செய்து இருவரும் சாப்பிடுவார்கள். பிறகு இணைந்து காதல் புரிவார்கள். பணம் கிடைத்தால் துணி வாங்குவார்கள். சிவப்பு வண்ண விதைகளால் புனைந்த மாலை, அரக்கு வளையல்கள். வெள்ளி முலாம் பூசிய ஒட்டியாணம். தலை சீவி முடிவதிலும் துணி உடுத்துவதிலும் சில மாறுதல்கள். "நீ இப்போ குருவிக்காரியில்ல. ஒசந்த சாதிக்காரி." எங்க சாதியில பொண்டாட்டிய தள்ளி விடமாட்டோம் ஜடி! நாங்க பரிசம் கொடுத்து பெண்ணெடுப்போம். சாதி ஜனங்க எல்லாருக்கும் விருந்து வைப்போம்." என்றான் உத்ஸவ்.

"அதெல்லாம் விட்டுதள்ளு."

ஜடி மனதில் ஒரு பயம் — இந்த வீடு, இந்த நேசம், இந்த சுகம் இதெல்லாம் திடீரென்று பறிக்கப்பட்டுவிடுமோ என்ற பீதி. காலம் காலமாக சபிக்கப்பட்ட சாதியைச் சேர்ந்தவள் அவள். கடவுளின் காலில் அம்பு விட்டு கொலை செய்த வம்சத்தினர் இவர்கள். அதனால்தான், அமைதியில்லாது, திரிந்து திரிந்து காலத்தைக் கழிக்க சாபமிடப்பட்ட வம்சத்தினர் இவர்கள்-

ஆனால் இதைச் செய்தது ஜடியில்லையே?

'ஒருவேளை கோபத்தில் அவளுடைய பாட்டி அவள் மேல் அம்பு விட்டால்? வைக்கோலில் ஜடி, உத்ஸவ், மாதிரி பொம்மை செய்து ஊசியால் குத்தி, சின்னா பின்னமாக்கி விட்டால்-?' நினைத்து நினைத்து மிகவும் பீதியடைந்துவிட்டாள் ஜடி,

"அவங்க பேச்சையெல்லாம் விடு. வேறு ஏதாச்சும் பேசு." என்று உத்ஸவின் காதைக் கடித்தாள்.

"ஒனக்கு பயமா இருக்கா?"

"பயந்தாங்கொள்ளி!"

மிகவும் மிருதுவான குரலில் செல்லமாக ஜடி அவனைக் கடிந்தாள். முதுகைத் திருப்பிக் கொண்டு தலை முடியை சீவத் தொடங்கினாள். 'இதைத்தான் சாதியை இழப்பது என்று சொல்கிறார்களா? நீச சாதியிலிருந்து மேல் சாதிக்கு போவது என்று? ஆனால் அவள் உள்ளத்தில் இதனால் தெம்பு வர வில்லையே? அவளால் சொல்ல முடியவில்லையே — 'போ, செத்துப்போ?' என்று.'

நடுநடுவே, டமாரத்தின் 'டும், டும், டும்' சப்தத்தை கேட்டு ஜடி அதிர்ச்சியடைவாள். குருவிக்காரர்கள் இப்படித்தான் மிருதுவாக டமாரம் அடித்துக் கொண்டு வருவார்கள். தேனீக்கள் மாதிரி ஒன்று சேர்ந்து ஒரு இடத்தில் கூடாரம் அடித்துக் கொண்டு தங்குவார்கள்.

எல்லாரும் ஒன்றாகக் கூடியிருப்பது எல்லாவற்றையும் விட விசேஷமான வழக்கம்.

அவர்கள் சாமானியர்களல்ல, கிழபபுலியின் வம்சத்தினர். புலி சாமானிய மிருகமல்ல, அது கொலை செய்தது ஸாட்சாத் கிருஷ்ண பகவானை. அவளுடைய குடும்பத்தினர் அளவிலா பாவம் செய்து கொண்டிருந்தனர். அதற்காக தீவிர தண்டனை பெற்று வந்தனர்.

இதனாலேயே கோபமுற்ற கிருஷ்ண பகவான் மனிதர்கள் இல்லாத ஒரு இடத்துக்குச் சென்று ஓரிரு கணங்கள் ஓய்வு எடுத்துக்கொண்டார். அவருடைய இரு கால்கள் தாமரைப்பூ போன்றவை. ஜடியின் பாட்டி தலையை ஆட்டி ஆட்டிக்கொண்டு சொல்லுவாள்: "தாமரைப்பூ போன்ற பாதங்களைக் கண்ட ஆதிஜரா வியாக்கிரன் குழம்பிப்போய், 'டக்' என்று அம்பை விட்டான், அவ்ளோதான். பிறகு என்ன நடந்தது தெரியுமா?"

ஆகாயத்தில் இருள் சூழ்ந்தது. சூரியன் முகத்தை மறைத்துக் கொண்டான். துக்கத்தில் சமுத்திரம் தண்ணீரில் வசித்த வந்த பிராணிகளைத் தூக்கி எறிந்தது. மீன் கடித்து இறந்தவர்கள் பிழைத்தெழுந்து அழத் தொடங்கினார்கள். பால்காரர்கள் பால் கறக்க முயன்ற போது பசுக்களின் மடியிலிருந்து பாலுக்கு பதிலாக ரத்தம் வர ஆரம்பித்தது. காலை வந்தது. ஆனால், இரவு போல கருமையான வானத்தில் நட்சத்திரங்கள் ஜொலித்துக் கொண் டிருந்தன.

அப்பொழுது ஒரு அசரீரி வந்தது.

"யார் பகவானை கொலை செய்தார்களோ அவர்களுக்கு

வீடு வாசல்களில்லை." அசரீரி மேலும் சொல்லிற்று: "கிழங்களே புலிகளே, இந்த புவனத்தில் பகவான் திரும்பத் திரும்ப வருவார். அப்போது உங்களைப் போன்ற கசாப்புக் கடைக்காரர்கள் பகவானை அம்புவிட்டு கொல்கிறார்கள். யார் இச்செயலை செய்கிறார்களோ, அவர்களுக்கு வீடு வாசல் கிடையாது. உங்கள் ஆப்தமானவர்களை அழைத்துக் கொண்டு குறிக்கோளில்லாது அலைந்து திரியக்கடவீர். புரிந்ததா?"

"எங்கே போவது?"

"கண்ணிரண்டும் இட்டுச் செல்லுமிடத்திற்கு-"

"சாதியினரை அழைத்துக் கொண்டா?"

"சாதியினரை அழைத்துச் செல்லாது, தனியாகவா போகப் போகிறாய்? உன்னுடைய சாதி இப்பொழுது மகாபாவிகளின் சாதி. உங்கள் சாதியில் ஆண் பெண்களுக்கு வெளியில் கல்யாணம் செய்து கொள்ளக் கூடாது. உங்கள் சாதிக்குள்ளேயே செய்து கொள்ளுங்கள். ஓ கிழங்களே! கிழப்புலிகளே! என் குரல் உங்களுக்குக் கேட்கிறதா?"

"கேட்கிறது-"

"மேலும் கேளுங்கள்-! உங்கள் சாதியில் ஆணாகட்டும், பெண்ணாகட்டும் சாதியை விட்டுப் போகக் கூடாது. உங்கள் பாவத்தினால் அவர்களும் பாவிகள். அவர்கள் பிறந்தவுடன் அவர்களை கடவுளுக்கு கல்யாணம் செய்து வையுங்கள்."

கிழவன் அழுதுகொண்டே சொன்னான்: "ஆஹா! துவா ரகையை விட்டுப் போக யாருக்கு விருப்பமிருக்கும்? எவ்வளவு அழகானது துவாரகாபுரி! நீலக்கடல் கரையில் எவ்வளவு அழகான ஸுவர்ணமயமான கலசங்கள் கொண்ட கதவுகள்!"

ஜராக்கள் இப்பொழுது வனவாசிகள், மலைவாசிகளாகி விட்டனர். தூரத்திலிருந்து மற்றவர்களை நோக்குவார்கள். ஆனால் ம்ற்றவர்களின் சுகம், மற்றவர்களின் ஆனந்தம், இவற்றை தூரத்திலிருந்து பார்ப்பது குறைந்த சுகமா என்ன?

இதற்குப் பிறகும் ஜராக்கள் அடைந்த தண்டனைகள் கொஞ்ச நஞ்சமல்ல. சாதி ஜனங்கள், குடும்பத்தினர், மூட்டை முடிச்சு, வேட்டை நாய் — எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு, கொஞ்சமாகவா அலைந்தனர்!

ஸத்தியபூர் என்றும், கேரளபுத்ர என்றும், சோல் என்றும், பாண்டா என்றும், எங்கெல்லாமோ சுற்றிச் சுற்றி திரிந்து செத்தனர். ஒரு இடத்திலும் சாந்தி கிடைக்கவில்லை.

எங்கு போனாலும் ஜனங்கள் அவர்களை விரட்டிக்

கொண்டே இருந்தனர். "பகவான் மேல் அம்பு விட்டுக் கொன்று விட்டு இங்க நம்ம ஊரை நாசம் பண்ண வந்திருக்காங்க- இவங்க சூழ்ச்சிக்கார ஓநாயிங்க."

ஜராக்களுக்கு ஒரு ஸ்திரமான இடம் கிடைக்கவில்லை. ஒரே இடத்தில் சேர்ந்து வசிக்க முடியவில்லை. அங்கே, மேலிடத்தில் தேவாதி தேவன் நீண்ட பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தார். த்வாபர யுகம் முடிந்தது. கலியுகம் வந்தது. அலைந்து திரிந்து கொண்டிருந்த ஜராக்களின் வயது எத்தனை லட்சம் என்று யாரால் சொல்ல முடியும்? கால்கள் வீங்கி யானைக் கால்களாயின. உடலெல்லாம் வியாதி குடிகொண்டது. என்றோ ஒரு நாள், யாரோ ஒருவர் அவர்கள் மேல் இரக்கப்பட்டு, "ராட் தேசம் தெரியுமா? வங்க தேசம் தெரியுமா? கௌட தேசம் தெரியுமா? அங்கே போங்க — கங்கை நதி சமுத்திரத்துடன் சங்கமமாகும் தேசத்திற்குப் போங்க, அந்த தேசத்தில் எல்லா பாபி - தாபி - லோபி - வஞ்சகர் - சைத்தான் எல்லாருக்கும் புகலிடம் கிடைக்கும். போங்க, அந்த தேசம் எவரையும் திருப்பிப் போகச் செய்வதில்லை. போங்க."

ஜராக்கள் அந்தத் தேசத்திற்கு வந்தனர். சாதிக்குள்ளேயே கல்யாணம். சுடுகாட்டில் முதலிரவு, சுடுகாட்டுப் பானை, தண்ணீரால் சோறு பொங்குவது, சாப்பிடுவது. இவர்களின் ஆண் பெண்கள் மிகவும் சுதந்திரமானவர்கள். இவர்களின் பெண்களின் அழகுக்கு இணையே இல்லை, முடியைக் கொண்டை போட்டுக் கொண்டு கழுத்தில் மாலை அணிந்து கொண்டு ஒய்யார நடைபோடும் அவர்கள் கல்லில் செதுக்கின விக்கிரகம் போல புனிதமான ஸௌந்தர்யம் கொண்டவர்களாகத் தென்படுவார்கள். பல தலைமுறைகளாக தங்கள் சாதியிலேயே மணம் புரிந்து வந்து கொண்டிருக்கின்றனர். தங்கள் குல வழக்கத்தை உடைக்கவில்லை. அவர்களுடைய ரத்த சுத்தம் மிக பராசீனமானது. அதன் காரணமாகவே அவர்கள் இத்தனை அழகாக இருக்கிறார்கள். குறைந்து குறைந்து, மரித்து மரித்து, இப்பொழுது அவர்கள் எண்ணிக்கை சுமார் நூறு பேருக்குள்ளாகவே இருக்கும். ஒரு போதும் தங்கள் குழுவை விட்டு வெளியேறுவதில்லை. நகர சாலைகள், கிராமப் பாதைகளையெல்லாம் கடந்து 'டும் டும் டும்' என்று டோலக் அடித்துக் கொண்டு போய் கொண்டிருப்பார்கள்.

"குருவிக்காரன் போறான்- குருவிக்காரன் போறான்-" என்று மக்கள் தங்களுக்குளே பேசிக் கொள்வார்கள். கூடியமட்டும் இவர்கள் நகர்ப்புறத்துடன் சம்பந்தம் வைத்துக் கொள்வதில்லை.

நடு நடுவே ட்ரைபல் வெல்பேர் ஆபீசில் தங்கள் பெயர்களை பதிவு செய்வதற்கு மட்டும் வருவார்கள்.

அரசுப் பேரேடுகளில் இவர்கள் ஒரு ரட்சிக்கப்பட்ட உபஜாதி.

ஜடி ஒரு காதால் அரை கவனத்துடன் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தாள். அவளுடைய மனதின் மற்றொரு பகுதி "டும் டும் டும் டும்" என்ற ஒலியைக் கேட்டுக் கொண்டிருந்தது.

'அவர்கள் ஒரு வேளை வந்தால்-?' அவளுடைய தாய் - தந்தை, பாட்டி, சாதி மனிதர்கள், 'வா, திரும்பி வா, காட்டுக்குத் திரும்பி வா, சாதிக்குத் திரும்பி வா' என்று சொன்னால்?' ஜடி என்ன செய்வாள்?

உத்ஸவ் அவளுடைய பயத்தைக் கண்டு சிரித்தான்,

"அசட்டுப் பொண்ணே! வீணா ஏண்டி பயப்படறே?

ஆசை வலையில விழுந்த பிறகு

ஏன் இத்தனை பயம் உனக்கு?"

ஜடி சிரித்துக் கொண்டு சொல்லுவாள் "போக்கடாப் பயலே"

உத்ஸவ் சொல்லுவான்: "என் உயிர் இருக்கும்போது எவன் உன்னை இழுத்துக் கொண்டு போவான்..? அவங்களுக்கு உத்ஸவைப் பற்றித் தெரியுமா? நான் மட்டும் தரோகா கிட்ட பேசினேன்னா, அவர் அந்த காவாலிப் பசங்களை சரியாக்கிடுவார்."

அப்பொழுதும் ஜடியின் பீதி முழுமையாகத் தணியவில்லை. ஆனால் கொஞ்சம் கொஞ்சமாக உத்ஸவ் அவளுடைய பயத்தைக் குறைத்து விட்டான். ஜடியின் இடுப்பில் இப்பொழுது கன்னங் கரேல் என்று, அடர்த்தியான தலைமயிர் கொண்ட ஒரு ஆண் குழந்தை. புஷ்டியான அந்தக் குழந்தையைப் பார்த்தால் உத்ஸவின் குழந்தைதான் என்று உடனே யாருமே சொல்லி விடுவார்கள். கண் மட்டும் ஜடியின் கண், மிருதுவான, பெரிய பெரிய நீலக்கண்கள்.

உயர்ந்த சாதிக்காரனாக இப்பொழுது உத்ஸவின் ஆர்வம் பொங்கத் தொடங்கியது. பறவை பிடிக்கும் குருவிக்கார ஜாதியை விட பட்டுப்பாய் புனையும் அவள் இப்பொழுது உயர்ந்த சாதிக்காரி. மேலும் அவள் இப்பொழுது கூலி வேலை செய்கிறவள். அதனாலும் அவள் உயர்ந்த சாதிக்காரியாகி விட்டாள்.

ஒரு பிள்ளைக்குத் தகப்பன் ஆன பிறகு, சாதி ஏணியில் மேலும் ஏற உத்ஸவின் மனம் துடித்தது. அவன் ஒரு பரந்த ஏழை குடுவா சாதியில் ஒருவனாக இருப்பதை விரும்பவில்லை. பெரிய மனிதர்களின் சிறிய சமூகத்தில் ஒரு ஓரத்தில் இடம் பிடிக்க ஆசைப்பட்டான்.

ஜடியிடமும் இதையே சொன்னாள்.

"ஜடி! ஓ ஜடேச்வரி! பி.டி.ஓ. ஆபீசுக்குப் போயிருந்தேன், அங்கே அந்த குமாஸ்தாங்கெல்லாம் என்ன சொன்னாங்க தெரியுமா?"

"என்ன?"

"இப்போவெல்லாம் ஒரு கஷ்டமுமில்ல. சர்க்கார் ஆபீசில கொஞ்சம் பணம் கொடுத்தா உடனே பேர மாத்திக்கிடலாமாம். கந்தோரி கிந்தோரி என்ற பேரக் கேட்டா நான் கீழ்ச்சாதிக் காரன்னு அவங்களுக்குத் தெரிஞ்சு போவுது- 'உத்ஸவ் கந்தோரி' எப்படி இருக்கு? 'உத்ஸவ் தாஸ், ஸாதன் சந்திர தாஸ்'ன்னு கூப்பிட்டா எப்படியிருக்கு? பேர மாத்திக்கிட்டு பட்டணத்துக்குப் போயிட்டா- காரியம் முடிஞ்சுது-"

"எதுக்காக?"

"பட்டணம்., ஜகந்நாத் சேத்திரம் மாதிரி. அங்கே யாரும் யாரைப் பத்தியும் கவலைப்படறதில்ல. பேரைக் கேட்டா நாம பெரிய சாதிக்காரங்கன்னு நெனச்சுக்குவாங்க. இல்லேன்னா பேருக்கு பின்னால ஏன் 'தாஸ்'ன்னு வெச்சுகிறேன்.?"

உத்ஸவின் பேச்சைக் கேட்டவுடன், ஜடியின் இதயம் ஆனந்தத்தில் துள்ளி எழுந்தது. இடுப்பில் கையை வைத்துக் கொண்டு ஆடத் தொடங்கினாள். "கிளம்பு கிளம்பு, இப்பவே கிளம்பு, நான் பெரிய சாதிக்காரி ஆயிட்டேன்."

உத்ஸவ் அன்புடன் கடிந்து கொண்டான்: "பயித்தியக்காரி: இப்பவே எப்படி? குழந்தை கொஞ்சம் பெரியவனாகட்டும். இன்னும் அன்னப் பிராசனம் செய்யணும். மொதல்ல சாமிக்கு பூச போடணும், அப்புறம்தான் மற்றதெல்லாம்."

திடீரென்று ஜடியின் மனதில் ஒரு எண்ணம் எழுந்தது: 'அவளுடைய மூதாதையர்களோ பகவானைக் கொன்றவர்கள். இப்பொழுது சாதிக் கடவுளைத் தவிர வேறு சாமிக்கு பூசை போடலாமா?'

பிறகு அவளுக்குத் தோன்றியது: 'உத்ஸவ் சொல்றது சரிதான். எல்லாவற்றையும் துறந்துவிட்டு ஓடிவந்தாச்சு, இப்போ சர்க்கார் ஆபிஸில எழுதப்படிக்கத் தெரிந்த ஜாதியாளா மாறிவிட்டால், தன்னோட அப்பா அம்மா தன்னைப் பிடித்து இழுத்துக் கொண்டு போகமுடியாது. "சரி, இதுதான் நல்லது," ஜடி கண்ணை மூடிக்கொண்டு சொல்லிக் கொண்டாள்.

ஆனால் குருவிக்கார சாதிக்கடவுள் இதைக் கேட்டுச் சிரித்தார்.

ஸாதனுக்கு அன்னப் பிராசனம் நடந்தது. அந்த நாட்களில் உத்ஸவ் கரக்பூர் ஸ்டேஷனில் கூலி வேலை செய்து கொண் டிருந்தான். ஸாதனுக்கு முதல் சோறூட்டும் விழாவை முன்னிட்டு, தனது கூலித்தோழர்களுக்கு சோறு - மாமிச விருந்து வைத்தான். இதற்குப்பிறகு கள்ளச்சாராயம் குடித்து விட்டு வாயிலெடுத்து ஆஸ்பத்திரியில் பரிதாபமாக செத்துப் போனான்.

அவனே வளர்த்த கனவுகள், ஆசைதீர அனுபவித்த காதல், கணீரென்ற குரலில் பாடிய பாட்டுகள், எல்லாவற்றையும் கூடவே எடுத்துக்கொண்டு போய் விட்டான். ஐடி மறுபடியும் தனிமையில். மறுபடியும் சுதந்திரத்தில். அவள் விரும்பினால் எங்கு வேண்டு மானாலும் போகலாம். ஆனால் இடுப்பில் ஊட்டி வளர்க்க வேண்டிய சிசு, அழுதுகொண்டு அவளைத் தாக்குகிறது.

தான் என்ன செய்ய வேண்டும் என்பது ஐடிக்கு புரிந்தது தன் ஜாதிக்குத் திரும்ப வேண்டும். பாட்டியின் காலில் விழுந்து கதற வேண்டும். ஐடிக்குத் தெரியும், உத்ஸவின் சாவு தன் பாட்டி கொடுத்த பாணத்தினால் நிகழ்ந்தது என்று. டாக்டரும் போலீசும் எது வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளட்டும்.

பயந்துபோன பட்சியைப்போல குழந்தையைத் தோளில் போட்டுக் கொண்டு ஐடி தனது சாதியினரின் இடத்தை நோக்கி சென்றாள்.

அடக் கடவுளே! எங்கே அந்த சொந்தக்கார மனிதர்கள்? எங்கே அந்த விசித்திரமான பலவண்ண உடைகள், நாய்கள், ஆடுகள், கழுதைகள்? தோளில் தொங்கும் சாமான்கள், கலீர் கலீர் என்று சிரிக்கும் தன் பாட்டி — எல்லாரும் எங்கே போய் விட்டார்கள்.?

சுடுகாட்டில் இல்லை, காடுகளில் இல்லை, சாலைகளில் இல்லை, நதிக்கரைகளில் இல்லை, எங்கேயும் இல்லை. ஐடி நகரத்திலிருந்த ட்ரைபல் ஆபீசுக்குப் போய் சேர்ந்தாள். "குருவிக் காரங்க முகவரி கொடுங்க. எசமான்! ஒங்க கால்ல விழறேன்.."

அங்கிருந்த தர்வானின் காலில் விழுந்தாள்.

"ஏய்! எங்கேயாவது சுடுகாடு எரிகாட்டில போய்த் தேடு. எங்கே விழுந்து கிடக்கிறாங்கன்னு எங்களுக்கு என்ன தெரியும்?"

ஐடியின் கண்களில் நீர் பெருக்கெடுத்தது. ஒரு சாதியை விட்டு வேறொரு சாதி, அந்தச் சாதியை விட்டு மற்றொரு சாதி! எத்தனை பேராசைகளை உத்ஸவ் அவளுக்குக் காட்டினான்! எல்லாக் கனவுகளையும் பிடுங்கிக் கொண்டு போய் விட்டான் பாவி. ஐடி இப்பொழுது என்ன செய்வாள்?

கொள்ளை அழகு, கொள்ளை ஆரோக்கியம், கொள்ளை யௌவனம் இவற்றையெல்லாம் எடுத்துக் கொண்டு எங்கு போவாள்?

கடைசியில் ரயில்வே ஸ்டேஷனை வந்தடைந்தாள். இடுப்பில் குழந்தை. கன்னத்தில் கையை வைத்துக் கொண்டு ஆகாசத்திற்கும்-பாதாளத்திற்கும் இடையே உள்ள விஷயங்களைப் பற்றி எண்ணத் தொடங்கினாள்.

தன் குழந்தையைப் பற்றிச் சிந்தித்தாள். அதே சமயத்தில் அவளைப் பார்த்த ஜனங்களும் அவளைப் பற்றிய சிந்தனையில் மூழ்கினர்.

"இப்போது என்ன செய்வது? எங்கே போவது?" என்ற ஒரே யோசனை அவளுக்கு. கடைசியில் கூலி லைனில் இருந்த அனுமார் கோவில் சன்யாசியிடம் யோசனை கேட்கப் போனாள்.

"இங்கேயே இரு."

சன்யாசி மூடிய கண்களுடன் சொன்னான். வயதானவன். பல கடவுள்களை பல கோவில்களில் பூஜை செய்து அலைந்து விட்டு, இப்பொழுது ஓரளவு ஸ்திரமான வாழ்க்கையை அமைத்துக் கொண்டவன்.

ஜடி தங்க ஆரம்பித்தவுடன் அனுமார் கோவிலில் கூட்டம் அதிகரிக்க ஆரம்பித்தது. சன்யாசியின் மனதில் ஆபத்தின் சாயை படர்ந்தது.

சில தினங்களுக்குப் பிறகு மூன்று நான்கு ஆட்கள் ஜடியிடம் வந்து கிசுகிசுத்தார்கள். "இந்தக் கிழவன் கூட இருப்பதில் என்ன லாபம்? எங்க கூட வா. நாங்க உனக்கு பட்டணத்த காட்றோம்."

பல ஆயிரமாண்டுகளாக அவள் நாடிகளில் ஓடும் ரத்தம் சாமானிய ரத்தமல்ல. காடு மேடு, வனப்பிராணிகள் எல்லாம் அவளுக்கு தண்ணீர் பட்ட பாடு. ஆனால் தெரியாத மனிதர்களிடம் அவளுக்கு மிகவும் பயம்.

"சீ பொறுக்கிப் பசங்களா..." என்று வாயில் வந்தபடி திட்டி விரட்டி விட்டாள்.

ஒரு வேளை இவர்கள்தான் போலீசுக்கு புகார் செய்தனரோ என்னவோ சில நாட்களுக்குப் பிறகு போலீஸ் வந்தது. கடுமையான குரலில் "எல்லா விஷயமும் எங்களுக்குத் தெரிந்துவிட்டது"

"விஷயம்? என்ன விஷயம்? போலீஸ் தம்பி! நானோ சன்யாசி, சாமி கால்ல விழுந்து கிடக்கிறவன்..."

"சாமி கால்லயா, அம்பாள் கால்லயா?"

"ச்சீசீ! நாக்கு அழுகிடும் தம்பி..."

"இங்கே பொம்பிள வெச்சுகிட்டு இருக்கே, இங்கே தேவிடியா நடமாட்டம், போக்கிரிங்க அட்டகாசம், சீட்டாட்டம், சூதாட்டம் எல்லாம் நடக்குது."

"எல்லாம் பொய்."

சன்யாசியின் வெள்ளை முகம் சிவந்தது.

போலீஸ் ஆபீசர் கௌரவமான ஆள். "ஆமாம், பொய்தான்னு உனக்கும் தெரியும், எனக்கும் தெரியும். இந்த பொம்பிளையால தானே இந்த குழப்பமெல்லாம்? நீ ஏன் அவளை விரட்டி விடக்கூடாது?"

"விரட்டி விட்டால் அவங்க கையிலதானே போய் விழுவாள்? இதைத்தானே அவங்களும் விரும்புகிறாங்க?"

"சரி, சரி, எக்கேடும் கெட்டு செத்துப்போ-"

கோபித்துக் கொண்டு போலீஸ் அதிகாரி போய்விட்டார். போகும் போது, "ஏன் வீணா இந்த குண்டர் பொறுக்கிகளை பகைச்சுக்கிறே? வெல்லமிருக்கும் இடத்தில் ஈ வந்து மொய்க்கத் தான் செய்யும். அந்த பொம்பிள இருக்கிற வரைக்கும் இந்த பசங்க வந்துட்டுதானிருப்பாங்க. இப்ப இவங்க ராஜ்யம். ஒரு நாள் வந்து இவளை இழுத்துக்கிட்டுப் போனாங்க எந்த அப்பனாலும் அதைத் தடுக்க முடியாது ஆமாம். சொல்லிட்டேன்."

சன்யாசி கவலையில் மூழ்கிவிட்டார். ஜடிக்குப் புரிந்து விட்டது — இனியும் அவள் இங்கு இருப்பது, சன்யாசிக்கும் ஆபத்து, தனக்கும் ஆபத்து என்று.

"இந்தா, இந்த பாத்திரம் பண்டம் எல்லாம் நீயே வெச்சுக்க. எனக்கு என்று ஒரு சம்சாரம் இருந்தப்போ இதெல்லாம் தேவைப் பட்டது-"

"எனக்கு கொஞ்சம் பணம் கொடு, சாமி."

"எங்கே போவே-?"

"தெரியாது."

கடைசியில் நீண்ட பெருமூச்சு விட்டுக் கொண்டு சன்யாசி ஒரு சிவப்புத் துணியைக் கொடுத்தார். இந்த மாதிரியான சிகப்புத் துணியைக் கட்டிக் கொண்டு பீஹாரில் பல சன்யாசிகள் திரிவார்கள்.

சிவப்புத் துணியுடன் ஒரு சின்ன திரிசூலத்தையும் கொடுத்து விட்டுச் சொன்னார்: "என்றோ ஒரு நாள் உன்னை ஓநாயோ நாயோ கடித்துக் குதறி சாப்பிடப்போகுது என்பது எனக்குத் தெரிஞ்சுதான் இருக்கு. இருந்தாலும் குழந்தைக்காக, இந்தத் துணியையும் திரிசூலத்தையும் வைச்சுக்க. சிகப்பு வஸ்திரத்தைக்

கட்டிக்கிட்டு திரிசூலத்தை கையில் ஏந்திக்கிட்டு எங்கே இஷ்டமோ போய்வா. இந்த கோரமான கலியுகத்தில் கூட சாது, சன்யாசிகள் தேர்ட் க்ளாஸ் வண்டியில செலவில்லாம பயணம் செய்யலாம். யாரும் உன்னக் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ள மாட்டாங்க."

"யாராவது ஏதாவது கேட்டால்?"

"நான் ஜடி டாகூர்ணின்னு சொல்லு."

"டாகூர்ணி?"

"ஆமா, சொல்லு, யார் தடுப்பார்கள்?"

"டாகூர்ணி!"

நிஜமாகவே ட்ரெயினில் யாரும் அவளை ஒன்றும் செய்ய வில்லை. அவளுடைய அழகு, வண்ணச்சேலை முதுகில் ஒரு தூளியில் குழந்தை, கையில் திரிசூலம் எல்லாவற்றையும் பார்த்த ஜனங்கள் ஆச்சரியத்தில் அதிர்ந்து போனார்கள்.

ஜடி ஜன்னலிலிருந்து வெளியே பார்த்துக் கொண்டே இருந்தாள். இரண்டு கண்களிலும் கண்ணீர் நிரம்பி வழிந்தது. அந்த மனிதன் அவளுக்கு எவ்வளவு மரியாதை கொடுத்தான்! எவ்வளவு அன்பு கொடுத்தான், இதைத்தான் மேல் சாதிக்குப் போவது என்று சொல்கிறார்களோ? ஆஹா! உத்ஸவ் உயிருடன் இருந்திருந்தால் அவனுக்குத் தெரிந்திருக்கும் — கோர்ட் கச்சேரி தேவையில்லை. வெறும் ஒரு வண்ணத்துணி, ஒரு திரிசூலம், இரண்டின் பலத்தினால் எவ்வளவு பெரிய சாதியினளாக அவள் மாறி விட்டாள் என்று.

ஒரு மனிதன் அவளையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தான். அவன் டிரெயினில் வாடிக்கையாகப் பாடிக் கொண்டிருப்பவன். சில சமயம் பஜன்கள், சில சமயம் சியாமா சங்கீதம், சில சமயம் ஹரி கீர்த்தனை. பார்ப்பதற்கு வயதானவன், வியாதிக்காரன். உலகத்தில் அவனுக்கென்று யாருமே இல்லாதவன் போலத் தோன்றினான்.

ஜடியைப் பார்த்துச் சொன்னான்: "ஹௌரா ஸ்டேஷன் வரைக்கும் உன்னை அழைச்சிட்டுப் போக முடியும். அதுக்கப்புறம் எங்க போறதா உத்தேசம்-?"

ஜடி பதில் சொல்லவில்லை.

ஹௌரா ஸ்டேஷனில் இறங்கியவுடன் ஜடி அங்கிருந்த ஜன சமுத்திரத்தைக் கண்டு அயர்ந்து போனாள். இதுதான் உத்ஸவ் சொன்ன தீர்த்தச் சேத்திரம் போலும்! எத்தனை ஜனங்கள்! காட்டில் ஒரு மரத்தில்கூட இத்தனை இலைகள் இருக்காது. இவ்வளவு ஜனங்களிடையே அவள் எங்கே போவாள்?

“கேக்கறேனே- எங்கே போகப்போறே?” அந்த மனிதன் மறுபடியும் கேட்டான்.

“அதுதான் தெரியாது-” ஜடி சொன்னாள்.

“எங்கூட வர்றியா?”

“எங்கே?”

அவனைக் கண்டு ஜடி பயப்படவில்லை. அத்தகைய சமயங்களில் அவள் உள்ளத்தில் அதிசயமான ஒரு உள்ளுணர்வு வேலை செய்யும். ஒரு மனிதனைப் பார்த்தவுடனே, யாரைக்கண்டு பயப்படவேண்டும், யாரைக்கண்டு பயப்பட வேண்டாம் என்று அவளுக்குத் தெரிந்துவிடும்.

தவிர அவள் கண் முன்னே இருந்த அதிசயக் காட்சி அவள் கண்களைப் பிடித்து இழுத்து வைத்திருந்தது.

“என் கூட”

“எங்கே?”

“நான் இருக்கும் வீட்டில். ரயிலில் பாட்டுப் பாடி வயிற்றைக் கழுவிக் கொண்டிருப்பவன் நான்.”

“தெரியும்.”

அந்த மனிதன் எல்லாவற்றையும் புரியும்படி சொன்னான். ‘பாட்டுப்பாடி பிச்சையெடுக்கிறான். ஜடி ஸாதனை இடுப்பில் வைத்துக் கொண்டு தன் கூட சுற்றினால், பிச்சை வரும்படி மேலும் அதிகமாகும்.’

“உன் வீடு எங்கே?”

“சும்மா போக்குக் காட்டாதே. கூட வரதுன்னா வா.”

ஒரு வருடம் நன்றாகவே ஓடியது. ஜடி அவன் கூடவே இருந்தாள். அவன் பாடுவான். பிச்சைக்காசை வாங்கிக் கொண்டு மாலை நேரத்தில் அரிசி வாங்கிச் சமைத்துச் சாப்பிடுவார்கள். அந்த மனிதன் அறைக்கு வெளியில் தூங்குவான். ஜடி கதவுத் தாழ்ப்பாளைப் போட்டு விட்டு அறைக்குள் பாயை விரித்து படுத்துத் தூங்குவாள்

“ஸாதன், கண்ணு. என் செல்ல ஸாதன்.”

ஜடியின் சீராட்டு சில சமயம் ஸாதனையே குழப்பும்.

ஸ்டேஷனுக்கு அருகே, நேபாளி கிழவன் கிழவிகள் மணி மாலை, தாயத்து - கீயத்து, பட்சிக்கு கூடு, இத்யாதிகளை விற்பதைப் பார்த்து அவளுக்கு ஒரு யோசனை தோன்றியது.

யாராவது அவளிடம் கேட்பார்கள்—“நீ தான் ஒரு சன்யாசி — ஸாத்வினியாச்சே, உனக்கு மந்திரம், தந்திரம், மூலிகை மருந்து, அது இதுன்னு தெரிஞ்சிருக்கணுமே?”

இப்படி யாராவது கேட்டால், ஜடி கோபம் கொள்வதில்லை. தன் பாட்டியுடன் இருந்த போது இதையெல்லாம் பற்றி கொஞ்சம் அவள் கற்றுக் கொண்டிருந்தாள். அவற்றையெல்லாம் நினைவு படுத்திக்கொண்டு நடுநடுவே அவள் மற்றவர்களுக்கு மருந்து கொடுத்து வரத் தொடங்கினாள்.

எல்லாமே நன்றாகவே இருந்தது, நன்றாக தொடர்ந்து இருந்திருக்கவும் கூடும். ஆனால் ஒரு நாள் அந்த மனிதன் அறைக்கு உள்ளேயே தூங்க வேண்டும் என்ற விருப்பத்தை வெளியிட்டான். எத்தனை நாள்தான் வெளியில் தூங்குவான்? ஜடிக்கு என்ன தெரியும் வெளியில் தூங்குவதில் உள்ள கஷ்டங்கள்?

ஜடி திரிசூலத்தை கையில் எடுத்துக் கொண்டாள். "நான் யார் தெரியுமா? எந்தக் குலத்தின் பெண் என்று- என் அப்பன் யார், என் அன்னை யார் என்று தெரியுமா உனக்கு? என் சாதி மனிதர்கள் யார் என்று தெரியுமா? நீ என்னுடன் ஏதாவது முறை தவறி நடக்கப் பாத்தேன்னா ஒரு அம்பு போட்டு கொன்னு போட்டுருவேன். ஜாக்கிரதை!"

மறு நாளே அங்கிருந்து கிளம்பிவிட்டாள். ஆழ்ந்து யோசித்து விட்டு டாகூர்ணியாகி விட்டாள். டாகூர்ணியாகா விட்டால் தன்னுடைய மந்த புத்தி பிள்ளையைக் காப்பாற்ற முடியாது. தன்னைச் சுற்றி ஒரு தெய்வீக லட்சுமண ரேகையை போட்டுக் கொள்ளாவிட்டால், இந்த உலகத்தில் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள முடியாது என்று ஜடிக்கு நன்றாகவே புரிந்தது.

## 3

ஐந்து பேர் அவனிடம் வந்து சொன்னார்கள்: "ஸாதன், இப்போ நீ சிரார்த்தம் பண்ணியாகணும் தம்பி-"

"கட்டாயமா செய்யறேங்க. ஆயாவுக்காக யானை கொடுப்பேன், குதிரை கொடுப்பேன், நிலம் கொடுப்பேன், தங்கம் தானம் பண்ணுவேன், நான்தான் சத்தியம் பண்ணியிருக்கேனே?"

வந்திருந்தவர்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர். ஸாதனின் பேச்சு பைத்தியக்காரனின் ஓலமாக இருந்தது அவர்களுக்கு. ஆனால் ஸாதன் இது பற்றி சத்தியம் செய்திருந்ததும் உண்மை.

மேலும் ஜடியும் சாமனிய மனுஷியில்லை. அவள் ஒரு டாகூர்ணி - மனிதக் கடவுள். தெய்வீகப்பிறவி, ஆதிப் பரக்ருதி. உலகின் த்வாரபாலகி.

"என்ன சொல்றே ஸாதன்? நீ சொல்றதெயெல்லாம் செய்ய எவ்வளவு செலவாகும்னு தெரியுமா?" பலாரம் மிகப்பரிவுடன் கேட்டான்.

"நான் சத்தியம் செய்திருக்கேன்."

"அப்ப போ, பிச்சை எடு. கதவு கதவாய் போய் தட்டி பிச்சையெடுத்துகிட்டு வா."

ஸாதன் தோளில் ஒரு பையைப் போட்டுக் கொண்டு பிச்சை எடுக்கக் கிளம்பினான். இப்பொழுது ஆயா இல்லை. பொழுது சாய்ந்தால், யார் அவனுக்குச் சுடச்சுட அரிசிச் சோறு போடுவார்கள்? சோலா மீன் வெட்டி, அதில் இஞ்சிச்சாறு, எலுமிச்சம் பழச்சாறு, மிளகாய், உப்பு எல்லாம் போட்டு, எண்ணெயில் வறுத்தெடுத்து, "ஸாதன், கண்ணு, வா. என் மடியில உட்கார்ந்து தின்னு." என்று யார் சொல்லப் போகிறார்கள்.?

கண்களில் நீர், தொண்டையில் அடைப்பு, தோளில் கிழிந்த கம்பளியுடன் ஸாதன் பிச்சையெடுக்கப் புறப்பட்டான்.

யாராவது நாலணா கொடுப்பார்கள். அலைந்து அலைந்து, பாதங்கள் வெடித்து, இருபத்தோரு ரூபாய் கிடைத்தது. மேலும் ஒரு படி அரிசி. ஒரு படி அரிசி கொடுத்துவிட்டு அனாதி டாக்டர் ஜடிக்கு தனது ஜன்மாந்திரக் கடனை அடைத்து விட்டார். ஆயுள் கால உறவை முடித்துக் கொண்டார்.

கடைசியில் பலராம் காளிகாட்டிற்குச் சென்றான். எல்லாரையும் விட ஏழையான, எல்லாரையும் விட வற்றிப் போன முகத்தையுடைய நோஞ்சலான ஒரு புரோகிதரைத் தேடிப்பிடித்து சாஷ்டாங்கமாக காலில் விழுந்து சொன்னான்: "ரொம்ப சங்கடத்துல இருக்கேன் சாமி. நான் இல்லை, என்னோட சினேகிதன். நீங்கதான் இதுக்கு ஒரு உபாயம் கண்டு பிடித்துச் சொல்லணும். அந்த உபாயம், பாம்பும் சாவணும், தடியும் உடையக் கூடாதுங்கற மாதிரி இருக்கணும்."

பலராம் சொன்ன விவரத்தைக் கேட்டு அவர் சிரித்து மாளவில்லை. பலராம் சொன்னான்: "நீங்கல்லாம் ரொம்ப நாளா தேன் வைக்கிற இடத்திலெ வெல்லம் வெச்சு, காரியம் நடத்தறவங்கன்னு எனக்குத் தெரியும். பொன்னு வைக்கிற இடத்தில ஒண்ணே கால் ரூபா வைப்பீங்கன்னு தெரியும். கொஞ்சம் பாருங்க. மலிவா முடிச்சு கொடுக்கிற மாதிரி ஒரு வழி சொல்லுங்க?"

புரோகிதன் தன் நாசியில் ஒரு சிட்டிகை மூக்குப் பொடியை செலுத்திக் கொண்டு சொன்னான்: "பணத்தக் கீழே வெச்சுட்டு பேசப்பா."

"எவ்வளவு?"

"நூறு ரூபான்னு வெச்சுக்கோயேன்..."

"நூறு ரூபா எங்கிட்டா இருந்தா உன் மாதிரி ஒண்ணேகால் ரூபா பாப்பான்கிட்ட ஏன் வர்றேன்?"

"சரி, எண்பது ரூபா வெச்சுக்கோ."

"எண்பது ரூபா?"

கண்ணில் பேராசை படர பிராமணன் பலராமைப் பார்த்தான், இந்த மாதிரி சமயத்தில் ஸ்க்ரூவைத் திருகினால்தான். எத்தனை பணம் பெயரும் என்ற யோசனையில்— ஆனால் எந்த தைரியத்தில் ஒரு பிராமணன் பேரம் பண்ண முடியும்? காளி காட்டில் இப்போதெல்லாம் பிராமணர்கள் பட்டினியில் தவிக்கும் மூட்டைப் பூச்சிகள். ஐந்து ரூபாய் கிடைத்தால், மாபெரும் சமுத்திரங்கள் சூழ்ந்த பாரதவர்ஷத்தையே தானமாகப் பெற்றவர்களைப் போல் சந்தோஷப்படுவார்கள்.

பலராம் கொஞ்சம் யோசித்தான். போகவரச் செலவு, கொஞ்சம் தண்ணி போடும் செலவு எல்லாம் போனால் எவ்வளவு மிஞ்சும்? பிறகு கடினமான குரலில் சொன்னான்: "இதோ பாரு சாமி, உன் கையில நான் பத்து ரூபா கொடுப்பேன். நீ காரியத்த முடிச்சு வைக்கணும். இல்லேன்னா நான் வேறு யாரிடமாவது போயிக்கிறேன். காசை விட்டெறிஞ்சா புரோகிதருக்கு பஞ்சமா என்ன? வெல்லத்த வெச்சா எறும்பு வராமலா போயிடும்? முடியாதுன்னா சொல்லு. என் கையில டைம் கம்மி. உன்னோட பேரம் பேசிட்டிருக்க எனக்குப் நேரமில்லே..."

"அழைச்சிட்டு வா உன் சினேகிதனை, ஆனால் அப்பனே. ஒரு விஷயம். மார்கண்டேயத் துணி, பித்ரு ஜனங்களுடைய துணி, நெய், பூ, கட்டை, எள்ளு, பஞ்ச கவ்யம் — இதெல்லாம் நீங்க கொண்டு வருவீங்க இல்லையா?"

"அப்படிப் போடுன்னேன்! எங்கிட்டயே வேல காட்றியா? இதையெல்லாம் நாங்க கொண்டு வர்றதுன்னா, நாங்க என்ன உன்னோட நாத்தத் துணியை மோந்து பாக்க வர்றோம்னு நெனச்சியா?"

பலராம் ஸாதனை அழைத்து வந்தான். எல்லா சாமக்கிரியை களையும் சேகரித்துக் கொண்டு தனது வீட்டின் வராந்தாவில் புரோகிதர் உட்கார்ந்து கொண்டிருந்தார்.

"தெற்குப் பார்த்து உட்கார் தம்பி," புரோகிதர் கீச்சுக்குரலில் சொன்னார். மற்றொரு பக்கத்தில் சின்னக் குடுமி, சிவந்த கண்கள், நைந்து போன குடைத் துணி போல நிறத்திலான ஒரு மனிதன் உட்கார்ந்து கொண்டிருந்தான்.

"இவர்தான் உன் அம்மாவின் பிரதிநிதி. தட்சிணை வாங்கிக் கொள்ளப் போகிறவர்."

பிரதிநிதி கனைத்துக் கொண்டு சொன்னான், "இதோ பார், மாமா, ஆயிர ரூபா சிரார்த்தம்தானே? பத்து நிமிஷத்தில எல்லாத்தையும் முடிச்சுடணும், எனக்கு வேறு ஒரு இடத்துக்குப் போகணும்."

"சரி. சரி, தோ பார், பையா, ஆசமனம் பண்ணு."

ஆசமனம் நடந்தது. சிரார்த்தம் தொடங்கியது. ஒவ்வொரு சாமானையும் புரோகிதர் ஸாதன் கையில் கொடுக்க, மின்னல் வேகத்தில் சிரார்த்தப் பிராமணன் அதைப் பிடுங்கிக் கொண்டான். ஒத்தை ரூபாயாக பத்து நோட்டுக்களை கையில் வைத்துக்கொண்டு பலராம் உட்கார்ந்து கொண்டு, நடுநடுவே புரோகிதரைக் கண் காணித்துக் கொண்டிருந்தான்.

மிகவும் சீக்கிரமாகவே பித்ரு க்ரியை முடிந்தது. நாலணா துணி ஒன்றிலிருந்து ஒவ்வொரு நூலாய் எடுத்து ஸாதன் வந்திருந்த, தெரிந்த தெரியாத, எல்லாருக்கும் வஸ்திர தானம் செய்தான்.

பிறகு, புரோகிதர் சொன்னார்: "இப்போ சொல்லு, உன் அம்மாவிற்கு என்ன தானம் செய்யப்போகிறாய்?

"எசமான்– ஒரு யானை."

"சரி, ஒண்ணே கால் ரூபாய் கொடு, இதனால உனக்கு யானை தானம் செய்த புண்ணியம் கிடைத்து விட்டது. புரிந்ததா? கொடுக்க வேண்டிய வஸ்துக்குப் பதிலாக அதன் விலையைக் கொடுத்தாகி விட்டது. இதைப்போல மற்ற தானங்களையும் செய், புரிந்ததா?"

பலராம் ஒரு காகிதத்தில் எழுதிக்கொண்டான்—"ஒரு யானை— ஒண்ணே கால் ரூபாய்."

ஸாதனுக்குத் தலைகால் தெரியவில்லை. இது என்ன ஆச்சரியம்! ஒண்ணேகால் ரூபாய் கொடுத்தால் ஒரு யானை தான பலன் கிடைக்கிறதா! இது முதலிலேயே தெரிந்திருந்தால்–

"ஒண்ணேகால் ரூபாயைக் கொடு! குதிரை தானம் முடிந்தது."

இதற்குப்பிறகு ஒரு அற்புதமான போட்டி ஆரம்பித்தது. ஸாதன் சொல்லிக்கொண்டே வந்தான் — குதிரை - நிலம் - தங்கம் - வஸ்திரம் என்று. புரோகிதர் சொல்லிக்கொண்டே

இருந்தார்: ஒண்ணே கால் ரூபா, ஒண்ணே கால் ரூபா என்று. பலராம் இந்த அபரிமிதமான தானம் பதினெட்டு ரூபாயக்குள் இருக்கிறதா என்று கணக்குப் போட்டுக் கொண்டிருந்தான்.

"பிராமணருக்கு கோதானத்தையும் ஒண்ணேகால் ரூபாயில் முடித்து விடுங்கள் புரோகித்ஜி" என்று பலராம் கத்தினான். ஹோமப்புகையின் காரணமாக எரிந்த கண்களைக் கசக்கிக் கொண்டே, பித்ருகளின் பிரதிநிதி பிராமணன் கேட்டான்: "ஒண்ணே கால் ரூபாயில் பசுவும் கன்றும் எப்படிக் கிடைக்கும்?"

"'கிடைக்காவிட்டால், மாமா - மருமான் விரலைச் சப்பிக் கொள்ளுங்கள். வேறு தட்சிணை கிடையாது-"

அந்த சமயத்தில் தன் அம்மாவின் கிழிந்து போன சிவப்புத் துணியை உடுத்திக்கொண்டிருந்த ஸாதன் வெறி பிடித்த எருமை போல் தோன்றினான். பிண்டதானத்திற்காக ஒரு சிறிய பாத் திரத்தில் கொஞ்சம் அரிசி சோறாக்கப்பட்டுக் கொண்டிருந்தது. சோற்றின் மணம் அவனை தாக்கத் தாக்க ஸாதன் உள்ளுர நிலை இழந்து கொண்டிருந்தான்.

"ஏ ஸாதன்! ஆசமனம் பண்ணிட்டு புரோகிதர் கால்ல விழு."

ஸாதன் வணக்கம் செலுத்திவிட்டு எழுந்து நின்றான். அவன் கண்களில் அனாதி டாக்டர் கொடுத்திருந்த அரிசிப்பை தரையில் கிடந்தது தென்பட்டது. ஏன் எல்லா அரிசியையும் இவர்கள் வடிக்கவில்லை? அரிசி அம்மாவிற்காக கொடுக்கப் பட்டது. அதில் ஒரு பகுதியை மட்டும் சமைத்துப் படைப்பதின் அர்த்தமென்ன?

ஸாதன் மனதில் சந்தேகம் எழுந்தது. சீற்றத்தில் அவன் குரல் கிரீச்சிட்டது. "ஏண்டா, பொறுக்கிப் பசங்களா! என் கையிலேந்து பதினெட்டு ரூபாயப் புடுங்கிட்டு அரிச்சந்திரன் ஆயிட்டீங்களா? ராமச்சந்திரன் ஆயிட்டீங்களா?"

சிரிக்க ஆரம்பித்த பலராம் அதிர்ந்து விட்டான். ஸாதன் தரையில் உட்கார்ந்து கொண்டு தன் துணியில் அரிசியைக் கட்டிக் கொண்டிருந்தான்.

"என்ன செய்யறே, பையா! அந்த அரிசி எனக்குச் சேர வேண்டியது-!" புரோகிதர் ஓலமிட்டார்.

"வாய மூடு!" ஸாதன் புரோகிதரை கேவலமாகத் திட்டினான். இதே புரோகிதர்தான், அவன் கையிலிருந்தே ஐடி டாகூர்ணி பேரில் கணக்கிலடங்காத ஐஸ்வர்ய தானம் செய்து வைத்திருந்தார். ஐடி டாகூர்ணி ஆனந்தமாக சுவர்க்கத்திற்குச் சென்று கொண்டிருக் கிறாள். இவளுடைய மூதாதையர் கொன்ற பகவானின் காலடிக்கே

போய்க் கொண்டிருக்கிறாள். ஸாதன் இதையெல்லாம் மறந்து விட்டிருந்தான்.

"ஸாதன்! என்ன பண்றே?"

"அரிசியை எடுத்துகிட்டுப் போகப் போறேன். பொங்கித் தின்பேன்."

"அடே! இது சிரார்த்த அரிசிடா. அதை நீ திங்கக்கூடாது."

"வாயை மூடு, பலராம்." மதம் பிடித்த யானைபோல் ஸாதன் பொங்கி எழுந்தான். "வீட்டில தம்பிடியில்ல அரிசி வாங்கித் தின்ன. இந்த அரிசியை நான் கொடுக்க மாட்டேன்."

"எக்கேடு கெட்டுப்போ. முரட்டுப்பயலே..."

"இந்த அரிசி என்னுடையது, பலராம், பக்கத்தில வராதே..."

புரோகிதர் பயனற்ற கோபத்துடன் சொன்னார்: "யாராவது சிரார்த்தத்தில வைச்ச அரிசியை எடுத்துக்கிட்டுப் போய் சமைத்துச் சாப்பிடுவாங்களா? சிரார்த்த பலன் எல்லாம் நஷ்டமாகிப் போய் விடும்!"

"ஏன் நஷ்டமாயிடும்? நான் யானை கொடுக்கலியா? பசுமாடு கொடுக்கலியா? தங்கம், வெள்ளி, நிலம், நீச்சு எல்லாம் கொடுக்கலியா? எந்தப் படவா என் ஆயாவோட சிரார்த்த பலனை நஷ்டமாக்கிடுவான்?"

தோளில் அரிசிப் பையை மாட்டிக் கொண்டு வீட்டுக்குப் புறப்பட்டான் ஸாதன். வீட்டுக்குப் போய், அடுப்பு மூட்டுவான், சோறு சமைப்பான்.

சோற்றின் மணம் மிகவும் நல்ல மணம். அந்த மணத்தில் தன் ஆயாவைத் தேடிக் கண்டுபிடிப்பான். எத்தனை நாள் சோறு சமைப்பானோ, எத்தனை நாள், சூடான சோறு தின்பானோ, அத்தனை நாள் அவன் பக்கத்தில் மாலை – காலை அன்னை இருப்பாள்.

அம்மாவின் நினைவு வந்தவுடன், புரோகிதருடன் தான் கேவலமாக நடந்து கொண்டது பற்றிய குற்ற உணர்வு அவனை வாட்டியது. கண்களில் நீர் சுரந்தது. "அம்மா! நீ எப்படியாவது சொர்க்கத்திற்குப் போய் சேந்துடு. இப்போ நான் சோறாக்கி திங்கிறேன். என் மேல தப்புச்சொல்லாதே அம்மா."

# பாயன்

பகீரத் மிகவும் குழந்தையாக இருந்த போது அவனுடைய தாயார் சண்டியின் மீது சாமி ஏறி விட்டது. அவள் சாமியான பிறகு கிராமத்தினர் அவளை கிராமத்திற்கு வெளியே துரத்தி விட்டனர். சாமியேறியவர்களை கொன்று விடுவதில்லை. ஏனென்றால் சாமியேறியவள் செத்துவிட்டால் கிராமத்துக் குழந்தை குட்டிகள் எதுவும் உயிர் தங்காது. சூனியக்காரியாக மாறியிருந்தால் அவளை நெருப்பு வைத்து கொளுத்திக் கொன்று போட்டிருக்கலாம். ஆனால் யாரையாவது 'சாமி பிடித்துக் கொண்டிருந்தால்' அவளை உயிருடன் வைத்திருக்க வேண்டும்.

இதன் காரணமாகவே எல்லாரும் கிராமத்திற்கு வெளியே ஒரு குடிசை போட்டுக் கொடுத்து சண்டியைத் தள்ளி வைத்து விட்டிருந்தனர்.

வேறொரு தாயின் வளர்ப்பில், பகீரத் பெரிய பிள்ளை யானான். அடித்தாலும் சரி, அணைத்தாலும் சரி, அவள்தான் தாய். தன்னுடைய உண்மையான தாயார் யாரென்று அவனுக்குத் தெரியாது. அவனுக்குத் தெரிந்ததெல்லாம் இவ்வளவுதான்: மைதானத்திற்கு அப்பால், ஒரு சாதிம் மரத்தின் கீழ் இருக்கும் குடிசையில் ஒரு 'சாமி ஏறிய' பெண் தனியாக வசிக்கிறாள் என்று.

யாரோ ஒருவனின் தாயாக அவள் இருக்கக்கூடும் என்று அவனுக்குத் தோன்றியதேயில்லை. தூரத்திலிருந்து பார்த்தால் குடிசையின் உச்சியில் ஒரு சிவப்புக் கொடி நடு நடுவே வெறி பிடித்தவள் போல் வயல் கரைகளில் சித்திரை மாத கடும் பிற்பகல் வெய்யிலில் சிவப்பு உடையில், ஒரு டமாரத்தைத் தடியால் அடித்துக்கொண்டு மேடு தட்டிய குட்டையை நோக்கி போய்க் கொண்டிருக்கும் உருவத்தைப் பார்ப்பான். அவளுக்குப் பின்னால் ஒரு நாய். தான் எங்கு சென்றாலும் 'பாயன்' டமாரம் அடித்துக் கொண்டு தன் வருகையை தெரிவித்து, ஜனங்களை விலக வைக்க வேண்டும். யாராவது குழந்தையையோ இளைஞனையோ அவள் பார்த்துவிட்டால் அவர்கள் ரத்தத்தை உறிஞ்சிக் குடித்துவிடுவாள்.

அதனாலேயே பாயன் தனியாக வசிக்க வேண்டியிருந்தது. அவள் நடமாடுவது தெரிந்தால், சிறுவர், பெரியவர் எல்லாரும் ஒதுங்கிப் போய்விடுவார்கள்.

ஒரு நாள் தன் தந்தை மலிந்தர் பாயனுடன் பேசுவதை பகீரத் பார்த்தான்.

"கண்ணைக் கீழே போடு பகீரத்" அப்பன் அவனை அதட்டினான்.

பாயன் மெல்ல மெல்ல நடந்து வந்து குளத்தங்கரையில் நின்றாள்.

ஒரு கண நேரத்தில், குளத்துத் தண்ணீரில் சிவப்புத்துணி, தாமிர வண்ண முகம், சடைபிடித்த தலைமயிர் கொண்ட உருவத்தின் பிம்பத்தை பகீரத் பார்த்தான்.

இரண்டு கண்களிலும் பசியின் சாயை, பகீரத்தின் மேல் கண்ணைப் போட்டுக் கொன்று விடுவாள் போல- இல்லை, பகீரத்தின் பக்கம் பாயனின் பார்வை திரும்பவில்லை.

பகீரத் அந்த கருநிறத் தண்ணீரில் அவளுடைய சிகப்புத் துணியைப் பார்த்த கணத்திலேயே அவளும் அதே தண்ணீரில் அவனுடைய நிழலைப் பார்த்த வண்ணம் இருந்தாள். பகீரத் சிலிர்த்துக் கொண்டு கண்ணை மூடிக்கொண்டு தன் தந்தையின் வேட்டியின் நுனியைப் பிடித்துக் கொண்டான்.

"ஏன் வந்திருக்கே?" பகீரத்தின் தந்தை சீறினான்.

"தலைக்கு எண்ணையில்லே, கங்கா புத்ரா! வீட்டிலே கிரோசின் இல்லே. தனியா பயமா இருக்கு."

பாயன் அழத்தொடங்கினாள். தண்ணீரில் கண்ணீர் விழுந்தது.

"ஏன்? இந்த சனிக்கிழமை வாரக் காணிக்கை வரலியா?"

ஒவ்வொரு சனிக்கிழமையும் டோம்பாடா (தோட்டிச்சேரி) விலிருந்து யாராவது ஒருவன் வாரக் காணிக்கையை போட்டுப் போவது வழக்கம். அரிசி, பருப்பு, உப்பு, எண்ணெய் எல்லாம் அந்த சாதிம் மரத்தடியில் வைத்து விட்டு "பாயனுக்கு இந்த வாரக் காணிக்கை வைத்தாகி விட்டது, நீயே சாட்சி." என்று மரத்தைப் பார்த்து சொல்லிவிட்டு வேகமாக வீடு திரும்பி விடுவான்.

"நாய் தின்னுடுச்சு-"

"பணம் வேணுமா?"

"எனக்கு யார் பண்டம் விப்பாங்க?"

"சரி, நான் கொண்டு வந்து தாரேன், நீ இப்போ போ-"

"என்னால தனியா இருக்க முடியலே."

"அப்போ ஏன் பாயனாகிப் போனே? இப்போ போ."

பகீரத்தின் அப்பன் குளத்திலிருந்து சேற்றைக் கையில் எடுத்துக் கொண்டான்.

"கங்கா புத்ரா! இந்தப் பையன்.."

அசிங்கமான ஒரு திட்டு திட்டிவிட்டு பகீரத்தின் அப்பன் சேற்றை அவள் பக்கம் விட்டெறிந்தான். சண்டி பாயன் ஓடிப் போய் விட்டாள்.

"அப்பா, நீ பாயனோட பேசினாயா?"

பகீரத்துக்கு மிகவும் பயமாக இருந்தது. பாயனிடம் பேச்சுக் கொடுப்பவர்கள் கட்டாயமாக செத்துப் போவார்கள். பகீரத்துக்கு அப்பா செத்துப் போய்விடுவார் என்று நினைத்தவுடனேயே தலை மேல் இடி விழுந்தாற் போலாயிற்று. அப்பா செத்துப் போன வுடனேயே அவன் சின்னம்மா அவனை வீட்டை விட்டுத் துரத்திவிடுவாள் என்பதில் அவனுக்கு சந்தேகமேயில்லை.

"இப்போ அவ பாயன், ஆனால் அவ உன்னோட அம்மா."

அவன் தந்தை மிகவும் ஆழ்ந்த குரலில் சொன்னான். பகீரத்தின் தொண்டை அடைத்துக் கொண்டது. பாயன் மனித ஜன்மமா? பாயன் மண்ணைத் தோண்டி செத்துப்போன குழந்தைகளை வெளியே எடுத்து, அவர்களுக்குப் பால் கொடுத்து சீராட்டுவாள் என்று அவன் கேட்டிருக்கிறான். பாயனின் கண் பட்டால் பெரிய பெரிய மரங்களெல்லாம் நிமிஷத்தில் பட்டுப் போய்விடும்! பகீரத் உயிருள்ள பிள்ளை. அவன் எப்படி ஒரு பாயனின் வயிற்றில் பிறந்திருக்க முடியும்? பகீரத்துக்கு நினைத்துப் பார்க்கக்கூட முடியவில்லை.

"முன்னே அவ உன் அம்மா. மனிதப்பிறவியா இருந்தா."

"உன் பொண்சாதியா?"

"ஆமாம், என் பொண்சாதிதான்."

என்ன நினைத்துக் கொண்டானோ, மலிந்தர் நீண்ட பெருமூச்சு விட்டான். "உனக்கு எல்லாவற்றையும் ஒரு நாள் சொல்லி விடுகிறேன், பகீரத். ஒரு பயமும் வேண்டாம்."

ஆச்சரியத்துடன் பகீரத் தன் தந்தையை பார்த்துக் கொண்டே அவன் பக்கத்தில் நடந்து கொண்டிருந்தான். மலிந்தர் கங்கா புத்திரனின் குரலில் இத்தகைய தொனியை இதற்கு முன் பகீரத் கேட்டதில்லை.

மலிந்தர் ஒரு சாதாரணத்தோட்டியல்ல, சுடுகாட்டுத் தோட்டி

சுடுகாட்டில் ஒரே ஒரு தோட்டிக்கு மட்டும் முனிசிபாலிடி தங்க இடம் கொடுக்கும். பகீரத்தின் குடும்பத்தினர் மூங்கிலில்

கூடை புனைவது. அரசாங்கக் கோழிப் பண்ணைகளில் வேலை செய்வது போன்ற தொழில்களில் ஈடுபட்டுக் கொண்டிருந்தனர். இப்பண்ணைகளில் கிட்டும் எச்சங்களை எடுத்துக் கொண்டு போய் உரமாக்குவார்கள். மலிந்தரைத் தவிர இந்தப் பகுதியில் ஒரு தோட்டிக்குக் கூட தன் பெயரை எழுதத் தெரியாது. இதன் காரணமாகவே மலிந்தருக்கு சில நாட்களுக்கு முன்னர் நகரத்தில் மார்சுவரியில் வேலை கிடைத்தது.

சர்க்கார் உத்தியோகம். மலிந்தர் கங்கா புத்திரன் என்று கையெழுத்துப் போட்டு, மாதம் 425 ரூபாய் சம்பளம் வாங்குகிறான். அவன் தந்தை சட்டவிரோதமாக, சுண்ணாம்பு, ப்ளீச்சிங் பௌடர் போட்டு வாரிசில்லாத பிணங்களை சுத்தம் செய்து எலும்புகள் எடுக்கிறான் என்று பகீரத்துக்குத் தெரியும். ஒரு முழு மனிதனின் எலும்புக்கூடு, மண்டையோடு, குறைந்த பட்சம் மார்புக்கூடாக இருந்தால் அதற்கு நல்ல விலை கிடைக்கும். டாக்டர்களுக்கு மனித எலும்புக்கூடு மிகவும் தேவைப்படுகிறது. நல்ல லாபம் கிடைக்கும். சர்க்கார் குமாஸ்தாக்கள் கல்கத்தா டாக்டர்களுக்கு இந்த எலும்புக் கூடு, மண்டையோடு, மற்ற எலும்புகள் எல்லாம் நல்ல விலைக்கு விற்று லாபம் பண்ணுவார்கள். அப்பாவுக்கு பத்தோ பதினைந்தோ கொடுத்தார்கள் என்றால் அவனுக்கு ரொம்ப குஷி. அந்தப் பணத்தை வட்டிக்கு விட்டு அந்த லாபத்தில் சில பன்றிகளை வாங்கியிருக்கிறான்.

மலிந்தர் சட்டை உடுத்தி, காலில் செருப்புப் போட்டுக் கொண்டு தினமும் கச்சேரிக்குப் போகிறான். அவன் பேட்டையில் அவன் மிகவும் மதிக்கப்படுகிற மனிதன்.

அதே மலிந்தர், கண்கள் சிவக்க, சண்டி பாயனுடைய குடிசையின் மேல் இருந்த மஞ்சள் வெய்யிலைப் பார்த்த வண்ணமிருந்தான். ஆகாசத்தின் நெற்றியில் ஒரு சிறிய குங்குமப் பொட்டுப் போலிருந்த அந்த சிவப்புக் கொடியை வெகு நேரம் வரை பார்த்துக் கொண்டிருந்தான். பிறகு நெகிழ்ச்சியுடன் சொன்னான்: "இருட்டைக் கண்டால் பயப்படுவாள் இவள். அதனால்தான் கடவுள் அவளை ஒரு பாயனாக்கி விட்டாரோ? செத்துப் போனால் ஒரு வேளை அவளுக்கு சாந்தி கிடைக்கும். ஆனால் அவள் பாயன் ஆகிவிட்டாளே? கொன்று போட்டு சாந்தி கொடுக்க முடியாதே? என்ன செய்வது கண்ணு?"

துக்கம் அவனை மிகவும் வாட்டியிருக்காவிட்டால் இவ்வளவு பேசியிருக்க மாட்டான் மலிந்தர்.

"அவளை பாயன் ஆக்கினது யார் அப்பா?"

"கடவுள்-"

மலிந்தர் ஜாக்கிரதையாக பிற்பகல் வெய்யிலில் பகீரத்தின் அக்கம் பக்கத்தில் ஏதாவது நிழலுருவம் நடமாடுகிறதா என்று துருவிப் பார்த்தான். பாயன்கள் பல ரூபங்கள் எடுத்துக் கொள்ளும் சக்தி வாய்ந்தவர்கள். சந்தையில் ரோஜா, மல்லிகைப்பூ, வெண்ணெய் விற்பவர்கள் போல உருவம் எடுத்துக் கொள்வது போன்ற நானாவித தந்திரங்கள் தெரிந்தவர்கள்- ஒரு சின்ன குழந்தையை பாயன் எடுத்துக் கொண்டு போக விரும்புகிறாள் என்றால் அப்பொழுது நாலாபக்கமும் வெய்யில் இருந்தால் கூட அவள் முகம் மட்டும் நிழலில் மறைந்திருக்கும். தான் மறைவாய் இருந்து கொண்டு தனது முந்தானையின் நிழலை குழந்தையின் தலையில் விழச் செய்துவிடுவாள். அந்தக் குழந்தை இறந்து போய், யாராவது ஏதாவது கேட்டால், பாயன் ஒரு குறும்புச் சிரிப்பு சிரித்துக் கொண்டு, "எனக்கு என்ன தெரியும்? ரொம்ப வெய்யிலா இருக்கேன்னு அதற்கு கொஞ்சம் நிழல் கொடுத்தேன். குழந்தை என்ன உப்பில பண்ணின பொம்மையா, நிழல் பட்டவுடனே கரைந்து போக?" என்பாள்.

பகீரத்தின் அருகில் அழுக்கான, துர்நாற்றம் கொண்ட சிவப்பு முந்தானை கண்ணில் படாததைக் கண்டு மலிந்தர் கொஞ்சம் ஆசுவாசமடைந்தாள்

"எதுக்கு பயப்படறே, கண்ணு? உனக்கு ஒரு கேடும் அவள் செய்ய மாட்டாள்."

அப்பொழுது கூட பகீரத்துக்கு நம்பிக்கை வரவில்லை.

அவளைச் சுற்றியே அவன் மனம் சுழன்று கொண்டிருந்தது. வயலுக்குப் போன போதும், மாடு மேய்க்கிறபோதும், எங்கே போனாலும் அவன் மனதில் ஒரே எண்ணம்தான். ரயில்வே லைனைத் தாண்டி ஓடிப்போய் நிற்க வேண்டும் என்று தோன்றியது. அங்கு போய் நின்ற போது, 'அவள் எதைக்கண்டு இவ்வளவு பயப்படுகிறாள்? எப்படி தலைமயிரில் எண்ணெய் வைத்துக் கொண்டு சித்திரை மாதக்காற்றில் தண்ணீர் விட்டுக் கழுவி காற்றில் உலர்த்திக் கொண்டிருக்கிறாள்' என்பதை எல்லாம் பார்க்க வேண்டும் போலிருந்தது.

ஆனால் அவனால் போகமுடியவில்லை. மிகவும் பயமாக இருந்தது.

ஒருவேளை தான் திரும்பி வர முடியாவிட்டால்? அங்கேயே பகீரத்தை அவள் ஒரு மரமாக்கிவிட்டால்? கல்லாக்கிவிட்டால்?

வெகு நாட்கள் வரைக்கும் துரத்திலிருந்தே பார்த்துக்

கொண்டிருந்தான். அந்த சாதிம் மரத்திற்கும் குடிசைக்கும் நடுவில் இருந்த ஆகாயம் யாரோ ஒருவருடைய கபாலம் மாதிரியிருந்தது. அதில் ஒரு சிறிய குங்குமப் பொட்டுப்போல் அந்த சிவப்புக் கொடி காற்றில் சில சமயம் அசைந்து கொண்டும் சில சமயம் ஆடாமல் நின்று கொண்டும் இருந்தது. அங்கு போகவேண்டும் போலவும் இருந்தது. ஆனால் போனால் திரும்பி வரமுடியாதோ என்ற பயத்தில் முன்வைத்த காலை பின் வாங்கிக் கொண்டு திரும்பி வீட்டிற்கு ஓடிவந்துவிடுவான்.

ஆச்சரியம் என்னவென்றால், அவன் ஒரு பாயனின் பிள்ளை என்ற காரணத்தினால் எவரும் அவனைக் கேவலமாக நடத்திய தில்லை. மாறாக, அவன் மேல் மிகவும் மரியாதை வைத்திருந்தனர். பாயனின் பிள்ளையை மரியாதையுடன் நடத்தினால், அவ்விஷயம் அவளுக்குத் தெரிந்து போகும். அதன் காரணமாக அவள் தங்கள் குழந்தை குட்டிகளை சினேக பாவத்துடன் பார்ப்பாள் என்ற நம்பிக்கை. இப்படிச் செய்தால் குழந்தைகள் ஏதோ கொஞ்சத் துக்குக் கொஞ்சம் சுகமாக இருக்கும். இப்படிச் செய்யாதவர்கள் வீட்டுக் குழந்தைகள் செத்துப் போய்க் கொண்டேயிருக்கும்.

பகீரத்தின் புதிய அன்னை ஒன்றுமே பேசமாட்டாள். மலிந்தரின் முதல் மனைவிக்குப் பிறந்த பிள்ளையின் மேல் ஆசையோ, வெறுப்போ, இரக்கமோ, அருவருப்போ, எதனையும் அவள் காட்டிக் கொண்டதில்லை. அதற்கு முக்கியக் காரணம் அவளுக்கு ஆண் குழந்தையில்லை. ஆண் குழந்தையில்லாத மனைவி புருஷன் மீது நாட்டாமை செலுத்த முடியாது. மேலும் பகீரத்தின் புது அம்மாவின் மேல்உதடு பிளவுபட்டிருந்தது. பற்கள் வெளியே தெரியும். அதனாலேயே அவள் வீட்டை விட்டு வெளியில் செல்ல விரும்புவதில்லை. அவள் சொல்லுவாள், “எந்த மூஞ்சியை காட்ட வெளியே போகணும்? வாயை மூடவே முடியல. நான் சிரிக்காட்டாக் கூட. பாக்கிறவங்கெல்லாம் ‘இந்த பொம்பிள எப்ப பாத்தாலும் சிரிச்சுகிட்டே இருக்கா’ என்கிறாங்க. தோ பார், கங்காபுத்திரா! நான் செத்துப் போனா என் முகத்த ஒரு துண்டுல சுத்தி மறைச்சு எடுத்துக்கிட்டுப் போ. இல்லாட்டி முன்பல்லு தோட்டிச்சி போய்ச் சேந்துட்டான்னு ஊர் சனமெல் லாம் சொல்லும்.”

யசி எப்போ பார்த்தாலும் வேல செஞ்சுகிட்டே இருப்பாள். வீட்டைப் பாத்துக்குவாள், சோறு பொங்குவாள், விறகு வெட்டுவாள், சாணி தட்டுவாள், பன்றி மேய்ப்பாள், பெண்களின் தலையிலிருந்து பேன் எடுப்பாள். பகீரத்தை ‘அப்பா’ன்னுதான்

கூப்பிடுவாள். 'சோறு தின்ன வாப்பா, குளிக்கப் போப்பா' என்றுதான் பேசுவாள். இவர்கள் இருவரும் ஏதோ தூரத்து உறவினர் போல். பாயனுடைய மகளை சரியாக நடத்தாவிட்டால், பாயன் அவளுடைய இரண்டு பெண்களையும் அம்பு போட்டுக் கொன்று விடுவாள். யசிக்கு இது தெரியும். மேலும், வருங்காலத்தில் அவளும் அவள் குழந்தைகளும் பகீரத்தை நம்பித்தான் வாழ வேண்டும்.

நடுநடுவில் பயத்தில் கன்னத்தில் கையை வைத்துக் கொண்டு யோசனையில் ஆழ்ந்து விடுவாள். கொளுத்தும் வெய்யிலில் பாயன் தன் இரண்டு பெண்களையும் நினைவு படுத்திக்கொண்டு களிமண்ணில் அவர்கள் மாதிரி பொம்மைகளைச் செய்து கொண்டிருக்கிறாளோ என்னவோ, யாருக்குத் தெரியும்? பிறகு அம்பு போட்டு அவற்றைக் கொன்று போட்டு விடுவாளோ என்னவோ? இந்த மாதிரி சமயங்களில் அவள் சாதாரணமாக இருப்பதை விட குரூபியாகத் தெரிவாள். மாபெரும் துக்கத்தில் மலிந்தர் டோம் பாடாவில் எல்லாரையும் விட குரூபியான ஒருத்தியைக் கல்யாணம் செய்து கொண்டான். பல கிராமங்களில் இருந்த மிக அழகான பெண்கள் பாயன் ஆகிவிட்டிருந்தார்கள். அதிலிருந்து மலிந்தர் அழகான பெண்களைக் கண்ணெடுத்தும் பார்ப்பதில்லை.

மலிந்தர் தன் முதல் மனைவியின் மீது கொள்ளை ஆசை வைத்திருந்தான். ஒரு வேளை அந்த ஒரு காலத்துக் காதலை நினைவில் கொண்டுதான் அவன் பகீரத்திடம் சண்டி பாயனைப் பற்றிப் பேச விரும்பினான் போலும். அப்பன்-மகன் இருவரும் ரயில்வே லைனுக்குப் பக்கத்தில் நடந்து கொண்டிருந்தனர். மலிந்தரின் கையில் இறைச்சிப் பொட்டலம் இருந்தது. மலிந்தருக்கு ஒரு அதிசயமான பழக்கம். தான் வளர்த்த பன்றியை வெட்ட அவனுக்குப் பிடிக்காது. பன்றி வளர்ந்து வெட்டுவதற்குத் தயார் நிலையில் இருக்கும் போது, அதை யாருக்காவது விற்று விடுவான். யார் வாங்குகிறானோ அவன் மலிந்தருக்கு ஒரு பங்கு மாமிசம் கொடுப்பான்.

"வா இந்த மரத்தடியில் கொஞ்ச நேரம் உட்காருவோம்."

தன் பதின்மூன்று வயது மகனிடம் அனுமதி கேட்பது போலிருந்தது இது. ஆலமரத்தின் கீழ் இருவரும் உட்கார்ந்தார்கள். பகீரத் கேட்டான்: "இங்கிருந்துதான் கொள்ளைக்காரங்க போவாங்க. இல்லையா, அப்பா?"

பகீரத் அந்த நாட்களில் ப்ரைமரி ஸ்கூலில் படித்துக் கொண்டிருந்தான். இந்த அரசுப் பள்ளிக்கூடத்தின் வாத்தியார்

சுவரொட்டிகளை எழுதும் வழக்கத்தை கொண்டிருந்தார். அவரே எழுத்துகளை எழுதிக் கொண்டு வருவார். அதன் மேல் பகீரத் மை தீட்டுவான். அந்த எழுத்தைப் படித்துத்தான் பகீரத் 1955இல் தீண்டாமை சட்டத்திற்குப் பிறகு அவன் போன்றவர்களெல்லாம் தீண்டத்தகாதவர்கள் அல்ல என்று தெரிந்து கொண்டிருந்தான். அரசியல் சாசனச்சட்டம் என்று ஒன்று இருக்கிறது; அதன் தொடக்கத்திலேயே அடிப்படை அதிகாரங்களை பற்றி எழுதியிருக்கிறது; அதில் 'எல்லாரும் சமம்' என்று தெளிவுபடுத்தப் பட்டிருக்கிறது.

அந்தச் சுவரொட்டி இன்றும் தொங்கிக் கொண்டிருக்கிறது. ஆனால் பகீரத்துக்கும் அவனுடைய சாதிச் சிறுவர்களுக்கும் தெரியும்—அவர்களுடைய வாத்தியாரும் மற்ற பிள்ளைகளும் இவர்களிடமிருந்து சற்று விலகி உட்காருவதையே விரும்புவார்கள். இந்தப் பள்ளிக்கூடத்திற்கு உயர் சாதி மாணவர்கள், மிகவும் ஏழையாக இருந்தாலன்றி அல்லது கெட்டிக்காரப் பிள்ளைகளாக இல்லாவிட்டாலன்றி, வருவதில்லை. எதற்கு வரவேண்டும்? இப்பொழுதெல்லாம் நாலாபக்கமும் ஸ்கூலோ ஸ்கூல்கள்தானே. இது எப்படியிருந்தாலும் இப்பொழுதெல்லாம் பகீரத் சற்று மாறுபட்ட மொழியைப் பேசுகிறான். மலிந்தருக்கு இந்தப் பேச்சு முறை நன்றாகவே இருக்கிறது. தான் பகீரத்துக்கு தகுதியான தகப்பன் இல்லை என்று அடிக்கடி அவனுக்குத் தோன்றுகிறது.

பகீரத் கொள்ளைக்காரர்களை பற்றிய பேச்செடுத்தான். அந்த நாட்களில், ஸோனாடாங், பலாசி, துபுலியா பகுதிகளில் பல இடங்களில் பொழுது சாய்ந்தவுடன், ரயில் வண்டிகளில் கொள்ளையடித்தல் அதிகரித்து விட்டிருந்தது. ஒரு விதத்தில் எல்லாருமே கொள்ளையடிக்கிறார்கள். பெரிய மனிதர்கள், ஏழை மாணவர்கள், காலனிகளில் வசிப்பவர்கள், பங்களாக்களில் வசிப்பவர்கள் போன்ற பலதரப்பட்டவர்கள் ரயிலில் ஏறுகிறார்கள். அதற்குப் பிறகு சரியான சமயத்தில் அபாயச் சங்கிலியை இழுத்து வண்டியை இருட்டு மைதானத்தில் இக்கொள்ளைக்காரர்கள் நிறுத்தி விடுகிறார்கள். இருட்டில் அவர்களுடைய கூட்டாளிகள் சேர்ந்து கொள்கிறார்கள். அதற்குப் பிறகு கையில் கிடைத்ததை எடுத்துக்கொண்டு மறைந்து விடுகிறார்கள். விசேஷமாக, இருட்டின பிறகு இந்த ஆலமரம் எல்லாரையும் பயமுறுத்தி வைக்கிறது.

இதனால்தான் பகீரத் கொள்ளைக்காரர்கள் பேச்சை எடுத்தான். ஆனால் மலிந்தர் அப்பேச்சை சட்டை செய்யவில்லை. சூன்யமான மைதானத்தையும் ஆகாயத்தையும் பார்த்துக்

கொண்டே ஏதோ ஒன்றை அவன் தேடிக் கொண்டிருந்தான். பிறகு சொன்னான்: "நான் ஒரு காலத்தில் மிக பொல்லாதவனாக இருந்தேன். உன் அம்மா சின்னச் சின்ன விஷயத்துக்கெல்லாம் அழுவா. எல்லாம் கடவுளோட விருப்பம்-"

ஒரு நாள் கடவுளே டோம்பாடாவிற்கு வந்து எல்லா வற்றையும் தலைகீழாக்கிவிட்டார். சண்டி பாயனாகி விட்டாள். நிஷ்டூரமான, இரக்கமில்லாத, சிசுக்கொலை செய்பவளாகி விட்டாள். மலிந்தர் உமி அடுப்பாகி விட்டான். ஆக வேண்டியது தானே?

ஒரு மனிதப்பிறவி அமானுஷ்யப் பிறவியாகி, ஒரு மனிதனின் பிடிக்கு அப்பால் போய்விட்டால், சாதாரண உலகிற்கு அப்பாற் பட்ட கண்ணுக்குத் தெரியாத கதவைத் திறந்து கொண்டு வேறு எங்கோ பிரவேசித்துவிட்டால், அந்த மனிதன் மற்ற மனிதர்களைப் போல ஆகிவிட வேண்யிருக்கிறது.

பகீரத்துக்குத் தன் தந்தை தன்னிடம் ஏதோ சொல்ல முயற்சிக்கிறான் என்று தோன்றியது. அவனுக்கு இது மிகவும் அதிசயமாக இருந்தது. பல நாட்களுக்கு முன் ஒரு தடவை அவன் தகப்பன் பாயனிடம் பேசினான். அதற்குப் பிறகு ஒருதடவைகூட அவளுடன் பேசியதில்லை. இன்று ஏன் மறுபடியும் பாயனைப் பற்றிப் பேசுகிறான்? மலிந்தர் பகீரத்தின் கையை கெட்டியாக பிடித்துக்கொண்டு கேட்டான்: "பயந்து விட்டாயா? எல்லா ருக்குமே உன் அம்மாவின் கதை தெரியும். நீ மட்டும் ஏன் அதைத் தெரியாதவனாக இருக்கவேண்டும்?"

அவர்கள் கங்காபுத்திரர்கள். டோம்கள். மலிந்தர் மூங்கில் முடைவான், விறகு வெட்டுவான். சண்டி பிணம் தூக்கும் வேலை செய்து கொண்டிருந்தாள்.

அவளுடைய வம்சத்தினருக்கு ஒரு பரம்பரை அதிகாரம் உண்டு. கிராமத்தின் வடக்கில் ஒரு கிணறு இருந்தது. அதன் பக்கத்தில் ஒரு ஆலமரம். பக்கத்தில் ஒரு புதைகாடு உண்டு. கடந்த ஐந்து ஆண்டுகளாக, இறந்த சிறு குழந்தைகளை தகனம் செய்வது வழக்கமாகிவிட்டது. இதற்கு முன்பு, புதைத்து விடுவது வழக்கம் இந்தப் புதை காட்டில்தான் சண்டியின் தகப்பன் குழி வெட்டுவது, குழியில் கட்டை பரப்புவது, நரிகளை விரட்டிவிடுவது போன்ற பணிகளில் ஈடுபட்டுக் கொண்டிருந்தான். நன்றாகக் குடித்துவிட்டு "ஹை, ஹை, ஹையா" என்று அவன் குரல், இரவிலும், பகலிலும் என்று கேட்டுக்கொண்டே இருக்கும். அவனுடைய இக்கூவல் மிக பயங்கரமாக இருக்கும்.

சண்டியின் தகப்பன் கஞ்சா, சாராயம் மாத்திரம்தான் குடிப்பான். சனிக்கிழமையன்று கையில் ஒரு கூடையை எடுத்துக் கொண்டு கிளம்புவான், "நான் உங்களுடைய சேவகன். கங்கை புத்திரன். எனக்கு பிச்சை போடுங்கள்."

எல்லாரும் அவனைக் கண்டு பயப்படுவார்கள். சின்னக் குழந்தைகளை அவன் கண்ணில் படாமல் வைத்திருப்பார்கள். எதுவும் சொல்லாமல் அவனுக்குப் பிச்சை போட்டு திரும்பி விடுவார்கள்.

ஒரு நாள், ஒரு பெண் வந்து நின்றாள். சிவப்பு நிறம், பழுப்பு நிறக் கண்கள். சொன்னாள். : "என் பெயர் சண்டி நான் அந்த கங்காபுத்திரனின் மகள். அப்பன் செத்துப் போயிட்டான். அவனுக்குக் கொடுக்கிற பிச்சையை எனக்கு கொடுங்க."

'ஒங்க அப்பன் வேலையை நீ செய்வாயா?"

"செய்யறேன்."

"ஒனக்கு பயம் கியம் ஒண்ணுமில்லையா?"

பயம்-கியம் எல்லாம் சண்டிக்கு ஒன்றும் புரியவில்லை. குழந்தை குட்டிகள் இருக்கும்போது, அப்பன்-ஆயி எல்லாம் துக்கத்தில் அழுவது அவளுக்குப் புரியும். ஆனால், பிணத்தை யார் வீட்டில் வைத்துக்கொள்ள விரும்புவார்கள்? செத்துப்போன மனிதர்களுக்குக் கடைசி கிரியைகள் செய்வது சண்டியின் வேலை, பிழைப்பு. இதில் பயப்படுவதற்கோ கொடூரமாக இருப்பதற்கோ என்ன இருக்கிறது? அப்படியே இருந்தாலும் அதனால் என்ன? இது எல்லாம் வல்ல கடவுள் விதித்த விதி. கங்காபுத்திரன் விதித்ததல்லவே? அப்போ ஏன் இதை எல்லாரும் அருவருப்புடன் பார்க்கிறார்கள்? ஏன் அதைக்கண்டு இப்படி பயப்படுகிறார்கள்?

இந்த சண்டியைத்தான் மலிந்தர் மணம் புரிந்துகொண்டான்.

அந்த நாட்களில் மலிந்தர் சர்க்கார் பாபுவுடன் கூட்டு சேர்ந்து கொண்டு எலும்பு வியாபாரம் செய்துகொண்டிருந்தான். இறந்து போன பசுமாடு, எருமை மாடுகளின் எலும்புகளிலிருந்து உரம் பண்ண முடியும். அதற்கு நல்ல விலை கிடைக்கும். மலிந்தர் கையில் நாலு காசு இருந்தது. இதயத்தில் துணிவு இருந்தது. இரவில் மைதானத்தில் போகும் போது உரத்த குரலில் "நான் யாருக்கும் அஞ்சமாட்டேன். நான் நெருப்பை திங்கிறவன். யாருக்கும் பயப்படமாட்டேன்" என்று கத்துவான்.

மாலையில் கையில் ஒரு விளக்குடன் ஆலமரத்திற்குக் கீழே திரிந்து கொண்டிருந்தபோது ஒரு நாள் சண்டியைப் பார்த்தான். அவளைக் கேட்டான் "ஏய்! உனக்கு இருட்டைக் கண்டால்

பயமாயில்லையா?”

“இல்லே. நானும் நெருப்பை திங்கிறவதான்– தெரியுமா?”

சண்டியின் சிரிப்பைக்கேட்டு மலிந்தர் அதிர்ந்து நின்று விட்டான். அதே வைகாசி மாதத்தில் அவளை மணம் புரிந்து கொண்டான். அடுத்த வைகாசியில் பகீரத் அவள் இடுப்பில்.

ஒருநாள் பகீரத்தை இடுப்பில் வைத்துக் கொண்டு அழுது கொண்டே சொன்னாள்: “கங்காபுத்திரா! அவங்க என் மேல கல்லை விட்டெறிஞ்சாங்க.”

“‘யாரவன் ஒன்மேல கல்ல விட்டெறியறவன்?”

“ஏன்? சொன்னா அவங்களப் போயி அடிச்சுப்போடுவியா?”

“ஏன்? கல்லை எறிஞ்சான்?”

கோபத்தில் மலிந்தர் தாழ்வாரத்தில் குதிக்கத் தொடங்கினான் திட்டிக் கொண்டே உரக்கக் கத்தினான்: “என் பெஞ்சாதி மேல கல்ல விட்டெறியும் அளவுக்கு தைரியம் உள்ளஆளு யாரு?”

சண்டி கொஞ்சநேரம் அவனைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தாள். “கங்காபுத்திரா! மண்வெட்டி பிடிக்கிறது எனக்கு பிடிக்கல. ஆனா, கடவுள் எனக்கு இந்த வேலையக் கொடுத்திருக்கிற போது என்ன செய்யமுடியும்? நீயே சொல்லு.”

கழுத்தை ஆட்டிக்கொண்டு தன் கால்களையும் கைகளையும் நோக்கினாள் சண்டி. அவள் குடும்பத்தில் மாமன்–அண்ணன் –தாத்தா என்று யாராவது இருந்தால் குலத்தொழிலை அவர்களே ஏற்றுக்கொண்டிருக்க முடியும். ஆனால் அப்படி ஒருவரும் இல்லை. அவள் குலத்தினர் ஆதிகாலத்திலிருந்தே சுடுகாட்டுத் தொழில் செய்து கொண்டு வந்தவர்கள். ராஜா அரிச்சந்திரன் சண்டாளனாக மாறிய போது அவனுக்கு சண்டியின் மூதாதையன் வேலை கற்றுக் கொடுத்தான். மறுபடியும் அரிச்சந்திரன் ராஜா வான போது, அவனுடைய ராஜ்ஜியம் சமுத்திரம் அளாவி யிருந்தது. அவன் தன்னுடைய சொத்துக்களை இரண்டு கைகளாலும் எல்லாருக்கும் தானமாக வாரிக் கொடுத்துக் கொண்டிருந்தான்.

“எங்க சனங்களுக்கு என்ன ஏற்பாடு செய்யப்போறே?” என்று உரத்த குரலில் கேட்டுக்கொண்டு அந்த முதல் கங்காபுத்திரன் ராஜசபையில் நுழைந்தான். அவர்கள் காதுகளில் ராவணனின் சிதையில் எரியும் ‘ஹோ’வென்ற சத்தம் ஒலித்துக்கொண்டே இருக்கும். அதனாலேயே அவர்கள் வாயிலிருந்து வரும் ஒவ்வொரு சொல்லும் உரத்த குரலிலேயே இருக்கும். மெதுவாகப் பேசினால்

அவர்களுக்குக் காது கேட்காது.

ராஜா கேட்டான்: "என்ன ஏற்பாடு?"

"பிராமணர்களுக்கு பசு-எருது, சன்னியாசிகளுக்கு நித்தியச் சோறு, எங்களுக்கு என்ன?"

"கடல் வரை உள்ள எல்லாச் சுடுகாடுகளையும் உங்களுக்கு தானம் செய்கிறேன்."

"நிசமாகவா?"

"ஆம் கொடுத்தேன், கொடுத்தேன், கொடுத்தேன்."

உடனே அந்த ஆதி கங்காபுத்திரன் கையை மேலே தூக்கிக் கொண்டு ஆனந்தக் கூத்தாடினான். அந்தக் களிப்பு வெறியில் சொன்னான்: "ஆமாம், நமக்கு எல்லா சுடுகாடுகளும் கிடைத்து விட்டன. கிடைத்து விட்டன. உலகத்தில் உள்ள சுடுகாடுகள் எல்லாம் நமதே."

அதே ஆதிகங்காபுத்திரனின் வம்சத்தின் வாரிசாகப் பிறந்த பெண் சந்ததி எப்படி தனது குலத்தொழிலை உதைத்துத் தள்ளிவிட முடியும்? அப்படி உதைத்துத் தள்ளினால் அவள் தேவதைகளின் கோபாவேசத்திற்கு ஆளாகி விடமாட்டாள் என்று எப்படிச் சொல்ல முடியும்? இருந்தாலும் சண்டிக்கு மிகவும் பயமாக இருந்தது. மண் வெட்டியால் பள்ளம் தோண்டும்போது முகத்தைத் திருப்பிக் கொள்வாள். அவற்றை மரம் செடி கொடிகளால் நிரப்பின பிறகும் அவளுடைய பயம் தணிவதில்லை. எந்த சமயத்திலும் வாயில் நெருப்புத்தெறிக்க ஒரு ஓநாய் கூரிய நகங்களால் நிலத்தைத் தோண்டத் தொடங்கிவிடுமோ என்று பயந்தாள்.

"கடவுளே, கடவுளே, கடவுளே-" சண்டி புலம்பிக்கொண்டே அழுவாள். பிறகு வீட்டுக்கு வேகமாக ஓடி வந்து விடுவாள். விளக்கை ஏற்றி, பகீரத்தை அணைத்துக் கொண்டு கடவுளைப் பிரார்த்திப்பாள். கிராமத்திலுள்ள ஒவ்வொரு குழந்தையும் சிரஞ்ஜீவியாக இருக்கவேண்டும், ஆனந்தமாக வாழவேண்டும் என்று வேண்டிக்கொள்வாள். முன்பு அவளிடம் ஒரு போதும் இருந்திராத பலவீனம் இப்போது ஏற்பட்டிருந்தது.

பகீரத்தை நினைத்துக் கொண்டு அவள் உள்ளத்தில் ஒவ்வொரு குழந்தையைப் பற்றியும் துக்கம் எழுந்தது. பயங்கரமான துக்கம். ஆலமரத்தடியில் வெகுநேரம் இருக்க நேர்ந்தால், அவள் மார்பில் பால் சுரந்து நிரம்பி வலியெடுக்க ஆரம்பித்து விடும். தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு பள்ளம் தோண்டும் சமயங்களில் அவள் மனதிற்குள்ளேயே தன் தகப்பனை நொந்து கொள்வாள்: 'ஏன் அவன் இந்த மாதிரியான நிஷ்டூரமான

வேலையில் தன்னைத் தள்ளிவிட்டான்' என்று.

"நீங்க வேறு யாராவது ஆளைப் பாத்துக்குங்க, எனக்கு இந்த வேலை பிடிக்கல" சண்டி ஒருநாள் சொல்லி விட்டாள்.

ஆனால் ஒருவரும் அவள் சொன்னதைக் காதில் போட்டுக் கொள்ளவில்லை. மலிந்தருக்கும் அவள் சொல்வது அவ்வளவாக புரியவில்லை. ஏனென்றால் மற்றவர்கள் எந்த வேலைகளைப் பார்த்துப் பயப்படுகிறார்களோ, அருவருப்புடன் நோக்குகிறார் களோ அதே அசுத்தமான, சவங்களின் எலும்பு, தோல், போன்ற வைதான் அவன் வாழ்க்கையில் இடம் பெற்றிருக்கின்றன. சண்டியின் பேச்சைக் கேட்டு அவன் சொன்னான், "சே- நீ அனாவசியமாக பயப்படுகிறாய்."

சண்டி மிகவும் அழுது அடம் பிடித்தால், அவன் சொல்லு வான்: "உன் வம்சத்தினர் யாருமே இல்லை, நீயே சொல்லு. யார் வருவார்கள் இந்த வேலையைச் செய்ய-?"

அந்த சமயத்தில்தான் அந்த பயங்கர சம்பவம் நிகழ்ந்தது. மலிந்தரின் உறவுக்காரப் பெண் அவன் கிராமத்திற்கு வந்திருந்தாள். அவளுடைய பெண் குழந்தை மேல் சண்டிக்கு மிகுந்த பாசம் வளர்ந்துவிட்டது. கிராமத்தில் அந்த சமயத்தில் அம்மை பலமாக பரவிவிட்டிருந்தது. தன் ஓராவ்ன் மைத்துனியுடன் குழந்தையைத் தன் இடுப்பில் வைத்துக்கொண்டு மாரியம்மன் கோவிலுக்கு பூஜை போடுவதற்கு சண்டியும் போயிருந்தாள். ரயில்வே லைனுக்குப் பக்கத்தில், அந்த நாட்களில் பீகாரி கூலிகள் வேலை செய்து கொண்டிருந்தனர். அவர்கள் அவ்விடத்தில் மகமாயித் தாய்க்கு கோயில் கட்டியிருந்தார்கள். அங்கு ஒரு பீஹாரி புரோகிதர் நிரந்தரமாக இருந்து வந்தார்.

எதிர்பாராதபடி நாலைந்து நாட்களில் மாரியம்மனின் இச்சைப்படி, குழந்தை இறந்துவிட்டது. இது சண்டியின் வீட்டில் நடக்கவில்லை, வேறு எங்கேயோ. ஆனால், குழந்தையின் தாய், தகப்பன், மாமன், மாமி எல்லாரும் சண்டிதான் அக்குழந்தையின் உயிரை எடுத்துக் கொண்டு விட்டாள் என்று சொல்ல ஆரம்பித்தனர்.

"நானா?"

"ஆமாம் நீ தான்."

"ஐயோ, அதன் உயிரை நான் பறிக்கவில்லை, பறிக்கவே இல்லை-"

"நீ தான்-"

"ஒரு நாளுமில்லை-"

பாம்பு மாதிரி சண்டி சீறினாள். “நான் இல்லை, என்னால யாருக்கும் தீங்கு வராது. உங்களுக்குத் தெரியுமா நான் எந்த வம்சம் என்று?”

மூடநம்பிக்கையில் கண்ணிழந்த அக்கூட்டத்தினர் பயத்தில் கண்களைக் கீழே திருப்பிக்கொண்டு முணுமுணுத்தார்கள். “துக்குனியப் பொதச்சப்போ ஏன் ஒன் மார்லேந்து பால் சுரந்து தரையில விழுந்திச்சு?”

“ஐய்யோ மூட ஜனங்களே!”

சண்டி சிலகணங்கள் ஆச்சரியத்திலும் வெறுப்பிலும் அவர் களையே பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு, “சரி, பித்ருக்கள் சாபமிட்டால் சாபமிடட்டும். நான் பயப்படப் போவதில்லை இனிமேல் இந்த வேலையை நான் செய்யப் போவதில்லை.”

“வேலையை விட்டு விடுவாயா?”

“ஆமாம், போங்க... நீங்க எல்லாம் பெரிய சூரப்புலிங்க இல்லையா? போய் பாரா கொடுங்க. ரொம்ப நாளாவே இந்த வேல எனக்குப் பிடிக்கல. கங்கா புத்திரனுக்கு கவர்மென்ட்ல வீட்டோட சர்க்கார் வேலை கிடைக்கப்போவுது. நான் ஏன் இனிமே இந்த வேலையில சாகணும்?”

சமூகத்தின் வாயை இவ்வாறு அடைத்துவிட்டு சண்டி தன் வீட்டுக்குள் நுழைந்துவிட்டாள். மலிந்தரிடம் அவள் சொன்னாள்: “நீ வேலை செய்யற எடத்தில ஒரு ரூமு கிடைக்குமில்ல? வா, நாம அங்கே போயிருவோம். அவங்க என்னென்ன சொன்னாங் கன்னு ஒனக்குத் தெரியுமா?”

மலிந்தர் சிரித்துக் கொண்டு சண்டியின் மனமுறிவைத் தணிப்பதற்காக தமாஷாக, தனது சுபாவமான உரத்த குரலில் சொன்னான்: “என்ன சொல்றாங்க? நீ பாயன் ஆயிட்டேன்னா?”

வார்த்தைகளைச் சொல்லி முடிப்பதற்குள்ளேயே மலிந்தர் தலைமேல் இடி விழுந்தவனை போல் பீதியடைந்து வாயடைத்து நின்றான். என்ன சொல்லி விட்டான்! மலிந்தர் ஸ்தம்பித்து விட்டான். என்ன வார்த்தை அவன் வாயிலிருந்து வந்துவிட்டது! இப்படிப்பட்ட பயங்கரமான வார்த்தைகள் அவன் வாயிலிருந்து எப்படி வந்தன?

சண்டி நடுங்கத் தொடங்கினாள். தரையில் பதித்திருந்த மூங்கில் கம்பத்தைப் பிடித்துக் கொண்டாள். ஆவேசத்தில், துக்கத்தில், கோபத்தில் நான்கு மடங்கு அதிகமாகவே அரற்றிக் கொண்டு சொன்னாள்: “வம்சக்கொழுந்து ஒண்ணு வீட்டில இருக்கிறப்போ இப்படி ஒரு பேச்சை யாராவது சொல்வாங்களா?

நானா பாயன்? வீட்டில இருக்கிற குழந்தையை விட்டுட்டு இறந்து போன குழந்தைகளுக்குப் பால் கொடுக்கிறேனா, சீராட்டுகிறேனா? நான் ஒரு பாயனா?"

"பேசாதே! சும்மா இரு!"

மலிந்தர் அவளை அதட்டிவிட்டு எழுந்தான். அது பிற்பகல், அந்த சமயத்தில் ஒரு மனிதனின் வாயிலிருந்து கிளம்பிய எந்த கெட்ட விஷயமும் காற்றில் கலந்து நாலாப் பக்கங்களிலும் பரவி விடும். அந்த சமயத்தில் தலைமேல் எண்ணெய் வைத்துக் கொண்டிருப்பவர்கள், வயிற்றில் ஏதுமில்லாதிருப்பவர்கள் போன்றவர்களின் மனதில் பயங்கரமான பொறாமை, துவேஷம் ஆக்ரோஷம் எல்லாம் பெருக்கெடுக்கும். மலிந்தருக்குத் தன் சமூகத்தின் சுபாவம், குணங்கள் எல்லாம் நன்றாகவே தெரியும்.

"நான் பாயன் இல்லை! நான் பாயன் இல்லை. அய்யா."

சண்டியின் ஓலத்தையும் வார்த்தைகளையும், பருந்து பொறுக்கிக் கொண்டு காற்றில் சேர்த்து விட்டது போலும். சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டு அழுது, அழுது கடைசியில் மௌனமாகிவிட்டாள். அதற்குப் பிறகு அவள் ஒரு வார்த்தைகூட பேசவில்லை. வெகு நேரத்திற்குப் பிறகு, மலிந்தரிடம் அவள் சொன்னாள்: "நாம இருட்டுல எங்கேயாவது போயிடலாமா?"

"எங்கே போறது?"

"ஓடிடலாமா?"

"எங்கே?"

"தெரியலே..."

சண்டி மலிந்தருக்கு அருகே வந்து பகீரத்தை இடுப்பில் வைத்துக் கொண்டு உட்கார்ந்தாள். சொன்னாள்: "கொஞ்சம் கிட்டவா, உன் மார்ல தலையை வெச்சுக்கிறேன்."

ஒரு கணத்திற்குப்பிறகு, "எனக்கு ரொம்ப பயமா இருக்கு. பித்ருக்களின் வேலை இனி செய்யமாட்டேன்னு அவங்ககிட்ட வேற சொல்லிட்டு வந்துட்டேன். இதுனாலேயும் பயமாயிருக்கு. இத்தனை நாள் எனக்கு பயமே இருந்ததில்லை. இன்று ஏன் இந்த பயம்? உன்னை மறுபடியும் பார்க்க மாட்டேனான்னு பயமா இருக்குது. பகீரத்தைப் பார்க்க என்னை ஜனங்கள் விடமாட்டார்கள் என்று தோன்றுகிறது..."

"அய்யோ! கடவுளே!" என்று சொல்லிக் கொண்டு கண்களைத் துடைத்துக் கொண்டான் மலிந்தர். ஒரு கணத்திற்குப் பிறகு சொன்னான் "எனக்குத் தோணுது. கடவுள்தான் இந்த

வார்த்தைகளை என் வாயிலிருந்து வரச்செய்தார் என்று."

"இப்போ மேல என்ன?"

இதற்கு பிறகு சில தினங்கள் சண்டி பேயடித்தவள் போல் உட்கார்ந்திருந்தாள். ஏதோ கொஞ்சம் வேலை செய்து விட்டு பகீரத்தை இடுப்பில் வைத்துக் கொண்டு உட்கார்ந்து கொண்டேயிருந்தாள். சில சமயங்களில் பாடுவாள். விளக்கு ஏற்றி, தூபம் போட்டு நடுநடுவே காதை சாய்த்துக் கொண்டு எதையோ கேட்டுக் கொண்டிருந்தாள்.

இவ்விதமாக இரண்டு மாதங்கள் நன்றாகவே கழிந்தன. யாரும் சண்டியை அழைக்க வரவில்லை. அதற்குத் தேவையும் எழவில்லை. மிக அமைதியாகவே அந்த சில தினங்களை அவர்கள் கழித்தார்கள். சண்டியும் மிக அமைதியாகி விட்டிருந்தாள், சொன்னாள்: "அந்தக் குழந்தை குட்டிகளுக்கு வேறு ஏதாவது ஏற்பாடு செய்ய வேண்டும். இப்போது இருப்பது சரியாக இல்லை."

"மாத்திடலாம், மாத்திடலாம்- நாலாபக்கத்திலும் மாறுதல் நடந்துகிட்டு இருக்குது."

'யாரால சொல்லமுடியும் நான் செஞ்சது சரியா தப்பான்னு? தோ பாரு! சில சமயங்கள்ள தோணுது, என் அப்பன் ரொம்ப உரக்க என்னைக் கூப்புடறாருன்னு-"

"நீ ஒன் காதால கேட்டியா?"

"என் மனசு சொல்லுது. எங்க அப்பன், 'ஹாயி, ஹாயி, ஹா'ன்னு ஓநாய வெரட்டறா மாதிரி-"

"சும்மா கிட, சண்டி-"

மலிந்தரை பயம் கவ்விக் கொண்டது. நடுநடுவே, சண்டி பாயன் ஆகியே விட்டாளோ என்ற சந்தேகம் அவன் மனதிலேயே எழுந்தது.

இரவில் நடுநடுவே திடீரென்று எழுந்து சண்டி, 'ஆலமரத்தின் கீழே யாரோ அழுவது போல் சத்தம் கேட்கிறது' என்பாள். ஒரு வேளை சமூகம் சொல்வது நிஜம்தானோ என்னவோ? கிராமத்தை விட்டு பட்டிணத்துக்குப் போய்விட்டால் நல்லது என்று அவனுக்குத் தோன்றியது.

அங்கு சமூகமும் சண்டியை மறக்கவில்லை. சண்டியின் மேல் அதற்கு ஒரு கண் இருந்தது.

சண்டிக்கு இது புரியவில்லை. விரும்பும்போது சமூகம் வெளிப்படையாகவே தன் கண்காணிப்பை செய்து கொண்டு இருக்கும். விரும்பாதபோது, அதை ரகசியமாகவே வைத்துக் கொள்ளும். சமூகத்துக்கு எந்தக் காரியமும் அசாத்தியமல்ல.

இதன் காரணமாகவே மழையும் புயலும் வீசிக்கொண்டிருந்த ஓரிரவில் மலிந்தர் கள்ளைக் குடித்துவிட்டு, குறட்டைவிட்டு தூங்கிக் கொண்டிருந்தபோது, அவனுடைய தாழ்வாரத்தில் ஒரு கூட்டமே கூடிவிட்டிருந்தது. சண்டிக்கு தூர உறவினன் கேதன் உரக்கக் கத்தினான்: "வாடா! வெளியே வந்து நீயே பாத்துக்க, ஒன் பொஞ்சாதி பாயனா இல்லையான்னு-!"

தூக்கம் முழுவதும் கலையாத கண்களுடன் மலிந்தர் ஒரு முட்டாளைப் போல அவர்கள் பக்கம் சில கணங்கள் பார்த்துக் கொண்டிருந்தான்.

"பாத்துக்க, படுவா, பாத்துக்க. வீட்டில ஒரு பாயனை வெச்சிகிட்டு இத்தனை நாளா எங்க குழந்தைங்கள கொன்னு போட்டுகிட்டு இருந்தேயில்ல?"

மலிந்தர் பார்க்கச் சென்றான்.

பார்த்தான். ஆலமரத்தின் கீழ் ஒரு தீவட்டி எரிந்து கொண்டிருந்தது. சமூகம் ஒரு தேன்கூடு மாதிரி கூட்டமாக மொய்த்துக் கொண்டிருந்தது. யாரும் பேசவில்லை.

"ஏ சண்டி!"

மலிந்தரின் வேதனை பொங்கும் குரல் அந்த நிசப்தத்தை கத்தி போல் வெட்டியது. எல்லாரும் அசைவற்று என்ன நடக்கப் போகிறது என்ற ஆவலில் நின்று கொண்டிருந்தனர்.

சண்டி நின்றுகொண்டிருந்தாள். கையில் ஒரு மண்வெட்டி, பக்கத்தில் ஒரு அரிக்கேன் விளக்கு, ஒரு மூலையில் வெட்டப்பட்ட மரக்கிளைகள், புதர்கள் கட்டாகக் கிடந்தன.

"கிளைங்களையும் புதருங்களையும் பள்ளத்தில் போட்டு மூடிகிட்டு இருந்தேன், மலிந்தர்."

"ஏன் வீட்டை விட்டு எழுந்து வந்தே?"

"ஓநாயிங்க ஊளையிடுறத நிறுத்தினப்போ எனக்குத் தோணிச்சு அதுங்க பள்ளத்த நோண்டிகிட்டு இருக்குமோன்னு-சவங்களத் தூக்கிட்டுப் போயிடும்னு என் மனசுல பட்டுது."

"-நீ ஒரு பாயன்!"

கிராமத்து ஜனங்கள் எல்லாரும் பயந்து ஏதோ மந்திரம் ஓதுவதைப் போல் சொன்னார்கள்.

"யாரும் பாரா கொடுத்துகிட்டு இருக்கலே, மலிந்தர்!"

"நீ ஒரு பாயன்!"

"இது என்னோட பரம்பரைத் தொழில். இவங்களுக்கு என்ன தெரியும்?"

"நீ. பாயன்-"

"நான் பாயன் இல்லீங்க, அய்யா. என் இடுப்புல ஒரு பச்சைக் குழந்தை இருக்கு. என் மார்ல பால் நெறஞ்சு விலாவ முட்டிகிட்டு இருக்கு. நான் பாயன் இல்லே. கங்காபுத்திரா! நீயே சொல்லு. ஒனக்குத்தான் எல்லாம் தெரியுமே!"

விளக்கின் ஒளியில், வசியத்துக்குக் கட்டுப்பட்டவனைப் போல் மலிந்தர் மழையில் நனைந்த அவளுடைய மாராப்பைப் பார்த்துக் கொண்டிருந்தான். அவனுடைய இதயம் துக்கத்தில் வெடித்துக் கொண்டிருந்தது. ஏதோ ஒன்று அவன் இதயத்திலிருந்து சொல்லிக் கொண்டிருந்தது: 'ஓ மலிந்தர்! நீ பாம்பென்று தெரிந்தும் அதை அணுகிக் கொண்டிருக்கிறாய்- நெருப்பென்று தெரிந்தும் அதில் கையை நுழைக்கப் பார்க்கிறாய்- இப்போது நீ ஏன் திரும்பிப் போகாதிருக்கிறாய்? உங்கள் இருவரிடையே எவ்வளவு நேசம் இருந்தது! எத்தனை சுகமும் சாந்தியும் நிறைந்து இருந்தது உங்கள் குடும்ப வாழ்வு! இப்பொழுது நீ போய்விடு. அவளிடம் போனால் சர்வமும் நாசமாகிவிடும்."

மலிந்தர் சண்டியை நெருங்கினான், செக்கச் செவேல் என்ற கண்களுடன் அவளை உற்றுப்பார்த்து விட்டு திடீரென்று ஒரு மிருகத்தைப் போல் "நீ ஒரு பாயன்" என்று கிரீச்சிட்டான். "ஆல மரத்திற்கு கீழே நீ யாருக்குப் பால் கொடுத்துக் கொண்டிருந்தே?"

"கங்காபுத்திரா! நீயா இப்படிச் சொல்றே?"

சண்டியின் பயங்கரமான, இதயத்தைப் பிளக்கும் ஓலம் புதைந்து கிடந்த சிசுக்களை அச்சுறுத்தியது. சாந்தியில்லாது அலைந்து கொண்டிருக்கும் அவளுடைய தகப்பனின் ஆத்மாவை, ஏன், டோம் சாதியை நிறுவிய அவளுடைய ஆதிமூதாதையனை மற்றும் பலரின் ஆவிகளையும் அலைக்கழித்தது. மனித ஆத்மா மனித உலகத்திலிருந்து விடைபெற்று பரலோகத்தில் இடம் பெறும் போது எழுப்பும் ஓலம் இதுதான் போலும்! ஆகாயத்தையும் பூமியையும் பாதாளத்தையும் நடுங்க வைக்கும் ஓலம்-

மலிந்தர் திடீரென்று வீட்டுக்கு ஓடிப்போய் தனது மாமனாரின் டமாரத்தை எடுத்துக் கொண்டு திரும்பி ஆலமரத்தடிக்கு வந்தான். டமாரத்தை கட்டையால் அடித்துக் கொண்டே கத்தினான்: "நான் மலிந்தர் கங்காபுத்திரன் பறையடிக்கிறேன். என் மனைவி பாயன் ஆகிவிட்டாள்!"

"பிறகு என்ன நடந்தது?" பகீரத் அறிய விரும்பினான்.

அதற்கு பிறகு சமூகம் அவளை வில்வ மரக்காட்டுக்கு அழைத்துச் சென்றது. "தனியா இருக்கப் பயப்படும் அவள் இப்பொழுது ஒரேயடியாக தனிமைப்படுத்தப்பட்டாள்."

"உஷ்- உஷ்- கேள், கேள். பாயன் பாடுகிறாள்."

வெகுதூரத்திலிருந்து ஒரு தகரப் பாத்திரத்தைத் தட்டும் சத்தத்துடன் ஒரு அற்புதமான பாட்டு காற்றில் மிதந்து வந்தது. முதலில் அப்பாட்டில் வார்த்தைகள் இல்லாதது போல் இருந்தது. ஆனால் கொஞ்சம் கொஞ்சமாக வார்த்தைகள் தெளிவாகக் கேட்கத் தொடங்கின.

"தூக்கமே வா! தங்கத் தூக்கமே வா!

தூக்கமே வா! மந்திரத் தூக்கமே வா!"

இந்தப் பாட்டு பகீரத்துக்குத் தெரியும். அவனுடைய மாற்றாந் தாய் இப்பாட்டைப் பாடித்தான் தன் பெண்கள், ஸெளரபி, கௌரபி இருவரையும் தூங்கப்பண்ணுவாள்.

"வா, கண்ணு, வீட்டுக்குப் போகலாம்."

அதிர்ந்து போன பகீரத்தை அழைத்துக் கொண்டு மலிந்தர் வீடு திரும்பினான். பகீரத்துக்கு புரிந்தது—பாயனின் பாட்டு அவன் மனதில் புகுந்து விட்டது. அவனுடைய ரத்தத்துடன் கலந்து விட்டது. இனம் தெரியாத வேதனை போல் அவன் காதில் அது ஒலித்துக் கொண்டேயிருந்தது.

இதற்குச் சில தினங்களுக்குப் பிறகு பகீரத் அந்த வறண்டு போன குட்டைக்கருகில் தனியாகப் போய் நின்றான். தூரத்தில் தகர டப்பாவின் சத்தம் கேட்டு ஓடோடியும் வந்திருந்தான்.

பாயன் அந்த சமயத்தில் குட்டையிலிருந்து தண்ணீர் எடுத்துக் கொண்டிருந்தாள். அவன் பக்கம் திரும்பிப் பார்க்க வில்லை. தண்ணீரில் அவளுடைய நிழல் தெரிந்தது.

பகீரத் கேட்டான்: "உன்னிடம் வேறு துணியில்லயா?

பாயன் தன் பார்வையை தரையில் செலுத்தினாள். பகீரத் பக்கம் பார்க்கவில்லை.

"நீ நல்ல துணி உடுத்துவாயா?"

இப்பொழுது அவள் வாயிலிருந்து பேச்சு வெடித்தது: "கங்கா புத்திரனின் மகனே! வீட்டுக்குப் போ."

"நான்- நான் இப்போ ஸ்கூல்ல படிக்கிறேன். நான் ரொம்ப நல்ல பையன் ஆயிட்டேன்."

"என்னோட பேசக்கூடாது. நான் பாயன்."

"நான் நிழலோடதானே பேசறேன்?"

"என்னோட நிழல்ல கூட பாவம் இருக்கு. கங்காபுத்திரன் பிள்ளைக்கு இதுகூடத் தெரியாதா?"

"நான் பாவத்துக்கெல்லாம் பயப்படமாட்டேன்."

"இப்போ வீட்டுக்குப் போ. இப்போ ரொம்ப வெய்யிலா

இருக்கு. இந்த வேளையில பால் குடிக்கும் பையங்க வெளியில் திரியக் கூடாது."

"உனக்கு- உனக்கு தனியா, பயமா இல்லையா?"

"தனியா? இல்லே கண்ணு, இல்லே. எனக்கு எந்த பயமும் இல்லே- எங்கேயாவது பாயன் தனியாக இருக்க பயப்படுவாளா?"

"அப்படீன்னா நீ ஏன் அழுறே?"

"யார் சொல்றா அப்படீன்னு?"

"நான் கேள்விப் பட்டேன்."

"கங்கா புத்திரனின் பையன், நான் அழுறேன்னு கேள்விப் பட்டானா?"

தண்ணீரில் சிவப்புத்துணி நடுங்கிற்று. பாயனின் கண்களில் நீர் சுரந்தது. கண்ணைத் துடைத்துக் கொண்டு அவள் சொன்னாள்: "கங்காபுத்திரன் பிள்ளை வீட்டில் இருக்கணும். பாயனுக்கு பக்கத்துல ஒரு போதும் வரக்கூடாது, வந்தால்- வந்தால், கங்கா புத்திரனிடம் சொல்லிவிடுவேன்-"

வயல் பாதையைப் பிடித்துக் கொண்டு அவள் போவதை பகீரத் பார்த்தான். தலைமயிரின் முடி காற்றில் பறந்து கொண்டிருந்தது. அவளுடைய சிவப்பு உடை ஜொலித்துக் கொண்டிருந்தது. பகீரத் வெகு நேரம் குட்டைக்குப் பக்கத்திலேயே உட்கார்ந்து கொண்டிருந்தான். குட்டையின் தண்ணீர் அசையாது நிற்கும் வரை. ஆனால் யாரும் மறுபடியும் பாட்டுப் பாடவில்லை —"தூக்கமே வா, மாயத் தூக்கமே வா!"

குடிசைக்குத் திரும்பிய பாயன் வெகு நேரம் வரை அசை யாமல் உட்கார்ந்து கொண்டிருந்தாள். உட்கார்ந்து கொண்டே ஆகாயத்திற்கும் பாதாளத்திற்கும் இடையே உள்ள எதைப்பற்றி யெல்லாமோ யோசித்துக் கொண்டிருந்தாள். வெகு நேரத்திற்குப் பிறகு எழுந்து, ஒரு உடைந்த முகக் கண்ணாடியை எங்கிருந்தோ தேடி எடுத்தாள்.

"மூஞ்சி சகிக்கலே" என்று தனக்குத்தானே முணுமுணுத்துக் கொண்டாள். பிறகு தனது தலைமயிரை விரல்களால் கோதி சரி செய்து கொள்ளப் பார்த்தாள். ஆனால் முடியவில்லை. பயங் கரமாக சடைபிடித்திருந்தது.

புருவத்தை நெளித்துக்கொண்டு அவள் சிந்தனையில் ஆழ்ந்தாள்: 'அந்தப் பிள்ளை ஏன் துணிப்பேச்சை எடுத்தான்? அவனுக்கு ஒன்றுமே நினைவிருக்காதே—எவ்வளவு சின்னக் குழந்தையாக இருந்தான் அப்போது?'

'சுத்தமான உடை, அழகான முகம், இதெல்லாம் பற்றி

அவனுக்கு எப்படித் தெரியும்?' ரொம்ப நேரம் வரை யோசித்துக் கொண்டேயிருந்தாள். ரொம்ப காலமாகவே மனிதர்களைப் போல கோவையாக சிந்திக்கும் அப்பியாசம் விட்டுப் போயிருந்தது. சிந்திப்பதற்கு அவளிடம் என்னதான் இருந்தது? ஆலமரத்தின் இலைகள் அசையும் சத்தம், காற்றின் ஓலம், பக்கத்தில் உள்ள ரயில்வே லைனில் ஓடும் ரயிலின் சத்தம் — இவற்றையெல்லாம் பற்றி எவ்வளவு யோசிக்க முடியும்?

ஆனால் இன்று இவளுக்குத் தோன்றியது, அந்தப் பிள்ளை சர்வநாசமடைந்து விடுவான் என்று. திடீரென்று ஒரு சாதாரண மனையாட்டியைப் போல் அவளுக்குத் தன் புத்தியில்லாத கணவன் மலிந்தர் மேல் கோபம் கோபமாக வந்தது. பையனை சரியாகக் கவனித்துக் கொள்வது யாருடைய பொறுப்பு?

பாயனின் கண்ணில் படாமல் காப்பாற்றுவது யாருடைய கடமை?

எழுந்திருந்தது விளக்கை ஏற்றினாள். முணுமுணுத்துக் கொண்டே ரயில்வே லைனை அடைந்து மேலே நடந்தாள். நடந்து நடந்து, முச்சந்தியையும் லெவல் க்ராசிங்கையும் கடந்து சென்றாள். இது வழியாகத்தான் மலிந்தர் வருவான். பிறகு வயல் கரையை பிடித்துக் கொண்டு வீடு செல்வான். லைனைத் தாண்டிச் செல்லும் போது சில மனிதர்களைப் பார்த்தாள். அவர்கள் லைனிலிருந்து எதையோ கடத்திக் கொண்டிருந்தார்கள்.

இல்லை, இல்லை, லைன் மேல் மூங்கில் கட்டுகளை கொண்டு வந்து, கொண்டு வந்து குவித்துக் கொண்டிருந்தார்கள்.

இன்று புதன்கிழமை. இரவில் ஃபைபவ் டவுன் லால் கோலாவுக்கு மெயில் பேக் வரும். அதில் நிறைய பணம் இருக்கும். பல தினங்களாக இவர்கள் இதற்காகத் தயார் செய்து கொண்டு ருந்திருக்கிறார்கள்.

"நீங்க யாரு?"

பாயன் அரிக்கேனைத் தூக்கி கையில் எடுத்துக் கொண்டு தன் முகத்தின் பக்கத்தில் கொண்டு வந்து ஆட்டினாள். அவளைப் பார்த்தவுடன் அவர்கள் முகம் மஞ்சளாக மாறி விட்டது. கண்களை பயம் கவ்வியது. பாயன் தன் சமூகத்து ஜனங்களில் எவர் முகத்திலும் இத்தகைய பயத்தை இதற்கு முன் பார்த்ததில்லை.

"பாயன்!"

"நீங்க ஏன் லைன் மேல் மூங்கில் கட்டுகளைப் போட்றீங்க? வண்டிய கவுக்கவா?"

"அடே! ஏண்டா ஓட்றீங்க! எங்கிட்ட பயமா? முதல்ல, இந்த மூங்கிலெல்லாத்தையும் எடுத்து தூரப்போடுங்க. இல்லாட்டி எல்லாம் நாசமாயிரும்-"

ரயில்வே லைனில் இருந்த எல்லா மூங்கில்களையும் அவர்களால் அகற்ற முடியவில்லை. இப்பொழுது விபத்தைத் தடுப்பதற்கு வழியே இல்லை. சமூகம் எப்போதுமே இதைத்தான் செய்து கொண்டு வருகிறது. இவர்களில் ஒருவன்தான் ஒரு நாள் டமாரத்தை அடித்துக் கொண்டு அவளை பாயன் ஆக்கி விட்டிருந்தான். மழை பெய்ய ஆரம்பித்தது. காற்று புயலாக வீசியது. கையில் அரிக்கேனை எடுத்துக் கொண்டு, எந்த உதவியுமற்ற அபலையாக நின்று கொண்டிருந்தாள், எவ்வளவு அபலையாகி விட்டாள் சண்டி! அங்கிருந்து வண்டி வேகமாக வந்து கொண் டிருந்தது. அவள் நினைத்தாள்: 'நான் உண்மையிலேயே ஒரு பாயனாக இருந்தால், நான் இருட்டில் ஊட்டி வளர்த்த சிசுக்களின் ஆவிகள் ஏன் இப்பொழுது வண்டியை நிறுத்தவில்லை? சமூகமாவது இதைப் பண்ணலாம். ரொம்ப சின்ன விஷயம்! எத்தனை சகாயமற்றவளாக ஆகிவிட்டாள் சண்டி- இப்போது என்ன செய்வது?'

ட்ரெயின் இப்பொழுது ஒரு அடங்காப்பிடாரியான சிறுவன் போல் எந்தத் தடங்கலையும் பொருட்படுத்தாது சண்டியின் மேல் ஏறிவிட்டது.

தன் உயிரையும் மதிக்காது ஒரு பெரிய ரயில் விபத்தை தவிர்த்ததற்காக சண்டியின் புகழ் வெகுதூரம் பரவிறறு. சர்க்கார் அலுவலகம் வரைக்கும் கூட. சவக்கிடங்கிலிருந்து அவளுடைய உடலை எடுத்துக்கொண்டு வந்த போது, தரோகா பாபு மலிந்தரின் கிராமத்துக்கு வந்தார். கூடவே பீடிஓ.

"ரயில் கம்பெனி சண்டி கங்காதாஸுக்கு மெடல் கொடுப் பாங்க, மலிந்தர்-"

"உங்க விருத்தாத்தங்கள் எல்லாம் எனக்குத் தெரியும், அவளுக்கு யாரும் இல்லை என்று சொன்னேன். இருந்தாலும் தாங்களே விசாரிக்கணும்னு பீ.டி.ஓ. ஸாஹப்பை அனுப்பி யிருக்கிறாங்க!"

"ரொம்ப சாகசமான செயல். அவள் ரொம்ப தீரமான காரியத்தைச் செய்திருக்கிறாள். நம்ப ஸப் டிவிஷன்ல எல்லாரும் அவளை புகழுறாங்க, அவ உன்னோட குடும்பத்தச் சேர்ந்தவளா?"

யாரும் வாயைத் திறக்கவில்லை. சமூகத்தின் ஜனங்கள் அவன் பக்கம் திரும்பி பார்த்துக் கொண்டிருந்தார்கள். பின் கழுத்தைச்

சொறிந்து கொண்டு தரையைப் பார்த்துக் கொண்டு யாரோ ஒருவன் "ஆமாங்க, சாமி, எங்க சாதிதாங்க."

பகீரத்துக்கு ஒரே அதிர்ச்சி. எல்லா முகங்களையும் உற்றுப் பார்த்துக்கொண்டே இருந்தான். 'சண்டியை தங்கள் பங்காளின்னு சொன்னாங்க! சண்டியை அவர்கள் ஏத்துக்கிட்டாங்களா!'

"உங்க எல்லாருக்கும் சர்க்கார் மெடல் கொடுக்க முடியாதே?"

"எங்கிட்டக் கொடுங்க பாபு."

பகீரத் அவர்கள் முன்னால் வந்தான்.

"நீ யாரு?"

"அவ என்னோட ஆயா."

"அப்படியா? உன் பெயர் என்ன? என்ன செய்யறே?"

பீ.டி.ஓ. எழுதிக் கொள்ளத் தொடங்கினார். பகீரத்தின் கண்களில் நீர் நிரம்பி வழிந்தது. தொண்டையை சரிசெய்து கொண்டு சொன்னான்:

"என் பெயர் பகீரத் கங்கா புத்திரன்.

பூஜா மலிந்தரின் பிள்ளை.

இருப்பிடம் பறைச்சேரி.

அம்மா ஈஸ்வரி சண்டி கங்காதாஸி– "

பகீரத் தன் வம்ச விவரத்தைக் கொடுக்கத் தொடங்கினான்.

# பேஹுலா

நதியின் பெயர் பேஹுலா. ப்ளாக் இர்ஃபான்பூர். வட்டார அலுவலகம், சுகாதார மையம், விவசாய அபிவிருத்தி அலுவலகம் — எல்லாம் இர்ஃபான்பூரில். பாலிகஞ்ச் ஸ்டேஷனிலிருந்து இரண்டரை மணி நேரப் பயணத்திற்குப் பின் இர்ஃபான்பூர் ஸ்டேஷனை அடைய முடியும். ரயிலிலிருந்து இறங்கி கால் நடையாகத்தான் இர்ஃபான்பூர் ப்ளாக்குக்கு வரமுடியும். குளிர் காலத்திலும் கோடைகாலத்திலும் வயல்கள் நடுவில் உள்ள ஒற்றையடிப் பாதைகளில்தான் செல்ல வேண்டும். மழைக் காலத்தில் இப்பாதைகளில் செல்லமுடியாது. நாலா பக்கமும் ஒரே சேறு, வழுக்கும் சேறு. கிராமத்து ஜனங்கள் சொல்லுவார்கள்: "அழுது கொண்டே பேஹுலாவுக்குப் போ, அழுது கொண்டே பேஹுலாவிலிருந்து வா!" இங்குதான் வசிக்கிறான் பஸந்த் குமார். ஹாஃப்கின் இன்ஸ்டிடியூட்டில் இதற்கு முன் வேலை செய்து கொண்டிருந்தான். வங்காள இளைஞன். சத்தான ஆகாரமில்லாத, வியாதிகளைத் தடுக்கும் ஆற்றலற்ற மனித உடல்களில் நாகப்பாம்பு மற்றும் கட்டுவிரியன் போன்ற பாம்புகளின் விஷத்தின் விளைவு பற்றித்தான் அவனுடைய ரிஸர்ச். இதற்காகத்தான் அவன் இங்கு வந்திருக்கிறான் - இந்த 24 பர்கானா ஜில்லா கிராமத்திற்கு. இந்த இடம் புஷ்டியில்லாத தேகத்தினர், க்ஷய ரோகத்தால் பீடிக்கப் பட்டவர்கள், உடலில் வியாதி எதிர்ப்பு சக்தியில்லாதவர்கள், மற்றும் கட்டுவிரியன்கள் செழிந்த பிரதேசம் இது. அந்தப்பகுதி முழுவதிலும், பட்டினியில் வாடும் ஜனங்கள் கணிசமான அளவுக்குக் கிடைப்பார்கள். வெள்ளம்-வறட்சி-மழை என்ற காலச் சூழலையும் மீறி இந்த இரண்டு செழுமையும் இந்த பிரதேசத்தில் அபரிமிதமாக உண்டு. இப்பக்கத்தில் விரியன் பாம்புகளை சியாட்சாந்தா அல்லது சிகட்சாந்தா என்றும் அழைப்பார்கள். காலாஜ் (கட்டுவிரியன்) கடியினால் இங்கு மரணம் சாதாரணம்.

"கட்டு விரியன் அல்லது 'வாங்குரஸ் கைருவியுஸ்' பாரதத்தில் எல்லா இடங்களிலும் உண்டு. சமதளமான நிலத்தில் இவை

வசிக்கின்றன. ஜொலிக்கும் நீல நிறமான உடலில் ஜோடியாக வெள்ளைக் கோடுகள் இருக்கும். நீளம் 1.5 மீட்டர். ஆண் பாம்பு கொஞ்சம் பெரிதாக இருக்கும். இந்த பாம்பு நிசாசரி. அதாவது இரவில் நடமாடும் பாம்பு. கேஹுவன் எனப்படும் கோதுமை நிறப் பாம்பைத்தவிர, கட்டுவிரியன் கடியினால்தான் அதிகமான மனிதர்கள் இறக்கிறார்கள். புருலியாவில் இதை "கட்டுவிரியன் கடிச்சா, பாப்பானை கூப்பிடு" என்பார்கள். அதாவது சாவு நிச்சயம், கடைசி சடங்குகளுக்காக புரோகிதனைக் கூப்பிடு என்று அர்த்தம். கோதுமை விரியன் அல்லது கண்ணாடிவிரியனின் விஷம் 12 அல்லது 14 மில்லி கிராமுக்குக் குறைவாக உடலில் இருந்தால், ஆண்டிஸீரம் வேலை செய்யும். கட்டுவிரியன் விஷம் 6 மில்லி கிராமுக்கு அதிகமாக உடலில் புகுந்திருந்தால், ஆன்டி ஸீரம் வேலை செய்யாது. இந்தப்பாம்பு உலர்ந்த இடங்களில் வசிக்க விரும்பும் — செங்கல் சூளைகள் போன்ற இடங்கள்.

பஸந்த் குமார் பேஹுலா கிராமத்திற்கு' வந்த போது தங்குவதற்கு அந்த ஊர் ஜமீன்தார் ஹ்ருதய் என்னும் ஹெதோ நஸ்கர் வீட்டில்தான் வாடகைக்கு அறைகள் கிடைத்தன. இதைத்தவிர இந்த ஊரில் 'பக்கா' வீடுகள் கிடையாது. அவற்றில் எதிலும் 'எக்ஸ்ட்ரா' ரூம் கிடையாது. இந்த ஹெதோ நஸ்கர் கட்டுவிரியன் பண்ணையே வைத்துக் கொண்டிருந்தார். ஒரு சமயத்தில் ஒரு செங்கல் சூளை நடத்த அவர் திட்டமிட்டிருந்தார். வேலையைக் கூட தொடங்கி விட்டிருந்தார். கிட்டத்தட்ட ஒரு லட்சம் செங்கற்கள் கூட சுட்டிருந்தார். பிறகு, கூட்டிக் கழித்து கணக்குப் போட்டுப் பார்த்தபோது இதில் லாபமில்லை என்று தெரிந்தது. அதனால் தன்னுடைய நல்ல எண்ணத்தைக் கைவிட்டு விட்டார். இந்த செங்கல் சூளை கட்டு விரியன் பாம்புகளுக்கு மிகவும் சௌகரியமான வாசஸ்தலமாகிவிட்டது. அதிலிருந்து சில செங்கற்களை எடுத்து தனது வீட்டின் இரண்டாவது மாடியை கட்டிக் கொண்டார். அவருடைய மகனுக்கு கல்கத்தாவிலிருந்து பெண் எடுத்திருந்தார். கிணற்றுக்கருகில் ஒரு குளியலறை அவளுக்காகத் தேவைப்பட்டது. பழைய கொல்லத்துக்காரன் வந்தான். அளந்து பார்த்துவிட்டு தேவைக்குத் தகுந்தாற்போல் செங்கலை எடுத்து வர சூளைக்கு அருகில் சென்றான். போகும் போது மிக மிடுக்குடன் சென்ற அவன், சிறிது நேரத்திலேயே தலை கால் தெரியாமல் அலறிப் புடைத்துக் கொண்டு திரும்பி ஓடி வந்தான்: "பாபுஜி! இத்தனை கட்டு விரியன்களை ஒரே சமயத்தில் என் ஜன்மத்தில் நான் பார்த்ததில்லை. நமஸ்கார் பாபு!

சியாட்சாந்த் கடிச்சா உயிர் பொழைக்காது."

ஹெதோ நஸ்கர் கர்ஜித்தார்: "உனக்குத் தெரியுமா செங்கல் விலை என்னவென்று?"

"உங்களுக்குத்தான் அது தெரியும். எனக்குத் தெரியாது."

"சிரிமாலை கூப்பிட்டுக் காட்டுகிறேன்"

"சிரிமால் என்ன, தன்வந்திரியே வந்தாலும் நான் அங்கு போகப் போவதில்லை- அடேயப்பா! சியாட்சாந்தின் பண்ணை அல்லவா இது!"

புத்மால் சாதியைச் சேர்ந்த ஸ்ரீபத் அந்த பகுதியில் பாம்பு விஷத்தை இறக்கும் ஓஜா. அதாவது மந்திர தந்திரம் தெரிந்தவன். தவிரவும், குழந்தைகளை மகிழ்விப்பதற்குக் கட்டையில் கிலு கிலுப்பைகள் தயார் செய்வது அவனுடைய பொழுதுபோக்கு. இந்த சமயத்தில் அவன் கிராமத்தில் இல்லை, தனது வேட்டகத்து அரை பீகா நிலத்தைப் பராமரிப்பதற்காக பாதா கிராமத்துக்குப் போயிருந்தான். அங்கிருந்து திரும்பி தன்னுடைய சொந்த நிலத்தை கவனிக்க வந்த போது, ஹெதோ நஸ்கரிடம் வந்து, "நீங்க என்ன பண்ணி வெச்சிருக்கீங்க? கிராமத்துக்கு நடுவுல இத்தனை செங்கற்களை அடுக்கி வெச்சிருக்கீங்களே! இதெல்லாம் செங்கற்கள் அல்ல. மனிதனைக் கொல்லும் மெஷின்-! சாதாரணமாகவே இந்த பாழாய்ப் போன பாம்புகளிலிருந்து மனிதனுக்கு விடிவு இல்லை."

"நீயா இப்பிடிச் சொல்றே?"

"நீங்களே பொடி நடையா போய் பாத்துட்டு வாங்க."

ஹெதோ நஸ்கர் உடனடியாக கல்கத்தாவிலிருந்து கார்பாலிக் ஆசிட் தருவித்தார். பிறகு முதலில் தன் வீட்டை ரட்சித்துக் கொண்டார். ஆனால் கிராமத்திலேயும் பாம்புக் கடியினால் சாவு ஏற்படக்கூடும். மாதத்தில் ஓரிரண்டு பேர் பாம்புக் கடிக்கு இரையாகிறார்கள். ஸ்ரீபத் எல்லா கேஸ்களையும் தன் கையில் எடுத்துக் கொள்வதில்லை. கடிபட்ட இடத்துக்கு மேல் கட்டுக்கட்டி இர்ஃபான்பூர் ஹெல்த் சென்டருக்கு அனுப்பிவிடுவான். ஹெல்த் சென்டரைப் பார்த்தால், அது கல்கத்தாவுக்கு இத்தனை பக்கத்தில் இருக்கிறது என்று கற்பனை கூட செய்ய முடியாது. அங்கு டாக்டருக்கு கிட்டுவதெல்லாம் கொஞ்சம் ஸல்ஃபா டைஸின், இன்ட்ரோக்யுனால், இருமலுக்கு மிக்சர் அவ்வளவுதான். அவர் பொட்டாஸியம் பர்மாங்கனேட்டால் கடித்த இடத்தைக் கழுவி பரிசோதித்து விட்டு "கல்கத்தாவுக்கு எடுத்துக்கொண்டு போ" என்று சொல்லிவிடுவார்.

சாதாரணமாக ஸ்ரீபத் கூடவே செல்வான். இதன் காரணமாக

அவனுக்கு கொஞ்சம் விஷயம் தெரியும். கடித்தது விஷப்பாம்பாக இருந்து அதன் கடி ஆழமாக இல்லாதிருந்தால், தானே சிகிச்சை செய்து நோயாளியைக் காப்பாற்றி விடுவான். இல்லாவிட்டால் ஹெல்த் சென்டருக்கு அனுப்பிவிடுவான். இது தான் நியதி. எங்கு பாம்புக்கடி தினமும் நடக்கும் சம்பவமோ, அவ்விடத்தில் ஹெல்த் சென்டரில் பாம்புக் கடிக்கு நிவாரணமான மருந்து, ஸ்னேக் வெனம் ஆன்டிஸீரம் ஒரு நாளும் சரியாக சப்ளை செய்யப் படுவதில்லை. நோயாளியை கல்கத்தாவுக்கு எடுத்துச் செல்ல டாக்டர் அறிவுரை கூறுகிறார். ஸ்ரீபத் சொல்லுவான்: "டாக்டர் பாபு! நோயாளி தூங்கித் தூங்கி விழறான். பார்வை சரியாயில்லை, கண் இருட்டிட்டு வருது, ஒளி மங்குது. தொண்டையிலிருந்து குரல் எழும்பவில்லை. கழுத்து சாய்கிறது. கல்கத்தா வரை உயிர் தாங்காது. இந்த வேளையில் ரயிலும் கிடையாது."

நோயாளியின் குடும்பத்தினர் சொல்வார்கள்: "பிரயோசனம் இல்லை. பிழைப்பான்னு நம்பிக்கையில்லே. எமராஜன் அழைச்சு கிட்டுப் போக வந்துட்டான்."

"டாக்டர் பாபு! இன்ஜக்ஷன் கொடுக்க மாட்டீங்களா?"

"பாம்பு இன்ஜக்ஷனே இல்லையேப்பா-"

"வர்றதில்லையா?"

"இல்லே."

நோயாளியை பாடையில் கிடத்துகிறார்கள். அழுது புரண்டு கொண்டு உறவினர் அவனை திருப்பி எடுத்துச் செல்கின்றனர். ஸ்ரீபத் தரையில் கோணல் மாணலாய் கால் நகத்தால் கிறுக்கிக் கொண்டே புலம்புகிறான்: "ஓட்டு வாங்க மட்டும் வருவானுக தேவடியா பசங்க. இங்கேயிருந்து ஜெயிச்ச எல்லா பேமானிகளிடம் இன்ஜக்ஷன் அனுப்புன்னு கெஞ்சியாச்சு. இன்ஜக்ஷன் கொடுத்தா, மனிதன் பட்டுனு போகமாட்டான். ஆனால் எல்லா கம்மனாட் டிங்களும் மதுராவுக்குப் போன பிறகு கிருஷ்ண பரமாத்மா ஆயிடுறானுக."

டாக்டர் ஸ்னேக்வெனம் ஆன்டிஸீரம் கேட்டு அனுப்புகிறார். ஆனால் அங்கிருந்து வருவது கர்ப்பத்தடை மாத்திரைகள். கொஞ்சம் ஸல்ஃபா டைஸின் மாத்திரைகள். நிராசையடைந்து அவர் இந்த மாத்திரைகளை டைஃபாயிட்-நிமோனியா-வயிற்றுப் போக்கு, பூச்சி என எல்லா வியாதிகளுக்கும் கொடுக்கிறார். கூடவே கல்கத்தாவுக்கு ட்ரான்ஸ்ஃபருக்கும் முயற்சி செய்து கொண்டிருக்கிறார். இங்கே வந்த பிறகு, டாக்டர்கள் எல்லாருக்கும் கடவுள்தான் எல்லா சமயத்திலும் மனிதனைக் காப்பாற்றுகிறார்

என்ற நம்பிக்கை துளிர் விடுகிறது. இல்லாவிட்டால் நிமோனியா வால் பீடிக்கப்பட்ட நோயாளி எப்படி கர்ப்பத்தடை மாத்திரை யினால் குணமடைய முடியும்? நிச்சயமாக இந்த மாத்திரைகள் தெய்வ ஆசி பெற்றிருக்கின்றன!

பாம்பு கடிக்கும் மனிதன் இறந்து விடுவான். கடைசி சடங்குகள் முடிந்தவுடன் சவத்தை பேஹுலா நதியில் எறிந்து விடுவார்கள். நதி தனது பெயரின் காரணமாக இச்சவங்களை இழுத்துச் செல்லும் நிர்ப்பந்தத்தில் கட்டுண்டிருக்கிறது. மழை இல்லாவிட்டால் நதியில் நீரோட்டமில்லை. எப்படியோ மெதுவாக, மெதுவாக, சவத்தை இழுத்துச் செல்கிறது. ஏதோ சோறு தண்ணியில்லாத துர்பலமான கிழவி பேஹுலா, பட்டினியால் செத்த லகிந்தரை இழுத்துச் செல்வது போல. வேகமாக ஓடும் விசாலமான தாம்லி நதியில் விழுவதற்கு முன், பேஹுலாவில் சுழலும் வாழைத் தண்டுகளால் தயாரிக்கப்பட்ட பாடை ஒரு பள்ளத்தில் விழுகிறது. அங்கு சவங்களை எறிந்துவிட்டு, சுழல்கிறது. சிறிது நேரத்திற்குப் பிறகு சவம் தாம்லியில் மிதந்து செல்வதைப் பார்க்க முடிகிறது.

ஸ்ரீபத்துக்கு இந்தக் கிராமத்தில் நல்ல மதிப்பு. இதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை. ஆனால் கட்டுவிரியன் ஆழமாக கடித்துவிட்டிருந்தால் ஒன்றும் செய்வதற்கில்லை. கடித்த இடத்தில் கட்டுப் போட்டாலும், ஒரு மணி நேரத்திற்குள் இன்ஜக்ஷன் போடாவிட்டால் மனிதன் பிழைப்பது அரிது. இன்ஜக்ஷன் கொடுத்தால் கூட பிழைப்பானா என்று சொல்வதற் கில்லை. இதையெல்லாம் பார்த்துப் கொண்டே இருக்கும் ஸ்ரீபத்துக்கு தன் மேலேயே நம்பிக்கை குறைந்து கொண்டிருந்தது. ஹெல்த் சென்டருக்கு இன்ஜக்ஷன் வந்தால் அவனைவிட ஆனந்தப் படுபவர்கள் இருக்க முடியாது. அவன் கிராமத்தை விட்டு எங்காவது போனால் எல்லா வீடுகளிலும் அவநம்பிக் கையின் நிழல் தென்படுகிறது. கிராமத்து ஜனங்களை திக்கற்றவர் களாக, நிச்சய மரணத்திற்கு தான் விட்டு விட்டதைப் போன்ற உணர்வு அவனுள் எழுகிறது. தூங்கும் போது கையை வெளியில் நீட்டினால் பாம்பு கடித்துவிடுகிறது. இரவில் அவசரத்துக்கு மைதானத்துக்குப் போனால் பாம்பு கடிக்கிறது. நாலாபக்கமும் கட்டுவிரியன்கள். ஹெதோ நஸ்கரின் சூளை பாம்புக் கடியினால் சாகும் பயம் மக்களுக்கு அதிகமாயிருந்தது.

பாம்பு கடிக்கும் மனிதன் சாவான் என்ற ஒரு சூழ்நிலையில் ஜனங்களிடையே ஒரு தோல்வி மனப்பான்மையே உருவாகி

விட்டிருந்தது. நதியின் பெயரும் இத்தோல்வி மனப்பான்மையை வளர்த்துவிட்டிருந்தது. நதியின் பெயர் பேஹு'லா என்றிருக்கும் போது, பக்கத்தில் வசிக்கும் ஆண்கள், பெண்கள் எல்லாரும் லகிந்தர் ஆகிவிடுகிறார்கள். மனஸா (நாகப்பாம்பு) பூஜைக்கும் இந்த மனோபாவத்திற்கும் எந்த சம்பந்தமும் இல்லை. இங்கு மனஸா தேவிக்கு சிலை உருவம் கொடுத்து மனஸா செடியின் கிளைகளால் வழிபடுகிறார்கள். பூஜை தினத்தில் விதவிதமான தின்பண்டங்கள் செய்வார்கள். மறு நாள் சமையலற்ற தினம். பல பேர் இதை ராந்த்னா (சமையல்) பூஜை என்று அழைப்பார்கள். செங்கல் சூளையில் கட்டுவிரியன் பண்ணையிலிருந்து பணம் கொழிக்க ஆரம்பித்த பிறகுதான் ஹோதோ நஸ்கர் மனஸா பூஜையை மேலும் தாம் தூம் என்று கொண்டாடத் தொடங்கினான். இப்பொழு தெல்லாம் அவன் சொல்கிறான்: "இந்தப் போக்கத்த பசங்களுக் கெல்லாம் தேவி மேல் சிரத்தை குறைத்துவிட்டது. அதனாலே தான் பாம்பு கடிக்கிறது. என்னோட செங்கல் சூளையில் பாம்புகள் இனவிருத்தி செய்து கொண்டிருக்குன்னா, என்னை ஏன் பாம்பு கடிக்கிறதில்லே?"

இதையே அவன் பஸந்திடமும் சொன்னான். பஸந்த் வேறு மனோபாவத்திய, வேறு உலகத்து மனிதன். அவன் இங்கு ரிஸர்ச் செய்ய வந்திருக்கிறான். ஹெதோ நஸ்கர் சர்வ சக்திமான். அவனால் முடியாத காரியமே கிடையாது என்ற புகழ் பஸந்தின் மேல் எந்த தாக்கத்தையும் ஏற்படுத்தவில்லை. அவனுடைய சகோதரியின் கணவர்தான் அந்த பிராந்தியத்தின் எஸ்டிஓ. அவர் மூலமாகத்தான் இங்கு அவனுக்கு தங்குவதற்கு இடம் ஏற்பாடு செய்யப்பட்டது. ஆஃபீசரை திருப்திப்படுத்த ஒரு வாய்ப்புக் கிடைத்ததில் ஹெதோ நஸ்கருக்கு மிகவும் குஷி, ஆட்சி எந்த அரசியல் கட்சியின் கையில் இருந்தாலும், ஆஃபீசர்கள்-அதிகாரிகள் ஒத்த மனதுடையவர்களாக இருந்துவிட்டால் லாபத்துக்கு மேல் லாபம்தான்.

ஹெதோவின் பேச்சைக் கேட்ட அவன் கிராமத்து ஜனங் களின் சம்பிரதாயப் போக்கை நினைத்துக் கொண்டு, சற்றே சிரித்துக் கொண்டு சொன்னான்: "நாலா பக்கமும் கார்பாலிக் ஆஸிட் தெளிக்கிறீங்க. வீட்டில் நல்ல வெளிச்சம் இருக்கு. வீட்டைச் சுற்றி செடி, புதர்ன்னு எதுவும் இல்லை. செருப்பு இல்லாமல் வெளியே போறதில்லை. உங்களை ஏன் பாம்பு கடிக்கப் போகிறது.?"

"இல்ல ஸார்- எல்லாரும் இந்த செங்கல் சூளை மேலே பழி போட்றாங்க, ஆனா இந்த சூளை இல்லாதிருந்த போது பாம்பு

கடிக்கலையா என்ன? நான் பிறந்து மூச்சு விட ஆரம்பித்த நாளிலிருந்து பேஹுலா நதியில் பாம்பு கடிச்சு செத்துப் போனவங்க சவங்கள் மிதப்பதை பார்த்துக் கொண்டுதான் இருக்கிறேன். ஸ்ரீபத் ஓஜா கையிலும் வலு இல்லை. இருந்தால் ஏன் அவனும் நீங்களும், இரண்டு நல்லவங்களும் இன்ஜக்ஷன் அது இதுன்னு பேசிக்கிட்டு இருக்கீங்க?"

"நல்லதுதானே?"

"ஏ-யப்பா! அவன் என்னை தினமும் அரிக்கிறான்— இன் ஜக்ஷன் வர்றத்துக்கு ஏற்பாடு பண்ணு, பண்ணுன்னு. இன்ஜக்ஷன் பெயரை எடுத்தா தோல்வியை ஒப்புத்துக்கிறீங்கன்னு அர்த்தம்."

"ஹெல்த் சென்டரில் ஸ்னேக் வெனம் ஆன்டிஸீரம் வெச்சிக்கிறதில்லியா? அவங்க என்ன சொல்றாங்க?"

"எப்போ வெச்சிட்டிருந்தாங்க? இந்த தெற்கு தேசத்தில் பாம்பு இல்லாத இடம் எது? எல்லா இடங்களிலும் பாம்பு இருக்கு. தூங்கித் தூங்கியே மனுசங்க செத்துப் போறாங்க. சொல்றாங்க இல்லையா - நரனும் நாகமும் சேர்ந்து வாழறாங்கன்னு. ஹெல்த் சென்டர் வந்தாச்சு, ஆனால் அங்க எங்கே இன்ஜக்ஷன் இருக்கு? எப்பவோ ஒரு வருஷத்தில ஏகப்பட்ட பேர் பாம்பு கடிச்சு செத்தாங்க, அந்த வருஷம் இன்ஜக்ஷன் அனுப்பிச்சாங்க. எதுக்காக அனுப்பணும்? பாம்பு கடிச்சு சாவது அவனவன் தலையெழுத்து. தலையிலே எழுதியிருந்தா யாராலே மாத்த முடியும்.?"

பஸந்தின் மனதில் ஒரு அகடமிக் இன்டரெஸ்ட் முளை விட்டது. பாம்பு விஷயத்தில் இப்படி ஒரு தோல்வி மனப்பான்மை ஏன்? பிறகு மேலும் ஒரு கேள்வி எழுந்தது. "பாம்புக் கடியால் சாவு க்ரானிக்காக இருக்கும் ஒரு இடத்தில் ஏன் ஸ்னேக் வெனம் அன்டி ஸீரம் இருப்பதில்லை? அரசாங்கத்தின் சுகாதார இலாக்காவும் 'பாம்பு கடித்துச் சாவது தலையில் எழுதியிருக்கிறது' என்று நினைக்கிறதா?

"பாம்பு கடிச்சா என்ன பண்ணுவாங்க?"

"ஸ்ரீபத் இருக்கான்."

"அவனால் சமாளிக்க முடிகிறதா?"

"முடியறதோ இல்லையோ அவன் ஒருத்தன்தான் பாம்பு கடிச்சா ஏதாவது செய்கிறான். ஆனால் அவன் போயிட்டா என்ன ஆகும்னு எங்களுக்கு ஒரு கவலை- அவன் மகன் இந்த தொழிலில் இல்லை."

"அவன் அப்பாவும் இந்தத் தொழிலில்தான் இருந்தானா?"

"ஆமாம். ரொம்ப நல்லவன். ராம்பத் மால் என்றால்

எல்லாருக்கும் தெரியும். ஒரு நாள் ஒரு பையன் பாம்பு கடித்து இறந்து விட்டிருந்தான்.. மறுநாள் அவனை நதியில் மிதக்க விடுவதற்கு ஜனங்கள் போய்க் கொண்டிருந்தார்கள். தரோகா (போலீஸ் இன்ஸ்பெக்டர்) கிட்ட ராம்பத் சொன்னான்: 'எஜமான்! இந்தப் பையன் உயிரோடு இருக்கான். இவனை உயிரோடவே தண்ணியிலெ தூக்கியெறியப் போறாங்க.' இன்ஸ்பெக்டர் சொன்னான்: 'இவனைப் பிழைக்க வைச்சா உனக்கு 500 ரூபாய் இனாம் தர்றேன்.' அந்தப் பையனைப் பிழைக்க வைத்து, தரோகா விடமிருந்து ராம்பத் 500 ரூபாய் இனாம் பெற்றான். இதை என் கண்ணாலேயே பாத்திருக்கேன். அப்போ நான் சின்னப் பையன்."

"நான் ஸ்ரீபத்தை சந்திக்க விரும்புகிறேன்."

"இதெல்லாம் என்ன? பாட்டில்ல?"

"இன்ஜக்ஷன்."

"இன்ஜக்ஷனா?"

"பாம்போடு வேலை செய்கிறேன் இல்லையா?"

"இதனால உபயோகமிருக்கா?"

"என்னை இரண்டு தடவை பாம்பு கடிச்சிருக்கு. உங்க முன்னாடி உயிரோடு உட்கார்ந்து கொண்டுதானே இருக்கேன். இதற்கு அர்த்தம் இதனால் பயனிருக்கு."

"வெள்ளை பௌடர் மாதிரியிருக்கு."

"இது பௌடர் ஸீரம்."

"நிஜம்மா உபயோகமாயிருக்கா? இந்த வெள்ளைப் பொடியை இன்ஜக்ஷன் செய்தால் மனிதன் பிழைச்சுடுவானா?"

"உங்க முன்னாலதானே இருக்கேன். என்னைப் பார்த்தால் உயிருள்ள ஆளாத் தெரியலியா?"

இப்பொழுது ஹெதோ நஸ்கர் இரண்டாவது பிரச்சினைக்கு வந்தார். சொன்னார்: "நீங்க ஆபீசரின் மச்சான். ஏன் இந்த கீழ் மட்ட ஜனங்க வேலையை எடுத்துக்கிட்டீங்க? இதெல்லாம் பெரிய மனுஷங்க செய்யற வேலையா?"

பஸந்த் இதற்கு ஒன்றும் பதில் சொல்லாமல் கேட்டான்: "உங்களுடைய ஹேண்ட் பம்ப் எங்கே இருக்கு?"

"இதோ! முன்னாலேயே ஹேண்ட் பம்ப், ஸெப்டிக் டாங்க் எல்லாம் இருக்கு- . ஹெதோ நஸ்கர் வீடு நாலு பெரிய மனுஷங்க தங்கும் இடம், இல்லையா? நீங்க என்ன பாத்திரம், பண்டம், ஸ்டவ், கிவ்ன்னு ஏதேதோ கொண்டு வந்திருக்கீங்க?"

"ஆமாம், சமைக்க வேண்டாமா? சமைக்காவிட்டா எப்படி சாப்பிடுறது?"

“என் வீட்டிலிருந்து சாப்பாடு வரும். என் விருந்தாளியாக இருந்துட்டு நீங்களே சமைத்துச் சாப்பிடுறதா?”

“இதோ பாருங்க! உங்க வீட்டுக்கு வாடகை, என்னோட சாப்பாட்டு செலவு எல்லாத்துக்கும் எனக்குப் பணம் கிடைக்கிறது. எதுக்காக உங்களிடமிருந்து எதிர்பார்க்கணும்?”

“போகட்டும், ஆனால் பால் மட்டும் நீங்க வாங்காதீங்க.”

“என்னிடம் பால் பௌடர் டின் இருக்கு.”

ஹெதோ சிரித்துக் கொண்டு சொன்னார்: “புரிஞ்சுது. உங்க அக்கா புருஷன் தடுத்திருப்பார். இருந்தாலும் ஏதாவது தேவைப் பட்டா கேட்கத் தயங்காதீங்க.”

இரண்டு மூன்று நாட்களுக்குள்ளாகவே ஸ்ரீபத் - பஸந்த் சந்திப்பு ஏற்பட்டது. சரண் பெஹ்ராவின் கல்யாணமான இளம் கர்ப்பவதி பெண்ணை பாம்பு கடித்துவிட்டிருந்த நாளில்தான் இந்த சந்திப்பு நிகழ்ந்தது. பாம்புக்கும் மனிதனுக்கும் ஓயாது நடந்து கொண்டிருக்கும் யுத்தத்தின் விளைவாகவே இந்த சந்திப்பு நிகழ்ந்தது.

டீ குடித்துவிட்டு கப்பை அலம்பிக் கொண்டிருந்தான் பஸந்த். திடீரென்று ஒரு உயரமான மனிதன் ஓடி வந்து சொன்னான்: “பாபு, இன்ஜக்ஷன் எடுத்துக் கொண்டு கிளம்புங்க! ஸ்ரீபத் கூட்டிகிட்டு வரச்சொன்னான்.”

“ஏன்?”

“மாலதியை பாம்பு கடிச்சுடுத்து, கர்ப்பவதி பெண்.”

பஸந்த் இன்ஜக்ஷனை எடுத்துக் கொண்டே கேட்டான், “கட்டுப் போட்டாச்சா?”

“ஆச்சு, ஆச்சு- ஸ்ரீபத்-”

சரண் பெஹ்ராவின் வீட்டுத் தாழ்வாரத்தில் அந்தப் பெண்ணைப் படுக்க வைத்திருந்தார்கள். கடித்த இடத்திற்கு மேல் முறைப்படியே மூன்று இடங்களில் கட்டு போடப்பட்டிருப்பதை பஸந்த் கவனித்தான். கட்டுக்கு கீழே விதிப்படி கீறப்பட்டு ரத்தம் எடுக்கப்பட்டிருந்தது. நோஞ்சான் உடல், பெரிய பெரிய எலும்புகள், அடர்ந்த தலைமயிர் கொண்ட ஸ்ரீபத் மிக நிபுணத் துவத்துடன், கட்டை அவிழ்த்து கொஞ்சம் மேலே கட்டிக் கொண்டிருந்தான், கட்டிக்கொண்டே சொன்னான்: “பாபு! வந்துட்டீங்களா? இன்ஜக்ஷன் கொடுங்க. ஆழமா கடிக்கலே, இருந்தாலும் சியாட் சாந்தா, சியாட்சாந்தா தானே?”

பஸந்த் இன்ஜக்ஷன் கொடுத்தான். தண்ணீர்க் குடத்தைப் பார்த்துவிட்டு கேட்டான்: “வென்னீர் ஒத்தடம் கொடுத்தீங்களா?”

"ஆச்சு."

கடிக்கு அருகே ஸ்ரீபத் கீறிய போது அந்தப் பெண் மெதுவாக மூச்சுவிட ஆரம்பித்தாள். ஸ்ரீபத் சொன்னான்: "பேச்சு வந்திருக்கு, பொழச்சுடுவா."

"உன் வாயில சக்கரை போடணும், ஸ்ரீபத் புருஷன் வீட்டுக்கு போறப்போ இப்படி ஆயிடுச்சு. ஹே பகவான்!"

ஸ்ரீபத் திட்டினான்: "தரையில இத்தனை சட்டி, பானை, அது இதுன்னு என்னெல்லாமோ குவிச்சு வெச்சிருக்கேயே? எந்த இடத்தில வசிக்கிறோம்னு கொஞ்சம் கூட நெனப்பில்லையா?"

"பாம்பு என்ன ஆச்சு?"

"ஓ- அது பிராமண தேவதை. இப்பொழுது முடிவில்லா நித்திரையில் ஆழ்ந்துவிட்டது. பிறகு அதற்கு அந்திமச்சடங்குகள் நடக்கும்."

கிட்டத்தட்ட ஒரு மணி நேரத்திற்குப் பிறகு அந்தப் பெண் ஆபத்திலிருந்து தப்பிவிட்டிருந்தாள். சரணும் அவன் மனைவியும் ஸ்ரீபத்தின் காலைத்தொட்டு வணங்கினார்கள். ஸ்ரீபத் அவர்களை ஆசிர்வதித்துக் கொண்டே புன்சிரிப்புடன் சொன்னான்: "காப்பாத்தினது அவர்."

பஸந்தையும் பலர் வணங்கினார்கள்.

ஸ்ரீபத் சொன்னான்: "உன் மாப்பிள்ளை வந்தான்னா ஒரு நாள் மனஸா மங்கள பாராயணம் பண்ணச் சொல்லு சரண். என்ன? விருந்து சாப்பாடு சாப்பிட்டு ரொம்ப நாளாயிருச்சு. இப்போல்லாம் நீதான், படகு ஓட்டி நிறைய பணம் சம்பாதிச் சிருக்கேயே?"

"நீ என்ன சொல்றயோ அப்படியே செய்யறேன்."

ஸ்ரீபத் சொன்னான்: "வாங்க. போகலாம், உங்களோட கொஞ்சம் பேசணும். இங்கே இனிமேல் ஆபத்தில்லே."

இருவரும் சரண் வீட்டிலிருந்து கிளம்பினார்கள். ஸ்ரீபத் சொன்னான்: "வாங்க, உங்களுக்குக் காட்றேன், பாம்பு விவசாயம் எங்கே நடக்குதுன்னு." தூரத்திலிருந்தே அவர்கள் உடைந்து கிடந்த செங்கல் சூளையைப் பார்வையிட்டனர். ஸ்ரீபத் பீடியைக் கொளுத்திக் கொண்டே 'தூ' என்று துப்பிவிட்டுச் சொன்னான்: "அதோ, அந்த பீ தின்னிப் பயமவன் ஹெறதோ நஸ்கர்."

"இந்தச் சூளை அவனுடையதா?"

"ஆமாம், ஆமாம்.. அவனத்தவிர வேறு யாரு இந்த மாதிரி மோசமான காரியம் செய்வாங்க? இதுவோ பாம்புங்க வட்டாரம். பாம்பு கடிச்சதாலே எத்தனையோ பேர் செத்துப் போயிருக்காங்க.

அவங்க சவங்கள சொமந்து சொமந்து பேஹுலா ஓய்ஞ்சு போயிட்டிருக்கா. மழைக்காலத்துல தவிர ஆத்துல ஓட்டமில்லே. இதுக்கு மேலே இந்த படவா நஸ்கர் பாம்புப் பண்ணை வெச்சுக்கிட்டு இருக்கான்."

"அது சரி, ஒண்ணு சொல்லுங்க. பாம்பு கடிச்சு செத்துப் போறவங்களை ஏன் தகனம் செய்றதில்லை?"

ஸ்ரீபத் சோர்வுடன் சிரித்தான். சொன்னான்: "இந்தப் பேச்சை எடுத்தா, ஜனங்க அடிக்க வருவாங்க, நதி சவங்களை இழுத்துக் கொண்டேபோய் தாம்லியில சேத்துடுது. பிறகு அதெல்லாம் கடல்ல கலந்துடும். பேஹுலாவோ சாவுல வாழுது. இதுவும் ஒரு ஜன சமூகமா? இங்கே இருக்கிற ஓடைங்க. நதிங்க எல்லாம் கடல்ல விழுகுது. யாருக்காவது தைரியம் இருக்கா சவங்களை கொளுத்துறதுக்கு?"

ஸ்ரீபத்தின் பேச்சுக்குப் பின்னால் ஒரு நிர்மலமான, அறிவு பூர்வமாக சிந்திக்கும் மனிதனைக் காண முடிந்தது. பஸந்த் ஆச்சரியத்தில் மூழ்கிவிட்டான்.

"சூளையை இடித்துத் தள்ளிவிட முடியாதா?"

ஸ்ரீபத் சொன்னான்: "வாங்க என் வீட்டுக்குப் போவோம், உட்கார்ந்து பேசுவோம்."

பஸந்த் பாம்புகள் பற்றி ரிஸர்ச் என்னமோ செய்கிறான். ஆனால் பாம்புகள், பாம்பாட்டிகளைப் பற்றிய அவனுடைய நோக்குகள் எல்லாம் சரத் சந்திரரின் 'ஸ்ரீகாந்த் : முதல் பாகம்' என்ற நூலிலிருந்து எடுக்கப்பட்டவை. ஸ்ரீபத் மற்ற பாம்பாட்டி களைப் போல இல்லாதது அவனுக்கு அதிர்ச்சியைத் தந்தது. ஸ்ரீபத் மனைவி அவனுக்கு டீ கொண்டு வந்து கொடுத்தாள். அவளுடைய முகம் கொஞ்சம் கூட சரத் சந்திரரின் கதையில் வரும் அன்னதா தீதியின் முகம் மாதிரி இருக்கவில்லை என்பது அவனை மேலும் அதிர்ச்சியுறச் செய்தது. பிறகுதான், மேலே சொல்லப்பட்ட கதை பாம்பாட்டிகளைப் பற்றிய அவனுடைய நோக்குகளை உருவாக்கி விட்டிருப்பதை அவன் உணர்ந்தான். மேற்கு வங்காளத்து மிஸ்டர் பாம்பாட்டி மிஸஸ் பாம்பாட்டிகள், நாடக மேடையில் நடிக்கும் நடிக நடிகைகளைப் போல் வசீகரமாக இருக்க முடியாது. நிறைய பால்-வெண்ணெய்-மீன்-மாமிசம் போன்றவற்றை உண்டு பரிபூர்ண வாழ்க்கை நடத்திக் கொண் டிருந்தால்தான் மேடையில் பட்டினியில் வாடும் ஏழைப் பாத்திரங்களாக நடிக்க முடியும்.

ஸ்ரீபத் கேட்டான்: "நீங்க எங்கேயிருந்து வந்திருக்கீங்க?

*இர்ஃபான்பூர் டாக்டர் சொன்னார் நீங்க வருவீங்கன்னு. இந்த மாதிரி இடத்துக்கு நீங்க ஏன் வந்தீங்க?"*

*"பாம்பு கடித்து ரொம்பப்பேர் சாகறாங்க. பாம்பு கடிக்கறதால ஏற்படற விளைவுகள் பற்றி ஆராய்ச்சி செய்கிறேன். அதனால் தான் இங்கே வந்திருக்கிறேன்."*

*"நீங்க என்ன டாக்டரா? ஜனங்களுக்கு இன்ஜக்ஷன் கொடுக்கிறீங்களா?"*

*"நான் டாக்டர் இல்லைதான். ஆனா இங்கே இருக்கிற வரைக்கும் என்னாலே இன்ஜக்ஷன் கொடுக்கமுடியும்."*

*"எத்தனை நாள் இருக்கப்போறீங்க?"*

*"மூணு மாசம்."*

*"ஓ- சரி, நீங்க செங்கல் சூளை பத்தி கேட்டீங்க இல்லே?"*

*"அதை உடைத்துத் தரைமட்டமாக்கிட்டா நல்லதில்லையா?"*

*"நீங்க சொல்றது என்னமோ சரிதான். ஆனா அது ஒரு பெரிய கதை. ஹெதோ நஸ்கர் இந்த செங்கல் வியாபாரத்தில் லாபமில்லேன்னு புரிஞ்சிக்கிட்ட போது, காண்ட்ராக்டர் ஒருத்தன் வந்தான். அவன் செங்கல் எடுத்துட்டுப் போக வந்தான். பேஹுலாவிலிருந்து தாம்லிக்கு போய், படகுல செங்கல் எடுத்துட்டுப் போறதா ஏற்பாடு"*

*"என்ன ஆச்சு?"*

*"இந்த ஆளு ஒரு பேய் ஆச்சே? நான் சொன்னேன் 'வித்துப் போடு பாபு, இல்லேன்னா இந்த இடம் ஒரு பாம்புப்பேட்டை ஆயிரும்'னு. அவன் என்ன சொன்னான் தெரியுமா? 'விலை சரியில்லாட்டிக் கூடவா?' என்றான். ஆகவே சூளை தங்கியே போச்சு. பாம்புக் குடியிருப்பாயிடுச்சு. ஆனால் நஸ்கருக்குத் தோதான விலை கெடச்சப்போ, யாரால் அந்த சூளைக்குப் பக்கத்துல போக முடிஞ்சுது? பாம்போடு யார் கண்ணாமூச்சி விளையாடுவான்? நான் போன வருஷம் சொன்னேன்: 'வைகாசி மாசத்துல நிலம் வறண்டு கிடக்கும். சூளைக்கு நாலா பக்கமும் குழி தோண்டி சூளை மேல் தீ வைச்சுடு. சூளை மேல நாலஞ்சு டின் கிரோஸின் ஊத்த வேண்டியிருக்கும். சுற்றி வெட்டின பள்ளத்திலெ செடி கொடி புல்லு பூண்டுன்னு போட்டு மண்ணெண்ணை ஊத்தினா நெருப்பு பிடிச்சதும் வெளில வர்ற பாம்புக செத்துப்போயிடும். மேதினிபூர்ல இப்படி பாம்புங்கள சாகடிப்பதை நான் பாத்திருக்கேன். அங்கே கூட இந்த மாதிரி ஒரு சூளையில பாம்புங்க வாசம் செஞ்சுட்டு இருந்துச்சு. இப்போ அந்த இடத்திலெ ஒரு ஸ்கூல் நடக்குது."*

"அவன் ஒத்துக்கலையா?"

"இல்லே. அவன் சொல்றான்: 'சூளை உன், வீட்டு வாசல்லயா இருக்கு? இருபது டின் கிரோஸின் பத்தி பேசறேயே? துட்டு நீ கொடுப்பியா?' அவன் சொந்தத்தில் கண்ட்ரோல் கடை வெச்சிருக்கான். கிரோஸின் அவன் ப்ளாக்கில் வாங்கத் தேவை யில்லை. இருந்தாலும் ஒத்துக் கொள்ளலே."

"உங்ககிட்ட நான் நிறையப் பேசணும். இந்த கட்டுப் போடுறது, கட்டு அவிழ்க்கிறது, கீறி விடுறது எல்லாம் நீங்க உங்க அப்பாகிட்ட கத்துக்கிட்டீங்களா?"

"ஆமா— நான் இன்ஜக்ஷன் பத்தி ஓங்ககிட்ட இன்னிக்கு ஏன் பேசறேன்னா— உண்மையிலே ஸ்ரீபத் ஒரு முட்டாப்பய, அவனுக்கு ஒண்ணும் தெரியாதுன்னு ஜனங்க நினைக்கிறாங்க ஆனா—"

"ஏன்?"

"உங்களுக்குத்தான் எல்லாம் தெரியுமே?"

"நீங்க சொல்லுங்க."

ஒரு வினாடி தயக்கத்திற்குப் பிறகு ஸ்ரீபத் சொன்னான்: "இந்த விஷயத்தை பற்றிப் பிறகு பேசறேன். இப்போ நீங்க போங்க. குளிச்சு முழுகி, சோறு திங்கணும். எங்கே போகப்போறோம்? நீங்க இங்க இருக்கீங்க, நானும் இங்கதான் இருக்கேன்."

பஸந்த் வீடு திரும்பினான். அறைக்குள் நுழைந்தவுடனே ஹெதோ நஸ்கரின் வேலைக்காரி ஒரு பெரிய தட்டில் துணியால் மூடிய டஜன் கிண்ணங்களை சுமந்து கொண்டு நிற்பதைப் பார்த்தான். அவள் சொன்னாள், "எசமானி அம்மா சொன்னாங்க, பெரிய இடத்துப் பிள்ளை. சாதம் மாத்திரம் வடிச்சுக்கிட்டா போதும். பால், கறிக்கெல்லாம் சிரமப்பட வேண்டாம்னு."

பஸந்த் தட்டைத் திறந்து பார்த்தான். அதில் கறிவகைகளுக்கு இடையே பெரிய பெரிய மீன் துண்டுகளைப் பார்த்தவுடன் அவனுக்கு தலை சுற்றியது. "மரியாதைக்காக இன்னைக்கு அவங்க அனுப்பி வைச்சதை நான் திருப்பி அனுப்பலே. இனிமே இப்படி எதுவும் அனுப்ப வேண்டாம்னு உன் எஜமானி அம்மாவிடம் சொல்லிவிடு. ."

ஹெதோ நஸ்கரின் சூளையை பற்றிக் கேட்டவுடன் அவன் மனதில் ஒரு 'ஆனால்' புகுந்து கொண்டது. சாதரணமாக அவன் மிகவும் சாந்தமான சுபாவம் உடையவன். ஏதாவது ஒரு நிகழ்ச்சியினால் அதிர்ந்து போனாலும் எதுவும் சொல்ல முன் வரமாட்டான். மேலும், மத்திய வர்க்கத்தைச் சேர்ந்தவன்

என்பதால் மற்றவர்கள் விஷயங்களில் தலையிடுவது அவனுக்குப் பிடிக்காது. இருந்தாலும் அவன் பாம்புக் கடியின் விளைவுகளைப் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கிறான். அதன் பயங்கரத்தைப் பற்றி அவனுக்குத் தெரியும். ஒரு மனிதனின் செங்கல் சூளையின் காரணமாக கிராமத்தில் இத்தனை சாவுகள் ஏன் நிகழவேண்டும்? ஒரு வருஷத்தில் இருபது இருபத்தைந்து பேர்களின் சாவு மிகவும் கவலைக்குரிய விஷயம்.

இந்த விஷயத்தை அவன் சகோதரியின் கணவருக்கும் தெரிவித்தான். அவர் ஒரு நாள் அவனை சாப்பிட அழைத்திருந்தார். எஸ்டிஓ ஸாஹப் அவன் சொன்னதை மிக லைட்டாக எடுத்துக்கொண்டார். சொன்னார்: "இதுக்கு முன்னாலே பாம்பு கடிச்சு மனுஷங்க சாகலியா? இந்த சூளையினாலதான் செத்துப் போறாங்களா?"

"ஆனா டெத் ரேட் அதிகமாயிருக்கே?"

"அதெல்லாம் சரி. உன் தலையை இதிலெல்லாம் நுழைக்கத் தேவையில்லை. அவன் பொல்லாத ஆளு. இதை மனசுல வெச்சுக்கோ."

"முக்கியமான விஷயம் இதான்: ஹெல்த் சென்டர்ல இன்ஜக்ஷன் தேவை."

"எனக்குத் தெரியும். டாக்டர் இருக்கான். அவன் ரிக்விஸிஷன் கொடுத்தா, நான் கவனிச்சுக்கிறேன்."

தன்னுடைய பிரச்சினைகளையும் பஸந்துடன் அவர் பகிர்ந்து கொண்டார்.

'இப்போதெல்லாம் பேஹுலா ப்ளாக் மிகவும் சாந்தமாக இருக்கிறது. பர்காதார் (கூலி குத்தைக்காரர்கள்) பிரச்சினை ஒரு மாதிரி ஓய்ந்திருக்கிறது- எல்லாருக்குமே திருப்தியில்லைதான். ஆனால் எந்த முடிவில்தான் எல்லாரையும் திருப்திப்படுத்த முடியும்-? பஞ்சாயத்து தேர்தலும் இப்படி அப்படி என்று ஒரு மாதிரி முடிந்துவிட்டது. ஹெதோ நஸ்கர்தான் பஞ்சாயத்து பிரஸிடென்ட். எந்த காரணத்தைக் கொண்டும் அவனுடன் கிராமவாசிகளுக்கு இருக்கும் இன்றைய உறவைக் குலைப்பது நல்லதல்ல... ஜமீன்தாராக இருந்து கொண்டே பஞ்சாயத்து பிரெஸிடென்டாகவும் ஆனதால் கிராமவாசிகளுக்கு அவன் மேல் அதிருப்தி. இந்த நிலை மாறவும் மாறாது.... ஆனால் நான் சொல்வதென்னவென்றால் கிராம வாசிகளுடன் அவன் சம்பந்தம் சரியாயில்லை என்றால் அதற்கு அவனேதான் காரணம். உன் பொருட்டு ஏதாவது ஸிச்சுவேஷன் எழுந்து, நிலைமை மேலும்

மோசமாகாதபடி பார்த்துக்கொள். கிராமத்தில் ஒரு படித்த இளைஞன் இருந்தால் எல்லாமே பொலிடிகல் உருவம் பெற்று விடுகின்றன.'

பஸந்த் மறுபடியும் கிராமத்துக்கு வந்தான். இப்பொழுது அவனுக்கு அங்கிருந்த நிலவரம் பற்றிய அறிவு அதிகரித்திருந்தது. ஸ்ரீபத் மால் அவனைக் கூப்பிட வந்தான். சரண் வீட்டில் மனஸா மங்கல பூஜை நடக்கவிருந்தது. ஸ்ரீபத் சொன்னான்: "நிறைய கூத்து, பாட்டு எல்லாம் நடக்கும். சரண் மனஸா தேவிக்குப் படையல் இடுவான். நீங்கதான் திரும்பிப் போக டிக்கட் வாங்கிக்கிட்டு வந்திருக்கீங்களே. போய் பாத்துட்டுத்தான் வாங்களேன்."

பஸந்த் ஏற்றுக்கொண்டான்.

ஹெதோ நஸ்கர் இதை கேட்டு மிகவும் அரற்றினார். "ஆபீசரின் மச்சானா இருந்துகிட்டு இதுக்கெல்லாம் போலாமா? இந்த பொறுக்கிப் பசங்கல்லாம் தேவிக்கு சோறு படைப்பாங்க, அதை நீங்க திங்கலாமா?"

"என்னோட வேலையும் பாம்பு சம்பந்தப்பட்டது தானே? நான் எப்படி மறுக்க முடியும்?"

ஹெதோ நஸ்கர் இதைக் கேட்டு திருப்தியடையவில்லை. தன் மனைவியிடம் சொன்னார்: "விதவிதமா சமைத்து அவனுக்கு இனிமே அனுப்ப வேண்டாம். நாலு எழுத்து படிச்ச பிள்ளை. ஏதோ வேலை செய்ய வந்திருக்கான்னு நினைக்கிறோம். அவனுக்குப் பின்னால வேற என்னவாவது விஷயம் இருக்கா இல்லையான்னு யாருக்குத் தெரியும்? இல்லேன்னா ஸ்ரீபத்துடன் இவனுக்கு எதுக்கு சினேகம்?"

"உங்களை எதிர்க்க முடியுமா?"

"ஒரு நாளும் முடியாது, ஆனாலும் ஆபீசர் மச்சான், அதனாலேதான் நான் தலையிட விரும்பலே. இரண்டு மூணு மாசம் எப்படியோ ஓட்டிட்டா எல்லாம் சரியாயிடும். ஆபீசர் சொன்னார், நஸ்கர் இவனைப் பாத்துக்கோன்னு. இல்லாட்டா, நான் வம்புல மாட்டிக்குவேனா?"

"செம்படவங்க மீன் விக்க வீட்டுக்கு வர்றாங்க. பாக்கி ஜனங்க காய்கறி விக்க வர்றானுக. எல்லாம் தலைகீழா ஆயிட்டிருக்கு."

"இதெல்லாத்தையும் விட்டுத்தள்ளு. இந்த சமயத்துல இதை யெல்லாம் நெனச்சுக்கிட்டா மனசுல முள்ளை வெச்சுக்கிறதுதான் மிஞ்சும். அந்த முள்ள உன்னால ஜீரணம் பண்ணமுடியுமா?"

பஸந்துக்கு மனஸா பாட்டு ஒன்றும் புரியவில்லை. இருந் தாலும் ஆனந்தமாகக் கேட்டுக் கொண்டிருந்தான். சரணின்

தாழ்வாரம் துப்புரவாக சுத்தம் செய்யப்பட்டிருந்தது. அரிக்கேன் விளக்கு ஒளியில் ஸ்ரீபத் மனஸா தேவியின் கொடியைக் கையில் எடுத்துக் கொண்டு ஒரு காலில் சலங்கையும், கையில் மணிகள் கோத்த வளையலையும், அணிந்து கொண்டு லயம் தப்பாமல் பாடிக் கொண்டிருந்தான். கூடவே அங்கிருந்தவர்களும் அவன் மகனும் பாடினார்கள். மனஸா பாட்டு, பேஹுலாவின் உபாக் யானம். அவர்கள் இந்தக் கதைக்கு பிரதேச வண்ணம் கொடுத் திருந்தார்கள் என்று பஸந்துக்குப் புரிந்தது.

ஸ்ரீபத்தின் பாட்டின்படி லகீந்தர் பேஹுலாவின் கணவன். மூலக்கதையில் லகீந்தரின் முதலிரவின் போது பாம்பு கடித்து இறந்து விடுகிறான். அவன் மரணத்தை ஏற்றுக்கொள்ளாத பேஹுலா அவன் உடலை ஒரு ஓடத்தில் தூக்கிச் செல்கிறாள். கடைசியில் அவனைப் பிழைக்க வைக்கிறாள். இங்கே கதை மாற்றப் பட்டிருக்கிறது. மணமாகி இருவரும் பல காலம் இனிமையான குடும்ப வாழ்க்கை நடத்துகிறார்கள். கடைசியில் லகீந்தர் இறந்து சுவர்க்கவாசியாகி விடுகிறான். பகவானின் சாபம் பேஹுலாவின் மேல் விழுகிறது. தேவதைகள் சொன்னார்கள்: "தேவ சபையில் பேஹுலா அவர்களை மயக்க லாஸ்ய நடனமாடினாள்- அதன் பலன்தான் கலியுகத்தில் பேஹுலா நதியாக ஓடுகிறாள். பாம்புக் கடியால் மரிப்பவர்கள் அவளுடைய ஜலத்தில் மிதந்து சென்று ஸத்கதியடைவார்கள். ஆமாம். முடிவில்லாத சாபம் இது."

பேஹுலா கேட்டாள், "எனக்கு விமோசனம் எப்போது?" தேவதைகள் அவள் கேள்விக்கு எந்த பதிலும் சொல்லவில்லை. அப்பொழுதிலிருந்துதான் பேஹுலா நதியாக மாறி ஓடிக் கொண்டிருக்கிறாள்.

பாட்டின் முடிவில் மனஸாவுக்கு ஆரத்தி எடுக்கிறார்கள். தாழ்வாரத்தில் கொடி பறக்க விடப்படுகிறது. .

பஸந்துக்கு இது விலை மதிக்க முடியாத பாடம். பயத்தம் பருப்புடன் தயார் செய்யப்பட்ட புளிப்பான கிச்சடி ஐந்து விதமான கறிவகைகள் எல்லாம் தேவிக்குப் படைக்கப்பட்டன. சாப்பிட்டுக் கொண்டே ஆழ்ந்த நம்பிக்கையுடன் ஸ்ரீபத் சொன்னான்: "இங்குதான் எல்லாம் நடந்தது. சம்பாயி நகரம் இப்போ பேஹுலாவின் கர்ப்பத்தில். பேஹுலா எந்த இடத்தில் நின்றுகொண்டு நதியாக மாறினாளோ, அந்த இடத்தில் ஒரு அற்புதமான கதம்ப மரம் இருக்கிறது. வைசாக மாதத்தில் அது பூக்கும்."

சரண் சொன்னான்: "வைசாகம் வரை இருந்தால் நீங்களே

பார்க்கலாம். அன்று பேஹுலா மேளா (திருவிழா) நடக்கும். மேளாவில் விதவிதமான சாமான்கள் வரும். எல்லா திசைகளி லிருந்தும் பாம்பாட்டிகள் வருவார்கள். பாம்பாட்டங்கள் காட்டு வார்கள். பார்க்க வேண்டிய காட்சி அது."

"பாம்பு கூட பிடிப்பாங்களா?"

"ஏன் வரமாட்டாங்க? இப்போவெல்லாம் பாம்புத்தோலுக்கு கல்கத்தாவில் நல்ல விலை கிடைக்கிறது. கோதுமை விரியனை உயிரோடு பிடிச்சா மருந்துக்கடையில் அதன் விஷத்தை விற்கலாம்."

"நீங்க அந்தத் தொழில் செய்வதில்லையா?"

"இல்லே. அப்பா தடுத்துட்டாரு."

'உங்க குடும்பம் எப்படி நடக்குது?"

"எப்படியோ ஓடுது. எங்க வீட்டைப் பாத்தா புரியலையா? நஸ்கர் நிலத்து மேலதான் நம்பிக்கை. அந்த நம்பிக்கையும் அவநம்பிக்கைதான்."

"எவ்வளவு நிலம்?"

"அரசாங்க நில உச்சவரம்பு சட்டத்தை ஏமாத்தி ரொம்ப நெலத்த தன் கையில அமுக்கி வெச்சுகிட்டு இருக்கான். சில நெலங்க சாமி பேரில், கொஞ்ச நெலம் தொழிற்சாலை கட்டப் போறேன் என்ற சாக்கிலே- இன்னும் கொஞ்சம் நிலத்த பழத் தோட்டம், மீன் வளர்க்கும் குட்டை என்ற கணக்கில காட்டியிருக்கான். ஆனா எல்லாத்திலும் விவசாயம்தான். நெல்லு, சணல் அது இதுன்னு பரந்த விவசாயம்."

"அவன் முயற்சி செஞ்சா ஹெல்த் சென்டருக்கு இன்ஜக்ஷன் வரும் இல்லையா?"

"அவன் எதுக்காக முயற்சிக்கணும்? ஒரு நாளும் ஒண்ணும் செஞ்சதில்லயே அவன். அப்படியிருந்தும் அவன் பஞ்சாயத்து பிரஸிடென்ட் ஆயிட்டான். நாங்களெல்லாம் அவனுக்கு நிரந்தர கொத்தடிமைகளாயிட்டோம்."

விருந்து முடிந்தவுடன் ஸ்ரீபத் சொன்னான்: "வாங்க, உங்கள வீட்டு வரைக்கும் கொண்டு விட்டு வர்றேன்- ராவு ரொம்ப ஆயிடிச்சு. மத்தவங்களும் புறப்புட்டு விட்டாங்க. கொஞ்சம் இருங்க. தடியை எடுத்துகிறேன்- தடியின் 'டக் டக்'தான் நமக்குப் பாதுகாப்பு. டார்ச்லைட் வாங்கணும்னு நெனச்சுகிட்டே இருக்கேன். அதுக்குப் பணம் சேரலே."

"வேண்டாம் , நான் தனியாகவே போய்க்கிறேன்- ஆனால் உங்களுடன் ஒரு நாள் உட்காரணும், உங்க உதவியில்லாட்டா என் வேலை முடியாது."

"அப்போ சரி. ஒரு நாள் ஒங்க கூட உட்கார்றேன். இந்த இன்ஜக்ஷன்னாலே மனுஷன் பொழச்சுக்குவான் இல்லையா?"

"சரியான சமயத்துல கொடுக்கணும். விஷம் உடம்புல ரொம்ப பரவி விட்டிருந்தா ஒரு லாபமும் இல்லை."

"இந்த இன்ஜக்ஷனை மருந்துக் கம்பெனிங்க ஏன் தயார் செய்யறதில்லே?"

"எந்த வியாதியால் ஆண்டில் இருபதாயிரம் ஜனங்கள் மட்டும் சாகிறார்களோ அதற்கு மருந்து தயார் செய்வதில் லாபம் கிடைக்காது. அதனால்தான் வருஷத்தில் நாலு லட்சம் பேர்களை பாம்பு கடிக்கிறது. இதில் கிட்டத்தட்ட இருபதாயிரம் பேர்தான் சாகிறாங்க. இதிலேயும் விஷமில்லாத பாம்பினால் கடிக்கப்பட்டு, பயத்தினாலேயே செத்துப்போகிறார்கள். மேலும் சிலர் மோசக்கார ஓஜாக்கள் கையில் மாட்டிக் கொள்கிறார்கள், இப்படி நான் சொல்வதை நீங்க தப்பா எடுத்துக்கக்கூடாது."

"இல்லே, தப்பா எடுத்துக்க மாட்டேன். என் திறமையின் எல்லை எனக்கு நல்லாத் தெரியும். பாக்கிப் பேச்சு நாளைக்கு. இப்போ நீங்க போங்க."

மறுநாள் பஸந்த் ஸ்ரீபத்தின் வீட்டுக்குப் போனான். அவன் தன் வேலையைப் பற்றி அவனுக்குச் சொன்னான். ஸ்ரீபத் மிக இயற்கையான தர்க்கபூர்வமான தன் பேச்சினால் பஸந்தை திடுக்கிட வைத்தான். அவன் சொன்னான்: "நீங்க சரியான எடத்துக்குத்தான் வந்திருக்கீங்க. உபவாசமிருக்கும் ஏழைங்க ஒடம்புல, நாங்க சியாட்சாந்தா என்று கூப்பிடும் கட்டுவிரியன் விஷம் என்ன செய்யும்னு நானே என் வாயால சொல்ல முடியும். இங்கு எல்லாருமே உபவாசமிருக்கும் ஏழைங்கதான்."

"என் கண்ணாலேயே பார்த்தா நல்லதுன்னு தோணுது."

"கட்டாயமா, ஹெதோ நஸ்கரின் சூளைதான் இருக்கே? ஒங்க அக்கா புருசன் என்ன சொன்னாரு? அதிர்ச்சியாயிருக்கா? இங்கே எந்த விஷயமும் ரகசியமில்லே. நீங்க ஆபீசரின் உறவு, அதனால தான் ஹெதோ நஸ்கர் கம்முனு இருக்கான். இல்லேன்னா, நீங்க கீழ்மட்ட சனங்க கூட தொடர்பு வைச்சுருக்கீங்க, அடிக்கடி சந்திக்கிறீங்க அப்படீன்னு தெரிஞ்ச பொறகும் அவன் சும்மா இருப்பானா? பணம் இருக்கு அவன்கிட்ட. அவனோட பெரி யப்பா மகன் பரான் நஸ்கர் ஒரு விவசாயி. அதனால ஹெதோ கண்லே அவன் கீழ்சாதிக்காரன். 1970ஆம் வருஷத்துல இவன் காட்டம் கொஞ்சம் அடங்கியிருந்திச்சு- பயத்தில ஊரை விட்டே ஓடிவிட்டான். அப்போ சொன்னான்: 'நீங்க எல்லாரும் அறுவடை

*செஞ்சு உங்க பங்கை எடுத்துக்குங்கன்னு-"*

*"கட்டு விரியன் கடித்த பிறகு என்ன என்ன லட்சணங்கள் தென்படும்?"*

*"பாபு! அது எமராஜனுங்க! நல்லபாம்பு கடிச்சா அல்லது கோதுமைவிரியன் கடிச்சா மூக்கு துவாரம் மரத்துப் போயிடும். கோதுமை விரியன் கடிச்சா உடலெல்லாம் எரியும். கண்ணாடி விரியன் கடிச்சா அந்த இடம் தீஞ்சு போயிடும். ஆனா கட்டு விரியன் கடிச்சா உடனே வலிக்காது. இதனோட விஷப்பல் கூட கொஞ்சம் சின்னது. பின்னால எலும்பெல்லாம் ஜில்லிட்டுப் போயி நடுங்கும். கடிச்ச எடத்திலெ அப்போதான் வலியெடுக்க ஆரம்பிக்கும், ஒடம்பு பூரா ஜில்லிட்டுப் போயி நடுக்கம் எடுக்கும். தூக்கம் தூக்கமா வரும். கண்கள் மங்கும்."*

*"உங்களுக்கு எல்லாமே தெரிஞ்சிருக்கே?"*

*"இதெல்லாம் புத்தகத்திலே எழுதியிருக்கா?"*

*'ஆமாம், இதேதான் புத்தகங்களிலயும் எழுதியிருக்கு."*

*"கோவிச்சிக்காதீங்க, உங்க படிப்பு புத்தகத்திலிருந்து, பொறகு, அதென்ன பேரு- லைப்ரரி-"*

*"லேபரடரி."*

*"ஆமா. அதேதான். இங்கே பாம்பைப் பார்த்துப் பார்த்து கத்துக்கிறோம். இங்கே நரனும் நாகமுமா கூடவே வாழறோமா. அதனாலதான் நான் பாம்பு ஓஜா."*

*"நீங்க செய்யற வைத்தியமெல்லாம் அப்பன் பாட்டன் காலத்துலேருந்து வந்தவை, இதோடு உங்களுக்கு இன்ஜக்ஷன் மேல நம்பிக்கை இருக்கு. சாதாரணமா பாம்பாட்டிகளும் ஓஜாக்களும் இன்ஜக்ஷன் மேல நம்பிக்கை வைக்கறதில்லையே?"*

*"இதோ பாருங்க. நான் உங்களுக்குத் தெளிவாவே சொல்லி டறேன். நான் மத்தவங்களைப் பத்திப் பேசலே. நான் அவங்க மாதிரி ஓஜா இல்லே. கொஞ்சம் பொறுங்க. உங்களுக்கு ஒரு விஷயத்தைக் காட்டணும்- ஓ ராதிகா! ஸர்டிஃபிகேட் எடுத்து கிட்டு வா, கண்ணு-"*

*ஸ்ரீபத்தின் மருமகள் ஒரு கிழிந்து மக்கிப்போன காகிதம் ஒன்றைக் கொண்டு வந்தாள். அதில் எழுதியிருந்தது - 'தாம்லி பிரைமரி ஸ்கூலில் ஸ்ரீபத் மால் ஸ்காலர்ஷிப் பரிட்சையில் மாவட்டத்திலேயே இரண்டாவது இடத்தைப் பெற்றிருந்தான்' என்று.*

*பஸந்த் அந்தக் காகிதத்தைப் படித்து முடித்தவுடன் ஸ்ரீபத் அதை திரும்பி வாங்கிக் கொண்டு நிராசை படர்ந்த முகத்துடன்*

ராதிகாவிடம் கொடுத்துவிட்டு ஒரு பீடியைப் பற்றவைத்தான். அவனுடைய கண்களில் அளவில்லாத வேதனை. ஒரு கணம் மௌனத்திற்குப் பிறகு சொன்னான்: "அப்புறம் ஸ்கூலில் சேருவது பற்றி பேச்சு வந்தது. மாதம் இரண்டு ரூபாய் செலவு செய்ய முடிந்திருந்தால் இர்ஃபான்பூர் ஸ்கூலில் சேர்ந்திருப்பேன். ஹெதோவின் அப்பாவிடம் எங்க அப்பா எவ்வளவு கெஞ்சினாரு தெரியுமா?"

"கொடுக்கலையா?"

"மாட்டேன்னுட்டான். அவன் சொன்னான்: 'இன்று ஓஜா மாலின் பிள்ளை படிப்பான், நாளைக்கு செம்படவன் பிள்ளை படிப்பான், அதற்கு மறுநாள் நீங்கள்ளாம் என் தலை மேல காலை வைப்பீங்க. இது நடக்காது'ன்னு. அதனாலேதான் என் படிப்பு முடியல."

'அப்போதிருந்து இந்த வேலை செஞ்சிகிட்டிருக்கீங்களா?"

"இந்தத் தொழில்ல துட்டு ஏதுங்க? வெதைக்கிற நாள்ள ஹெதோ நிலத்துல வேலை செய்யறேன். வயிறு ரொம்பலேன்னா ப்ளாக்குக்கு போறேன். சரி, சரி, இதெல்லாம் விடுங்க, இப்போ எங்கிட்ட கொஞ்சம் வித்தை இருக்கு, அப்பாவோட கல்கத்தா போய் வந்து கொண்டிருந்தேன். ஆஸ்பத்திரியெல்லாம் பாத் திருக்கேன். ஆஸ்பத்திரி நல்லாவே இருந்திச்சு, டாக்டர் பாபு எல்லாரும் நல்லவங்க. முதலில் டைஃபாய்ட், காலரா அது இதுன்னு ஜனங்க செத்துட்டு இருந்தாங்க. அப்போவெல்லாம் டைமண்ட் ஹார்பர்ல ஆஸ்பத்திரிக்கு இட்டுட்டுப் போனா மனுசன் பொழச்சுக்குவான். அங்கே இல்லாட்டி இர்ஃபான்பூருக்கு அழைச்சிகிட்டுப் போனா, பிள்ளைத்தாச்சி பொம்பிளைங்க சாகறதில்லே."

"இதனாலதான் உங்களுக்கு நம்பிக்கை வந்ததா?"

"இல்லே. இன்னொரு விஷயமுமிருக்கு. நான் நெஜமான மால் ஜாதின்னா அவங்க என் வழியிலேதான் வருவாங்க."

"அப்படீன்னா?"

'ரொம்பப்பேரு பயத்திலேயே செத்துப்போறாங்க. முதல்ல கடிச்ச இடத்தை பரிசோதிக்கிறேன். பிறகு கடிச்சது விஷப் பாம்பு இல்லைன்னு தோணிச்சுன்னா, நோயாளிக்கு ஆசுவாசம் கொடுக்கிறேன். ஆட்டம் பாட்டம் எல்லாம் செய்யறேன். மந்திரம் சொல்றேன். கடிச்ச இடத்தத் தொடைக்கிறேன். மருந்து கொடுக் கிறேன். நோயாளி பிழைச்சுட்டா என் புகழ் பரவுது. மனுசன் பயத்தில சாகறான், பாபு. சாரைப்பாம்பு, மண்பாம்பு, பச்சைப்

பாம்பு, தண்ணிப்பாம்பு எல்லாம் விஷப்பாம்புங்களே இல்லே. இது எல்லோருக்குமே தெரியும். ஆனால் கடிச்சவுடனேயே அவங்களுக்குத் தோணுது—கடிச்சது கோதுமை விரியன் இல்லாட்டி கட்டுவிரியனா இருக்குமோன்னு—”

“விஷப்பாம்பு கடிச்சா என்ன ஆகும்?”

“எல்லா வாட்டியும் பாம்புங்க ஆழமா கடிக்காது, முதல்ல கடியைப் பார்க்கணும், அப்போதான் தெரியும் எந்தப்பாம்பு கடிச்சிருக்குன்னு. எப்போ அது நல்லா கடிச்சிருக்கலையோ அப்போ உடனே கட்டு கட்டுவேன், முயற்சி பண்ணுவேன். மருந்து கொடுப்பேன். மந்திரம் படிப்பேன், தொடைச்சு சுத்தம் பண்ணுவேன்.”

“மருந்தினால் பலன் இருக்கா?”

“இருக்கு. பாம்பு உடம்பு பூரா விஷம் பரவலேன்னா, பலன் இருக்கு. சகோதரா, கட்கல், டாபா, வெள்ளை எலுமிச்சம்பழம், நீல நிற அபராஜிதா, சக்கரையும் கன்டலி சௌலாயி இரண்டையும் போட்டு கொதிக்க வெச்சு காய்ச்சி மருந்து எடுத்து கொடுக்கிறேன். முதலில் கட்டுப் போட்டு கீறிவிட்டு, வாயில் துணியோ, பஞ்சோ வெச்சு கடித்த இடத்திலேந்து உறிஞ்சுவேன், இன்னும் என்னென்னவோ மருந்துங்க இருக்கு.”

“இதனாலெல்லாம் ஜனங்க பொழைச்சுடறாங்களா?”

“என்ன சொல்றீங்க பாபு! இதனாலேதான் இந்த ஊரு ஜனங்க இன்னைக்கு உயிரோடு இருக்காங்க. நீங்கள்லாம் சொல்லுவீங்க, இதெல்லாம் புரட்டுன்னு. ஆனா பாருங்க, கல்கத்தாலேருந்து ரொம்ப தூரமில்ல இந்த ஊரு. ஆனா இன்ஜக்ஷன் கிடையாது, டாக்டர் கிடையாது, அதனாலதான் நாங்க இதிலெல்லாம் நம்பிக்கை வெச்சிருக்கோம்.”

“எங்காவது இசகு பிசகான இடத்தில கடிச்சிருந்தா?”

“பாபு! ஜனங்க இருட்டில நடமாடறாங்க, அதனால பாம்புங்க கால்லதான் அதிகமாக கடிக்குது. வீட்டிலேயும் பாம்பு கடிக்கும். தூங்கும் போது, கை கீழே விழுந்து விடலாம், அப்போ கையில கடிக்குது. அப்போவெல்லாம் கட்டு கிட்டு எல்லாம் உபயோகப் படும். ஆனால் இடுப்பில, கழுத்தில, தலையில மிகக் குறைவாகவே கடிக்கும். அப்படிக் கடிச்சா சாவு நிச்சயம். எல்லா இடத்திலும் கட்டுப்போட முடியுமா என்ன?”

“பாம்பு ஆழமாக கடித்து விட்டிருந்தா?”

“கட்டுப்போடுவேன், கீறிவிடுவேன். உறிஞ்சுவேன், இர்ஃபான் பூருக்கு எடுத்துப் போகச் சொல்லுவேன். அங்கே போனா மட்டும்

என்ன லாபம் ? இந்த ஏழு வருஷத்தில இரண்டு தடவைதான் இன்ஜக்ஷன் கொடுக்க முடிஞ்சுது. நோயாளிங்க பொழச்சாங்க. நல்லாவே கடிச்சிருந்தா காப்பாத்தறது மால் கைக்கு அப்பால போயிரும். இந்த மாதிரி நோயாளிங்கள கட்டுப்போட்டு, மந்திரம் படிச்சு, ஆர்ப்பாட்டம் செய்யும் மால்கள் போலிங்க, மோசக் காரங்க. ஆனா உங்களுக்குத் தெரியும் பாபு, இந்த மாதிரி வேளைல இன்ஜக்ஷன் கூட வேலை செய்யாதுன்னு கல்கத்தா டாக்டர் சொன்னார். இதனாலதான் என் அப்பா பொழக்கலேன்னு-"

"அவரையும் பாம்பு கடிச்சுதா?"

"ஆமாம், கட்டுவிரியன்."

இந்த விஷயம் பஸந்துக்கும் தெரியும். 12 மில்லிகிராமுக்கு மேல் கோதுமைவிரியனின் விஷம், 15 மில்லி கிராமுக்கு மேல் கண்ணாடி விரியனின் விஷம், ஆறு மில்லிகிராமுக்கு மேல் கட்டுவிரியனின் விஷம் சரீரத்தில் புகுந்து விட்டால் ஸ்னேக் வெனம் ஆன்டிஸீரம் பயனற்றது. கண்ணாடிவிரியன் கடித்தால் சிகப்பு ரத்த அணுக்கள் சிதைந்து போய்விடுகின்றன. மூக்கு, வாய், மூத்திர துவாரம், ப்ருஷ்ட துவாரம் எல்லாம் ரத்தக்களரியாகி விடுகின்றன. உடனடியாக சாவு நிகழ்ந்தால் நல்லதுதான். இல்லாவிட்டால், தசை அழுகி கீழே விழ ஆரம்பித்து விடுகிறது. தாங்க முடியாத வேதனைக்குப் பின் சாவு. கோதுமை விரியன், கட்டுவிரியன் விஷம் நியுரோடாக்ஸின். நரம்புகள் தசைகள் தளர்ந்து விடுகின்றன, வாயிலிருந்து எச்சில் ஒழுகும், ஒரேடியாக தூக்கம் வரும், மூச்சு கொஞ்சம் கொஞ்சமாக குறைந்துகொண்டு வரும். கடைசியில் சாவு.

ஸ்ரீபத் சொன்னான்: "என்னுடைய திறமையின் வீச்சின் பரிமாணம் எனக்குத் தெரியும். ஆனா இன்ஜக்ஷன் போட்ட பிறகும் ஏன் மனிதன் செத்துப் போறான்?"

"பலவீனமான சரீரத்திலும் சமமான விளைவு இருக்குமா?"

"அதெப்படி இருக்கும்? பட்டினி கிடக்கும் ஏழையின் மனதில் தெம்பு கிடையாது. அதனால் சாதாரணமான விஷம் கூட அவன் உடலில் போனால் செத்துவிடுகிறான்."

பஸந்த் மிகவும் கவலையுற்றவனாக வீடு திரும்பினான். சாதாரணமான விஷம் உடலில் நுழைந்தால் கூட மனிதன் செத்துப் போகிறான். ஏனென்றால் அவன் சரீரம் பலவீனமாகவும் எதிர்ப்பு சக்தி இல்லாமலும் இருக்கிறது. திடீரென்று அவனுக்குத் தோன்றியது - எல்லாவற்றையும் அகடமிக் நோக்கில் பார்ப்பது சரியல்ல என்று. பலவீனமான சரீரத்தில் கட்டுவிரியன் விஷத்தின்

விளைவு என்ன என்பது பற்றி அவனால் பார்க்க முடிகிறது, எழுதமுடிகிறது. ஆனால் மகாநகரமான கல்கத்தாவுக்கு இவ்வளவு நெருங்கியுள்ள ஒரு கிராமத்தில் இவ்வளவு இருள் ஏன்?

விரும்பிய லாபம் கிடைப்பதில்லை, அதனால் நஸ்கர் செங்கற்களை விற்கமாட்டான். இதன் விளைவாக கட்டுவிரியன் களின் வம்சவிருத்தியும், மனிதர்களின் டெத் ரேட்டின் விருத்தியும் கூடவே நடந்து கொண்டிருக்கிறது. உண்ண உணவில்லாது, சக்தியில்லாதவர்களாக மனிதர்கள் ஏன் இருக்கின்றனர்? இந்த க்ரானிக் பட்டினியில் நஸ்கரின் பங்கு என்ன? ஏன் ஹெல்த் சென்டரில் ஆன்டிஸீரம் இருப்பதில்லை?

ஹெல்த் சென்டரின் டாக்டர் தலையை அசைக்கிறார். அவனிடம் இந்த 'ஏன், ஏன்'களுக்கு பதில் இல்லை. கல்கத்தாவில் உடல்நல இலாகா என்பதன் பொருள்—மந்திரி, அதிகார வர்க்கம், ஃபைல், அவ்வளவுதான். மனிதனின் மாபெரும் பிரச்சினைகள் எல்லாம் அங்கு வெறும் ஃபைலில் உள்ள வாக்கியங்களில் அடங்கி விடுகின்றன.

டாக்டர் சொன்னார்: "நீங்க என்னோட ஆஸ்பத்திரியை பார்த்தாலே புரிஞ்சிக்குவீங்க., ஒவ்வொரு பெட்டுக்கும் ஆறு பேஷண்ட் இருக்காங்க. ஆன்டிஸீரம் பற்றி பேசுறீங்களே? நான் ஆன்டிஸீரம் கேட்டிருந்தேன். அங்கிருந்து வருகிறது இன்ட்ரொ கியுனால். இருந்தாலும் இங்கே ஜனங்க நலமாயிடுறாங்க, வீட்டுக்கு திரும்பிப் போயிடுறாங்க, ஏன் தெரியுமா? எமராஜுக்கு அவர்களைப் பிடிக்கவில்லை. அப்படித்தான் எனக்குத் தோணுது. இதனால எல்லாக் கேஸ்களையும் கல்கத்தா அல்லது டைமண்ட் ஹார்பருக்கு அனுப்பிடறேன். வேறு என்ன செய்ய முடியும்?"

"ஆன்டிஸீரம் கேட்டு அனுப்புங்களேன்."

"கேட்டுக்கொண்டுதான் இருக்கேன் ஸார்."

"வர்றதில்லையா?"

"வர்றதில்லை. உங்களிடம் இருக்குன்னு கேள்விப்பட்டேனே?"

'எங்கிட்ட கொஞ்சம்தான் இருக்கு."

"கொஞ்சம் இரவல் கொடுப்பீங்களா?"

"பார்க்கிறேன். ஆனால் உங்கள் தேவை ரொம்ப அதிகம்."

"உங்களுக்குத் தெரியுமா - நான் மனமுடைந்து போயிருக்கேன். எனக்குத் தெரியும் இன்ஜக்ஷன் கொடுத்தால் சரியாகி, உயிருடன் திரும்புவான் நோயாளின்னு. ஆனா ஸ்ரீபத் கேஸ் கொண்டு வரும்போது எனக்கு என்ன தோணுது தெரியுமா?"

"என்ன?"

"ஸ்ரீபத்தாலே இன்ட்ராவீனஸ் கொடுக்க முடியாது. சரிதான். ஆனா, ட்ரைனிங் கொடுத்தா அவன மாதிரி புத்திசாலியால ரொம்ப சுலபமா இன்ட்ராமஸ்குலர் அல்லது ஸப்குடேனஸ் இன்ஜக்ஷன் கொடுக்க முடியும். அவன் ரொம்ப கெட்டிக்கார ஆளு. லிகேசர், ஸக்ஷன் எல்லாம் செய்து நோயாளியை அழைச்சுட்டு வருகிறான். நான் டாக்டர், அவன் க்வாக். ஆனா அவன் உயிரைக் காப்பாத்திடறான்."

"அவன் ஸக்ஷன் செய்வது சரியா இருக்குமா?"

"அவன் பல்லு ஈறு எல்லாம் நல்லா இருக்கு. நீங்க ஸீரம் கொடுப்பீங்க இல்லையா?"

"பார்க்கிறேன்..."

"உங்க அக்கா புருஷனுக்கு கொஞ்சம் சொல்லுங்களேன்?"

பஸந்த் சிரித்துவிட்டான். இந்த விஷயம் எல்லாருக்கும் தெரியும் போலிருக்கிறது. இத்தனைக்கும் ஹிமாத்ரி அத்திம்பேர் இங்கு வந்ததில்லை. இதுவரை தானும் ஒன்றும் சொன்னதில்லை. இருந்தாலும் எல்லாருக்கும் தெரிந்துவிட்டிருக்கிறது. சின்ன இடம் இல்லையா?

"சரி, நான் சொல்றேன்."

அக்கா புருஷனுக்கு பஸந்தின் மேல் கடுப்பு. அவர் சொன்னார்: "நான் எழுதிக்கொண்டுதான் இருக்கேன். கல்கத்தாவில் ஒரு இடத்துக்குப் போனா இந்த மருந்து கிடைக்கும். ஆனா ரொம்ப ரொம்ப கொஞ்சமாத்தான் கிடைக்கும். ஒண்ணு ஞாபகம் வெச்சுக்க, பஸந்த்- என் பேர் வெளியில் வரக்கூடாது, ஹெல்த் டைரக்டரேட் ஒண்ணும் செய்யறதில்லே. கல்கத்தா ஆஸ்பத்திரிகள் எல்லாம் நம்ம நாட்டுக்கு வெட்கக்கேடான விஷயமாக இருந்தன. மொபசில் ஹெல்த் விஷ்யம் இன்னும் மோசம். ஹெல்த் சென்டராம், மருந்தாம்-! மருந்து எப்படிக் கொடுக்கும் ஹெல்த் சென்டர்!? எவ்வளவு ஜில்லா ஹெட்குவார்டர்ஸ் ஆஸ்பத்திரிகளில் ஆப்ரேஷன் தியேட்டர் ஏர்கண்டிஷண்டா இருக்கு? எக்ஸ்ரே மெஷின் வேலை செய்யுதமா? நோயாளிகளின் படுக்கை சுத்தமாக இருக்குதா? வார்டுல நாய் சுத்துது- இந்த தடவை நான் எழுதி விடுகிறேன். ஆனா நீ இந்த விஷயத்தில தலையை விடாதே. இங்கே வேலை செய்ய வந்திருக்கேன். வேலை செய்து கொண்டே நிம்மதியா இருக்க விரும்பறேன். புலிக் கூண்டில் ஓநாய் நுழைந்து விட்டது- உன்னுடைய இரண்டு நாள் உற்சாகத்துல ஆகப்போறது ஒண்ணுமில்லை..."

பஸந்த் கல்கத்தா சென்று ஆன்டி-ஸீரம் வாங்கிக் கொண்டு

வந்தான். யாரிடமெல்லாம் போனானோ, 'ஓ ஆன்டி-ஸீரமா?' என்று கொட்டாவி விட்டுக்கொண்டு கொடுத்து விட்டார்கள், பிறகு ஒரு எச்சரிக்கையும் விடுத்தார்கள்: "இதுக்கெல்லாம் ஒரு ஸைட் ரியாக்ஷனும் உண்டு தெரியுமா?"

"எனக்குத் தெரியும்"

"என்ன தெரியும்?"

"இது எங்க இன்ஸ்டிடியுஷன்லதான் தயார் ஆகிறது. அது சரி. இதெல்லாம் இங்கேயே கொட்டிக் கிடக்கிறதா?"

"ஆமாம், நானும் பார்த்துக் கொண்டுதானே இருக்கேன்? செவுத்துல அலங்காரம் பண்ணிட்டிருக்கு, அவ்வளவுதான்."

பஸந்துக்கு மறுபடியும் தோன்றிற்று, இவை எல்லாம் பஜாரில் கிடைத்தால் எவ்வளவு சௌகரியமாக இருக்கும்? அதற்குப் பிறகு அவன் மனதில் இதற்கு எதிர்மறை வாதமும் எழுந்தது. அவன் நிராசையடைந்தான். பாம்புக் கடிக்கு மருந்து தயாரிப்பதில் எந்த மருந்துக் கம்பெனியும் ஆர்வம் காட்டப் போவதில்லை. ஏனென்றால் பாம்புக் கடிக்கு உள்ளாகும் எண்ணிக்கை நான்கு லட்சம் பேராக இருந்தாலும் சாவது இருபதாயிரம் பேர்தான். சாவுகள் தொடர்ந்து நிகழ்ந்து கொண்டிருக்கின்றன! பாரதத்தில் பாம்புக்கும் மனிதனுக்கும் ஏதேனும் ஒரு உடன்பாடு இருக்கிறதோ என்னவோ?

போகட்டும், மருந்துக் கம்பெனிகள்தான் பாம்புக்கடிக்கு மருந்து தயார் செய்ய மாட்டார்கள். அரசாங்கம் இந்த மருந்தை தயார் செய்கிறதே? கோதுமைவிரியன், கட்டுவிரியன், கண்ணாடி விரியன், நல்லபாம்பு போன்ற பாம்புகளின் விஷத்தை ஏற்றி குதிரைகளை ஹைபர்-இம்யூனைஸ் செய்து அவற்றின் ப்ளாஸ்மா விலிருந்து அரசாங்கம் இதைத் தயார் செய்கிறது. இந்த ப்ளாஸ் மாவை ரசாயன முறையில் உலர வைத்தால் ஆன்டி-ஸீரம் வெகு நாட்களுக்கு கெடாமல் வைத்துக் கொள்ளமுடியும்.

சர்க்கார் இதைத் தயார் செய்கிற போது அதை ஏன் வினியோகிப்பதில்லை? அதை கல்கத்தா குடோன்களில் நிரப்பி வைப்பதில் யாருக்கு லாபம்? பாம்புக்கடிக்கு அறிவியல் முறையில் சிகிச்சை கல்கத்தாவில் எதற்கு? கல்கத்தாவிலிருந்து கூப்பிடு தூரத்தில் உள்ள இர்ஃபான்பூர் ஹெல்த் சென்டருக்கல்லவா இது தேவை? பேஹுலா ப்ளாக் ஏன் கட்டுவிரியன் தயவில் உயிருடன் இருக்க வேண்டும்?

ஹெதோ நஸ்கர் ஏன் செங்கற்களை விற்கவில்லை? ஹெதோ நஸ்கரை தண்டிக்க ஆட்சியின் கையில் ஏன் எந்த உபாயமும்

இல்லை? ஹெல்த் சென்டர் டாக்டரின் ஒரு வார்த்தை நினைவுக்கு வந்தது-

அவன் ஸ்டேரைல்-பைரோஜன் இல்லாத பிஸியலாஜிகல் ஸால்ட் ஸொல்யூஷன் வாங்கியபோது இரண்டு ஸிரிஞ்சுகளும் வாங்கிக் கொண்டான். கூடவே ஒரு டார்ச்லைட். உசிதமான சைஸில் செயற்கைத் தோலால் செய்த பம்ப் ஷூ ஜோடி ஒன்றையும் நடைபாதைக் கடையில் வாங்கிக் கொண்டான். வேண்டுமென்றே மாலை ரயிலில் திரும்பி வந்தான். ஹெல்த் சென்டர் டாக்டர் வீட்டுக்குச் சென்று அவனிடம் ஆன்டிஸீரம், ஸொல்யூஷன் இரண்டையும் கொடுத்துவிட்டுச் சொன்னான்: "எந்தக் காரணம் கொண்டும் இது சம்பந்தமாக உங்கள் வாயிலிருந்து என் பேர் வந்தால், நாம் இருவருமே மாட்டிக்கொள்வோம், ஜாக்கிரதை!"

டாக்டர் நெகிழ்ச்சியடைந்தார். "இந்த உதவியை நான் மறக்கவே மாட்டேன், தம்பி. பாம்புக் கடியினால் நோயாளி இன்ஜக்ஷன் இல்லாமல், வாயிலேந்து நுரை நுரையா வந்து செத்துப் போறாங்க இங்கே. ஒரு டாக்டருக்கு இப்படி ஒரு காட்சியைப் பார்ப்பது எவ்வளவு வேதனையான அனுபவம் தெரியுமா?"

பஸந்துக்கு நினைவு வந்தது; ஹெல்த் சென்டரின் சிதிலமடைந்த சுவர்களில் சாய்பாபா, சாரதாமணி-ராமகிருஷ்ணர் படங்கள் கொண்ட காலண்டர்கள் தொங்கிக் கொண்டிருக்கும், அறிவியல் ஏற்றுக்கொள்ளும் சிகிச்சை, ஆட்சியின் கருணையற்ற உதாசீனத்தினால் பலனற்றதாகப் போகும் போது. பாவம் டாக்டரால் என்ன செய்ய முடியும்? முல்காவ்கர் வரைந்த மஹாபுருஷர்கள், ஸாத்விகளின் படங்களின் மூலம் தன்னை தேற்றிக் கொள்ளத்தான் முடியும். ஆனால் பாம்பு கடித்தால், சாய்பாபாவின் விபூதி, தேன் எதுவும் உதவுவதில்லை.

"ட்ரெயினிங் கட்டாயம் எடுத்துக்கொண்டிருப்பீங்க இல்லையா?"

"எந்த ட்ரெயினிங்?"

"ஆன்டிஸீரம் கொடுப்பதற்கு"

"ஓ எடுத்தாச்சு-"

"ஆன்டி-ரியாக்ஷனுக்கு தேவையான மருந்துகளை சேகரித்து வைத்துக் கொள்ளுங்கள்."

" சரி செய்கிறேன்."

"அப்போ நான் கிளம்பறேன்."

"பாக்கியை நீங்களே எடுத்துக்கொண்டு போகப்போறீங்களா?"

"ஆமாம், கொஞ்சம் என்னிடமும் வைத்துக்கொள்கிறேன்."

"சாவுகள் ரொம்ப அதிகம்."

"ஆமா, தெரியும்."

"வெளியில் ரொம்ப இருட்டா இருக்கே?"

"டார்ச் இருக்கு."

இருட்டில் டார்ச்சை போட்டுக் கொண்டு பேஹுலா நோக்கி நடந்த பஸந்தின் மனதில் ஆனந்தம் பொங்கி வழிந்தது. இந்த ஆனந்தத்திற்கு வேறு ஒரு காரணம் இருந்தது. இந்தக் காரியம் செய்வதற்கும் அந்த ஆனந்தத்துக்கும் சம்பந்தமில்லை.

மறு நாள் அவன் ஸ்ரீபத்தின் வீட்டுக்குச் சென்றான். அவனுக்கு ஷூவையும் டார்ச்சையும் தந்த பின் சொன்னான்; "இனாமாகக் கொடுக்கலே. இதுக்கு மாறாக வேலை வாங்கிக்கப் போறேன்."

"என்னால உங்களுக்கு ஆகவேண்டிய காரியம் என்ன இருக்கும்?" ஸ்ரீபத் ஷூவைத் திருப்பித் திருப்பிப் பார்த்தான். கண்களில் ஊமையான நன்றி நிறைந்து வழிந்தது. பஸந்தை திரும்பித் திரும்பிப் பார்த்துகொண்டே இருந்தான்.

"சரி! நல்லா நினைவுபடுத்திக்கொண்டு சொல்லுங்க! உங்க அனுபவத்தில, கட்டுவிரியன் கடித்த ஒரு ஆளு இருக்கான்னு வெச்சுக்குங்க. அவன் உடல்ல அதிகமா விஷம் பரவாம, உங்க எல்லா முயற்சிகளுக்குப் பிறகும் சில நாட்கள் உயிருடன் இருந்துவிட்டு செத்துப் போவது போன்ற அனுபவம் உண்டா?"

"ஓ- பூனீ தாஸி அப்படித்தான் செத்தாள்."

"யாரவள்?"

"சுடுகாட்டு டோமின் மனைவி."

"அந்த கேஸ் பற்றி கொஞ்சம் சொல்லுங்க."

"எழுதிக்கப் போறீங்களா?"

"ஆமாம்."

"டீக்கு சொல்லிவிட்டு வருகிறேன்."

"வேண்டாம்! முதல்லே கேஸ் பற்றி சொல்லுங்க."

ஸ்ரீபத் அங்கிருந்தே குரல் கொடுத்தான், "ராதிகா, கொஞ்சம் டீ போட்டுக் கொண்டு வா."

"இப்போ சொல்லுங்க."

"பூனீ தாஸி தூங்கிக் கொண்டிருந்தாள். தரையில கட்டிலைப் போட்டு படுத்திருந்தா. உங்களுக்குத்தான் எல்லா விஷயமும் தெரியுமே. கட்டுவிரியன் கை விரலைக் கடிச்சிருந்தது, என்னைக்

கூப்பிட்டாங்க. நான் போனேன். தொடச்சு சுத்தம் பண்ணி கட்டுப் போட்டேன். கீறிவிட்டேன். ரத்தத்தை உறிஞ்சுனேன். ராத்திரி பூராவும் உட்கார்ந்திருந்தேன். பொழுது விடிஞ்சப்போ அபாயம் நீங்கி விட்டிருந்தது. பூனிக்கு மூச்சு வந்தது, அப்படியும் நான் கட்டை அவுக்கலே. சாயந்திரம் வரைக்கும் சரியாகவே பேசிக் கிட்டிருந்தா. கண்ணும் நல்லாவே தெரிஞ்சிச்சு. ரத்தம் விழுந்த எடத்திலெ காத்துபட்டு உலர்ந்து போச்சுங்கிறதையும் கவனிச்சேன். கை காலில் எல்லாம் உயிர் வந்திருந்தது. நான் ஊசி குத்தினப்போ அவ வலியில என்னைத் திட்டினா. இதற்குப் பிறகு நான் போயிட்டேன்."

ராதிகா கொண்டு வந்த டீயை இருவரும் குடித்தார்கள். பால் இல்லாத, வெல்லம் போட்ட டீயை மிக திருப்தியுடன் குடித்துவிட்டு மேலும் சொல்லத் தொடங்கினான்: "மறு நாள் ஸாகர் என்னை மறுபடியும் கூப்பிட்டான். போய்ப் பார்த்தேன்- கட்டை அவிழ்த்தேன்- பாம்பு கடித்த அன்னிக்கி அவ கால்ல மூங்கில் முள்ளு குத்தி நுனி உள்ளயே தங்கிவிட்டிருந்துருக்கு, கால் வீங்கியிருந்துச்சு! மார்ல லேசா வலி. திடீர் திடீர்னு மயக்கமானா. மூச்சு வந்தபோது சொன்னா: 'மூச்சு விட முடியலே மார்ல வலிக்குது'ன்னு அவளை எடுத்துக்கொண்டு இர்ஃபான் பூருக்குப் போனேன். ஆனா பொழைக்கலே-"

"டாக்டர் என்ன சொன்னார்."?

"அவரு சொன்னார்: ஸ்ரீபத், நீ என்னவோ பாம்புக் கடிக்கு சரியான சிகிச்சைதான் செஞ்சே. ஆனா இவ ஒடம்புல ஒண்ணுமே இல்லையே, அதனால மூங்கில் புண்ணிலே விஷம் புகுந்து அவளை கொன்னுடுச்சுன்னு-"

ஒரு கணம் மவுனமாக இருந்து விட்டு, ஸ்ரீபத் பயனற்ற கோபத்துடன் மறுபடியும் துப்பிவிட்டுச் சொன்னான்: "அங்கேயும் டாக்டரிடம் இன்ஜக்ஷன் இல்லே. பாவம்! வயசுப் பொண்ணு: மூணு குழந்தைங்க, டெடனஸ் வந்து வாயிலேந்து நுரை நுரையா வந்துகிட்டு இருந்தது. அவ குழந்தைங்களெ வளக்க கொஞ்ச நாளுக்கு முன்னால ஸாகர் இரண்டாம் கல்யாணம் கட்டிக் கிட்டான். ஏழு மாசம் வரை அழுது அழுது காலத்தக் கழிச்சான். பிறகு அவனும் போயிட்டான்-"

"இது ஒரு கேஸ் மட்டும் தானா?"

"நிறையவே இருக்கு, இப்போதான் நீங்க இங்கேயே இருக்கீங்களே- உங்க கண்ணாலேயே பாருங்க- நான் கூட்டிப் போய் காமிக்கிறேன். அது சரி, ஒண்ணு சொல்லுங்க. பாம்பின்

விஷம் இறங்கின பிறகும் விஷத்தின் சக்தி வேலை செய்யுமா?

"ஓ- செய்யலாம்."

"அதைச் சரி செய்ய என்ன உபாயம்?"

"அப்போ டாக்டர்தான் கதி."

"மருந்து இல்லே, இன்ஜக்ஷன் இல்லே, டாக்டர் என்ன செய்வார்?"

"அதனாலதான் நோயாளி சாகிறான்."

"நாலு பக்கத்திலும் எங்களுக்கு சாவோ சாவுதான்-"

"இந்த தடவை இன்ஜக்ஷனுக்கு ஊசி, மருந்து எல்லாம் கொண்டுவந்திருக்கிறேன், உங்களுக்குச் சொல்லிக் கொடுக்கப் போறேன்."

"எனக்கா?"

"ஆமா! உங்களுக்குத்தான்."

"என்னால கத்துக்க முடியுமா?"

"ஏன் முடியாது? மறுபடியும் ஒரு கேஸ் வந்தா-? நான் எப்படி என்ன செய்யறேன்னு பார்த்துக்குங்க."

"பையனுக்குச் சொல்லி கொடுக்கிறேன். அவன் பார்த்தால் போதாதா?"

"அவனும் பாக்கட்டும், நீங்க சாசுவதமா இருக்கப் போறீங்களா, என்ன?"

"என்னால மெய்யாலும் கத்துக்க முடியுமா?"

"கட்டாயம் முடியும். எனக்குத் தெரியும், நான் நரம்புல இன்ஜக்ஷன் கொடுக்கிறேன், நீங்க கால், கை, இல்லே உடம்புல வேறயெங்கேயாவது ஒரு இடத்தில, தோலுக்குக் கீழே, ஊசி போட்டு இன்ஜக்ஷன் கொடுங்க. எவ்வளவு மருந்து, எப்படிக் கலப்பது எல்லாம் நான் சொல்லிக் கொடுக்கிறேன். இருக்கிற ஸீரம் ரொம்ப நாள் வரும்."

"மருந்து கெட்டுப்போயிடாதா?"

"கெட்டுப் போகாது."

'இன்ஜக்ஷன் கொடுத்து என்னால ஜனங்க உயிர காப்பாத்த முடியும்னு சொல்றீங்களா?"

"கட்டாயமா."

ஸ்ரீபத் தன் இரு கைகளையும் தலையில் வைத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டான். பிறகு இரண்டு கண்களையும் துடைத்துக் கொண்டு சொன்னான்: "எங்க பட்டமாருங்க கோவிச்சிட்டா கோவிச்சுக்கட்டும். கடவுளுக்கு எல்லாம் தெரியும். என்னால் ஒண்ணும் செய்ய முடியலே. எனக்குச் சொல்லிக் கொடுத்ததை

வெச்சுகிட்டு நாள ஓட்டிகிட்டு வந்திருக்கேன். ஆனால் உயிரை என்னால காப்பாத்த முடியல. எனக்கு என்ன வேணும்னாலும் ஆகட்டும், ஜனங்க உயிர் பிழைக்குமில்லே?"

"கட்டாயம் பிழைக்கும்."

"அப்போ எனக்குச் சொல்லிக் கொடுங்க."

ஸ்ரீபத்தின் கற்றுக்கொள்ளும் ஆற்றல் பஸந்தை வியப்பில் ஆழ்த்தியது. தனது அறையில் உட்கார்ந்து கொண்டு, முதலில் கை, கால் தசைகளில், பிறகு தோலுக்குக் கீழே டிஸ்டில்ட் வாட்டரை இன்ஜக்ட் செய்து காட்டினான் பஸந்த். அதற்குப் பிறகு ஸ்ரீபத் பஸந்தின் கையில் இன்ஜக்ஷன் செய்து ப்ராக்டிஸ் செய்தான். இதன் பயனாக பஸந்தின் கால்களிலும் கையிலும் வலியெடுக்க ஆரம்பித்தது. ஸ்ரீபத் வெகு வேகமாக கற்றுக் கொண்டிருந்தான்.

அம்மோனியம் க்ளோரைட், வென்னீர் இரண்டின் உபயோகத்தையும் பஸந்த் சொல்லிக் கொடுத்தான். கொதிக்கும் வென்னீரால் எப்படி ஒத்தடம் கொடுப்பது என்றும் சொல்லிக் கொடுத்தான். இரண்டு பேரும் மிக உற்சாகத்திலும் ஆனந்தத்திலும் மிதந்தார்கள். ஸ்ரீபத் சொன்னான்: "நீங்க சொல்லிக் கொடுத்தது மனுசன் உயிரை காப்பாத்தும். மனுசன் பொழைப்பான். ஆனா கடவுளோட கோவம் இருக்கவே இருக்கு-"

"எதுக்கு கோபம்?"

"அதான் சொல்லிட்டு இருக்கேன், அதுங்க நெனச்சிட்டு இருக்கு நான் மந்திரம் சொல்லிக் கொண்டிருக்கேன்னு. படவா பசங்க எல்லாரும் குழந்தை பிறக்கும் போது பொம்பிளைங்கள ஆஸ்பத்திரிக்கு எடுத்துட்டுப் போறாங்க, ஆனா டைஃபாயிட் வந்தா எடுத்துட்டுப் போறதில்லே. பாம்பு கடிச்சா, டாக்டர் இன்ஜக்ஷன் கொடுக்க விரும்புறாரு... ஆனா இவனுங்க எடுத்துக்கிறதில்லே..."

பஸந்த் சிரித்து விட்டான். கல்கத்தாவிற்கு இவ்வளவு அருகில் உள்ள இந்த நாதிகெட்ட, அநாமதேய கிராமம் ஸ்ரீபத்தின் காரண மாக வசீகரமான அறிவைப் பெற இருக்கிறது.

ஸ்ரீபத் சொன்னான்: "கட்டுவிரியன் ஆணுக்கும் பெண் ணுக்கும் கல்யாணம் பவுஷ் (தை) மாதத்தில் நடக்கும். இம்முறை ஆக்ரஹன் (மார்கழி) மாசத்துல அறுவடைக்குப் பின் சந்தா சேகரித்து மண்ணெண்ணை வாங்கி அந்த செங்கல் சூளைக்குத் தீ வைத்து அழிச்சுடப்போறேன். யப்பா! எவ்வளவு பாம்புங்க! இது ஒரு ஸர்ப்பபுரி ஆகிவிட்டது."

இதற்குப் பிறகுதான் ஹெறதோ நஸ்கரின் வேலைக்காரன் சசி சட்டை செய்யாமல் சூளையிலிருந்து செங்கற்களை எடுக்கச் சென்றான். நாலு செங்கற்களை உருவி இருப்பான். அதற்குள் சீற்றமடைந்த கட்டுவிரியன் அவனுடைய தொடையில் கடித்து விட்டது. பஸந்தை ஸ்ரீபத் கூப்பிட்டு அனுப்பினான். "பல்லு ஆழமா பதியலே- சின்ன காயம்தான்."

சசி தான் சாகப் போவதாக முடிவு கட்டிவிட்டான். அதனால் மனப் பாதிப்பால் நிஜமாகவே கட்டுவிரியன் கடியின் ஸிம்ப்டம்ஸ் டெவலப் ஆகிவிட்டது. ஸ்ரீபத் அவனை கோபித்துக் கொண்டு உரத்த குரலில் திட்ட ஆரம்பித்தான்: "சும்மா நாடகமாடாதே, சசி- புரிஞ்சுதா?"

கட்டு கிட்டு எல்லாம் முடிந்திருப்பதை பஸந்த் பார்த்தான் தண்ணீர் கொதித்துக் கொண்டிருந்தது- மருந்து தயாராக இருந்தது. அவன் ஸ்ரீபத்திடம் சொன்னான்: "இன்ஜக்ஷன் நீங்க கொடுங்க, நான் சொல்லிக் கொடுத்தபடி."

ஸ்ரீபத் இன்ஜக்ஷன் கொடுக்கப் போறான்! எல்லாரும் பீதி யடைந்தார்கள் அப்பொழுது ஸ்ரீபத் லூயி பாஸ்டர் ஆன்டி- ரேபிட் இன்ஜக்ஷன் கண்டுபிடித்தபோது கர்ஜித்தது போல் கர்ஜித்தான். முழு தன்னம்பிக்கைடன் அவன் சொன்னான்: "விஷம்பாம்பின் ஆக்ஞையின் பேரில் என்ன செய்யப் போகிறேனோ அதில் உங்களில் யாராவது பேமானிக்கு நம்பிக்கை இல்லாவிட்டால் இங்கேயிருந்து ஓடிப்போயிடுங்க."

ஸ்ரீபத் இன்ஜக்ஷன் கொடுக்க ஆரம்பித்தான், கூடவே பாடினான்—

"தாயே மனஸா! தயை செய்வாய் அம்மா!
விஷத்தை வெளியே எடுத்து விட்டேன்.
சர்ப்பத் தாயே ஏற்றுக்கொள்!
விஷம் ஏறியது ஏழாம் சொர்க்கம்!
சிவனை மனஸா பணிந்ததுமே
நீலகண்டன் விஷமணிந்தான்
ஜெய ஜெய சங்கர சுபங்கரனே!"

அறிவியல், விஷஹரி கடவுள், இரண்டையுமே சமமாக பூஜித்து தன் வேலையை செய்து முடித்தான் ஸ்ரீபத். கடித்த இடத்தின் மேல் வென்னீர் ஒத்தடம் கொடுத்தான், இன்ஜக்ஷன் கொடுத்து ஒரு மணிக்குப்பிறகு கட்டை மாற்றி வேறு இடத்தில் கட்டிவிட்டுப் பாட ஆரம்பித்தான்:

"தொனியெழுந்தது தொனியெழுந்தது

*த்வனி எழுந்தது! த்வனி எழுந்தது!*
*தொனியினால் விஷம் போச்சு!*
*எழுபது நசை யெல்லாத்திலும்*
*தொனி நுழைந்து, விஷம் பறந்தது...”*

சசியின் உயிருக்கு ஆபத்தில்லை என்று பஸந்த் சொன்ன போது ஸ்ரீபத் தனது ஜோல்னாப் பையை கையில் எடுத்துக் கொண்டான். சசியின் தாயிடம் சொன்னான்: “நஸ்கரிடம் இருந்து அரிசி, பருப்பு எல்லாம் கேட்டு வாங்கி மாதாவுக்கு படையல் வையுங்க, உரத்த குரலில் அழுதுகொண்டு சொல்லுங்க— உன்னோட செங்கல் சூளையிலிருந்து கிளம்பிய பாம்புதான் என் பையனை கடிச்சுதுன்னு– நீங்க இதை செய்தே ஆகணும்.”

“நீ சொல்லவே வேண்டாம் அப்பா! துர்கா மாதா ஹெதோ நஸ்கரை இப்படியே விட்டு விடுவாளா என்ன? இந்த சூளையினாலெ நம்ம எல்லோருக்கும் சர்வநாசம்தான் வந்தது. ஒண்ணு சொல்லு, ஸ்ரீபத்! இன்ஜக்ஷன் போடுவதற்கு மாதா ஆக்ஞை தந்தாளா?” சசியின் தாயார் கேட்டாள்.

“கடவுளே! ஆக்ஞை இல்லாம எனக்கு இன்ஜக்ஷன் கொடுக்க துணிவு வந்திருக்குமா என்ன? உங்களுக்கு இத்தனை அவ நம்பிக்கையா! உயிரைக் கொடுத்து உங்க உயிரைக் காப்பத்தறேன், என்னைக்காவது ஒரு வாழைக்காயோ, பாவக்காயோ வாங்கியிருக்கேனா? நீங்கெல்லாம் நன்றிகெட்ட பயலுக... இனிமே கூப்பிடற போது வராம இருக்கறதுதான் நல்லது.”

சசியின் தாய் ஸ்ரீபத்தின் காலில் விழுந்தாள். அங்கு கூடியிருந்த ஜனங்கள் சசியின் தாயை தூற்றத் தொடங்கினார் ஸ்ரீபத் ஒரு பெரிய நடிகன். அவர்களுக்குத் தெரிந்துவிட்டது. இப்பொழுது மேடை அவன் கையில். அதனாலேயே மறுபடியும் சொன்னான்: “இன்னொரு விஷயம் எல்லோரும் கேட்டுக்குங்க.”

“சொல்லு, அண்ணே, சொல்லு... நீ செத்த குழந்தையை பொழைக்க வச்சிருக்கே.”

“மாதாவின் சேவகன் நான், ஆமா, மாதாவின் சேவகன். அவளுடைய ஆக்ஞையில்லாமல் நான் எதுவும் செய்யமுடியுமா என்ன? அவள்தான் என் கனவில் வந்து சொன்னா—‘நான் பஸந்தை அனுப்புறேன். அவன் உனக்கு எல்லாம் சொல்லிக் கொடுப்பான்’னு. மாதா மேலும் சொன்னா, ‘பேஹுலாவின் நிலை கண்டு என் மனம் ஒரே வேதனைப்படுது’ அப்படின்னு...”

“ஆஹா, ஆஹா! வேறு என்ன சொன்னாள் தேவி மாதா?” எல்லாரும் கேட்டார்கள்.

"ஹெதோ நஸ்கர் அரசாங்கத்திடமிருந்து கிரோஸின் வாங்கிக் கொண்டு கொழிக்கிறான். அவன் சூளையினால கிராமம் அழிஞ்சுகிட்டு இருக்குது. ஆனாலும் அவன் கிரோஸின் தர மறுக்கிறான். இம்முறை அக்ரஹன் மாதத்து அறுவடைக்குப் பிறகு நாமெல்லாரும் சந்தா எடுத்து பணம் சேர்த்து கிரோஸின் வாங்கணும்—"

"வாங்குவோம், வாங்குவோம்—"

"ஆமா- சூளையை நெருப்பு வைத்து, கட்டுவிரியன்களை இருப்பிடமில்லாம செய்துடுவோம். இல்லாட்டா [illegible] எவனும் பொழைக்க மாட்டான், இதுதான் மாதா [illegible] ஆகணு."

"அப்படியே நடக்கும். அப்படியே நடக்கும்-" எல்லோரும் ஒரே குரலில் சொன்னார்கள்,

அங்கிருந்து திரும்பி வரும் வழியில் ஸ்ரீபத் சொன்னான்: "இப்போ இவங்க எல்லாரும் ஆமாம் மேல ஆமாம் போடறாங்க. பொறகு பாருங்க.. இந்தப் பசங்க எல்லாரும் தனக்கு எது நல்லதுன்னுகூட புரிஞ்சுக்காத முட்டாப் பசங்க."

ஒரு கணத்திற்குப் பிறகு சொன்னான்: 'எப்பேர்ப்பட்ட தினம் இன்னிக்கு! இன்னிக்கு நான் இன்ஜக்ஷன் கொடுத்தேன்! சசியை பிழைக்க வெச்சேன் இல்லையா?"

"அது சரி! இந்த கனவு கினவு, இதெல்லாம் என்ன?"

"சத்தியம்!" ஸ்ரீபத் பஸந்தின் கையைப் பிடித்துக் கொண்டு சொன்னான்: "மாதா என் மேல் மிக கிருபை செய்திருக்கிறாள். உங்களிடம் நான் அன்னிக்கு சரின்னு சொன்ன பிறகு என் மனசுல ஒரே கலக்கம். ஆனா இரவிலே மாதா எனக்கு தரிசனம் கொடுத்தா. உடல் பூராவும் சர்ப்பங்களை ஆபரணமாக அணிந் திருந்தா. அவ சொன்னாள்—'நீ அவனிடம் போ. அவனை நான்தான் அனுப்பினேன்' அப்படின்னு."

பஸந்துக்குத் தெரியும். ஸ்ரீபத்தின் இந்த கனவு ஆடோ ஸஜஷன் என்று. இந்த விதத்தில் அவன் தன் ஆதிகாலத்திலிருந்து வந்து கொண்டிருக்கும் தன் நம்பிக்கையிலிருந்து விடுபட்டு அறிவியல் பக்கம் செல்வதற்காக மன்னிப்புக் கேட்கிறான். ஸ்ரீபத்தின் மனதிலிருந்து அவனுடைய மூடநம்பிக்கைகளை யெல்லாம் சட்டென்று பிடுங்கி எறிந்துவிட தன்னால் முடியாது என்பதும் அவனுக்குத் தெரியும். ஸ்ரீபத்துக்கு 'தமஸோமா ஜ்யோதிர்கமய' சாத்தியமில்லை. அவன் மனதில் இருளும் ஒளியும் கூடியே வாழும். ஏனென்றால் அவன் பேச்சு மட்டத்தில்தான் இருபதாம் நூற்றாண்டு மனிதன். உண்மையில் அவன் எல்லா

நவநாகரீக சௌகரியங்களிலிருந்தும் வஞ்சிக்கப்பட்டு, ஒரு இருளிலேயே தன் வாழ்க்கையைக் கழித்து வருகிறான், விஷ தேவதையை தியாகம் செய்வது என்பது அவனால் முடியாத காரியம்.

ஸ்ரீபத் சொன்னான்: "நாளைக்கு நான் சந்தைக்குப் போகப் போறேன். நாளை இரவு என் வீட்டில் நீங்க சாப்பிட வரணும் இது என் குருதட்சிணை."

"பணம் செலவு செய்யப் போறீங்களா?"

"ஏன் செய்யக்கூடாது? மீன் வாங்கி வரப்போறேன், ஆலு வாங்கி வரப்போறேன். வீட்டுல பணியாரம் பண்ணுவாங்க. ஒன்றாக உட்கார்ந்து சாப்பிடுவோம்."

மறுநாள் பஸந்த் இர்ஃபான்பூருக்கு சென்று இனிப்புப் பண்டங்கள் வாங்கி வந்தான். மாலை வீட்டை விட்டுப் புறப்படும் முன் ஹெதோ நஸ்கர் கேட்டான்: "ஸ்ரீபத் வீட்டுக்கு சாப்பிடப் போறீங்களாமே? கீழ்ச்சாதி ஜனங்களை தலைமேல் வைத்து கூத்தாடுவது நல்லதல்ல."

பஸந்த் சிரித்துக் கொண்டு சொன்னான்: "அவன் என் நண்பன்."

"நண்பன்?"

"ஆமா- நான்தான் இங்கேயிருந்து போயிடப் போறேனே? ஆகவே என்னால இனிமேல் அவனுக்கு தலைக்கனம் அதிகமா ஆயிடாது."

ஹெதோ நஸ்கர் உண்மையிலேயே கலவரமடைந்தார். சொன்னார்: "நக்ஸல்கள்தான் இப்படிப் பேசுவாங்கன்னு கேள்விப் பட்டிருக்கேன்- நீங்க நக்ஸல் கிக்ஸல் இல்லையே?"

"இல்லே, இல்லேவேயில்ல."

"இது கிராமப் பகுதி- இங்கே சமாஜம்னு ஒண்ணு இருக்கு."

'நான் கிளம்பறேன்."

"கேள்விப்பட்டேன், ஸ்ரீபத் இன்ஜக்ஷன் கொடுக்கிறான்னு?"

"ஆமா-"

"விஷேதேவதையின் ஆக்ஞையின் பேரில்?"

"அவன் அப்படித்தான் சொல்றான்."

"மாதா ஆக்ஞை கொடுத்துட்டாளா?"

"எனக்கு எப்படித் தெரியும்? நீங்களே சொல்லுங்க, யார் பூஜை செய்யறாங்களோ அவங்களுக்குத்தான் இதெல்லாம் தெரியும். அவங்க பொய் சொல்லுவாங்களா?"

"இல்லே, இல்லே, அப்படிப் பொய் சொல்றவங்க நாக்கு

அழுகிப போயிரும். சரி, சரி, இன்ஜக்ஷன் கொடுக்கட்டும் கிராமத்துக்கு நல்லதுதான்."

"ஆமாம், கிராமத்துக்கு நல்லதுதான்."

"கேட்டவுடனேயே சசியின் அம்மாவுக்கு அரிசி, பருப்பு, மசாலா எல்லாம் கொடுத்துட்டேன், ஸ்பயன் பிழைச்சுட்டான்."

"ஆமாம் அவன் பிழைச்சுட்டான். சரி. ஆனால் உங்க சூளையைப் பத்தி ஏதாவது செய்யாட்டி மத்தவங்க பிழைக்க மாட்டாங்க."

"ஓ! பார்க்கலாம். விலை கிடைச்சா வித்துடுறேன்"

ஸ்ரீபத்தின் வீட்டில் அரிக்கோ ஸரியில், வாத்து இறைச்சி, பாகற்காய்க் கறி, சோறு, எல்லாம் சாப்பிட்டான். கடைசியில் ரஸகுல்லா சாப்பிட்ட பிறகு ஸ்ரீபத் சொன்னான், "மாதாவின் பாட்டு கேக்கிறீங்களா?"

"கட்டாயமா!"

மனஸா மங்கல பாட்டு ஆரம்பித்தது. இரவு ஓநாய்கள் ஓலமிட்டன. நாலா பக்கமும் நிசப்தம். பஸந்தின் மனம் நிறைவடைந்தது.

பலநாட்களுக்குப் பிறகு தாம்லியிலிருந்து ஸ்ரீபத்துக்கு அழைப்பு வந்தது. அங்கு ஒரு ஸ்கூல் மாஸ்டரை பாம்பு கடித்து விட்டிருந்தது, ஸ்ரீபத் போனான், மிகவும் முயற்சி செய்தான், ஆனால் பாம்பு கடித்து அரை மணியாகிவிட்டிருந்தது. அதனால் ஸ்ரீபத் அங்கு வந்தடையும் முன்னரே அவர் கிட்டத்தட்ட இறந்து விட்டிருந்தார். இருந்தாலும் ஸ்ரீபத் ஒன்றையும் விட்டு வைக்கவில்லை. இதிலிருந்து பஸந்துக்கு ஒன்று தெரிந்தது: கிராம பிராந்தியத்தில் ஸ்ரீபத்துக்கு ஒரு புதிய உருவம் பரவிவிட்டிருந்தது.

தாம்லியிலும் ஒரு பாம்பு ஓஜா இருந்தான். அவன் பெயர் பூஷண் மால். பூஷணே ஸ்ரீபத்தை கூப்பிடச் சொல்லியிருந்தான். தன் கிராமத்துக்கு ஸ்ரீபத்தை புஷண் கூப்பிட்டதன் அர்த்தம் ஸ்ரீபத் இன்ஜக்ஷன் கொடுக்கிறான் என்ற விஷயம் பரவி விட்டிருக்கிறது என்று. இப்படியாக நாட்கள் கழிந்து கொண்டிருந்தன. ஸ்ரீபத், ஹெல்த் சென்டர் டாக்டர், இருவரின் உதவியுடனும் பஸந்த் தன் ரிஸர்ச் பேப்பரை எழுதிக் கொண்டிருந்தான். குதிரையின் ப்ளாஸ்மா ஸீரத்திற்கு அலர்ஜி இல்லாதவர்கள் கூட எதிர்ப்பு சக்தி இல்லாத காரணத்தினால் செகண்டரி ஸிம்ப்டம்ஸ் டெவலப்பாகி செத்துப் போகக்கூடும். யாருக்கு புஷ்டியான ஆகாரம் கிட்டுவதில்லையோ அவர்கள் சரீரத்தில் பலவிதமான வியாதிகள் நிரந்தரமாக வாசம் செய்கின்றன. இதன் காரணமாக

வேறு பல லட்சணங்களைக் காட்டத் தொடங்குகிறார்கள்.

மனிதர்கள் இறக்கிறார்கள். ஆனால உயிருடன் இருப்பவர்கள் தான் ஸ்ரீபத், டாக்டர் இருவர் மனதிலும் சஞ்சரித்துக் கொண்டிருக் கிறார்கள். பஸந்த் ஸ்ரீபத்திடமிருந்து பல விஷயங்கள் கற்றுக் கொண்டான். பாம்பு கடித்தால் நோயாளி பயத்தினாலேயே செத்துப் போகிறான். இந்த விஷயத்தை பஸந்த் புத்தகங்களில் படித்திருக்கிறான்.

ஸ்ரீபத் இந்த பயத்தின் உண்மையை மனித உருவத்தில் பஸந்துக்குக் காட்டினான். ஸ்ரீபத் ஒரு நாள் சொன்னான்: "நீங்க ராஜு வண்ணானின் மரணத்தைப் பார்த்திருக்கிறீங்களா? நான் பஜாருக்குப் போயிருந்தேன். அவனைக் கடித்திருந்தது மண்பாம்பு, அவன் ஒரு மால். அவன் சொன்னான், கட்டுவிரியன் கடித் திருக்கிறது என்று. பயத்தினால் அவனுடைய இதயத் துடிப்பு குறைந்திருந்தது. மனைவி அழுதுகொண்டே சொன்னாள் 'எங்கே போயிட்டேப்பா! நீ இருந்திருந்தா அவனுக்கு ஒண்ணும் ஆயிருக்காதே'ன்னு மண்பாம்பு கடிச்சுது- ஆனா அவன் கட்டு விரியன் கடிச்சதா நெனச்சுகிட்டான்- இதனாலத்தான் நம்ம சாத்திரங்கள்ள எழுதி இருக்கு - நோயாளியை தனியா விடக் கூடாதுன்னு. யாராவது கூட இருந்தா நோயாளியின் தைரியம் அதிகமாகிறது."

"பயத்தினால் ஹார்ட் ஃபெலியர் ஆயிருக்கணும்."

"இந்த பயத்தை எப்படி நிதானிப்பது?"

"உன் மகன் கத்துக் கொண்டிருக்கிறானா?"

"ஆமா, பையன் மந்திரம் தந்திரம் கற்றுக்கொள்ள விரும்பலே. இன்ஜக்ஷனில் ரொம்ப ஆர்வம். இன்னும் எல்லா லட்சணங் களையும் அவன் புரிந்துகொள்ளலே, நான் எல்லா வேலையையும் அவன்கிட்ட விடறதில்லே."

"கட்டை மாத்தாட்டா, கங்ரீன் ஆகிடும். திடீரென்று அவிழ்த்தால் சாவு நிச்சயம். இந்த விஷயத்தையும் அவனுக்குச் சொல்லிக் கொடுங்க."

"எல்லாம் சொல்லிக் கொடுக்கிறேன். பைசா வாங்குறதில்லே. அதனாலதான் நிஷிகாந்த் ஜேலே (மீனவன்) ஒரு பெட்டி கொடுத்தான். காட்டு மரத்தில செஞ்சது. அவனுடைய ஆயாவைக் காப்பாத்தினேன். அவன் சொன்னான் - இதுல ஒன்னோட மருந்து, இன்ஜக்ஷன் எல்லாத்தையும் வெச்சுக்க. என் அம்மா பேர்ல கொடுத்திருக்கேன். இப்பெல்லாம் ஒன்னொட இன்ஜக்ஷன்ல தான் நம்பிக்கை அப்படின்னு. இப்போ சொல்லுங்க, உங்க

வேலையெல்லாம் எப்படி போயிருக்கிட்டிருக்கு?"

"சரியாத்தான் போயிட்டிருக்கு, இங்கே வரலைன்னா எனக்கு தெரிந்திருக்கவே தெரிந்திருக்காது - எப்படி பசியில் வாடும் சரீரத்தில் இன்ஜக்ஷனும் கொடுக்கும் போது என்ன என்ன லட்சணங்கள் தெரியும்னு. எவ்விதமான கஷ்டங்களை ஜனங்க அனுபவிக்கிறாங்கன்னு."

"ஹெதோவை பாம்பு கடிக்கப் போறதில்லை. அப்படி கடிச்சா உங்களால் பாத்திருக்க முடியும் - எப்படி யானைத்தீனி தின்னும் உடம்புல என்னென்ன லட்சணங்கள் தெரியும்னு. அவனை பாம்பு கூட கடிக்காது. ஏன்னா பாம்பு அவனைக் கடிச்சா அதுதான் செத்துப் போகும், நஸ்கர் அந்த மாதிரியான ஆளு."

"நான் கிளம்ப வேண்டிய சமயம் வந்துருச்சு."

"அதை நெனச்சாலே வேதனையாக இருக்குங்க."

"ஒருவேளை மறுபடி வந்தாலும் வருவேன்."

"சொல்லமுடியாது, வேலைல மூழ்கிட்டா எங்கே போக முடியுது?"

"ஒங்க மனஸா தேவியின் உடம்புல கட்டுவிரியன் தோலால் செய்யப்பட்ட ஆபரணங்கள் இருக்குமா? பார்ப்பதற்கு மிக அழகாயிருக்கும் இல்லையா?"

"ஆமாம், பாம்புகளை கொல்ல வேண்டியுமிருக்கு- கொன்னு அதன் தோலை உரிச்சு நகைங்க பண்றாங்க. இதுவும் எங்க ஆளுகளிடையே ஒரு நியமம். இப்பொழுதெல்லாம் மால்கள் எல்லா நியமங்களையும் ஏத்துக்கிறதில்லே. இப்போவெல்லாம் பாம்பைக் கொன்னு போட்டு கல்கத்தாவுக்கு போய் தோலை விக்கிறாங்க! இரண்டு மடங்கு லாபம் கிடைக்குது."

பஸந்த் புறப்பட்டு போகவிருக்கும் விபரம் நஸ்கரை மிகவும் மகிழ்வித்தது. அவன் இர்ஃபான்பூர் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் தனது அந்தரங்க எண்ணங்களைப் பகிர்ந்துகொண்டு வந்தான்: "ஆஃபீசரின் மச்சான், அதனாலதான் நான் ஒண்ணும் சொல்லலே. இல்லாட்டி அவன் கிளப்பியிருக்கிற அட்டூழியத்தை என்னன்னு சொல்றது? நக்ஸலுங்க கூட குலாவறான்- ஸ்ரீபத் கூட உக்காந்து திங்கிறான்- கீழ்சாதி ஜனங்களுக்கு இன்ஜக்ஷன் கொடுக்கிறான், அவங்க கூட உட்காந்து திங்கிறான்- அறுவடை சமயத்தில இவங்களை அடக்கி வைக்கிறது கஷ்டமாப் போகப் போகுது. அவனுக்கு இதெல்லாம் இரண்டு நாள் விளையாட்டு, ஆனா எனக்குத்தான் தலைவலி."

"ஏதேனும் வம்பு தும்புக்கு வழி செஞ்சுகிட்டு இருக்கானா?"

"அதெல்லாம் ஒண்ணுமில்லே. ஆனா கிராமத்து காத்தையே மாத்தி விட்டிருக்கான். ஸ்ரீபத் கால்ல செருப்புப் போட்டுகிட்டு கையில டார்ச்சு லைட்டு வெச்சுகிட்டு கிராமத்துல திரியிறான். கீழ்ஜாதி ஜனங்க எப்போ செருப்பு போட்டுகிட்டு நடக்க ஆரம்பிக் கிறாங்களோ அப்பவே புரிஞ்சிக்குங்க - எப்படி கோரமான கலியுகம் வந்து விட்டுருக்குன்னு... பாம்பு கடிக்காட்டா கடிக்காதிருக்கட்டும். ஆனா கடிக்கன்னு வந்துட்டா, செருப்பு போட்டுட்டா தடுத்துட முடியுமா? யாரால் முடியும் அதைத் தடுக்க?"

விஷ தேவதை ஒரு வேளை நஸ்கரின் பேச்சைக் கேட்டு விட்டாளோ என்னவோ, அதே இரவில் பஸந்தின் கதவை யாரோ தள்ளிக்கொண்டு கலவரமான குரலில் அவனைக் கூப்பிடுவது அவனுக்குத் தெரிந்தது. அவன் எழுந்து கதவைத் திறந்தபோது, ஹெதோ நஸ்கர், ஸ்ரீபத்தின் மகன் பதித் மேலும் பலர் நின்று கொண்டிருந்தார்கள். பஸந்தைப் பார்த்தவுடனேயே, பதித் அழுதுகொண்டே சொன்னான், "இன்ஜக்ஷன் எடுத்துக்கொண்டு கிளம்புங்க, பாபு! அப்பாவை, அப்பாவை—"

"ஸ்ரீபத்தை—?"

"ஆமாம் பாபு, தூங்கும் போது இடுப்புல கடிச்சுருச்சு."

திடீரென்று நாலாபக்கமும் பளிச்சென்று ஒளி பரவி விட்டிருந்தது. சசியின் கையில் ஒரு பெட்ரோமாக்ஸ் விளக்கு இருந்தது. ஹெதோ நஸ்கரின் குரலிலும் பயம் புகுந்துவிட்டிருந்தது. பாம்பு கடித்து ஸ்ரீபத் சாவதின் அர்த்தம் அவனுக்கும் புரிந்திருந்தது, ஹெதோ நஸ்கர் சொன்னான்: "விளக்கை எடுத்துக் கொண்டு போவோமா?"

"நீங்களும் வர்றீங்களா?"

"ஸ்ரீபத்—"

பஸந்த் டார்ச்சை எடுத்துக்கொண்டு ஓடினான். அவன் தோளில் ஒரு ஜோல்னாப் பை ஆடிக் கொண்டிருந்தது. ஸ்ரீபத்தை பாம்பு கடித்துவிட்டது.

ஸ்ரீபத்தை!

ஸ்ரீபத்தின் வீட்டில் பெரிய கூட்டம் கூடியிருந்தது, வெளி யிலிருந்து தாழ்வாரம் வரை ஒரே கூட்டம். பஸந்த் எல்லாரையும் தள்ளிக்கொண்டு உள்ளே நுழைந்தான். சிலர் அழத் தொடங்கி விட்டார்கள். "மாலை எப்படியாவது காப்பாத்துங்க பாபு- நீ காப்பாத்தாட்டா அவன் பொழைக்க மாட்டான்—"

ஸ்ரீபத் சுவற்றின் மேல் சாய்ந்து உட்கார்ந்திருந்தான். அவன்

முன்னால் ஒரு செத்துப்போன கட்டுவிரியன் கிடந்தது. ஸ்ரீபத் ஒரு கையை அவன் மனைவியின் தோள் மேல் வைத்துக் கொண்டிருந்தான். அவளோ ஒரேயடியாக ஓலமிட்டுக் கொண்டிருந்தாள். ஸ்ரீபத்தின் அக்குளில் ஒரு கீறல் போடப்பட்டிருந்தது. அவன் இரு கண்களும் தூக்கத்தில் செருகிக் கொண்டிருந்தன, இமைகள் திரும்ப திரும்ப கீழே விழுந்து கொண்டிருந்தன, அவற்றை சிரமப் பட்டு திறக்க வைத்தான் பஸந்த்.

"ஸ்ரீபத்!"

"தண்ணீர் சுட வையுங்கள்– நெறைய வென்னீர் வேணும்– பெட்ரோமாக்ஸை இங்கே வை. ஸ்ரீபத் பயப்படாதே. நான் இன்ஜக்ஷன் கொடுக்கப்போறேன்–"

இன்ஜக்ஷன் கொடுக்கும் போது பஸந்தின் கை நடுங்கிற்று. ஸ்ரீபத்தின் உதட்டில் ஒரு மெல்லிய சிரிப்புத் தோன்றியது. பிறகு அவன் குரல் எங்கிருந்தோ வெகுதூரத்திலிருந்து வருவதுபோல் காற்றில் மிதந்து வந்தது. "பதித் கட்டுப்போட முயன்றான், ஆனால் எங்க போடுவது?"

"ஸ்ரீபத்! நான் உனக்கு கடுமையான டோஸ் போடப் போறேன்."

"போடுங்க."

பஸந்த் இரக்கம் இல்லாமல் ஸ்ரீபத்தின் இடுப்பில் கத்தியால் கீறத் தொடங்கினான், ஸ்ரீபத் மறுபடியும் சிரித்துக் கொண்டு சொன்னான், "எனக்கு ஒண்ணும் தெரியலே, எனக்கு தோணுது ஒண்ணும் பிரயோசனமில்லைன்னு, நீங்க சும்மா உக்காருங்க–"

"ஸ்ரீபத் கண்ணைத்திற–"

"கண்ணிலெ வெளிச்சமில்லே, பாபு! ஒரே தூக்கம் தூக்கமா வருது–"

"வென்னீர் பாத்திரம் கொண்டு வா. கம்பளியால ஒரு ஆசனம் போடு–"

எந்தக் கம்பளத்தில் உட்கார்ந்து கொண்டு ஸ்ரீபத் பூஜை பண்ணுவானோ அந்த கம்பளத்தை பாம்பு கடித்த இடத்தில் வைத்து வென்னீரால் ஒத்தடம் கொடுத்தான். கொடுத்தும் சரீரத்தில் ஒருவித விளைவும் இல்லை. பஸந்த் ஸ்ரீபத்தின் நாடி பார்த்தான், மார்பில் காதை வைத்துக்கேட்டான்.

கடுமையான முயற்சிக்குப் பிறகு ஸ்ரீபத் தன் கண்களைத் திறந்தான். கோபமான குரலில் சொன்னான்: "நஸ்கர் கடைசீல செங்கலை விக்கலே–"

பஸந்த் அவனுடைய மார்பில் காதை வைத்து அழுத்திக்

கொணடிருந்தான். பிறகு மிக மெதுவாக எழுந்து நின்றான், ஸ்ரீபத்தை மிக மெதுவாகப் படுக்கவைத்தான். பிறகு தலையை குனிந்து கொண்டு 'ஓ'வென்று அழ ஆரம்பித்தான். பேஹுலாவின் நூறுக்கும் அதிகமான ஜனங்கள் ஒரே குரலில் அழத் தொடங்கி னார்கள். இரவின் நிசப்தம் பிளக்கப்பட்டது. கட்டுவிரியனின் பழைய தோலில் செய்யப்பட்ட மகுடத்தை அணிந்து கொண் டிருந்த, பித்தளையில் செய்யப்பட்ட மனஸா தேவி அத்யந்த சினேகத்துடன் அவனையே உற்று நோக்கிக் கொண்டிருந்தாள்.

பொழுது விடிந்தது சர்வநாசத்தின் தினம் போல. செய்தி எப்படிப் பரவிற்று என்று தெரியாது. தாம்லி, புகுல்புர், புலே, காங்டி கிராமத்து மால்கள் எல்லாரும் வந்து சேர்ந்துவிட்டார்கள். அப்பொழுது பஸந்த் ஒரு பார்வையாளன் மட்டுமே. அங்கு நடந்து கொண்டிருந்த எதிலும் அவனுக்கு ஒரு பங்குமில்லை. வாழைப் பட்டையில் ஒரு பாடை தயார் செய்யப்பட்டு அதன் மேல் இலைகள் பரப்பப்பட்டு மஞ்சள் பாரித்திருந்த ஸ்ரீபத்தின் தேகத்தைப் படுக்க வைத்தார்கள். எல்லா மால்களும் ஒருவர் பின் ஒருவராக பாடையின் மேல் ஒரு கூடையில் கொஞ்சம் அரிசியும், துளசி இலையும் வைத்து ஸ்ரீபத்தை வணங்கினார்கள்.

ஒரு விசாலமான, நீண்ட சவ யாத்திரை புறப்பட்டது. எல்லாரும் கடவுளின் பெயரைச் சொல்லிக் கொண்டு கண்ணைத் துடைத்துக் கொண்டிருந்தார்கள். மகளிரை விட ஆண்கள்தான் வெட்கத்தைவிட்டு அழுதார்கள். கடைசியில் பாடையை நதியில் இறக்கினார்கள்.

பாடை மிக மெதுவாக நகரத்தொடங்கியது. எல்லாரும் இங்கும் அங்கும் சிதறிக் கொணடிருந்தனர். அந்தப் பாடையை இழுத்துச் செல்ல கிழவி பேஹுலாவின் மார்பு பிளந்து கொண் டிருந்தது. சாபமிடப்பட்டவள் அவள், சாபமிடப்பட்டது பேஹுலா நதி. மெதுவாக, மிக மெதுவாக, பாடை நகர்ந்தது. பேய் பிடித்தவன் போல் பஸந்த் கரையில் நடந்து கொண் டிருந்தான். நடந்துகொண்டே எல்லாரும் ஒரு இடத்தில் வந்து நின்றார்கள். அப்பொழுது பாடை பள்ளத்தில் விழ இருந்தது. அந்த இடத்தில் வந்து பாடை சுழல ஆரம்பிக்கும், இதுதான் நியமம். எல்லாரும் பாடையை நோக்கிக் கொண்டிருந்தனர், அவர்கள் கண்களில் இருள் சூழ்ந்து கொண்டிருக்கிறது. அந்த இருளில், வெப்பமும் தினத்தின் முடிவும் முழுகிப்போகின்றன.

யார் சொன்னது என்று தெரியவில்லை, "ஏழு முறை பாடையை அவள் சுழற்றுவாள், பிறகு அதை பள்ளத்தில் முழுக்கி

எடுத்துச் சென்று தாம்லியில் வீசிவிடுவாள்!" ஆனால் எல்லா ருடைய முகத்திலும் ஆச்சரிய ரேகை பளிச்சிட்டது. பாடை திரும்பத் திரும்ப சுற்றிக்கொண்டே இருந்தது. காற்றில் ஸ்ரீபத்தின் முகத்தின் மேல் இருந்த துணி விலகிவிட்டிருந்தது. ஸ்ரீபத்தின் பாதி திறந்த ஒரு கண் அவனையே பார்த்துக் கொண்டிருப்பதாக பஸந்துக்குத் தோன்றியது. அந்தப் பார்வை தன்னை திரஸ்கரிப்பது போன்ற பிரமை அவனுக்கு ஏற்பட்டது. மனிதன், சதா காலமும் பாம்புக்குப் பயந்து செத்துக் கொண்டேயிருக்கும் மனிதன், ஏதோ ரிஸர்ச் பேப்பர் விஷயமல்ல, வினய்-பாதல்- தினேஷ் எல்லாரும் ஏதோ பிபிடி பாக் ஆபிசில் (ரைடர்ஸ் பில்டிங் எனப்படும் வங்க அரசின் தலைமை அலுவலகம் இங்குதான் இருக்கிறது.) ஃபைலில் இடம் பெறும் புள்ளி விவரங்களல்ல, மனிதன் சாகாவரம் பெற்றவ னல்ல. அதனால்தான் அவனுக்கு உதவி தேவை, அவனுடைய பயத்தின் காரணத்தை அகற்றுவது அவசியம், அவனைக் காப்பாற்றுவது அவசியம்.

சசியின் அம்மா உரக்க அழுதுகொண்டே சொன்னாள், "என் குழந்தைய அநாதையா விட்டு விட்டுப் போகப் பார்க்கிறே, அதனாலதான் ஒன்னாலே போக முடியலே, மறுபடியும் மறுபடியும் சுழன்று கொண்டிருக்கே..."

அதற்குப்பிறகு இறந்துவிட்ட ஸ்ரீபத்துக்கு தோன்றியது போலும்: அவனுடைய மூதாதையர் விட்டுச் சென்றிருந்த பொறுப்பை இதுவரை அவன் ஏற்றுக் கொண்டிருந்தான். ஆனால் அந்தப் பொறுப்பை ஏற்றுக்கொள்ள இப்பொழுது யாருமில்லை. பதித் இப்பவும் ஒன்றும் கற்றுக்கொள்ளவில்லை. பஸந்த் ஊருக்குப் போய்விடப் போகிறான். பிண்டதானத்திற்கான அதிகாரத்தைப் பதித்துக்குக் கொடுத்திருக்கிறான். சரி, ஆனால் அவனுடைய பரம்பரைத் தொழில் பொறுப்பை ஏற்றுக்கொள்வதற்கு யாரும் இல்லை. ஸ்ரீபத்தின் பொறுப்பு வெறும் பிண்டதானம் கொடுக்கும் உரிமையுடன் நின்றுவிடமுடியாது. ஏதோ பெரிய ஒரு நிராசையில் அவன் நதியிடம் ஏதோ சொல்லிக் கொண்டிருப்பது போல் தோன்றியது. அதற்குப் பிறகு பேஹுலா பாடையை பள்ளத்தில் இழுத்துக் கொண்டுவிட்டதைப் போல் தோன்றியது.

பஸந்த் வீடு திரும்பினான். நாள் முழுவதும், இரவு முழுவதும் அவன் சாப்பிடாமல், குளிக்காமல், படுக்கையின் மேல் கிடந்தான்.

பொழுது விடிந்தவுடன் அவன் ஹெதோ நஸ்கரைக் கூப்பிட்டு அனுப்பினான். "கிரஸின் டின்னை வெளியே எடுங்க. அது அரசாங்க கிரஸின்."

"எதுக்கு?"

"நீங்களே பாக்கப்போறீங்க."

"ஆனா என்ன நடக்கும்னு சொல்லாட்டி-"

ஹெதோ நஸ்கர் மேலும் ஏதோ சொல்ல விரும்பினான் ஸ்ரீபத்தின் மரணத்தினால் அவனுக்கும் இறுக்கம்தான். ஆனால் கிரஸின் விஷயம் வேறு. அது அதாரிடி தன் கையில் வைத்துக் கொள்வது மிக அவசியம். பஸந்த் அவனை ஒன்றும் சொல்ல விடவில்லை.

"இதோ, பாருங்க, நஸ்கர் பாபு! முதலில் நான் கிராமத்து ஜனங்க எல்லாரையும் கூப்பிட்டு கிரஸினை வெளியில் எடுக்கப் போறேன். பிறகு எஸ்டிஓவுக்கு செய்தி சொல்லியனுப்பப்போறேன். பிறகு கல்கத்தாவுக்குப் போயி என்ன செய்யணுமோ அதெல்லாம் செய்யப்போறேன். உங்க செங்கல் சூளை- எஸ்டிஓ என்னோட அக்கா புருஷன் மட்டுமல்ல. ஒரு கடுமையான ஆஃபீஸர். இந்த ஜனங்களிடம் பர்மிட் இருக்கு, ஆனா நீங்க அவங்களுக்கு கிரஸின் கொடுக்கிறதில்ல. நீங்க அதை பதுக்கிடுறீங்க. எனக்கு எல்லாமே தெரியும். பஞ்சாயத்து பிரஸிடென்டுன்னா என்ன? உங்களோட பிரதாபங்கள் எல்லாம் தெரிஞ்சப்புறம் சர்க்கார் உங்களை பிரஸிடென்ட்டாக இருக்க விடுவாங்களா?"

ஹெதோ நஸ்கர், சாந்த ஸ்வரூபியான, விரோதிகளே இல்லாத நன்னடத்தையுள்ள பஸந்தின் பார்வையில், தான் திடீரென்று தோல்வியடைந்து விட்டிருப்பதைப் படித்தான். கிராமம் அவனால் மிகவும் பதட்ட நிலையில் இருப்பதை உணர்ந்தான். போலீஸ் ஸ்டேஷனோ இர்ஃபான்பூரில் இருக்கிறது. ஒரு ஆதாரமற்ற பயம் அவனைப் பற்றிக் கொண்டது. எழுபது எழுபத்தொன்றில் அவன் இதே ஜனங்களால் விரட்டப்பட்டு ஓடிவிட்டிருந்தான்.

உலர்ந்த குரலில் அவன் சொன்னான் "எடுத்துக்குங்களேன். எத்தனை டின் வேணும்?"

"ஒரு டின்னை வைச்சிட்டு பாக்கி எல்லாத்தையும் கொடுங்க. ஏய், சசி, சரண், நீ போய் ஸாகர், ராவண், நிஷிகாந்த், எல்லாரையும் கூட்டிட்டு வா- எனக்கு இருபது ஆட்கள் வேணும்-"

பஸந்தின் குரலிலும் இதயத்திலும் ஒரு கொடூரமான ஆனந்தம் எழுச்சி பெற்றது. நஸ்கரின் வெளிறிப்போன முகத்தைப் பார்த்து அவனுக்கு இத்தனை ஆனந்தம் வரும் என்று அவன் எண்ணியதேயில்லை.

"எல்லா ஹோஸ் பைப்பையும் கொடுங்க. கிராமத்தில் நெருப்பு அணைக்க அரசாங்கம் கொடுத்தது, அதை நீங்க உங்க

கத்திரிச் செடிக்கு தண்ணிவிட பயன்படுத்திக் கொண்டிருக்கீங்க."

சரணும் மற்றவர்களும் வந்து சேர்ந்தனர். பஸந்த் சொன்னான்: "டின்களை எடுத்துக்க, பைப்பை எடுத்துக்க, எவ்வளவு முடியுமோ அவ்வளவு வைக்கோல், கொடி, புல், பூண்டு எல்லாம் சேகரியுங்க."

சரணும் மற்றவர்களும் அவனை உற்று நோக்கினார்கள். ஸ்ரீபத்தின் மரணம் எழுப்பிவிட்ட மனமுறிவு, வருத்தம், தோல்வி அவனை வாட்டி விட்டிருந்தாலும் அதைப் பொருட்படுத்தாது பஸந்த் தங்கள் வாழ்வில் ஒரு மாறுதல் பிரவாகத்தை கொண்டு வந்திருக்கிறான் போலிருந்தது. "பெரிய பெரிய மூங்கில் கொண்டு வாங்க. பொம்பிளைங்க, குழந்தைங்க, கிட்ட வராதீங்க."

சூளையின் மேல் வைக்கோல் போடப்பட்டது. கொஞ்சம் கொஞ்சமாக சூளை வைக்கோலின் கீழ் மறைந்து விட்டது. பிறகு அதன் நாலா பக்கங்களும் புல்-பூண்டுகளால் ஒரு பாடை மாதிரி புனையப்பட்டது. நெருப்பு விஷயத்தில் விவரம் தெரிந்த சுடுகாட்டு டோம் ஸாகர் சொன்னான்: "பசங்களா, நீங்க சுடுகாட்டுக்குப் போய் அங்கே உள்ள இலந்தை மரக் கிளைங்களெ வெட்டிகிட்டு வாங்க. நெருப்பு பத்திக்கிடுச்சுன்னா பொறகு அணையவே அணையாது."

சரண் சொன்னான்: "ஒவ்வொரு வீட்டிலிருந்தும் தவிடு எடுத்துட்டு வாங்க. குளிர் காலத்தில குளிர்காயறதுக்காக எல்லா வீட்டிலும் கொட்டிக் கிடக்கும்."

பிறகு சூளையில் மேல் போட்ட வைக்கோலில் கிரஸின் ஊற்றப்பட்டது. பஸந்த் சொன்னான்: "எல்லாரும் சேர்ந்து நாலா பக்கத்திலேந்தும் தீ வைங்க. கிரஸினில் தோய்ந்த சுருணைகளைக் கொளுத்தி ஒரே சமயத்தில் எல்லா பக்கத்திலிருந்தும் வீசியெறிங்க. மேலே போட்ட வைக்கோல் கீழே விழாம பாத்துக்குங்க... வைக்கோல் சமமா வீசுங்க. பாம்பு வெளியே வந்தா கட்டையால அடிச்சுக் கொல்லுங்க."

"நீ சொல்லவே வேண்டாம், பாபு! ஸ்ரீபத்தையே அதுங்க கொன்னுருக்கு, இப்போ தப்பமுடியாது, ஒண்ணு கூட..."

தீ கொழுந்துவிட்டு எரியத்தொடங்கியது. எல்லாரும் கவனமாகப் பார்த்துக் கொண்டிருந்தனர். அப்பொழுது தனது பயிற்சியின் காரணமாக திறமை பெற்றிருந்த ஸாகர் டோம் ஒரு நீளமான மூங்கிலால் சூளையின் செங்கற்களை வீழ்த்திக் கொண்டே சொன்னான்: "எல்லாரும் நாலா பக்கத்திலேந்தும் செங்கல்லக் குத்தித் தள்ளுங்க. நம்ம சம்மந்திமாருங்க வெளிய

வர்றாங்க. அதோ பாரு- அதோ பாரு-"

தீயின் உஷ்ணத்தினால் கலவரமடைந்த கட்டுவிரியன்கள் சடக் சடக் என்று துள்ளித் தெறித்து விழுந்தன. புதிய ஆவேசம் அவர்களை கிறங்க வைத்தது. வைக்கோல் பாடையின் மேல் அவர்கள் கட்டைகளைப் போட்டுக் கொண்டே இருந்தார்கள். கிரஸின் பீச்சிக் கொண்டிருந்தார்கள். பாம்புகள் வெளியேறி மடிந்தவண்ணம் இருந்தன. கிராமவாசிகளின் சோகம், கட்டு விரியன்களைப் பற்றிய பயம், ஹெதோ நஸ்கர் மேல் இருந்த சினம், எல்லாம் இப்பொழுது வெஞ்சினக் குரோதமாக உருவெடுத்து கொழுந்துவிட்டெரியத் தொடங்கின.

ஒருவேளை இதனால்தான் தீ மேலும் தீவிரமாக, 'ஹோ-ஹோ-' வென்று கனலை உமிழ்ந்துகொண்டிருந்தது போலும்!

# அடிப்படை உரிமையும் பிச்சைக்காரன் துஸாதும்

அந்த இடம் நவாகட்டின் எல்லையில் பஸ் செல்லும் பாதையில் இருந்தது. நவாகட் ஒரு சின்ன சமஸ்தானம் அல்லது ஒரு பெரிய ஜமீன் என்று சொல்லலாம். ஜமீன்தாருக்கு 'ராஜா' என்ற பட்டம் கிட்டியிருந்தது. சுதந்திரம் கிடைத்த வருஷத்தில் ராஜா ஸாகபுக்கு ஒரு வயது. இருந்தாலும் அவர் ராஜா ஸாஹப் என்றுதான் எல்லாருக்கும் பரிச்சமாகியிருந்தார். ஜமீன்தாரி முறை ஒழிக்கப் பட்ட பிறகும் ராஜா ஸாஹப் ஒரேயடியாக பிச்சைக்காரனாகி விடவில்லை. ராஜ்யம் அவரிடமிருந்து பறிக்கப்பட்டபோதே பிரசித்தமான உத்திகளின் உதவியுடன், இருபத்தைந்து கடவுள் களின் பேரில் நிலங்கள் சட்டப்படியே எழுதிவைக்கப்பட்டன. அப்படியிருந்தும் ராஜா ஸாஹப்புக்கு மிகப்பெரிய அநியாயம் இழைக்கப்பட்டது. அவருடைய ராஜ்யம் எடுத்துக்கொள்ளப் பட்டது. இந்தப் பாவத்தை அரசாங்கம் செய்தது. பஸ் ரோட், ரயில்வே லைன் போடுவதற்காக மாநில, மத்திய அரசுகள் கடவுள்களின் பேரில் இருந்த நிலங்களை வசப்படுத்திக் கொண்டன. ராஜா ஸாஹப்பின் இளமையிலேயே இதெல்லாம் நடந்து விட்டிருந்தன. கெட்டிக்கார ராஜமாதாவும் அவருடைய வக்கீலும் இந்த விஷயத்தினால் மனதிற்குள்ளேயே புழுங்கினர். பிறகு ஒரு பக்கத்தில் ராஞ்சி, பாட்னா வக்கீல்களுடன் ஆலோ சனைகள் நடந்தன; மற்றொரு பக்கத்தில் ராஜா ஸாஹப்பின் அன்றாட வாழ்க்கைத் தேவைகளுக்கான வரும்படிக்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டன. விளைச்சல் நிலத்தில் விவசாயம், காட்டு மரம் வெட்டும் காண்ட்ராக்ட், டிம்பர் தொழிற்சாலைகள், லாரி ட்ரான்ஸ்போர்ட் வியாபாரம்—இவற்றிற்கான ஏற்பாடுகளை மிகச்சரியாக செய்த பிறகு, அவருக்கு இழைக்கப்பட்ட பயங்கர அநியாயத்தை எதிர்த்துப் போராடுவதற்கான அலைச்சல்கள் ஆரம்பித்தன.

ஆறு வருஷ முயற்சிக்குப் பிறகு ஏதோ கொஞ்சம் பலன்

கிடைத்தது. இன்று நவாகட்டில் விமரிசையாக விழா எடுக்கப் படுகிறது. தொடக்கப் பள்ளிகளுக்கு இன்று விடுமுறை. ராஜமாதாவின் ட்ரான்ஸ்போர்ட் கம்பெனியின் நூறு லாரி களுக்கும் இன்று விடுமுறை. ராஜா ஸாஹப்பின் இருப்பிடமான ஸுர் நிவாஸிருந்து வண்ணக் காகிதங்களில் சுற்றப்பட்ட இனிப்புப் பண்டங்கள் கூடைகூடையாக ரெவின்யூ ஆபீசர்களுக்கும், சிவன் கோயிலுக்கும் மற்றும் பல இடங்களுக்கும் அனுப்பப்பட்டன.

பல வருஷங்களுக்குப் பிறகு நவாகட்டில் எல்லாருக்கும் நிம்மதி உணர்வு வந்தது. ராஜா ஸாஹப் எல்லாருக்கும் செய்தி அனுப்பினார், 'ஆனந்தக் கூத்தாடுங்கள்! விழா கொண்டாடுங்கள்! ஒவ்வொரு வீட்டிலும் தீபம் ஏற்றுங்கள்' என்று. தீபம் உங்கள் செலவில்! இப்பொழுதெல்லாம் ராஜா ஸாஹப்பின் விருப்பப்படி எல்லாமே நடக்காவிட்டாலும், ஜனங்களிடையே இன்று ஓரளவு மகிழ்ச்சி எழுந்திருந்தது.

பத்து மாதங்களுக்கு முன் ராஜா ஸாஹப்பின் குத்தகைக் கூலிக்காரர்களுக்கிடையே பயங்கர அதிருப்தி எழுந்திருந்தது. இவ்விதம் கடந்த பல ஆண்டுகளாக நடந்துகொண்டுதான் இருக்கிறது. ஆனால் இதற்கு முன் போலீஸ் வந்ததில்லை. முதலில் ராஜாவின் அடியாட்கள் குத்தகைக்காரர்களை அடித்தார்கள். பிறகு போலீஸ் வந்தது. குத்தகைக்காரர்களில் மிகவும் பயந்தவர்கள் என்று யாரை போலீஸ் நினைத்ததோ அவர்களைப் பிடித்துக் கொண்டு போனார்கள். இது மாதிரி நடக்கிறது, நடந்துகொண்டே இருக்கிறது. நவாகட்டின் மண் எத்தனை புராதனமானதோ அத்தனை புராதனமானவை இத்தகைய நிகழ்ச்சிகள். இதற்கு நடுவில் குத்தகைக் கூலிகளின் எண்ணிக்கை ஆண்டு தோறும் அதிகரித்துக் கொண்டேயிருக்கிறது. முதிர்ந்த தானியத்தின் அறுவடையில் தங்களுடைய உரிமைகள் பற்றிய பிரக்ஞையும் அதிகரித்துக் கொண்டு வருகிறது. ஏதோ மூன்றாவது சக்தி இதற்குப் பின்னால் இயங்குகிறது என்று போலீஸ் சந்தேகப்படுகிறது.

இந்த மூன்றாம் சக்தி முற்றிலும் உண்மைக்குப் புறம்பான தல்ல. சில கம்யூனிஸ்டுகள், சில ஆதிவாசி ரட்சகர்கள், சில தீவிரவாத இயக்கத்தைச் சார்ந்தவர்கள், இவர்கள் எல்லாரும் இந்த 'கம்மனாட்டி விவசாயிகளுக்கு' உதவி செய்கிறார்கள்.

இதன் காரணமாக இம்முறை அதிகக் குழப்பம் ஏற்பட் டிருக்கிறது. சுமார் மூன்று மாதங்களுக்கு முன்னர் குத்தகைக் கூலிகள் நடத்திய போராட்டத்தில், ஒரு துணியில் "எங்கள் உழைப்பிலிருந்து விளைந்ததில் பாதி விளைச்சலில் எங்களுக்கு

அடிப்படை அதிகாரம் உண்டு." இத்துணியை இரண்டு மூங்கில் கம்புகளின் இடையில் பேனராக கட்டித் தூக்கிக்கொண்டு நாலாபக்கமும் திரிந்து கொண்டிருந்தார்கள். இது மிக அதிக தொந்தரவைக் கொடுத்தது; முக்கியமாக, அதில் எழுதியிருந்த வாக்கியம். கூலிகளுக்கும் குத்தகைக்காரர்களுக்கும் இவ்வளவு கொழுப்பு எங்கிருந்து வந்தது? ராஜா ஸாஹப்பின் தயவில் வாழும் இவர்களுக்கு எப்படி, "எங்கள் உழைப்பில் விளைந்த தானியம் இது! சட்டப்படி இதில் பாதி எங்களுக்குச் சொந்தம்" என்று சொல்லும் தைரியம் எங்கிருந்து வந்தது? மேலும் அவர்களில் யாருக்கும் எழுதத் தெரியாது? யார் இவர்களுக்கு எழுதிக் கொடுத்தார்கள்.?

ராஜா ஸாஹப்பின் மனதில், தான் மிகவும் வஞ்சிக்கப்பட்ட உணர்வு எழுந்தது. இது அநியாயம்! பெரிய அநியாயம்! அரசாங்கம் அவருடைய நிலத்தைப் பிடுங்கிக் கொண்டது. அதன் மேல் பஸ் ரோட், ரயில்வே லைன் எல்லாம் போட்டுக் கொண்டது. அரசாங்கம் இப்படி செய்தவுடன், ராஜமாதாவின் ட்ரான்ஸ் போர்ட் லாரிகள் இதே ரோட்டில் கரி, கட்டை, தானியம், கூலிகள், எல்லாவற்றையும் சுமந்து செல்கின்றன. ரயில் வாகனங்களில், அவருடைய டிம்பர் ஆலைகளில் அறுக்கப்பட்ட பலகைகள், கட்டைகள் செல்கின்றன. ஆனால் பிரச்சினைக்குரிய விஷயம் இதுவல்ல. சர்க்கார் ராஜா ஸாஹப்பின் நிலத்தை பிடுங்கிக் கொண்டுவிட்டது என்பதுதான் முக்கியப் பிரச்சினை. இந்த அக்கிரமத்திற்கு மேல், இப்பொழுது இந்தக் கூலிகள் தொல்லை, அறுவடையில் பாதி தங்களுடையது என்ற அநியாயம்! அரசாங்க லேபர் ஆஃபீஸரின் நியமப்படி அறுவடையில் பங்கு வேண்டுமாம்–!

இந்த முறை கூலிக்காரர்கள் ராஜா ஸாஹப்பின் ஆட்கள் அறுவடையை எடுத்துச் செல்ல விடவில்லை. "அடிச்சுக் கொல் லுங்கடா–" என்று கத்திக்கொண்டு அடிதடியில் இறங்கினார்கள். அதில் மதுரா சிங் காயமடைந்தான். சந்தன் மல்லின் கையிலிருந்த துப்பாக்கியைப் பிடுங்கிக்கொண்டு விட்டார்கள். ராஜா ஸாஹப்பே சுட வேண்டியதாயிற்று. அதில் ஒரு ஆள் செத்து விட்டான். சாக வேண்டியதுதானே!

இப்படித்தான் நடக்கிறது, இப்படித்தான் நடந்துகொண்டே இருக்கும். நவாகட்டின் மண் எத்தனை புராதனமோ அத்தனை புராதனம் இத்தகைய சம்பவங்கள். கிழவி தன்னுடைய பேரனைத் தூங்கப் பண்ணும் போது கதை சொல்லுவாள், "–பிறகு ராஜா

ஸாஹப் வந்தார். வந்து கேட்டார்—ஏய்! துகியா! இது என்னடா போக்கிரித்தனம்? உன் தாதா பதில் சொன்னார்—எது போக்கிரித் தனம்? இதில் என்ன போக்கிரித்தனம்? எங்க பங்கைக் கொடு. அது எங்க உரிமை. பொறகு உன் கொலைகார சிப்பாய்களைத் திரும்பிப் போகச்சொல்லுன்னு. அதற்குப் பிறகு ராஜா ஸாஹப் துப்பாக்கியால சுட்டார். உங்க தாதாவைக் கொன்னு போட்டார். தோள் உடைஞ்சு போய் ரத்தம் பாய்ந்தது- கங்கை வெள்ளத்தில தண்ணி போறாப் போல..."

இப்படித் தான் நடக்கிறது- நடந்து கொண்டே இருக்கும். நிலச்சொந்தக்காரன்-ஏழை விவசாயி, கூலி, குத்தகைக்காரன் கதை இப்படியாகத்தான் நடந்து கொண்டே போயிருக்கிறது. இந்தக் கதையை யாராலும் மாற்ற முடியாது-

ஆனால் இம்முறை இக்கதையில் ஒரு சிறு மாறுதல் ஏற்பட்டது. அவர்கள் அடிக்க, அடிக்க, இவர்கள் அடிபட்டுக் கொண்டே கோஷம் எழுப்பினார்கள்: "எங்கள் உழைப்பால் விளைந்தது தானியம், இதில் பாதிக்கு மேல் எங்களுக்கு அடிப்படை அதிகாரம் உண்டு."

நவாகட்டின் மண்ணின் கதையில் இப்படி ஒரு சம்பவம் நடந்ததில்லை. இதனுடைய ஒரு விளைவு நவாகட்டில் போலீஸ் வந்து உட்கார்ந்து கொண்டது. துகியாவின் சவம் எங்கோ அனுப்பப்பட்டு விட்டது. சட்டத்தையும் அமைதியையும் குலைத் ததற்காக கூலிகளின் மேல் கேஸ் போடப்பட்டது. திடீரென்று ஒரு புதிய விபரீதம். கூலி யூனியனும் பதிலுக்கு கோர்ட்டில் கேஸ் போட்டது. அவர்களும் கேஸ் போட்டு போராட முடிவெடுத்தனர். இந்தக் காரணங்களால் நவாகட்டில் போலீஸ் காம்ப் வந்து உட்கார்ந்து கொண்டது. எல்லார் மனதிலும் பீதி குடிகொண்டது. மூன்று மாதங்கள் யாரும் மூச்சுவிடவில்லை, மௌனமான சிடுசிடுப்புடன் இருந்தார்கள்.

இதன் நடுவில்தான் ராஜா ஸாஹப்புக்கு நல்ல சேதிவந்து கொஞ்சம் ஆசுவாசம் கிடைத்தது. இறுக்கமான சூழ்நிலை கொஞ்சம் தளர்ந்தது. ஈட்டுதொகை கிடைத்த சமாசாரம் வந்து சேர்ந்தது-

பிகாரி துஸாதுக்கு (பிகாரி—பிச்சைக்காரன்) யாரும் எதுவும் சொல்லவில்லை. அவன் ஒரு பயந்தாங்கொள்ளி. ஆடு மேய்த்துக் கொண்டு திரிவது அவனுடைய தொழில். இதன் மூலமாக அவன் வயிற்றைக் கழுவிக் கொண்டிருந்தான். இந்த ஆடுகள்தான் அவனுடைய நண்பர்கள். ஆடுகளுக்காக அவன் ரொம்ப

சிரமப்பட வேண்டியதில்லை, எல்லா விதமான இலைகளையும் அவை தின்கின்றன. புல்லைத்தான் எப்போதுமே தின்னுமே! தவிர எது வேண்டுமானாலும் தின்னும். வருஷத்தில் ஒன்றுக்கும் அதிகமான குட்டிகள் போடுகின்றன.

வேறு யாராவதாக இருந்தால், இந்த ஆடுகளால் அவர் களுடைய அதிர்ஷ்டமே மாறிப் போய்விட்டிருக்கும். ஆனால் பிச்சையின் தலையெழுத்து வேறு. அவன் தனது ஆடுகளை குடும்பக் கட்டுப்பாட்டு நெறியில் அடக்கி வைத்திருந்தான். இரண்டு பெண் ஆடுகள், ஒரு ஆண், அல்லது ஒரு பெண் ஆடு, இரண்டு ஆண், இதற்கு மேல் அவற்றின் எண்ணிக்கை போவதில்லை. "என்னா செய்யறது. ஐயா! பிச்சையின் தலைவிதி அப்படி!"

"வேறு யாராவதாக இருந்தால், ஆடுகள் மேய்த்துப் பெரிய பணக்காரர்களாகி விட்டிருப்பார்கள். உன்னுடைய தலைவிதி மட்டும் ஏன் மாறமாட்டேங்குது?"

"எப்படி மாறும்? காட்டுல மேய்க்கிறேன். சில சமயம் காட்டு நாய் எடுத்துட்டுப் போகுது, ஓநாய் எடுத்துகிட்டுப் போவுது. லாலாஜி, ஒரு ஆழாக்கு சத்து மாவு கொடு. கொஞ்சம் எலுமிச்சம் பழ ஊறுகாய் அஞ்சு பைஸாக்கு, அஞ்சு பைஸாக்கு உப்பு."

"இவ்ளோதானா? இதுல வயிறு ரொம்பிடுமா?"

"தாராளமா லாலாஜி."

"ஏண்டா பிச்சை! நீ ஏன் ஆடுகளை சந்தையில விக்கக் கூடாது? அங்கே வித்தா நிறைய பணம் கிடைக்குமே?"

"என்ன செய்யறது ஐயா? எனக்கு யாருமே நிறைய பணம் கொடுக்க மாட்டேங்கிறாங்களே-"

பிச்சை, பயந்தாங்கொள்ளி பிச்சை, 'ஹோ ஹோ' என்று சிரிக்கிறான். தனது ஏமாளியான, நிலையற்ற வாழ்க்கைக்காக அவனே வெட்கப்படுகிறான். அவ்வப்போது அவன் தன் தோளில் ஆட்டுக்குட்டியைத் தூக்கிக்கொண்டு பால் கொடுக்கும் ஆட்டை இழுத்துக் கொண்டு காட்டை நோக்கி ஓடிக் கொண்டிருப்பதைக் காணலாம். அவன் முகத்தில், கண்களில் பயங்கர பீதியும் உத்வேகமும் தெரியும். அவன் உதட்டோரங்களில் எச்சில் வழிந்து கொண்டிருக்கும். பிச்சையின் இந்த நிலையைக் கண்டு நவாகட் வாசிகள் அதிர்ச்சி அடைவார்கள்.

"என்ன ஆச்சு, பிச்சை-?"

"போலீஸ் வந்திருக்கு, போலீஸ்-"

"அதனால உனக்கு என்ன?"

"அவங்க ஆட்டைத் தூக்கிக்கிட்டு போய்டுவாங்க."

'ஓடு, பிச்சை, ஓடு. காட்டில் புலி இருக்கு, ஓநாயிருக்கு, அதுங்க ஆடுகளுக்கு எதிரி, சரி. ஆனா, நவாகட்டில் போலீஸ்தான் எதிரி– ஓடு.' பிச்சை காட்டில் புகுந்து விடுவான். வெகுதூரம் சென்று அரிவாளால் கிளைகள் வெட்டி வெட்டி, ஆடுகளுக்காக ஒரு சிறிய கொட்டகை போடுவான். அதில் ஆடுகளைப் புகுத்திவிட்டு, வாயிலில் உட்கார்ந்துகொண்டு நடுங்குவான்.

சொத்து, ஆஸ்தி என்ற வகையில் அவனிடம் ஒன்றுமில்லை, இந்த ஆடுகள்தான் எல்லாம். நிலமில்லை, மனைவி, குழந்தை குட்டி எதுவும் இல்லை. தொழில் என்று ஏதுமில்லை. உடலில் ஒரு கோவணம். ஆடு மேய்ப்பது அப்படி ஒன்றும் மோசமான தொழில் இல்லை. அவனிடம் என்றோ ஒரு நாள் பத்துப் பனிரெண்டு ஆடுகள் சேர்ந்தால் அவற்றை எடுத்துக்கொண்டு சுமாதி சந்தைக்குப் போகலாம். ஆடுகளை விற்றால் பணம் கிடைக்கும். சினையாக இருக்கிற ஆடுகளைத் தவிர மற்ற எல்லா ஆடுகளையும் விற்று விடலாம்.

அப்புறம் ஒரு நீளமான வேட்டி வாங்கணும். எப்போதும் கோவணம்தான் அவன் உடை. வேட்டியோடு ஒரு புது பனியன் வாங்கணும். பிறகு சுமாதி இல்லாட்டி வேறு எங்கேயாவது துஸாதுங்க இருக்கிற சேரியை தேடிக்கண்டு பிடிக்கணும். பஜாரில் அம்பட்டங்கதான் வராங்களே. அவங்ககிட்ட கேட்டா தெரியும். யாராவது விதவை, இல்லாட்டி வயசான கிழவித் துஸாதியெ கல்யாணம் கட்டிக்கிடலாம். அப்போ அவனுக்குன்னு ஒரு வீடு, ஒரு குடிசை இருக்கும். இரண்டுபேர் இருந்தா ஆடுங்க எண்ணிக் கையும் அதிகமாகும்.

ஆனால் பிச்சையின் இந்தக் கனவு அவன் ஆயுளில் நிஜமாகப் போவதில்லை. பாடா கிராமத்தில் துஸாதுகள் காட்டு நிலத்தில் சேரி அமைத்துக்கொண்டிருக்கிறார்கள். அங்கு பிச்சை ரொம்ப சந்தோஷமாக இருந்தான். ஆனால் என்ன செய்வது, ஐயா! பாடாவில் லட்சுமண் சிங்தான் பெரிய மனுசன். துஸாதுகளுக்கும் அவனுக்கும் ஏதோ ஒரு விஷயத்தில் சண்டை. துஸாதுங்க அவனைக் கொன்னு போட்டுட்டானுக. போலீஸ் வந்து கேம்ப் போட்டுச்சு- துஸாதுங்களோட ஆடுங்களையெல்லாம் திங்க ஆரம்பிச்சுட்டாங்க. பிச்சையின் ஆடுகளையும் சேர்த்துத்தான்– அவங்க முன்னால எவ்வளவு அழுது பார்த்தான் பிச்சை! 'இதைத் தவிர எங்கிட்ட வேறு ஒண்ணுமே இல்ல சாமி. இந்த ஆடுங்கதான் எனக்கு பொழைப்புங்க்'ன்னு. ஆனால் போலீஸ் இதையெல்லாம்

காதில் வாங்கிக்கவே இல்லே. அவங்களுக்குப் புரியக்கூட இல்லை. கடைசியில் ராங்கா துஸாத் சொன்னான் "நீ பால் குடுக்கிற ஆடுங்கள எடுத்துகிட்டு ஓடிப்போயிடு. நாடா கிராமத்தில் ஒரு வம்புமில்லே. ஆடு மேய்க்கறதுக்கு பெரிய மைதானம் இருக்கு, ஒரு பெரிய ஆல மரம் இருக்கு, அதுக்குக்கீழே நீ தூங்கலாம்."

ஆல மரத்தின் கீழே புல்லு வைக்கோல், அது, இதுன்னு எதெதையோ வெச்சுக் கட்டின குடிசை ஒன்று இருந்தது. ஆடு குட்டிகளைப் போட்டது. குட்டிங்க வளர்ந்து பெரிசாச்சு. நாடாவின் எசமான் ஒரு ராஜ்புத். அவங்க ஆளுக மாமிசம் சாப்பிடுவாங்க. பார்வைக்கு பயில்வான் மாதிரி இருப்பாங்க. பிச்சையின் பக்கம் திரும்பிக்கூட பாக்க மாட்டாங்க. இறைச்சி திங்கணும்னா காசு கொடுத்து வாங்கிக்கொண்டு போவாங்க. காசு கொஞ்சம் குறைவா இருக்கும். நெசம்தான், எட்டு அல்லது பத்து ரூபா. பத்து பன்னண்டு சேர் இறைச்சி எங்கேயாவது எட்டு பத்துக்குக் கிடைக்குமா? என்ன செய்ய, ஐயா! எல்லாருடைய தலைவிதியும் ஒரே மாதிரியிருக்கா?

நாடா எசமான் குடும்பத்தில ஒரு ஆளு யாரோ ஒரு பொம்பிளைய சுட்டுக்கொன்னு போட்டுட்டான். அவ ஹோலி பாட்டு பாடும் குழுவிலிருந்தவள். அவ்வளவுதான். நாடாவுக்கு போலீஸ் வந்துவிட்டது. போலீஸ் வந்தவுடனேயே, எசமான் குடும்பத்துக்காரங்க சொன்னாங்க - பிச்சை துஸாத்கிட்டேயிருந்து ஒரு ஆடு பிடிச்சுகிட்டு வான்னு. மூணுநாளில மூணு ஆடுங்கள போலீசுக்குக் கொடுத்த பிறகு பிச்சை அங்கிருந்து ஓட வேண்டியதாயிற்று.

எல்லாருக்குமே இந்த உலகம் பரந்ததாக இல்லை. பிச்சைக்கு இந்த உலகம் மிகவும் குறுகலாக இருந்தது. நாடாவிற்குப் பிறகு உடைந்தபோன இதயத்துடன் டாஹாடுக்குப் போனான். டாஹாடின் சிவன் கோவிலின் பூஜாரி ஹனுமான் மிஸ்ராவை வணங்கினான். மிஸ்ராவின் உடல்தான் எத்தனை பளபளப்பு! நல்ல சிகப்பு நிறம். உடம்பிலிருந்து ஒளி கிளம்புவது போல் இருந்தது. பிச்சை துஸாத் சொல்லிக் கொண்டான்: 'ஏன் இருக்காது? பிராமண தேவதை தினமும் பால் குடிக்கிறார். பாலிலே குளிக்கிறார். பகவான் மஹாதேவுடன் பேசுகிறார்-"

பிச்சை ஒரு முறை காட்டுப் பிரதேசத்திலிருந்த துஸாத் கண்ஜுக்கு கூட்டத்தில் ஒருவனாக சென்றிருந்தான். டாஹாடின் துஸாதுகள் அவனை மிகவும் அன்புடன் கூப்பிட்டிருந்தார்கள். அவன் அங்கு வசிக்கத் தொடங்கினான். ஆடுகளைக் காட்டில்

மேய்க்கச் செல்லும் போதெல்லாம் துஸாத் கிழவி அவனுடைய சினை ஆட்டைப் பார்த்துக்கொண்டாள். அவனுக்குச் சோறு கூட பொங்கிப்போட்டாள். அவர்கள் எல்லாரும் சொன்னார்கள்: "நீ இங்கேயே இருந்துக்க, எங்க கூட்டத்தில இன்னும் ஒரு குடும்பம் கூடிடும். நாங்க உனக்கு ஒரு கல்யாணமும் கட்டி வெக்கிறோம்." மிகவும் சந்தோஷமாகவே பிச்சைக்காரன் அங்கு இருந்தான்: ஒரு நாள் அந்த பகுதியின் தரோகா பிராமணரின் வீட்டுக்கு வந்தார். அவர் டாஹாடில் ஏழு நாள் தங்கியிருந்தார். ஒரு நாள் பிராமண தேவதை அவனைக் கூப்பிட்டுச்சொன்னார் "பிச்சை! தரோகாஜி சாப்பிடுவதற்கு ஒரு ஆடு கொடு."

"நான் ஆட்டை விக்கப் போயிக்கிட்டு இருக்கேன் சாமி!"

"என்ன சொன்னே-? போலீஸ், தரோகாக்களை எல்லாரும் தேவி தேவதைகள் இடத்தில் வைத்து கும்பிடுகிறார்கள்- அவர் சாப்பிடுவதற்காக நான் ஒரு ஆடு கேட்கிறேன், நீ என்னடான்னா, காசு விஷயம் பேசறே?"

ஆட்டை பிராமண தேவதைக்கு தானம் பண்ணிவிட்டு டாஹாடையும் விட்டு விட்டான் பிச்சை. டாஹாட் துஸாதுகளுக்கு மிகவும் வருத்தம்தான். ஆனால் என்ன செய்வது "உங்க நிலையில நான் இல்லையே- நிலத்தில கூலி வேலை, பர்மிட் வாங்கிக்கிட்டு, காட்டிலே காஞ்சு போன கட்டைங்கள வெட்டி விக்கும் தொழில், எதுவும் எனக்கு இல்லையே? ஆடுங்கதான் எனக்கு ஆதாரம், அத வளக்கறது, விக்கறது, வளக்கறது, விக்கறது இதுதான் தெரியும். போலீஸ் என் வயத்தக் கழுவ விட மாட்டேங்கிறாங்களே?"

டாஹாடின் துஸாத் ஜனங்களைப் பிச்சைக்கு மிகவும் பிடித்திருந்தது. ஏழை என்பதால் எவரும் அவனை சிறுமைப் படுத்தவில்லை. அம்மா கிழவி அவனுக்காக துந்துலி கறி சமைத்துப் போட்டாள். ஹருவாவின் மனைவியும் அவளுடைய மகன் மூலம் கரம்சா ஊறுகாயும் சாமி பிரசாதமும் கொடுத்து அனுப்பினாள். ஹருவா ஒரு முள்ளம் பன்றியைக் கொன்றிருந்தான். அதன் இறைச்சியில் ஒரு பங்கு அவனுக்குக் கொடுத்தான்.

இதெல்லாவற்றையும் உதறி விட்டு நவாகட் வந்தடைந்தான். தொடக்கப் பள்ளி வாத்தியார் ஸுக்சாந்த்ஜி ரொம்ப நல்ல மனிதர். ஸ்கூலுக்கு பக்கத்திலிருந்த ஆல மரத்தடியில் உட்கார்ந்துகொண்டு பிச்சையுடன் பேச்சுக்கொடுப்பார். வயதில் சின்னவர். இந்தப் பகுதியின் பழக்கவழக்கங்கள், நடைமுறை விதிகள் பற்றி அவருக்குத் தெரியாது. அதனால் ஒரு நாள் அவர் சொன்னார்:

“இரவில் வயதானவர்களுக்கு எழுதப்படிக்க சொல்லிக் கொடுக்கிறேன். நீயும் வாயேன்-”

“என்ன செய்யறது மகராஜ்- பிச்சைக்காரனுக்கு நீ எழுதப் படிக்கக் கத்துக் கொடுத்தீன்னா அவ்வளவுதான், பிச்சை இங்கிருந்து ஓடிப்போகவேண்டியதுதான். ராஜா ஸாஹப் துரத்தி விட்டுருவார். போலீஸ் வருவாங்க, லாலா கடன் தர மாட்டான், கிணத்துலேந்து தண்ணி கிடைக்காது-”

ஸுக்சாந்த் கேட்டார்: “அதெப்படி நடக்கும்?”

“ஏன் நடக்காது? ஒரு டார்ச் விளக்கை பாத்துட்டு நான் கேட்டேன், ‘அது என்ன விலை லாலாஜி?’ன்னு. அவனுக்குக் கோபம் வந்துருச்சு. ‘பிச்சக்காரப் பயலே! நீ ஒரு துஸாத், கீழ்த் தரமான வேலை செய்யறவன், கீழ் சாதிக்காரன். ஒனக்கு டார்ச் ஒரு கேடா?’ அப்படின்னு கேக்கறான்.”

நவாகட்டில் பிச்சையின் முகவரி ஒரு உடைந்துபோன பஸ். அதில்தான் அவன் வசித்து வந்தான். ராஜா ஸாஹப்பின் வக்கீல் உடைந்து நொறுங்கிப்போன பஸ், லாரியெல்லாம் வாங்குவார். கொஞ்சம் கொஞ்சமாக நிறைய வண்டிகள் சேர்ந்தவுடன் அவற்றை மேலும் உடைத்து அதனுடைய இரும்பு மர சாமான்களை விற்பனை செய்வார். இந்த உடைந்து நொறுங்கிப் போன பஸ் ஒன்றில்தான் பிச்சை வசித்து வந்தான். பஸ்களின் நடுவில் இருந்த நிலத்தில் புல் பூண்டுகள் வளர்ந்திருந்தன. பிச்சையின் ஆடுகள் அவற்றையே மேய்ந்தன. நவாகட்டில் ஆடுகள் மேய்வதற்கு மைதானம் இருக்கிறது. ஆனால் பிச்சைக்கு மைதானத்தில் மேய்க்கும் அளவிற்கு ஆடுகள் இல்லை.

காட்டில் இருந்தபோது, தனது ஆடுகளை கொட்டகையில் அடைத்துவிட்டு வெளியில் உட்கார்ந்துகொண்டு என்னவெல்லாமோ யோசித்துக் கொண்டிருப்பான்... யோசனை மேல் யோசனை. ‘போலீஸ் ஏன் லாலாஜியின் கடையை கொள்ளையடிப்பதில்லை-? பசு மாட்டுக்காரர்களின் பசுக்களை ஏன் கொண்டு போவதில்லை-? யாரிடம் இருக்கிறதோ அவற்றை அவர்களிடமே இருக்க விடுகிறார்கள். ஏன் என்னுடைய ஆடுகளை மட்டும் தள்ளிக்கொண்டு போகிறார்கள்?’

பிறகு ஆடுகளைக் கொட்டகையில் வைத்துவிட்டு தனது ஆடுகளைக் காப்பாற்ற மனதுக்குள் ராம பகவானை வேண்டிக் கொண்டே தனது இருப்பிடமான நவாகட் வந்தடைந்தான். இதில் நொண்டி, ஒரு கண் குருடி, குஷ்டரோகி, எல்லாரும் மிகவும் உதவிசெய்தார்கள். “இப்பவும் போலீஸ் இங்க இருக்கு, நீ

ஓடிப்போயிடு-" என்று சொன்னார்கள்.

தண்ணீர்ப் பானை, சத்து மாவு, இரண்டையும் எடுத்துக் கொண்டு மறுபடியும் பிச்சை காட்டுக்குள் புகுந்தான். ராம்ஜி என்றாவது ஒரு நாள் கிருபை செய்வார்- என் ஆடுகள் பிழைச்சுப் போகும்- சில சமயங்களில் பிச்சையின் பிரார்த்தனைகளை ராம்ஜி மறந்து விடுகிறார். சில சமயங்களில் ஆடுகளில் ஏதாவது ஒன்றை ஓநாய் எடுத்துக்கொணடு போய்விடுகிறது. அல்லது பாம்பு கடிக்கிறது. குட்டிகளை நரி எடுத்துக்கொண்டு போய்விடுகிறது.

காட்டுக்குச் சென்று ஆடுகளுக்கு தண்ணீர் வைத்தான். சத்து மாவையும் வெல்லத்தையும் துணியில் வைத்து தண்ணீர் தெளித்து பிசைந்து தானும் சாப்பிட்டான். இதே மாதிரி இரண்டு மூன்று நாட்களைக் கழித்தான். தினமும் நவாகட் போகவேண்டியிருந்தது. போலீஸ் போன பிறகு நவாகட் திரும்பலாம்.

இம்முறை போலீஸ் நவாகட்டில் மூன்று மாதங்கள் தங்கியிருந்தது.

பிச்சை காட்டு மிருகம் மாதிரியே ஆகிவிட்டான். காட்டு ஓரங்களைப் பிடித்துக்கொண்டே அவன் பாடா கிராமத்தை நோக்கிச் சென்றான். அங்கே ராங்கா துஸாதுடன் அவனுக்கு சந்திப்பு ஏற்பட்டது.

ராங்கா உதவி செய்யாதிருந்தால் பிச்சை இவ்வளவு நாள் காட்டில் இருந்திருக்க முடியாது.

ராங்கா அவனுடைய பிரச்சினைகளை கவனத்துடன் கேட்ட பிறகு சொன்னான்: "கொஞ்சம் பொறுத்துக்க. நான் பாக்கறேன்." மூன்று நான்கு துஸாத் பையன்களை அழைத்துக்கொண்டு ஒரு நாள் ராங்கா காட்டுக்கு வந்தான. அவன் பிச்சையின் ஆடுகளுக்கு ஒரு உறுதியான கொட்டகை கட்டிக்கொடுத்தான். மேலே கிளை இலைகளை பரப்பினார்கள். பிறகு சொன்னான்: "இங்கேயே இரு பக்கத்திலும் வாய்க்கால் இருக்கு, தண்ணி கிடைக்கும்."

"சோறு-?"

"காசு கொடு, ஏதாவது வாங்கி வந்து தர்ரேன்."

"இந்தா."

சில நாட்களுக்குப்பிறகு ராங்கா சொன்னான்: "இன்னும் எத்தனை நாளக்கி நீ இங்கேயே இருக்கவேண்டியிருக்கும்னு தெரியலே. ஒரு ஆட்டை வித்துடு-"

"எங்கே?"

"சந்தையிலே?"

"தோக்ரியிலா?"

"பின்ன வேறு எங்கே?"

"நான் அங்கே போனதே கிடையாதே?"

"எம்மேல நம்பிக்கை இருந்தா எங்கிட்ட கொடு-"

"என்ன சொல்றே நீ? ஒன்னெ நம்பாட்டி யாரை நான் நம்புவேன்?"

ஆட்டை விற்று ராங்கா பிச்சையின் கையில் ஏழு ரூபாய் வைத்தான். கையில் பணம் வந்தவுடன் பிச்சைக்கு தான் ஒரு ராஜாவாகி விட்டதைப் போலிருந்தது. மூன்று மாதத்தில் அவனுடைய ஆடு குட்டிபோட்டது. அதில் ஒன்றை விற்று தனது சாப்பாட்டிற்கான பணத்தை ராங்காவிற்குக் கொடுத்தான். ராங்கா தெரிவித்தான்: "இப்போ போலீஸ் இல்லை. நடுநடுவே துஸாத் சேரிக்கு வந்துபோய்க்கொண்டிரு."

"மெய்யாலுமா?"

"அப்படித்தான் கேள்விப்பட்டேன்."

பிச்சைக்கு இப்பொழுது நவாகட்டுக்குத் திரும்பிப் போக வேண்டும் என்று தோன்றியது.

இப்பொழுது அவனிடம் எட்டு ஆடுகள் இருந்தன-இரண்டு ஆண், இரண்டு பெண் ஆடுகள், நான்கு குட்டிகள்.

ராங்கா சொன்னான்: "முதல்லே போலீஸ் போகட்டும், அப்புறம் நீ போகலாம்."

போலீசும் ஒரு நாள் போயே விட்டது. காம்ப் கலைக்கப் பட்டது. பிறகு பிச்சை நவாகட்டுக்குக் கிளம்பினான். தனது இருப்பிடத்திற்கு திரும்பும் குஷியில் மிதந்தான். நவாகட்டில் தனது இருப்பிடத்தை அடைந்தபோது பிச்சைக்கு என்ன ஆனந்தம், என்ன ஆனந்தம்! ஒரு கண் குருடி துடைப்பத்தால் பெருக்கி, அவனுடைய அறையை - அதாவது பஸ்ஸின் ஒரு மூலையை சுத்தம் செய்தாள். பிறகு ஒரு நோட்டம் விட்டு விட்டு சொன்னாள்: "சரியாப் பாத்துக்க. உன் சாமானெல்லாம் இருக்கான்னு-"

"ஓ எல்லாம் இருக்கே-"

அப்படி என்ன பொல்லாத சாமான்- புல்லில் வேய்ந்த ஒரு பாய், மூக்கு உடைந்துபோன ஒரு பாட்டில், ஒரு தகர குப்பி-

"உனக்கு தெரியுமா, பிச்சை?"

"என்ன?"

"தோரா ஓடிபோயிட்டான்-"

"எங்கே?"

"சுமாதிக்கு... சந்தையில உட்கார்ந்தா நிறைய பணம் கிடைக்கிறது. பொறகு அந்த நொண்டி என்ன செஞ்சான்

தெரியுமா? தாம்லிக்கு ஓடிப்போய் இன்னொரு பொம்பிளைய கொண்டு வந்திருக்கான்."

"நீ?"

"என்னை யாரு சீந்துவாங்க, நீயே சொல்லு, ஒரு கண்ணால ஒண்ணும் பாக்க முடியலே, இதை விட இரண்டு கண்ணும் போயிருந்தா நல்லா இருந்திருக்கும்- குருடிக்கு பிச்சைக்காசு நிறைய கிடைக்கும். எனக்கு வயசும் ஆகல. எல்லாரும் சொல்றாங்க ஏன் வேலை செஞ்சு பிழைக்கக்கூடாதுன்னு? நீயே சொல்லு, என்னால என்ன வேலை செய்ய முடியும்? தினமும் தோக்ரி போகலியா? இவ்வளவு தூரம் தினமும் நடந்து போய் வந்துட்டு இருக்கேன், இது என்ன கொஞ்ச உழைப்பா?"

"நீ சொல்றது நிஜம்தான்,"

"அம்மாடி! இத்தனெ ஆடா!?"

"நாளைக்கு விக்கப் போறேன்."

"நவாகட் பத்தி இன்னும் சமாசாரம் இருக்கு,"

"என்ன?"

"ராஜா ஸாஹப்புக்கு கவர்மெண்ட்டிலிருந்து ஏதோ கிடைச்சிருக்கு, என்னான்னு தெரியலை. அதனால ரொம்ப தாம் தூம்னு. கொண்டாட்டம், விருந்து சாப்பாடு எல்லாம் நடக்குது. சாயங்காலம் வாணவேடிக்கை வேற-"

"உங்களுக்கெல்லாம் ஜாலிதான்-?"

"அதெல்லாம் ஒண்ணுமில்லே. முன்ன மாதிரி இல்லே. சாப்பிட்ட எலையில இப்போதெல்லாம் பாக்கி ஒண்ணுமில்ல. நமக்கெல்லாம் என்ன கிடைக்கப் போகுது? ஆமா, தோக்ரியில ஒருவாட்டி சாப்பிட்டேன், பைஜ்நாத் லாலா செத்தப்போ.. இவ்ளோ இவ்ளோ கச்சோரி-"

"அப்படியா-"

"எங்கே போறே?"

"சும்மா ஸுக்சாந்த்ஜி வீட்டு வரைக்கும் போயிட்டு வாறேன்."

ஸுக்சாந்த், இவன் துஸாத், ஆடு மேய்க்கிறான் என்பதற்காக அவனை அலட்சியப்படுத்துவதில்லை. நவாகட்டுக்குள் நுழைந்த பிறகு கூட 'பிச்சை! இத்தனை நாள் எங்கே போயிருந்தே?'ன்னு யாரும் கேட்கவில்லை. அங்கு இருந்தபோது கூட அவன் யார் கண்ணிலும் படுவதில்லை. அவன் இல்லாது போதும் கூட, அவனை பற்றி யாரும் எந்த வித விசாரணையும் மேற்கொள்ள வில்லை. இப்பொழுது அவன் திரும்பி வந்த பிறகும் யாரும் அவனைக் கண்டுகொள்ளவில்லை.

என்ன செய்வது மஹராஜ்! இதெல்லாம் நடந்துகொண்டே தான் இருக்கிறது. ஆட்டுப் பாலுக்கும் இறைச்சிக்கும் பிச்சையின் உதவி தேவைப்படுகிறது, மிகவும் குறைந்த விலையில பாலும் இறைச்சியும் வாங்குவதற்கு. ஆனால் அதற்காக அவனை மனிதர்களில் ஒருவனாகக் கணக்குப் போடமுடியுமா? முடியாது, முடியாது, முடியவே முடியாது. இது ரொம்ப பழைய கதை. நவாகட்டின் மண்ணைவிட பழைய கதை-

ஸுக்சாந்தின் ஸ்கூலுக்கு இன்று விடுமுறை, அவர் மரத்தின் கீழே உட்கார்ந்துகொண்டிருந்தார். நவாகட்டின் பால்காரர்கள், மோதிஹாரும் பகத்தும் உட்கார்ந்திருந்தார்கள். ஸுக்சாந்த் வயதில் சின்னவர். ஜனங்களுக்கு விஷயங்களைச் சொல்லிப்புரிய வைப்பதில் அவருக்கு ரொம்ப உற்சாகம். இந்த இரண்டு பால் காரர்களுக்கும் ஏதோ ஒரு விஷயத்தை மிக விஸ்தாரமாக விளக்கிக் கொண்டிருந்தார். பிச்சையைப் பார்த்துவிட்டு சொன்னார்: "வா, வா, எப்போ வந்தே?"

"விடியக்காலையில, ஸுக்சாந்த்ஜி..."

"நல்லா இருக்கியா?"

"ராம்ஜி சித்தப்படி- நீங்க நல்லா இருக்கீங்களா?"

"ஓ! உட்கார், உட்கார்."

கைகள் இரண்டையும் கூப்பிக்கொண்டு, மிக பயபக்தியுடன், சிறிது சிரித்துக்கொண்டே கொஞ்ச தூரத்திலேயே பிச்சை உட்கார்ந்தான். பால்காரர்கள் கால்களில் பெரிய பெரிய செருப்புகள். காதில் பித்தளை வளையங்கள், கையில் தடி. அவர்களைப் பார்த்தால் பிச்சைக்கு பயமாக இருந்தது.

மோதிஹார் பிச்சையைக் கண்டுகொள்ளவே இல்லை. ஸுக்சாந்ஜியிடம் சொன்னான்: "நீங்க சொன்னது புரியலே. மறுபடியும் சொல்லுங்க."

"முதலிலிருந்தா?"

"ஆமாம், ஆமாம்-"

"அதான் சொல்லி முடிச்சுட்டேனே?"

"இன்னும் பிடிபடலீங்க... ராஜா ஸாஹப்பின் சொந்த நிலத்திலே ரயில், பஸ் ரோடு எல்லாம் போட்டாங்க. இதெல்லாம் நடந்துகொண்டுதான் இருக்கு, இல்லையா பகத்? சர்க்கார் என்ன ஆகாசத்திலேயா ரயில் லைன், பஸ் ரோடு போடுவாங்க?"

"ஆமாம், நீ சொல்றது சரிதான்."

"இதுக்காக ராஜா ஸாஹப் எதுக்காக கேஸ் போட்டாரு? இதுதான் எனக்குப் புரியலே-?"

ஸுக்சாந்த்ஜி சொன்னார்: "ஏன் போடமாட்டாரு-? அந்த நிலம் யாருக்குச்சொந்தம்? ராஜா ஸாஹப்புக்கா, இல்லையா?"

"கட்டாயமா, அவருக்கு இன்னும் எவ்வளவோ நிலமிருக்கு."

"அந்த நிலத்துல ராஜாவுக்கு உரிமை உண்டா இல்லையா?"

"என்ன சொல்றீங்க நீங்க? கட்டாயாமா இருக்கு-"

"எப்போ உன்னுடைய சொத்து மேல உனக்கு உரிமை இருக்கோ, அப்போ இந்திய அரசியல் சாசனப்படி ஒவ்வொரு மனிதனுக்கும் அடிப்படை உரிமைகள் இருக்கிறது. ஏழுவிதமான அடிப்படை அதிகாரங்கள் இருக்கின்றன. இந்திய குடிமகனுக்கு உள்ள இந்த உரிமைகளை காத்து ரட்சிப்பது ஆட்சியின் கடமை."

"அப்படியா! ஆச்சரியமா இருக்கே? அப்போ, அடிப்படை உரிமைங்கிறது ஒண்ணும் முறை கேடான விஷயமில்லே அப்படீங் கிறீங்க? அப்படித்தானே?"

"சரியாச்சொன்னே- உங்க மூளைல இது ஒரு முறைகேடான சமாசாரமாக இருக்கும் என்ற எண்ணம் எப்படி வந்தது?"

மோதிஹார் பதில் சொன்னான்: "இந்தக்கூலிக்கார பசங்க அடிப்படை உரிமை, அடிப்படை உரிமைன்னு சொல்லிகிட்டு கூச்சல் போட்றானுகளா, அதான்- போலீஸ் கூட வந்துச்சே?"

"அது வேற விஷயம். அது அமைதி, சட்ட ஒழுங்கு பாதுகாப்பு விஷயம். கலவரம் நிகழக்கூடும் என்ற சந்தேகம் இருந்தது இல்லையா? அதான் போலீஸ் வந்தது-"

"அடிப்படை உரிமைன்னா என்னங்க?"

இந்தக்கேள்வி வந்தவுடன் ஸுக்சாந்துக்கு குஷி பிறந்து விட்டது. அவருடைய விஷய ஞானத்தை வெளியிட ஒரு அவகாசம் கிடைத்துவிட்டது. விரல் விட்டு ஒவ்வொன்றையும் அவர் விளக்கினார்: "முதல்லே சமத்துவத்துக்கு அடிப்படை உரிமை. சாதி, மதம்னு எதையும் காட்டி இந்த சமத்துவத்தை பறிக்க முடியாது. அதாவது, எல்லாரும் சமம். இதனால எந்தக் காரணத்தைக் கொண்டும், யார் மேலேயும் கொடுமை செய்ய முடியாது. இதைத்தான் முதலாவது அடிப்படை உரிமைன்னு சொல்லுவாங்க."

"இந்த விஷயமெல்லாம் புத்தகத்துலேயா எழுதியிருக்கு?"

"ஆமா- பின்ன எழுதாம?"

மோதிஹார் தன் அனுபவ ஞானத்தை வெளியிட்டுக் கொண்டு கர்வத்துடன் தலையை உயர்த்திக்கொண்டு சொன் னான்: "கட்டாயமா இது வெள்ளைக்காரன்தான் எழுதிவெச்சுட்டு போயிருக்கணும், என்ன சொல்றீங்க? ஜாதி, மதம்னு எந்த

வித்தியாசமும் கிடையாதா? அப்படீன்னா, நானும் இந்த பிச்சக் காரப் பயலும் சரி சமானமா?"

"கட்டாயமா, அரசியல் சாசனம் சொல்லுது."

"அரசியல் சாசனம் என்ன வேணும்னாலும் சொல்லட்டும், இது பொய். கண்ணாலதான் பாக்கிறோமே! அவன் கீழ் ஜாதிக்காரன் என்கிறதால இந்தப் பிச்சைய மேல் ஜாதிக் காரங்க தன் வீட்டு வாசல்ல காலடி வைக்கக்கூட விட மாட்டேங்கறாங்க? இது யாரோ சதிகாரப் பய பரப்பிவிட்ட சமாசாரம். என்ன சொல்றீங்க ஸுக்சாந்த்ஜி? ஜவஹர் பிரதம மந்திரியா இருந்தாரு. இந்திராஜி இருந்தாங்க. அப்போவெல்லாம் பிராமணனுக்கும் துஸாதுக்கும் சமமான மதிப்பு கிடைக்கணும்னு நாங்க கேள்விப் பட்டதே இல்ல-!"

ஸுக்சாந்த்ஜி தேன் கூட்டின் மேல் கல் விட்டெறிபவர் அல்ல. ஆகவே சுதாரித்துக்கொண்டு, சரளமான மொழியில் சுதந்திரத்திற்குப்பிறகு என்னென்ன அடிப்படை உரிமைகள் வந்தன என்பதை விளக்கத்தொடங்கினார்.

அப்பொழுது பகத் சொன்னான், "இது பொய்யிங்க-"

"ஏம்பா?"

"ஒருத்தன் என்ன வேலை செய்யணும்னு விரும்பினாலும் செய்யமுடியுமா?"

"கட்டாயமா-"

"முஸல்மான் திங்கிற பண்டங்களை நவாகட்டில் வியாபாரம் பண்ண முடியுமா? ஜனங்க விடுவாங்களா?"

ஸுக்சாந்திஜி சிரித்தார். பிறகு சொன்னார்: "மற்ற அடிப்படை உரிமைகளையும் கேட்டுக்குங்க. நான் சாயங்காலத்துல சின்னப் பசங்களுக்கு பாடம் சொல்லிக்கொடுக்கிறேன். நீங்களும் வாங்க. மத்தவங்களையும் அழைச்சுட்டு வாங்க. எழுதப்படிக்க கத்துக் கிட்டீங்கன்னா நீங்களே அரசியல் சாசனத்தைப் படிச்சுப் புரிந்து கொள்ளலாம்."

"இதெல்லாம் நடக்கிற காரியமா? இந்த வயசிலே?"

"எழுதப்படிக்க கத்துக்கறதுக்கு வயசுன்னு ஒண்ணு உண்டா என்ன?"

"கட்டாயமா-"

"இதுக்கு மேலே என்ன சொல்ல முடியும் என்னால? மேலே கேளுங்க-"

மோதிஹாரும் பகத்தும் கவனமாக மனதைச் செலுத்திக் கேட்டார்கள். பிச்சை ஒரு முறை கூட வாயைத் திறக்கவில்லை.

வாயை மூடிக்கொண்டு அடிப்படை உரிமைகளைப் பற்றிய விளக்கங்களைக் கேட்டுக்கொண்டு ஸுக்சாந்த்ஜியின் முகத்தை மிக்க மரியாதையுடன் பார்த்துக்கொண்டே இருந்தான்.

கடைசியில் பகத் சொன்னான்: "நீங்க கடைசியில ஒண்ணு சொன்னீங்களே அது சரி. ஒருவனுடைய சொத்தை, அவன் யாராயிருந்தாலும் சரி, அவனிடம் இருந்து வஞ்சித்து எடுத்துக் கொள்ளக் கூடாது. அது நல்ல காரியம் இல்லே."

"இந்தக் காரணத்திற்காகத்தான் ராஜா ஸாஹப்புக்கு ஆறு லட்ச ரூபா கிடைச்சுது-"

"ஆறு லட்சமா-!?"

ஆறு லட்சப் பேச்சைக் கேட்ட பிச்சையின் மனதில் எவ்வித சலனமும் ஏற்படவில்லை. ஏனென்றால், ஆறுலட்சம் என்றால் எவ்வளவு என்பதைப் பற்றி அவனுக்கு எந்தவிதமான அனுமானமும் இல்லை, ஆனால் மோதிஹாரும் பகத்தும் இதைக் கேட்டதும் ஸ்தம்பித்துப் போய்விட்டார்கள். ஆறுலட்சம் ரூபாய்!!

ஸுக்சாந்த் லோயர் பிரைமரி ஆசிரியருக்கு அரசினால் நிர்ணயிக்கப்பட்ட சம்பளம் வாங்கிக்கொண்டிருந்தார். ரூபாய் கணக்கு அவர் மனதிலும் எந்த விதமான புதுச்சலனத்தையும் ஏற்படுத்தவில்லை. அடிப்படை உரிமைகளின் முக்கியத்துவத்தைப் பற்றி மேலும் அடித்துச்சொல்வதிலேயே முனைந்திருந்தார்.

"அதான் சொல்லிகிட்டிருக்கேன். ராஜா ஸாஹப்புக்கு தனது நிலத்தின் மேல அடிப்படை உரிமை இருந்தது. சர்க்கார் ரயிலும் ரோடும் போட்ட போது அவருடைய நிலத்தை வலுக்கட்டாயமா எடுத்துக்கொண்டது. அதனால், ராஜாவின் அடிப்படை உரிமைக்கு பாதிப்பு எற்பட்டது. எப்படி? அதற்கு அவரிடமிருந்து அனுமதி பெறவில்லை. அது அரசாங்க நிலம் என்று அவர்கள் நினைத்தார்கள். இடையில் ஏதோ தப்பு நடந்துவிட்டிருந்தது-"

"அப்படியா? பிறகு?"

"ராஜா ஸாஹப் மேஜர் ஆன பிறகு வழக்குப்போட்டார்."

"யார் மேலே?"

"ரயில் நிர்வாகம், போக்குவரத்து நிர்வாகம் இரண்டு மேலேயும் வழக்குப் போட்டார்."

"அந்த வழக்குல ஜெயித்தும் விட்டார்?"

"ஆமாம்."

"இது ரொம்ப நல்ல சமாசாரம். சொத்தின் மேல் அடிப்படை உரிமை! அப்படின்னா அது நிலமாக இருக்கணும் இல்லியா?"

"இல்லே, பகத்ஜி, கவனமாக் கேளுங்க. உங்களிடம் சொத்து

இருக்கு, வீடு, மாடு, எருமை, சாமான், துணி, மணி, அது இதுன்னு. மோதிஹார்ஜியிடமும் இதெல்லாம் இருக்கு. என்னுடைய சொத்து, துணி, கட்டில், புத்தகங்கள். பிச்சையோட சொத்து ஆடுங்க- நிலைத்தது நிலையாதது ரெண்டுமே சொத்துக்கள்தான். யாராவது இதில் ஏதாவதை எடுத்துக்கொண்டால் அல்லது பிடுங்கிக் கொண்டால், அதற்கு ஈடுமானம் கொடுக்கணும்."

"இப்போ புரிஞ்சுது. இதையெல்லாம் தெரிந்துகொண்டதில் மனதில் சாந்தி ஏற்படுகிறது."

மோதிஹாரும் பகத்தும் எழுந்து நின்றார்கள்.

"அப்போ வரேங்க."

போகும் போது மோதிஹார் சொன்னான்: "வாத்தியார் ஐயா, நீங்க இப்போ ஒரு கல்யாணம் கட்டிக்குங்க.. உங்க சாதிப் பொண்ணுங்க நவாகட்டில் நிறைய இருக்காங்க. அவங்க நிலம், எருமை, சாமான் ஏர் சைக்கிள் எல்லாம் தருவாங்க-"

'அடேடே, இல்ல, இல்ல-"

"அப்ப கிளம்பறோம் ஸுக்சாந்த்ஜீ-"

"சரி- போய்ட்டு வாங்க."

அவர்கள் போய்விட்டார்கள். பிச்சை பேசாமல் உட்கார்ந்து கொண்டிருந்தான். அவன் காதில் இப்பொழுது விழுந்த ஒரு சமாசாரம் அவனை ஆச்சரியத்தில் திக்குமுக்காடச் செய்து விட்டிருந்தது. கொஞ்ச நேரத்திற்குப் பிறகு தன்னை சுதாரித்துக் கொண்டு சொன்னான்: "ஸுக்சாந்த்ஜி!"

'சொல்லுப்பா-"

"நீங்க இப்போ சொன்னீங்களே, அது மெய்யாலுமா?"

"ஆமாம், உண்மைதான்."

"அந்த அடிபடா உரிமைன்னு நீங்க சொன்னீங்க இல்ல-"

"அடிபடா அல்ல, அடிப்படை உரிமை-"

"நான் யோசனை பண்ணிப்பாத்தேன். இந்த கூலி குத்தகைக் காரங்க இருக்கானுகளே, அவங்களும் இதத்தான கோஷம் போடறாங்க? அவங்களும் இதைத்தான் சொல்றாங்க இல்லையா?"

"ஆமாம்."

"ராஜா ஸாஹப்பின் நிலம் அவருடைய சொத்து இல்லையா?"

"ஆமாம்."

"என்னுடைய ஆடு கீடெல்லாம் என் சொத்து இல்லையா?"

"நிச்சயமா-"

"ராஜா ஸாஹப் சொத்தை அரசாங்கம் பிடுங்கிட்டதால அவ்ளோ பணம் கொடுத்தாங்க இல்லையா?"

"ஆமாம்."

"அப்போ என்னோட ஆடுங்கள போலீஸ் எடுத்துகிட்டு போறாங்க. அந்த பயத்துல நான் காட்டுக்கு ஓடி ஓடிப் போறேன். ஆனா, ஸுக்சாந்த்ஜி, போலீஸ்காரங்க என்னோட ஆட்டைப் பிடிச்சுக்கிட்டுப் போறப்போ எனக்கு மட்டும் ஏன் காசு கிடைக்கிற தில்லே? சர்க்கார் போலீஸ்காராங்ககிட்ட அடிப்படை உரிமை பத்தி சொல்ல மறந்துட்டாங்களா?"

"பிச்சை! இது போலீஸ்காரங்க பண்ற அக்கிரமம்."

"அப்போ ஸுக்சாந்த்ஜி, ராஜா ஸாஹப்புக்கு பணம் கிடச்சுது. இப்போ ராஜா ஸாஹப் மாதிரியான பெரிய பெரிய மனுஷங் களுக்கு மட்டும்தான் பணம் கிடைக்குமா?"

வேதனையுடன் சற்றே சிரித்துக்கொண்டு ஸுக்சாந்த்ஜி சொன்னார், "உண்மையில் அப்படித்தான் தெரியுது அப்பனே. ஆனா அரசியல் சாசனத்தில நல்ல நல்ல விஷயமெல்லாம் எழுதி யிருக்கு, கொஞ்சம் முன்ன நான் எடுத்துச் சொன்னாப்போல."

"எனக்குத்தெரியுது ஸுக்சாந்த்ஜீ! என்ன எழுதியிருக்குன்னு."

"ராஜா ஸாஹப்புக்குக் கிடைத்தது கேஸ் போட்ட பிறகு. அரசியல் சாசனத்தில் இதுவும் எழுதியிருக்கு — உன்னோட அடிப்படை உரிமை பறிக்கப்படும்போது, நீ கேஸ் போடலாம் அப்படின்னு."

"நானா? நான் கேஸ் போட்றதா? நான் எப்படி கேஸ் போட முடியும் ஸுக்சாந்த்ஜி? கேஸ் போடுறது பத்தி எனக்கு என்ன தெரியும்? போலீஸ் ஆட்டை கடத்திகிட்டுப் போனா எந்த துஸாதுக்கும் போலீஸ் மேல கேஸ் போட்ற சக்தி இல்லே."

ஸுக்சாந்த்ஜி சொன்னார்: "போடமுடியும், அதற்கான உரிமை அவனுக்கு இருக்கு."

"எப்பிடி?"

"எப்படீன்னா? உரிமை இருக்குன்னு நான் சொன்னேனே?"

"அதுக்கு பணம் எங்கே இருக்கு? அதுக்கு துணிவு எங்கே இருக்கு துஸாதுகிட்ட? இந்த உரிமை-கிரிமை பேச்செல்லாம் எனக்குப் புரியல, ஸுக்சாந்த்ஜி இதெல்லாம் ஒண்ணும் நடக்காது."

"ஆமா, நீ சொல்றதும் சரிதான், நான் வேற என்ன சொல்ல முடியும்?" ஸுக்சாந்த்ஜி குழம்பிப்போய் வெட்கப்பட்டுக் கொண் டிருப்பதைப்பார்த்த பிச்சை அவருக்கு ஆறுதல் கூறினான்:

"நீங்க என்ன செய்வீங்க? இந்த மண்ணில என்ன நடந்து வந்துக்கிட்டே இருக்குதோ அது நடந்துகிட்டேதான் இருக்கும், இல்லையா?"

“அதில்லப்பா! அரசியல் சாசனத்தில் எழுதியிருக்கிறது சரிதான், ஆனா அதெல்லாம் நடைமுறைக்கு வராததுக்குக் காரணம் நாமதான். தப்பு நம்ம மேலதான். இதெல்லாம் நம்ம கடமையில்லையா?”

“என் மூளைக்கு இதெல்லாம் எட்டலீங்க. மோதிஹார்ஜி, பகத்ஜி இவங்கிகிட்ட, யப்பா-! எத்தனை பசு, எருமைங்க இருக்கு, அவங்களுக்கு ரொம்ப விஷயம் தெரியும், அவங்க சொல்றதும் சரிதான், எங்கேயாவது எல்லா சாதியும் ஒரே சமமா இருக்க முடியுமா?”

பிச்சையைத் தொடுவது, அவனுடன் உட்கார்ந்து சாப்பிடுவது இதெல்லாம் ஸுக்சாந்த்ஜியால் நினைத்துக்கூடப் பார்க்கமுடியாத காரியம். இருந்தாலும், ஜாதி, தீண்டாமை, இதில் எல்லாம் தனக்கு நம்பிக்கையில்லை என்று எண்ணுகிறார். ஏனென்றால் அச்சடித்த புத்தகங்களிள் எழுதியிருக்கிறது. ஜாதி, தீண்டாமை, தீட்டு எல்லாம் பொய் என்று. அச்சடித்த எழுத்தில் ஸுக்சாந்த்துக்கு மிக்க நம்பிக்கை. அவர் சொல்லுவார்: ‘ஜாதி-கீதி, தீண்டுதல்-தீண்டாமை எல்லாம் நாட்டுப்புறத்து ஆளுங்களின் மூடநம்பிக்கை, அதையெல்லாம் ஜவகர்லால் நம்பினதில்லை, இந்திராஜியும் நம்பினதில்லை.’

இருந்தாலும் தீண்டாமை தொடர்ந்து கொண்டுதானே இருக்கிறது? அப்படியே தொடர்ந்து கொண்டும் இருக்கும். இதெல்லாம் கடவுளின் சிருஷ்டி, “தோ பாருங்க, ராம்ஜி சில பேரை பிராமணனாக படைச்சிருக்காரு, சில பேரை துஸாதாக படைச்சிருக்காரு, அதிலேந்துதான் தீண்டாமையும் வந்துட்டு இருக்கு. எனக்கு ஒண்ணும் தெரியாது அய்யா, ஆனா டாஹாட் கோயில் பூசாரி அனுமான் மிஸ்ரா நல்ல பிராமணரு இல்லையா? அவர் கூட துஸாதின் நிழலில் கால் எடுத்து வைக்கமாட்டார். மெத்த படிச்சவரு, சிவபெருமான் கூடப் பேசறாரு... தேவி தேவதைங்க என்ன விரும்பறாங்கன்னு தெரியும்.”

ஸுக்சாந்த்ஜி விரக்தியடைந்து பெருமூச்சு விட்டுக்கொண்டு சொன்னார்: “சரி அந்த பேச்சையெல்லாம் விடு. இப்போ நீ எப்படி இருக்கே?”

பிச்சையின் முகம் பிரகாசமடைந்தது. சிரித்துக்கொண்டே சொன்னான்: “நல்லாவே இருக்கேங்க, இவ்வளவு நல்லா காலம் போகும்னு நெனச்சது கூட இல்லே. எல்லாத்தையும் விட பெரிய சமாசாரம், இப்போ எங்கிட்ட பத்து ஆடு இருக்கு?”

“பத்தா! என்ன சொல்றே நீ?”

"ஆமாங்க, இரண்டு இளைய ஆடுங்க, ஒண்ணொண்ணும் பதினைந்து பதினாறு சேர் இறைச்சி கொடுக்கும். பூராவும் சேருக்கு ஆறு ரூபான்னு வித்தாக்கூட, எவ்வளவு பணம் கிடைக்கும்?"

"இரண்டுக்கும் கிட்டத்தட்ட இருநூறு ரூபா கிடைக்கும்."

"எரநூறு ரூபாயா?" கண்களில் கண்ணீர் வர ஆரம்பித்தது. சுதாரித்துக்கொண்டு சொன்னான்: "அப்படியே ஆசீர்வாதம் பண்ணுங்க, ஸுக்சாந்த்ஜி! எரநூறு ரூபாய் கிடைச்சா என்னுடைய துக்கம், தரித்திரம் எல்லாம் விலகிப்போகும்."

"அதெப்படி?"

"ஆமாங்க. இதோ பாருங்க, எரநூறு ரூபா கிடைச்சா நான் கலியாணம் கூட கட்டிக்குவேன். எனக்குன்னு ஒரு வீடு-கீடு வெச்சிகிட்டு காலம் தள்ளிடமுடியும். எங்கேயாவது ஒரு குடிசை போட்டுக்குவேன். சட்டி பானையெல்லாம் இருக்கும். மத்தவங் களைப் போல நானும் வாழுவேன்."

"உன் வீடு எங்கே அப்பா?"

"அதான் பீஜுபாடா தள்ளி."

"உனக்கு யாருமில்லையா?"

"இல்லே."

"நல்லா இருப்பா!" இதயத்தின் ஆழத்திலிருந்து தனது நல்லெண்ணத்தை வெளிப்படுத்தினார் ஸுக்சாந்த்ஜி. பிச்சை அவருக்கு மிக நெருங்கியவனாகி விட்டான்

"அப்போ நான் கிளம்பறேன் ஸுக்சாந்த்ஜி."

"சரிப்பா."

"இன்னைக்கி வாணவேடிக்கையெல்லாம் இருக்கும்னு கேள்விப்பட்டேன்?"

"அப்படித்தான் நானும் கேள்விப்பட்டேன்."

வீட்டைநோக்கி நடந்தான். அவன் மனம் ஆனந்தத்தில் மிதந்தது. அவன் தன் ஆடுகளுடன் சேர்ந்து மகிழ்வான் என்று போலீஸ் அவனுக்கு ஒரு உபகாரம் செய்திருக்கிறது. நவாகட்டை விட்டு தன் காம்பை கலைத்துக் கொண்டு போய்விட்டதல்லவா? அது மட்டும் இல்லேன்னா அவன் ஏன் இங்கிருந்து ஓடவேண்டும்? ஓடிப்போனதாலே அவனுக்கு ராங்காவின் நட்புக்கிடைத்தது. அவன் உதவி மட்டும் கிடைக்காதிருந்தால் அவனுடைய ஆடுகளின் எண்ணிக்கை பத்தாக உயர்ந்திருக்குமா.?

வழியில் மாவு, உப்பு, மிளகாய், வாழைக்காய் வாங்கிக் கொண்டான். கடைக்கார லாலாவை விசாரித்தான். "நல்லா இருக்கீங்களா லாலாஜி?"

லாலா அவனுடைய கேள்விக்கு பதில் சொல்லவில்லை. அவன் காண்ட்ராக்டர் ராம்தாரி சொல்லிக்கொண்டிருந்ததை கேட்பதில் மும்முரமாக இருந்தான். தனது வியாபாரத்தை முடித்துக் கொண்டிருந்தபோது கேள்விப்பட்டான்—ஸ்ரீநிவாஸ் முன்னுள்ள மைதானத்தில் வாணவேடிக்கை இன்று மாலை நடக்கப்போகிறது என்று. ஐந்தாயிரம் ரூபாய் மதிப்புள்ள வாணங்கள் விடப்படும். இதைக்கேட்டவுடன் மனதிற்குள் தானும் இன்று மாலை அங்கு போவதாகத் தீர்மானித்தான். வாண வேடிக்கை பார்க்கலாம். ஒரு சின்ன, துணி வெளுக்கும் சோப்புக் கட்டி வாங்கிக்கொண்டான். துணி தோய்த்துக்கொள்ள வேண்டும். வாழைக் காய்க்கறி, பெரிய பெரிய ரொட்டி, கச்சக்கிழங்கை சிகப்பு மிளகாய் போட்டு வதக்கி சாப்பிடலாம். இன்றும் நாளையும் தள்ளிவிடலாம்.

எரநூறு ரூபா! அந்த நொண்டி ஒரு பொம்பிளயைக் கூட்டிக்கிட்டு வர்ரதாச் சொன்னாள். பிச்சைக்காரனுக்கு குழந்தை குட்டின்னு பிறந்துடும். ஆரம்பத்தில் அவன் கொஞ்ச நாளுக்கு ஆடு மேய்த்துக் கொண்டிருப்பான். பிறகு சொல்லமுடியாது. ஏதோ கொஞ்சம் நிலம் கூட கிடைத்துவிடலாம். கல்யாணமான பின் அவனுக்கு உறவினர் சுற்றம் என்று ஒன்று கூட கிடைக்கும். தேவைப்பட்டால் அவர்கள் உதவி செய்வார்கள். எப்போதுமே தனி மனிதனாக வாழமுடியுமா என்ன? பாடா, டாஹாட், நாடா, என்று எவ்வளவோ கிராமங்கள், கௌரவமான மனிதர்களின் உதவி, அனுகூலம் எல்லாம் கிடைக்கும். இதெல்லாம் எவ்வளவு இதமாக இருக்கிறது மனதிற்கு!

பிச்சை துணியைத் துவைத்தான். சோறு பொங்கி முடிவதற்குள் சூரியன் இறங்கிவிட்டிருந்தான். ஆடுகளை எண்ணி கொட்டகையில் அடைத்து வைத்தான். மூங்கில் தட்டிக்கதவை மூட இருந்த போது, அவர்கள் வந்தார்கள்.

ராஜா ஸாஹப்பின் இரண்டு சிப்பாய்கள்.

போலீஸ்! மிகவும் பீதியடைந்த பிச்சை மூங்கில் தட்டி முன் நின்றுகொண்டிருந்தான் இது புதிய ஆபத்து! போலீஸ் காம்ப் இல்லை என்றதால்தானே அவன் திரும்பி வந்தான்! இப்போது என்ன மறுபடியும் போலீஸ்?

"என்ன பிச்சை! பயந்து போயிட்டியா?"

சிப்பாய் கஜானன் அவன் பக்கம் திரும்பிச் சிரித்தான், அவனுடைய வாயில் சாராய நாற்றம்.

"ரெண்டு ஆடு எடு , ராஜா ஸாஹப் பூரா தாணாவையும்

விருந்துக்கு அழைச்சிருக்காரு, எங்கே இருந்து இறைச்சி கிடைக்கும்?"

"இல்ல, இல்ல, ஆடு இல்லே."

"ரெண்டு ஆடு எடு-"

"இப்படி பண்ணாதே சிப்பாய் ஸாஹப்- உன் கால்ல விளுறேன், இதுதான் என் பொளப்பு! இதை எடுத்திகிட்டுப் போகாதே!"

"அட சை-! அந்தாண்ட போடா கம்மனாட்டிக்களுதே"

கஜானன் பிச்சையின் முகத்தில் ஒரு பேயறை அறைந்தான். மூக்கும் உதடும் பிளந்து விட்டன. ரத்தம் பீறிட்டு வந்தது. பிச்சை கீரீச்சிட்டான். "போலீசுக்குப் பயந்துகிட்டுத்தான் நான் ஓடிப் போயிருந்தேன். ஆனா போலீஸ் ஆடுங்கள எடுத்துக்கிட்டே இருக்கு, இதை எடுக்காதே சிப்பாயிஜீ-!"

"ஏன் எடுக்கக் கூடாது? ராஜா ஸாஹப் அழைத்துத் தானே போலீஸ் வந்தது? இறைச்சிய காசு கொடுத்து வாங்கியா சாப்பிடணும்? நீ ராஜா ஸாஹப்பின் ஜமீந்தாரிலேதானே இருக்கே? போடா ஓடிப்போடா-"

இந்த இக்கட்டான சமயத்தில் பிச்சை பைத்தியக்காரனாக மாறி விட்டான்: "சர்க்கார் எடுத்துக்கிட்ட ராஜா ஸாஹப்பின் நிலத்து மேல அவருக்கு எவ்வளவு உரிமை இருக்கோ அவ்வளவு உரிமை எனக்கு என் ஆடுங்க மேல இருக்கு. அந்த உரிமையால தான் அவருக்குப் பணம் கிடைச்சுது. நாங்க ஏன் எங்க உரிமைய விடணும்?"

"என்னடா சொன்னே துஸாத் பயலே-?"

சிப்பாய் அவனை முறைப்படி அடிக்கத் தொடங்கினான். லாவகமாக, பயிற்சிபெற்ற போலீஸ் முறைப்படி, ஆட்சியாளர் கொடுத்த அனுமதியுடன், அவனை அடித்துக்கொண்டே சொன்னான்: "கேட்டாயா, கஜானன் அண்ணே! இவன் உரிமை பேச்சுப் பேசறான்! கூலிக்காரங்க கலவரம் பண்ணி இந்த பசங்களுக்கும் உரிமை பேச சொல்லிக் கொடுத்துட்டானுக. போலீஸ் ஆட்டுக் கறி திங்காட்டி, யாரு திம்பாங்க? சொல்றா, கம்மனாட்டி! ராஜா ஸாஹப்புக்கு அவருடைய நிலத்து மேல இருக்கிற உரிமையும் உனக்கு உன் ஆடுங்க மேல இருக்கிற உரிமையும் ஒண்ணா?"

அடி அடி என்று அடித்து பிச்சையை ரத்தக்களரியாக்கி விட்டு மூங்கில் கதவைத் திறந்தார்கள். நாலு ஆடுகளை எடுத்துக்கொண்டு மிக உற்சாகத்துடன் கிளம்பிப்போனார்கள்.

பிச்சை ஒரு மிருகத்தைப்போல் அழுதுகொண்டே இருந்தான். பயத்தினால் அவனால் அசையக்கூட முடியவில்லை. வலியைவிட அந்த அநியாயம் அவனை வாட்டி அழ வைத்தது. எல்லாம் பொய்! ஸாக்சாந்த்ஜி சொன்னதெல்லாம் வெறும் பொய். ஆடுங்க மேல அவனுக்கு இருந்த உரிமை அடிப்படை உரிமையா? சொத்துரிமை ஏழாவது அடிப்படை உரிமையாம்! அடிப்படை உரிமை தாக்கப்பட்டால் அரசியல் சாசனம் அதைக் காப்பாற்று மாம்! பிச்சையின் அடிப்படை உரிமை திரும்பத் திரும்ப சிதைக்கப்படுகிறது. ராஜா ஸாஹப்புக்கு ஆறு லட்சம் ஈடுபணம் கிடைக்கிறது. அவர் மேல் இழைக்கப்பட்ட அநீதிக்கு விடிவு ஏற்படுகிறது, தன் ஆடுகளுடன் வசிப்பதற்குப் பிச்சைக்கு இருக்கும் அடிப்படை உரிமை சிதைந்து போனால் அதை ரட்சிக்க இந்திய அரசாங்கத்துக்குத் திறன் இல்லை. அதனால்தான் அவனுக்கு நஷ்ட ஈடு கிடைப்பதில்லை.

அவன் உடலில் ஏன் இப்படி ஒரு குளிர்ச்சியான உணர்வு? ஒரு கண் குருடி, நொண்டி, அவனுடைய மனைவி, எல்லாரும் பிச்சைக்காரனைத் தூக்கிக்கொண்டு போனார்கள். நொண்டியின் மனைவி கிழிந்த துணி ஒன்றை தண்ணீரில் நனைத்து ஒத்தடம் கொடுத்தாள். குருடி அவனுடைய வாயின் ரத்தத்தைத் துடைத் தாள், நொண்டி சொன்னான்: "கொஞ்சம் தண்ணி குடி தம்பி."

நொண்டியின் மனைவி சொன்னாள், "நான் சுண்ணாம்பு கொண்டு வாறேன். சுண்ணாம்பு தடவினால் ரத்தம் நின்னுடும். வலியும் இருக்காது."

மூவரும் அவனுக்குத் தொண்டு செய்தார்கள். புண்கள் எல்லாம் ஆறி, எழுந்து நிற்பதற்கு பிச்சைக்கு பத்து பனிரெண்டு நாட்கள் ஆயின. பிறகு அவன் சொன்னான் "வா, நொண்டி, ஆட்டுக்குட்டிங்கள வித்துப் போடுவோம் எவ்வளவு கிடைச்சாலும் சரிதான்."

இருபது ரூபாய்க்கு நான்கு குட்டிகளையும் விற்றான். அவனுடைய இடுப்பு இப்போது சரியாகாது. தனது அடிப்படை உரிமையை நிலை நாட்டிக்கொள்வதற்காக அவன் செய்த முதல் மற்றும் கடைசி முயற்சியின் பயனான அவன் முகத்தில் காயத்தின் தழும்பு ஒரு நாளும் அழியாது.

"இப்போ என்ன செய்ய போறே, தம்பி?"

"பிச்சை எடுக்கப்போறேன்."

"பிச்சையா?"

"ஆமா. பிச்சைதான்."

"இங்கேயா?"

'இல்லே."

பிச்சை அவர்கள் மூன்று பேருக்கும் மூன்று மூன்று ரூபாய் கொடுத்தான். லாலாஜியின் கடையில் கடனை அடைத்தான். ஆடுகளைக் கட்டுவதற்காகக் கயிறு செய்து கொடுத்த மோதி ஹாரின் வேலைக்காரனுக்கு இரண்டு ரூபாய் கொடுத்தான். பாக்கியிருந்த மூன்று ரூபாயை தன் இடுப்புத்துணியில் பத்திரப் படுத்திக்கொண்டான். மரத்திலிருந்து ஒரு கிளையை வெட்டி ஒரு தடி தயார் செய்துகொண்டான். தோக்ரி சந்தையில் ஒரு கிண்ணம் வாங்கிக்கொள்வான். பிச்சை பாத்திரம்- எட்டணாவுக்கு, ஒரு ரூபாய்க்கு, கிடைத்த விலைக்கு. அவனைப் பார்த்துவிட்டு ஸுக்சாந்த்ஜி கீழே இறங்கி வந்தார். பிச்சை அடி வாங்கிய விஷயத்தை அவர் கேள்விப்பட்டிருந்தார்.

"பிச்சை-"

"நான் போயிட்டு வாறேன், ஸுக்சாந்த்ஜி-"

"எங்கே போறேப்பா?"

"எங்கே பிச்சை கிடைக்கிறதோ, அங்கே-"

"ஆனா உன் உடம்பிலே இப்போ கூட-"

"அது சரிதாங்க, ஆனால் என்ன செய்ய? மஹராஜ்! நீங்க எனக்கு சொன்னதெல்லாம் பொய்... எனக்கு அடிப்படை உரிமைன்னு ஒண்ணும் கிடையாது, அதெல்லாம் ராஜா ஸாஹப்பு களுக்குத்தான்- கிளம்பறேன், ஸுக்சாந்த்ஜி."

தடியின் உதவியுடன் பிச்சைக்கார துஸாத் மெதுவாகப் போய்க் கொண்டிருக்கிறான். இப்பொழுது அவனுக்கு பயமே கிடையாது. இப்போதெல்லாம் அவன் போலீஸை பார்க்கும் போது பயப்படுவதில்லை. ஆடு கீடு, நிலம், பாத்திரம் பண்டம் என்று ஏதாவது சொத்து இருந்தால்தானே போலீஸைக் கண்டு பயப்படணும்? இப்போவெல்லாம் காட்டுக்கு ஓடிப்போக வேண்டியதில்லை. முன்னெல்லாம் துஸாதைப் பார்த்தவுடனேயே போட்டு அடிப்பாங்க போலீஸ். எல்லாவற்றையும் பிடுங்கிக்கு வாங்க. ஆனால், சொத்துகித்துன்னு ஒண்ணுமில்லாத பிச்சைக்கார துஸாதை போலீஸ் பார்த்தால் ஒன்றும் சொல்வதில்லை. அவனை அடிக்கவும் மாட்டார்கள். இனிமேல் போலீஸ் அவனை ஒரு போதும் அடிக்க மாட்டார்கள். பிச்சைக்காரனுக்கு இப்பொழுது தோன்றியது. 'ஏன் இந்த விஷயம் அவனுக்கு முன்னாலேயே தோன்றவில்லை? ராஜா ஸாஹப். லாலாஜி, போலீஸ், ஹனுமான் மிஸ்ரா – இவர்கள் எல்லாருடைய தயையுடன் தனது மாத்ரு

பூமியில் இருக்கவேண்டுமென்றால், துஸாதுக்கு ஒரே ஒரு வழிதான் உண்டு. அதுதான் பிச்சை எடுத்துப் பிழைப்பது. பிச்சைக்கார துஸாத் போன்று ஆடு மேய்க்கிற ஒரு துஸாத், தன் மாத்ரு பூமியில் மனிதனைப்போல் ஒரு வாழ்வைத் தேடினால் இவர்கள் எல்லாரும் சீற்றம் அடைகிறார்கள்.

இப்பொழுதெல்லாம் பிச்சைக்காரனுக்குத் தான் தனிப் படுத்தப்பட்ட மனிதனாகத் தோன்றுவதில்லை. பிச்சையெடுப் பவர்கள் எங்குதான் இல்லை? குருடு-நொண்டி-எல்லாஇடத்திலும் இருக்கிறார்கள். இப்பொழுது பிச்சைக்காரன் ஒரு ஸமாஜத்தின், மிகப் பெரிய ஸமாஜத்தின் அங்கத்தினனாகி விட்டான். ஸுக்சாந்த் அவன் பக்கம் திரும்பி கண்கொட்டாமல் பார்க்கிறார். அவருக்குத் தெரிகிறது, பிச்சைக்காரன் துஸாத், தன்னுடைய ஏழாவது அடிப்படை உரிமையிலிருந்து வஞ்சிக்கப்பட்டு விட்டாலும், அவனுடைய மூன்றாவது அடிப்படை உரிமை ரட்சிக்கப் பட்டிருக்கிறது-

சுதந்திரத்தின் உரிமை- அவன் விரும்பும் தொழிலையும் வாழ்க்கை வழியையும் பின்பற்றுவதற்கான அடிப்படை உரிமை. பிச்சைக்காரன் பிச்சையெடுக்கும் தொழிலை தேர்வு செய்து கொண்டுள்ளான். பாரதத்தின் அரசியல் சாசனம் கட்டாயம் இந்த விஷயத்தை மனதில் வைத்துக்கொள்ளும் - பிச்சைக்காரன் ஜன்ம ஜன்மாந்திரத்திற்கு பிச்சை எடுத்துக்கொண்டே இருப்பான் என்று. ஆனால் அவனுடைய வாழ்க்கை அல்லது தொழில் முறையை மேம்படுத்த விரும்பினால்? இப்படி அடிப்படை உரிமைகளில் தலையிடும் நடத்தையை இந்திய அரசியல் சாசனம் ஒரு நாளும் அனுமதிக்காது. பாரதத்தில் எங்காவது இத்தகைய அநியாயம் நடந்தால், அப்பொழுது அரசியல் சாசன போலீஸ், ரிஸர்வ் போலீஸ், மிலிடரி போலீஸ், ஆர்மி, நேவி, டாங்க், எல்லாம் இதைத் தடுக்க களத்தில் இறங்கிவிடும்.

பிச்சைக்கார துஸாத் நொண்டி நொண்டி நடந்துகொண்டே, சாலையின் திருப்பத்தில் காணாமல் போய்விட்டான். இப்பொழுது இனியும் இழப்பதற்கு அவனிடம் ஒன்றுமில்லை.

Laser typeset at Capital Creations, New Delhi and
printed at Tarang Printers, Delhi